

இலங்கை, மலேசியா இலக்கியத் தொகுப்பு

# அக்கரை இலக்கியம்

வாசகர் வட்டம்

# இந் நூலில் ....

**தா**ய்நாட்டு மொழிப்பண்பையும், தங்கி வாழும் நாட்டின் பண்புகளையும் இலக்கிய வடிவங்களில் எடுத்துக்கூறும் அரிய பணியைப் புரிந்துவரும் 'அக்கரை'த் தமிழ் எழுத்தாளர்களின் படைப்புக்களில் சிலவற்றைக் காணலாம். இந்தத் தொகுப்பிற்காக பொருள் தேடும் முயற்சியில் நாங்கள் விடுத்த கோரிக்கைக்கு இணங்கி அனுப்பப்பட்ட நூற்றுக் கணக்கான படைப்புகளிலிருந்து முப்ப பதுக்கும் மேற்பட்ட சிறுகதைகளையும், சில கவிதைகளையும், கட்டுரைகளையும் இந்த நூலில் சேர்த்திருக்கிறோம்.

இலங்கையிலும் மலேசியாவிலும் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஈடுபட்டுள்ள அனைவரின் சாதனைகளையும் இந்தத் தொகுப்பில் காண முடியாது. அந்த நாடுகளில் இன்றைய இலக்கிய வளர்ச்சி யின் பிரதிபலிப்பாகவே இந்த நூல் விளங்கும். 460 பக்கங்களுக்கும் அதிக மான அளவில் தொகுக்கப்பட்ட இந்த நூலின்மூலம் அக்கரை இலக்கியத்தின் தன்மையை ஓரளவு அறிந்து கொள்ள லாம்.



வாசகர் வட்டப் பிரசுரம் - 22

இப் பதிப்பு "வாசகர் வட்டம்" — சிறந்த தமிழ்ப் புத்தகச் சங்கத்தின் அங்கத்தினர்களுக்கென — அதன் பதிப்பாளரான "புக்வென்சர்" (bookventure) நிறுவனத்தினரால் நெ. 14, தணிகாசலம் செட்டி ரோடு, தியாகராய நகர், சென்னை-17 — என்ற முகவரியில் வெளியிடப்பட்டது.

அச்சிட்டவர்கள் :

யுனைட்டெட் பிரின்டர்ஸ்

3-27, பிராட்வே, சென்னை-1

மேலுறை, ஓரத்தாள் ஓவியம் :

கலாஸாகரம் ராஜகோபால்



தனிப் பிரதி விலை : ரூ. 11 டிசம்பர், 1968

# பதிப்புரை

இன்றைய தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டு, அந்த வளர்ச்சியின் பலனை நன்றாக அனுபவித்து, தாங்களும் படைப்பிலக்கியத்தில் சாதனைபுரிந்த அக்கரை எழுத்தாளர்களின் முயற்சிகளில் சிலவற்றை இந்த நூலில் தொகுத்தளிப்பதில் "வாசகர் வட்டம்" பெருமை அடைகிறது.

இலங்கை, மலேசிய தமிழ் இலக்கியத்துறையின் போக்கை நன்கு அறிந்திருக்கும் எழுத்தாளர்கள்: ஸ்ரீ. கு. அழகிரிசாமி, ஸ்ரீ. நா. பார்த்தசாரதி, ஸ்ரீ. சோ. சிவபாத சுந்தரம், இலங்கை 'அரசு வெளியீடு' உரிமையாளர் ஸ்ரீ. எம். ஏ. ரஹ்மான் ஆகியோர் அவ்வப்போது எங்களுக்குப் பயன் தரும் யோசனைகள் கூறி உதவி புரிந்தார்கள்.

இலங்கை எழுத்தாளர்களின் படைப்புகளைத் தொகுப்பதில் பேரார்வம் காட்டி, பல கதைகள், கட்டுரைகள் பிரதிகளை அனுப்பிவைத்த ஸ்ரீ. ஆர். பத்மனபனுக்கு எங்கள் நன்றி உரித்தாகும். மலேசிய எழுத்தாளர்களிடமிருந்து எழுத்துக்களைப் பெறுவதற்குப் பெருமுயற்சி கொண்டு உதவிசெய்த மலேசிய பல்கலைக் கழக தமிழ்த்துறைத் துணைப் பேராசிரியர் ஸ்ரீ. ஈ. ச. விசுவநாதன் அவர்களுக்கும் "வாசகர் வட்டம்" கடமைப்பட்டிருக்கிறது. இவ்விரு நண்பர்களின் உதவியின்றி இந்த நூல் உருப்பெற்றிருக்க முடியாது என்பதைக் குறிப்பிட விரும்புகிறோம்.

"அக்கரை இலக்கியம்" தொகுப்பில் சேர்க்கப்பட வேண்டிய பல படைப்புகள் இந்த நூலில் காணப்படாம

லிருக்கலாம். பக்கங்களின் அளவு, தயாரிப்புக்கான அவகாசம் முதலிய நிர்ப்பந்தங்களே இத்தகைய நிலைக்கு காரணமாகும். இலங்கையிலும், மலேசியாவிலும் இன்று தமிழ் இலக்கியம் அடைந்திருக்கும் செழிப்பை கூடியமட்டில் பிரதிபலிக்க முயன்றிருக்கிறோம். மற்றும், இத்தகைய தொகுப்பு முயற்சிகளில் இது முதலாவதுதான். இன்னும் பல தொகுப்புகள் வெளியிடும் கனவும் கண்டு கொண்டிருக்கிறோம் என்பதையும் வாசகர்களுக்குத் தெரிவிக்கிறோம்.

'மலாயாவுக்கு இந்தியாவின் கலாசார உதவி' என்ற கட்டுரை, 'தமிழ் நேசன்' மெர்தேகா (1957) மலரில் பிரசுரமானது. இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கும் மற்ற கதைகள், கட்டுரைகள், கவிதைகள் பல ஏற்கெனவே இலங்கை, மலேசியப் பத்திரிகைகளில் வெளியானவை. அவைகளைப் பிரசுரிக்க அனுமதி கொடுத்துதவிய பத்திரிகை உரிமையாளர்களுக்கும் எங்கள் நன்றி.

தமிழ் நாட்டிலும், தமிழ் பேசும் நல்லுலகம் எங்கிலும் உள்ள வாசகர்களுக்கு கடல்கடந்த இலக்கியத்தின் சீரிய தன்மையை அறிந்துகொள்ள இந்நூல் ஓர் அளவு பயன்படும் என்று நம்புகிறோம்.

வாசகர் வட்டம்

# பொருளடக்கம்

## I இலங்கை

## II மலேசியா

செ. யோகநாதன்

# சோளகம்

அமைதியை விழுங்கிய காற்றினூடாக அந்தக் கிராமத்தின் இருதயக் குரல் இருண்ட நடுநிசியிலும் மினுமினுக்கும் கைவிளக்குகளின் அசைவினில் அடிநாதமாகத் தெரிகின்றது.

அது, உழைப்பற்ற, வள்ளங்களின் மரக்கோல்கள் ஓய்ந்து பரணிற்குள் புகுந்துவிட்ட சோளகக்காலம்!

தென்னோலைகளின் சலசலப்போடு இடைக்கிடையே நாய்களின் ஊளையிடும் குரல் கேட்கின்றது. காற்று, கடல் அலைகளைப்போல எகிறி எவ்விக் குறைந்துகொண்டு வீசுகின்றது. வேகத்தின் வீச்சு பிழைப்பினை அழித்துவிட்ட பெருமிதத்திலேதான் கெக்கலிகொட்டிச் சிரிக்கின்றது.

பூரணம் கொட்டாவி விட்டாள்.

இமை மடல்களுள் கவியும் நித்திரையை முறியடிப்பதற்கு நெட்டி முறித்துவிட்டு, சிரட்டைக்குள் இருக்கும் உமிச் சாம்பலை அள்ளி வாய்க்குள் போட்டுக்கொண்டாள் பூரணம். உமிச் சாம்பலின் மெதுமையான ருசியின் உணர்வில் அவளது முகத்தில் தனி மகிழ்வு சுடரிடுகின்றது. பரந்த நெற்றியின் இடதுபுறத்திலுள்ள ஆறிப்போன பிளவுக் காயத்தை அவள் விரல்களால் தடவிக் கொண்டாள்.

சிறிது நேரம் அவள் தன்னுடைய பூனைக் கண்களை மூடிக்கொண்டு பேசாமல் இருக்கின்றாள். மனதிற்குள் மறுநாளைய வாழ்க்கைப் பிரச்சினைகள் பேரலைகளாய்

பொங்கி விழுகின்றன. கிளிக் கூட்டுக்குள் சிக்கிய மீன்களைப்போல, கடன் தொல்லைகள் அவளை எங்குமே தலைகாட்டாது அந்தக் குடிசைக்குள் அடைக்கலம் புகச் செய்துவிட்டன.

கஷ்டப்பட்டுக் கூப்பன் எடுத்தாலும், அது ஒரு கிழமையைச் சமாளிப்பதற்குப் போதாது. பச்சையரிசிக் கஞ்சியைச் சொட்டும் சிந்தாமல் குடிக்குமளவிற்கு வறுமை. அரிசியில் ஒரு கொஞ்சத்தை விற்றுத் தான் சில வேளைகளில் மற்றச் செலவுகளைச் சரிக்கட்ட வேண்டிவரும்.

பூரணம் கண்களை விழித்துக்கொண்டாள்.

மீண்டும் தனக்குப் பக்கத்தில் இருக்கும் தும்புக் குவியலினைப் பரப்பி வைத்துவிட்டு தும்பு சூர ஆரம்பிக்கின்றாள். சூர்ந்த தும்பிற்கும் சூராத தும்பிற்கும் நடுவே சோத்தி சிந்துணுகின்றது. இரண்டு பணத்துத் தும்பை இன்று சூர்ந்து முடிந்தால்தான் நாளைக்குக் கயிறு திரித்துப் பின்னேரப்பாடு முடிக்க முடியும்!

விறைத்துப்போன வலது காலுக்கு உணர்வூட்டப் பூரணம் உள்ளங்காலை உராஞ்சுகின்றாள்.

"எடீ, பூரணம்!"

வெளியே கேட்ட குரலில் பூரணம் துள்ளி எழுந்தாள். ஒரு கணத்தில் முன்வளைந்த உடலுடன் சண்டிக்கட்டுக் கட்டிய நிலையில் சிவந்த கண்களுடன் கணவதியின் உருவம் நெஞ்சிற்குள் தோன்றியது.

"வாறன்! வந்திட்டன்!"

படலையை அவிழ்க்கும்பொழுது பூரணத்திற்கு உடல் நடுங்குகின்றது. வழக்கமாக விழும் திட்டுகளும், உதைகளும் இன்றைக்கு விழக்கூடாது என அவள் நெஞ்சில் கை வைத்துக்கொண்டே எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக் கொள்ளுகின்றாள். பனங்கள்ளின் நாற்றம் அடிக்கப் படலை

யைத் திறந்துகொண்டு கணவதி உள்ளே வருகின்றான். பூரணம் ஓரமாக ஒதுங்கி நிற்கின்றாள். அவன் தன்னுடைய முதுகிலுள்ள கழலையை இடது கைப் பெருவிரலால் சொறிந்து கொள்ளுகின்றான். அதே வேளையில் உள்ளே தடுக்கில் கிடக்கும் குழந்தை அழுகின்றது. பூரணம் அசையாமலே நிற்கின்றாள்.

"பிசாசுகள் ... இதோடை ஏழு கழுதையளைப் பெத்தாச்சு. எடீ, பூரணம், இதேனடி இதுக்கை வெடி வைக்கிறு, போய் அந்தச் சனியனை ஆராட்டடி ... ஒவ்வொரு காத்துக்கேம் நீ ஒவ்வொண்டைப் பெத்துத் தள்ளு ... அதுக்கொண்டுங் குறைச்சலில்லை."

கணவதி அதிருப்தியுடன் அடுப்படிப் படலையை அவிழ்க்கின்றான். காலுக்குள்ளாக ஓடும் பூனையை அடிக்க ஓங்கிய அவனது கை, வெறுமையை ஸ்பரிசித்த தோல்வியில் உதறிக்கொண்டது.

பூரணம் கணவதிக்குச் சோற்றைப் போட்டுக் கொடுத்தாள். கறிச் சட்டிக்குள் இருந்த கறி முழுவதும் கணவதிக்குப் போடப்பட்டது. அந்த நிமிஷத்தில் அவளுக்கு மனதினுள் ஆறுமுகத்தின் நொய்மையான சிணுங்கல் கேட்கின்றது.

கணவதி மட்டிக் கறியைச் சுவைத்துச் சுவைத்துத் தின்னுகின்றான். ஒரு மீன்பிடிகாரன் மட்டிக் கறியைப் பெரும்பாலும் விரும்பமாட்டான். ஆனால், சோளகத்தின் வீச்சு, மட்டிக் கறியையே அவனுக்கு அளித்துவிட்டது. பனங்கள்ளின் மொச்சைக்கும், ருசிக்கும், மசாலையோடு கலந்து காய்ச்சப்பட்ட மட்டிக் கறி நன்றாய் ஒத்துக் கொண்டது.

"புழைப்புக் காலத்திலை மீன் அம்புட்டால் அதும் எங்களுக்குச் சுவர்றேயில்லை. தீர்வைக் காசு, கடல்க் கறியெண்டு எல்லாந் திக்குத்திக்காகப் போகும். சோளகக் காத்திலை வள்ளங்களைக் கவிட்டாப் பிறகு மீன் எண்ட கதையுமில்லை. எப்பவும் மட்டிக் கறிதான் நமக்கு விதிச்ச விதிபோலை!"

2

" ஆறுமுகம்...... இஞ்சை வா. தம்பியாணை நான் சொல்றதைக் கேளடா. இண்டைக்கு நீ மட்டி உளக்கப் போகாட்டில் கறிப்பாடு இல்லை. துண்டாச் சாப்பாடே இல்லையடா."

பூரணம் மகனைக் கெஞ்சினுள். ஆறுமுகம் அசையாமலே நிற்கின்ருன். இராவணன் மீசைப் பூண்டைப்போல குத்திட்டு நிற்கும் மயிரினுள் கை நுழைத்து அவன் சொடுகு பிடுங்குகின்ருன். உடலின் பொருக்கு வெடித்த பாகங்களில் வேர்க்குரு பரவி, அவனே பார்க்க முடியாத பிறவியாகி நிற்கின்ருன். பூரணத்தின் மூத்த மகன் அவன். ஒவ்வொரு நாளும் மட்டி உளக்கப் போவதும், சாணி அள்ளிவரத் துண்டிச் சுடலைக்குப் போவதும் அவனது தொழில்களாகி விட்டன.

" போணை போ ... அவ எனக்குச் சொல்லவந்திட்டா... நேத்து நான் வத்துக் கடலுக்கை போய் நிண்டு வெய்யிலிலை குளிச்சு மட்டி பிடிச்சுக்கொண்டு வாறன். ஆ ஞ, எனக்கு மட்டிக் கறியில்லை. பேந்தேன் நான் போவான் என்ஞலை ஏலா ... போ ..."

பூரணத்தால் ஒன்றும் பேச முடியவில்லை. அவன் சொல்லும் உண்மைக்கு முன் அவனைச் சினக்க எண்ணும் கோபமும் தலைகுனிந்துவிடுகிறது. ஆத்திரம் ஒருபுறம், தேவை மறுபுறம் அலைக்க ஒரு நிலைப்படாத மனதோடு அவள் அடுப்படிப் பக்கம் போஞள். வீங்கி எழும் வயிற்றினுள் புரளும் சிசுவையும் தாங்கி அலையும் களைப்பு அவளுக்கு. அவளுக்கு என்றும் கர்ப்பம் காட்டாத சின்ன வயிறு. களைப்போடு கால்களை முன் நீட்டி, கைகளை பின்ஞக ஊன்றிக்கொண்டு அவள் துருவலையில் இருந்தாள்.

பூரணத்திற்கு அன்று ஒரே எரிச்சலாயிருந்தது. அவள் கணவதியைக் கைப்பிடித்து ஏழு வருஷங்கள். ஏழு வருஷ

வாழ்க்கையும் நரகமாகவே கழிந்துவிட்டது. அதிலே இடையிடை சந்தோஷமும் தலைதூக்காமல் இல்லை. ஆனால், அவையெல்லாம் நீண்ட நாட்களில் தெட்டந் தெறியனாய் மிகக் குறைவான மணித்தியாலங்களாகவே இருந்தன. காலத்தின் வெம்மையாலும், இல்லாமையாலும், தசைகள் மினுமினுப்பிழந்து சுருங்கியதோடு தாம்பத்திய வாழ்வின் மகிழ்வுகள் யாவுமே பயனற்றுக் கரிக்கும் கடல் நீராகி விட்டன.

மனம் எங்கெல்லாமோ நழுவி உருள்கின்றது. சளசளக்கும் சேற்று நீரைப் போல, நினைவுத்தடங் களிலும் மனம் புதைந்து கொடுக்கும் சில இனிய நினைவுகள் ...

கணவதி, தனக்கு ஆறுமுகம் பிறந்ததும் பூரணத்திற்குப் பக்கத்தில் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கின்றான். பூரணம் மடியில் கிடக்கும் குழந்தையையும், கணவனையும் பார்த்து மனதிற்குள் பூரிப்புக் கொள்கின்றாள். கிலுகிலுப்பையை மகனின் முகத்திற்கு நேரே நீட்டிக் கிலுக்கிக் கொண்டே, அவனின் சிரிப்பிற்குள் இருக்கும் சொற்களையெல்லாம் மொழி பெயர்த்து பூரணத்திற்கு அர்த்தம் சொல்லிக் கொண் டிருக்கின்றான் கணவதி.

"பூரணம் இப்பவே அவற்றை கதையளைக் கேட்டியே... பொழிப்பான கனகதையளைக் கதைக்கேக்கை அப்பரைப் போலைத்தான் 'ரிக்கிறான். பரவணிக்குணம். பெரிய ஆள் மாதிரி அவற்றை மறுமொழியள். தம்பிக்கு நான் ஆறுமுகம் எண்டுதான் பதிவிலை பேர் குடுத்தனான்."

மடியில் பெருவிரலைச் சூப்பிக்கொண்டு கிடக்கும் குழந் தையின் உச்சி துடிக்கும் தலையினைத் தடவிக்கொண்டே பூரணம் கணவனை கண்ணீர் பனிக்க வாஞ்சையோடு நோக்குகின்றாள். தன்னை 'ஏலாதவள்' என்று அடிக்கடி கூறிக்கொண்டே அவளுக்குரிய எல்லா வேலைகளையும் அவனே செய்தான். அவள் குளிப்பதற்கு இலைகள் அவித்து

தண்ணீர் கலந்து கொடுத்ததும், பத்தியமாக 'காயம்' வைத்துக் கொடுத்ததும் அவன்தான். அவள் அவனது முரட்டுக் கரங்களை எடுத்து வாஞ்சையோடு தடவுகின்றாள். பூனைக்கண்களிலே மிதக்கும் நன்றிப் பெருக்கான பார்வையில் கணவதியின் உள்ளம் தோய்ந்தது. கணவதி தன்னை மறக்கின்றான். பறியில் நிறைய மீன்கள் அகப்பட்டால் ஏற்படும் மகிழ்வைவிடப் பன்மடங்கு மகிழ்வு நெஞ்சினுள் தோன்றி வியாபிக்கின்றது. அந்தக் கிறக்கத்தில் அவன் முணுமுணுக்கின்றான் :

"பூரணம் இந்தச் சோளகம் முடியட்டும். பேந்து பாரடி உன்னையும் ஆறுமுகத்தையும் பொன்னாலை போத்துறன். அடுத்த சோளகத்துக்கு முந்தி எனக்கு வள்ளமொண்டு சொந்தமாயிடும் ...... பேந்து ...... பேந்து ..."

வெளியே ஏதோ சரசரத்துக் கேட்கின்றது. பூரணம் தன்னிலை அடைந்தாள். அடுப்படிப் படலையில் நிற்பது ஆறுமுகம்.

"என்ன ... என்னத்துக்கு நிற்கிறாய் ?"

தாய்மையின் குரலில் வெறுப்பு உமிழ்கின்றது. அவளின் காய்ந்த அடிச்சொண்டை அவள் கீழ்நாக்கால் தடவி எச்சில் பூசுகிறாள்.

"கடல் நல்ல வத்து நான் மட்டி உளக்கப் போப் போறன்."

அவனின் ஒரு நிமிஷ வார்த்தையில் பூரணத்தின் நெஞ்சம் வரால் மீனைப்போல மகிழ்வினில் துள்ளிவிழுந்தது. பொன்னினாலும் பட்டினாலும் போர்த்திருக்கவேண்டிய ஆறுமுகம், வேர்க்குருவாலும் பொருக்காலும் போர்த்தப் பட்ட நிலையில் —

"ஏனணை பேசாமையிருக்கிறா ?"

அவள் சமாளித்த குரலின் ஒலியோடு அவனைப் பார்க்கின்றாள்.

"சரி ராசா, போட்டு பன்ரெண்டுக்கிடேலை வந்திடு, துலைக்குப் போய் உளக்காமல் கிட்டடியிலே பாத்தொண்டு வா."

வாய்கிழிந்த உமலை நீத்துப்பெட்டி போல மடக்கிக் கொண்டு, கூனியபடி செல்லும் ஆறுமுகத்தைப் பார்த்த படியே பூரணம் குந்திய நிலையில் இருந்தாள். கடல்த் தாளங்காயைப்போல அவனுடைய முதுகெங்கும் உப்புப் பொரிந்து கோடிட்டிருக்கின்றது. துருத்திக்கொண்டு நிற்கும் அவனுடைய எலும்புகள் ஒவ்வொன்றும் கணவதியின் அடி களால் அதிர்ச்சியடைந்தவை. கழுத்துப் பாகத்தின் கீழே உள்ள வெட்டுக்காயமும், சிராய்ப்பும் கணவதி வெறியில் வந்து ஆறுமுகத்தைத் தள்ளி விழுத்தி அடித்த பொழுது ஏற்பட்டவைதான்.

கணவதி, ஆறுமுகம் பிறந்தபொழுது சொன்ன சொற் கள் இப்பொழுதும் அவளின் காதோடு கேட்கின்றன. அந்தச் சொற்கள் வெறும் ஒலி வடிவில் எழுந்து காற்ருேடு கலந்து மனதினுள் படிந்துவிட்டன.

ஆனல், வந்துபோன சோளகங்கள்?

## 3

வாடைக்காற்றை எதிர் நோக்கிய கொழும்புத்துறைக் கிராமத்தில் வாழும் மக்கள் அந்த நிராசையை, சோள கத்தின் வெம்மைக்காலத்துக் கண்ணுறங்காத இரவுகளைத் தங்கள் குடிசைகளில் நிகழும் நித்திய சண்டைகள் மூலம் காட்டிக்கொண்டிருந்தனர்.

கரைகளில் வெகுதூரம் வரை கவிழ்த்து வைக்கப் பட்ட வள்ளங்கள் அவர்கள் வயிற்றிலே வெறுமையை யும் நெஞ்சிலே விரக்தியையும், குடிசைக்குள் சண்டை களையும் சிருஷ்டிக்கும் பிரம்மாக்களாகிவிட்டன. அவ் வள்ளங்கள் இயங்காது கரையில் தலைகுப்புறப் படுத்து

விட்டால், மீனவனின் வாழ்வும் வறுமைக்குள் தன்னை ஒப்புக்கொடுத்துவிடும்.

உழைக்கும் அவர்களில் பெரும்பான்மையோருக்கு சொந்தமாக வள்ளம் இல்லை; வலை இல்லை. இருப்பதெல்லாம் கடன் ஒன்றும், இறக்காமல் வாழமுனையும் ஓயாத முயற்சியும்தான்.

காற்றுச் சுழன்று சுழன்று அடித்துக் கொண்டிருக்கின்றது. இரவுப்பூச்சிகளின் 'கிக்கிறீச்' ஒலி அதற்கு சுருதிமீட்டுகிறது. எங்கிருந்தோ, ஏற்றிக் கட்டப்பட்ட கொடியின் 'ஙொய்ய்ய்ங்ங்' என்ற விண்கூவல் காற்றைக் கிழித்துக்கொண்டே கேட்கின்றது.

ஆறுமுகம் அசைந்து படுத்தான். சறத்தை இழுத்து, முகத்தை மூடிக்கொள்ளும் அவனின் இதயக் கூட்டினுள் அவனையறியாமலே எட்டுமூலைக்கொடியின் 'விண்' ஒலி மதுரகான மெழுப்புகின்றது. அகக் கண்களின் திரையிலே வன்னம் ஒட்டிய எட்டுமூலைக் கொடி ... வளைந்த அதன் விண்ணுங்குத்தடி ... விண்ணுங்குத் தடியில் விண்ணைப் பிணைத்துப்பூட்ட றீல் கட்டைக் கப்பிதான் பாவிக்கப்பட்டிருக்கிறது ... பெரிய பிறை ... முக்கோணமான தலையில் ஒளிரும் வாணிஷ் கடுதாசி ... விண்ணுங்குத்தடியின் கப்பியில்கூட வன்னம் ... டங்கென்று இசையெழுப்பும் விண். அது பிரம்பு விண்ணு? வாட்டிய பனையோலை விண்ணு?

பிரக்ஞையற்ற நிலையில், மனதுள் எழும் ஆவலின் உத்வேகத்தில் தாழைமடலைப்போல அவன் நிமிர்ந்து எழுந்தான். தகப்பனைப்போல முன்வளைந்த ஒல்லியனான அவனின் கண்கள், கைவிளக்கால் சிறிது கரைந்த இருளினுள் தடுமாறின. மங்கலான வெளிச்சத்தில், பூரணம் பலகையில் சாம்பல் பரவி, தும்புக்கட்டைகள் கயக்கிக் கொண்டிருப்பதை அவன் காணுகின்றான். தூண்டுதலின்றியே குரல் எழுந்தது :

" அம்மா, ணேய் !"

பூரணம் மயக்கநிலையில் இருந்து விடுபட்டு உசாரானாள். காய்ந்த தென்னம்பாளை போன்ற உடலில் அந்தக் குரல் புத்துணர்ச்சியினை ஏற்படுத்தியிருக்க வேண்டும். தாய்மையின் வாஞ்சை, அவளை அணைய, குரலாய் நெகிழ்ந்து ஒலித்தது.

" என்ன தம்பி அது ?"

ஆறுமுகம் சிறிது மௌனமாய் இருந்தான். பிறகு, தன்னுடைய குத்திட்டு நிற்கும் தலைமயிரைப் பிருண்டி முன்னே இழுத்துவிட்டபடி மூக்கைச் சீறினான். பிறகு, தலையைச் சாய்த்துக் கொண்டு, தாயைப் பார்த்தபடி நொய்மையான குரலில் எதையோ கூற முயலுகின்றான். எண்ணம் நித்திரை கவிந்த கண்களில் தெளிவாக விளங்கியது.

" என்னடா ராசா, என்னெண்டு சொல்லனெடா ..."

சிணுங்கும் குரலைப்போல அவன் கதைக்கும் ஒலி. நித்திரையின் ஆழ்தலுள் கிடந்ததால் சொற்களும் சோம்பல் முறியாமல் கூனியும் குறுகியும் வெளியாகின :

" அம்மா ணேய், நான் உன்னட்டை ஒரு ஐம்பசம் நெடுகக் கேள்க்கிறன் ...... நீயும் தாருயில்லை ... எனக்கணை எட்டுமூலைக் கொடி கட்ட வேணுமெண்டு ஆசை ... வன்னம் ... நூல் ... வால்க்கயிறு அதுக்கெல்லாமணை ஒரு ஐம்பசம் எண்டாலும் வரும் ... நான் எத்தினை நாளா மட்டி உளக்கிறன் ... எத்தினை நாளா உன்ரை மட்டக் கடலுக்கை வந்து மட்டையள் அள்ளி முறிய முறிய நாற்கடகத்துக்கை சுமந்து கொட்டினனான் ...... போன முறை சாணி வித்த காசிலை ஒருசேங்கூட நீ எனக்குத் தரயில்லையணை !"

அவன் மூக்கை இழுத்து உறிஞ்சினான். குரலில் தவிப்பும் தாகமும் இணைந்தொலிக்கின்றன. அவனின் ஒவ்வொரு சொற்களும் பூரணத்தின் இதயத்தை திருக்கைவால்

கொண்டு அடிப்பதுபோலத் தாக்குகின்றன. அவன் உச்சி வெய்யிலிலும் சாணி அள்ளுவதற்காகச் சுடலைக்குச் சென்றிருக்கின்றான். பலர், மத்தியானத்தில் சுடலையிலே வைரவர் உலாவுவதாகச் சொன்னபொழுது அவன் அதைத் துச்சமாக மதித்து, சாணியே விருட்டியாகிவிடும் நடு வெய்யிலில் சுடலைக்குச் சென்றிருக்கின்றான். சுமக்க முடியாமல் சுமந்துகொண்டு வந்து, பெரிய சாணிக்கும்பம் ஒன்றைக் குவித்த அவனுக்கு அவள் ஒரு சதங்கூடக் கொடுக்கவில்லை. அவள் கொடுக்க நினைத்தாலும், அவளிடம் 'வெள்ளைச் சல்லி' கூட அடுக்குப்பெட்டிக்குள் இல்லாமலிருந்தது. சித்திரை வருஷப் பிறப்பாகத்தான் இருக்கவேண்டும். அன்றிலிருந்து இன்றுவரை ...

"எத்தனை நாளா... வரியம் புறந்ததிலையிருந்து இண்டை வரை ... நாற்பது நாளாதலிருக்கும் ... அவன்தான் கறிக்கு தவினவன் ... இவரை முடிச்சதிலை நான்கண்ட சுகமென்ன? வரியம் ஒரு புள்ளைப் பெத்ததுதான் மிச்சம் ... இருவத்தைஞ்சு வயதுக்குள்ளே இத்தினை ... ஏழு ... வந்து போற சோளகமெண்டுமில்லை ... வாடை யெண்டுமில்லை ... நமக்கு இப்புடித்தான் ... எப்ப வழிபிறக்குமோ ... ?"

பூரணம் பெருமூச்செறிந்தாள்.

அங்குள்ள பெண்ணிற்கு உழைப்பு சோளகத்தில்தான். ஆண் வாடைக்காலத்தில் நன்றாக உழைப்பான். சோளகத்தில் வீட்டிற்குள் படுத்து விடுவான். சோளகத்தில் பெண் மட்டையெடுத்துப் பிழைப்பாள். ஆனால் சோளகமும் சில வேளைகளில் நம்பிக்கைத் துரோகம் செய்துவிடும். இரண்டு சோளகங்கள் அவ்வூர்ப் பெண்களை அப்படி ஏமாற்றிவிட்டன. அதோடு பூரணத்தை புதிதாய் ஒரு சனியன் பிடித்துக்கொண்டு விட்டது. கரையோரமாக கடலணைபோட அத்திவாரமிட்டவர்கள், பலரின் மட்டைக் கிடங்குகளைக் கிண்டி, கரையில் எறிந்துவிட்டார்கள். நாலு மாதங்களுக்கு கடலில் கிடந்து ஊறவேண்டிய அம்

மட்டைகள் 'தாட்டு' இரண்டு மாதங்களுள் கிளறி எறியப் பட்டதால், மீண்டும் புதுக்கிடங்கு கிண்டித் தாழ்க்க வேண்டியதாயிற்று. அரைவாசி நனைந்த அவ்விளந் தேங் காய் மட்டைக் கீலங்களைப் பார்க்கப் பார்க்கப் பூரணத்திற்கு வயிறு பற்றியெரிந்தது. கிளறியெறிந்தவர்களுக்கு அன்று நல்ல திட்டுக் கிடைத்தது.

சோளகம் போய் வாடை வந்துவிட்டால் கடற்கரையில் மட்டை புதைக்கவும் முடியாது; கிளறவும் முடியாது; மட்டைக் கிடங்குகள் வெறுமையாகி விடும்; அதேவேளை யில், பெண்களின் மனதிற்குள் விரக்தி கபங் கட்டிவிடும். தேங்காய் மட்டைகளைப் புதைத்து ஊறவைத்து, பின் அதைக் கிளறி எடுத்து தக்கைப்பொல்லால் அடித்து தும் பாக்கும் பொழுது அவர்கள் மனதில் ஏற்படும் நிம்மதியையும் மகிழ்வையும், வாடைக்காற்றின் குமுறும் அலைகள் அழித்து விழுங்கி விடுகின்றன. இரண்டு பணத்து மட்டையை கடகத்துள் அள்ளிக் கொண்டு வரும்பொழுது ஒரு பெண் ணிற்கு ஏற்படும் ஆத்ம திருப்தியும், மகிழ்வும் தன் கணவனோடு சரஸமாடும் நிலையில் ஏற்படுமோ என்பது ஐயமானதுதான்.

பூரணத்தின் காலை ஈரம் நனைத்துவிட்டது. அவள் காலை ஒதுக்கிக்கொண்டு குனிந்தாள். நடுவில் பிள்ளை மூத்திரம் பெய்துவிட்டது. ஆறுமுகத்தை அவள் நிமிர்ந்து பார்த்தாள். அவன், தாயின் பதிலிற்காக அரைகுறையாய் தூங்கிக்கொண்டு, முழங் கால்களில் கைகோத்து முட்டுக் கொடுத்திருந்தான். ஆறுமுகத்தின் கதையைத் தடம்புரள வைப்பதற்காகப் பூரணம் மன ஒப்புதலின்றி வாயை அசைத்தாள்.

"டே, தம்பி ஆறுமுகம் ...... அந்த ரெட்டுச் சாக்கை இஞ்சாலை எடு ... இண்டைக்கு வெளியிலைதான் படுக்கை ... மெய்யடா இண்டைக்குப் போரடியிலை உன்ரை கன்னைக்கு நல்ல வெற்றியாம் ... நீ நல்லா அடிச்சியாம் ... கோடித்

தென்னையிலை காச்சது நல்ல போர்த் தேங்காதான்......
வேணுமெண்டா நீ அதிலை ஒண்டைப் புடுங்கி எடு...''

ஆறுமுகத்தின் மனம் கொடிபறக்க விடுவதிலிருந்து தடம் புரள்கின்றது. போரடித்தலில் அலை பரப்பும் மனம் அதிலேயே முற்முக ஆழ்ந்துவிடுகின்றது. தன்னுடைய 'வீரவாகு'வான பெரிய தடித்த ஓட்டுத் தேங்காயை, கையழுத்தச் சாய்விலிருந்து வேகமாகச் சீறவைத்து, மாணிக்கனின் போர்த் தேங்காய்களையெல்லாம் சில்லவல்லமாக உடைத்ததைப் பற்றி ஆறுமுகம் தாய்க்கு மிகவும் உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டிருக்கின்முன்.

பூரணம் தும்புக் கட்டைகளைக் கயக்கிக்கொண்டு, அழுத மனத்தைத் தெரியவிடாமல் வெளியே சிரிக்கின்முள்.

4

கொட்டுமட்டும் தெரிய மொட்டையாக நின்ற தென்னை மரம் கணவதி வீட்டு அடுப்படிக்குச் சாய்வாக உள்ளபத்தியின்மேல் விழுந்துவிட்டது. சோளகக் காற்றின் முதற் பலியாக அது கணவதி வீட்டுப் பத்தியை பெற்றுக்கொண்டு சன்னதம் ஆடத் தொடங்கிவிட்டது.

ரேட்டுவரை வந்த கடல் நீர் காற்றின் வேகத்திற்கேற்ப துள்ளிச் சீறிப் பொங்கியபொழுது ரேட்டுக்கு எதிர்த்தாற் போலிருந்த பள்ளக் காணியிலுள்ள மக்கள் குடியெழும்பி விட்டார்கள். பானை சட்டிகளையும், கந்தல்களையும் அள்ளிக் கொண்டு பீதிக் கலக்கம் நிறைந்த முகத்தோடு அவர்கள் அங்குமிங்கும் ஓடினூர்கள். கடைசியில் தாங்கள் வட்டிக்குக் கடன்வாங்கும் கல்வீட்டுக்காரர்களின் வீட்டுத்திண்ணைகள் தான் தாங்கள் தஞ்சம் புகுவதற்கு இடமாக இருந்தன என்பதை அவர்கள் கண்டார்கள்.

கணவதி வீட்டுக் கூரையை நிமிர்ந்து பார்க்கின்றான். வீட்டுக் கூரையின் கண்ணறைகளை பழைய தடுக்குப் பாய்கள் மூடிக் கிடக்கின்றன. இப்பொழுது கிடுகின் விலை பன்னிரண்டு ரூபாவிற்குப் போய்விட்டது. இனி அதற்கு மேலும் போகும் என்று கணவதிக்குத் தெரியும். அவனது மனம் வெறுப்புமிழக் கண்களை மூடிக்கொள்கின்றது. காணுமல் இருந்துவிட்டால் மனதுள் பிரச்சினைகள் எழாது என்பது அவனின் யோசனை. ஆனால், மனம் விட்டபாடா யில்லை. கடைசி மேய்ச்சலுக்கு அவன் செல்லத்துரை முதலாளியிடம் அறுபது ரூபா வாங்கினான். ஆனால், ஆறு மாதத்தின் பின் அதை அவன் எண்பது ரூபாவாக செல்லத் துரை முதலாளியிடம் திருப்பிக் கொடுத்தான். கடனுக்கு வட்டி எண்ண அவனுக்குத் தெரியாது. செல்லத்துரை முதலாளியாரின் நெற்றியில் என்றும் திருநீற்றுக் குறிகள் துலங்கியபடி இருக்கும். வீட்டு விருந்தையில் உள்ள ஈஸிசேரில் சாய்ந்துகிடந்தபடி தேவார பாராயணம் செய்யும் அவரைக் கணவதி பலமுறை கண்டிருக்கின்றான். தமது செலவிலே சித்திராபூரணையன்று கருப்பணிக் கஞ்சி வார்க் கும் அவர்மீது அவ்வூர் மக்கள் மிகவும் நம்பிக்கை வைத் திருந்தனர். கோயில் முகாமைக்காரரும், சிவநேயச்செல் வருமான செல்லத்துரை முதலாளியார் ஒருபொழுதும் கடவுளுக்கு மாறாய் பொய் கூறமாட்டாரென அவன் திடமாக நம்பினான்.

பூரணம் ‘முட்டு’ வியாதி பிடித்த கைக் குழந்தையை நெஞ்சோடு அணைத்துக்கொண்டு கப்போடு சாய்ந்தபடி இருக்கின்றாள். வயிற்றினுள், தாங்கிய சிசு கொடுக்கும் தொல்லையின் ஆயாசம் தீர சாய்ந்தபடி சிறிது கண்மூடலும், திறப்பும். கையிலிருக்கும் குழந்தையை ஏணையில் கிடத்தி யதும் அழுவதால், வேறு வழியின்றி நெஞ்சோடு சார்த்தி யிருக்கிறாள். மூன்ருவது பிள்ளை செல்வன் தடுக்குப் பாயில் காய்ச்சலின் தாக்கத்தால் முனகிக்கொண்டு கிடக்கின்றான்.

இரண்டாவது மகன் தேங்காய்ச் சொட்டைத் தின்று கொண்டு தன்னுள் ஏதோ அலம்பினான்.

"சீ ... என்ன சீவியம்."

கணவதியின் நெஞ்சம் வற்றிய கடலாகி அலுத்துக் கொள்ளுகின்றது.

பூரணம், தனது பூனைக் கண்களால் கணவதியை இரக்கத்தோடு நோக்கினாள். அவனின் சிவந்த கண்களுள் நிராசையின் சித்திரம். முதுகிலுள்ள கழலையைச் சொறிந்து கொண்டே அவன் கரகரத்த குரலில் யாருக்கோ முறையிடு வதைப்போல சொல்லுகின்றான் :

" அகலவாய் போய்ப் பறிபோடேலாதெண்டு பணிவிலை களங்கண்டி நட்டு வலைகட்டினாலும் வலையளைக் கூடக் களவெடுக்கிறாங்கள் ...... இனி எங்காலையெண்டு போறது? புழைப்பென்ன புழைப்பு ...... மரங்களும் தடியளும் நினைச்ச நேரத்துக்கு எங்கடை கொட்டிலுகள்ளை தான் விழுந்து துலையுது ...... ஏழையின்ரை கொட்டிலுகளிலை காத்துக்கும் கோவம் ... கடவுளுக்குஞ் சண்டை ..."

கடல் நீருள் பல நிறங் காட்டி ஓடும் பஞ்சுக் கலவாய் போல, அவன் குரலிலே கோபமும், விரக்தியும், நிராசையும், ஏளனமும் இழையோடி ஒலிக்கின்றன.

பூரணம் பதிலே பேசாமல் அவனைப் பார்த்தாள். எலிகிய வயிற்றைத் தடவிக்கொண்டு அவன் குனிந்தபடி இருந்தான். சீப்புக்கு அடங்காத அவனின் 'சிலுப்பா'த் தலைமயிர் ... துருதுருக்கும் சிவந்த கண்கள் ... சுறுமீன் தோல் போல வழவழப்பான அவனது தேகம் ...... பயில்வான் உடம்பு ...

ஏழு வருடங்களுக்கு முந்திய அவனது அந்த வசீகரமும் கம்பீரமுமிக்க உருவம் இப்பொழுது சோளகக் காற்றின் வெம்மையாலும், மிதமிஞ்சிய உழைப்பாலும், வறுமைத் தாக்கத்தாலும் தண்ணீரை விட்டு நீங்கிய கடற் பஞ்சாகி விட்டது.

சோளகமும், வாடையும், கச்சானும், கொண்ட லும், வெய்யிலும், மழையும், இருளும், ஒளியும் வந்து வந்து போய் ...

கோடியடித் தென்னம் பிள்ளையின் கீழ் சித்திரைப் பூரணையன்று சித்திரைக்கஞ்சி குடித்துவிட்டு அவனும் அவளும் கொஞ்சிப் பேசிய அந்த இன்பகரமான நாட்கள் ...

கலியாணம் முடித்ததின் பின்பு வந்த தீபாவளி யன்று பூரணத்திற்கு சிவப்பு நிறத்தில் 'தியாகபூமி'ச் சேலையும், பச்சை நிறத்தில் சீத்தைச்சட்டையும் வாங்கிக் கொடுத்திருந்தான். கறுப்பியென்றாலும் அவளிற்கு அவை அழகையளித்தன. நெற்றியில் குங்குமப்பொட்டு. யௌவனத்தின் வேட்கையில் அவளது கண்கள் பிரகாசித்திருந்தன.

"பூரணம் ... நீ இண்டைக்கு எவ்வளோ வடிவா யிருக்கிறா ...... இதேனணை உன்ரைசொக்கையிலை இப் பிடி ..."

சரஸம் வலுக்க அவள் செல்வமாகச் சிணுங்கு கின்றாள். நாணத்தால் உடல் வரித்திருக்கையாய் நெளிகின்றது.

"சொண்டு நல்லாச் சிவந்து போச்சு ...... எங்கை ஒருக்கா ... ஒருக்கா எண்டாப் பெரிய செட்டு விடுறா ... வாணை ..."

அவளுடைய அடர்ந்த தலைமயிரை அவன் கோதி விடுகின்றான். அவளுடைய செவ்விதழ்கள் இரத்த மூறித் துடித்தன. கண்கள் மூடிய மோகலாகிரியில் அவள் கிறங்கி அவன் தோளோடு ...

"வீல் ... க்மா ... ம்ம் ... ம்மா ..."

'முட்டு'க் குழந்தை வீரிட்டு அலறுகின்றது.

பழைய நாளின் இனிய கனவுகள் கலைய, அவள்

நெஞ்சோடு கவ்விக்கிடந்த குழந்தையை இதமாகத் தடவிக் கொடுக்கின்ருள்.

திண்ணையில் கணவதியைக் காணவில்லை.

* * *

'பன்ரெண்டுக்கு வாறேண்டவனை இன்னுங் காணயில்லை ... எக்கணம் அந்தமரம் வந்தாலும் நாந்தான் மறுமொழி சொல்லோணும் ... வெள்ளணேடை வாடா எண்டு அவனிட்டைப் போகப்போகச் சொன்னனுன் ... கடவுளே அம்மாளாச்சி... எப்பிடியும் ஆறுமுகம் சுருக்கா வரோணும்.

பூரணம் உலையை வடித்துக்கொண்டிருக்கிருள்... மனம் வேண்டாத வேண்டுதல்களை வேண்டுகின்றது. வாய்க்குள் பச்சையரிசியைப் போட்டுக் கொறித்துக் கொண்டிருக்கும் அவள், சுழற்றிவிட்ட பம்பரம்போல அலுவல் செய்வதில். ஆனல், இப்பொழுது, இருந்தால் இருந்த இடத்தைவிட்டு உடனே எழமுடியாத உடல் அலுப்பு அவளுக்கு. உலைப் பானையை நிமிர்த்திவிட்டு, அவள் அடுப்புக்கரையில் ஆயாசத்தோடு இருந்தாள்.

"எடீ, பூரணம் !"

பூரணம் கணவதியின் குரலில் குத்தூசியில் குத்துண்டநண்டாகி பிரயத்தனப்பட்டு அவசரமாக எழுந்தாள்.

"என்னவும் ..."

"எங்கை இவன் ஆறுமுகம் ?"

"மட்டி உளக்க வெண்டுவிட்டனுன் ...... இன்னுங் காணயில்லை ..."

பூரணம் அனுங்கியபடி சொல்லி முடிக்கவில்லை. அவனின் கரகரத்தகுரல் அவளின் சொற்களைப் பாய்ந்து நிறுத்துகிறது.

"எளிய பரதேசி நாய் ... உன்னுலைதான்ரி எல்லாம் வாற அந்த எருமையன் அங்கை கொடியேத்திக்கொண்டு நிக்கிருன்."

கணவதி, பூரணத்தின் தலைமயிரைப் பிடித்துக் கரகர வென்று வெளியே இழுத்து எறிந்தான். தகப்பனின் செயலைக் கண்ட குழந்தைகள் பயத்தில் ஓடிச்சென்று தைலாப்பெட்டிக்குப் பின்னால் ஒளித்துக் கொண்டனர். அவனின் முரட்டுத்தனமான தள்ளுதலில், பூரணம் வீரிட்டுக் கொண்டு வீட்டு முற்றத்தில் கிடந்த தும்புக் குவியலின்மேல் அலக்க மலக்காக விழுந்தாள். விழுந்த அதிர்ச்சி நீங்குமுன், பூரணத்தை கணவதி கையாலும், காலாலும் ஓங்கி அடித்து உளக்கினான் ...

" ஐயோ என்னைக் கொல்லாதை ... என்னைக் கொண் டாலும் என்ரை வயித்துக்குள்ளை கிடக்கிற சீவனை வதைக் காதை ... ஏன் இப்படி என்னை அடியால கொல்லுறாய் ... ஐயோ ... ஐயோ ... என்ரை அம்மாளாச்சியே ... "

அவள் மூச்சிழுத்தாள். மல்லாக்காய் கிடந்தவள் எழும்ப முடியாமல் தவித்தபடி கைகால்களை வலித்தாள். தும்புக்குவியலுள் கிடந்த கல்லொன்று முழங்கை மூட்டில் குத்தியதால் புறங் கையிலிருந்து இரத்தம் வழிந்து கொண் டிருந்தது.

பூரணத்தை அடிக்க ஓங்கிய கணவதியின் நெஞ்சுக்குள் பல்லாயிரம் முட்கள் குத்தியதைப் போன்ற உணர்வினில் அவன் குலுங்கினான்.

பூரணம் எழாமலே மல்லாக்குப்பாடாக மூச்சிழுத்தபடி கிடந்தாள். அவள் சீலையில், தெறித்த ரத்தச் சொட்டுகள்.

வெளியே படலை திறக்கப்பட்டது !

கணவதியின் கண்கள் திகிலில் எரிகின்றன.

" ஐயோ என்ரை நாச்சியாரே ... எட, ஆறுமுகம், உனக்கு ... உனக்கு ... என்னடா ... டேய் ... "

கணவதி தடாலென்று மயங்கி வீழ்ந்தான்.

" அவள் ஆறுமாதப் பிள்ளைத்தாச்சி ... கிறுதி வந்து கிடக்கிறாள் ... முட்டிலை குழந்தை என்னண்டலை சொல்

லிற்று ...... அந்த ஆறுமுகம் பொடியனுக்கும் சுடலேயிலே பேயடிச்சுப் போட்ட காயம் ...... இனி, எப்படித்தான் கணவதி இதுகளை அண்டலிக்கப் போருளே?"

ஆஸ்பத்திரிக் கட்டிலோரமாக கணவதி கைகளைப் பிசைந்து கொண்டு நிற்கிருன். வரிசை வரிசையாக உள்ள வர்களை டொக்டர் பரிசோதித்தபடி வருகின்ருர்.

ஆறுமுகத்தின் கட்டில்.

டொக்டர், ஆறுமுகத்தை ஸ்பரிசிக்கிருர்.

பொச்சான தலையைக் குறுக்கிக் கொண்டு ஆறுமுகம் புலம்புகின்ருன். வார்த்தைகள் இழிந்து, காற்றில் பறக்கும் சாதாளைகளாகி ஒலிக்கின்றன.

"எணே ... என்ரை அம்மா ... இனி இல்லையணே ... பன்ரெண்டுக்கு வாறண்ணே ... மட்டி உளக்கப் போனனான்தான் ... பிறகணே ... இல்லே ... இல்லே ... நல்ல கொடியணே... பாம்பன் கொடி, இல்லையணே கொக்குக் கொடியோடை தட்டுப் போட்டு ... என்ரை ஐயோ ... எணே யெணே ஐயா வாருர் ... பொறணே ... அம்மா ...... வேலிச் சிராய் எறியிட்டுதணே ... ஐயாட்டைச் சொல்லாதையணே ... இனி மட்டி உளக்கப் போறன் ... கொடி ஏத்தன் ... ஐயோ ... ரத்தமணே ... ரத்தம் வருகுதணே ..."

அவன் வீரிட்டுக் கத்தினுன்.

கணவதி விம்மி விம்மி அழுகின்ருன். கொக்கரைக் கூட்டுக்குள் அகப்பட்ட மீன்போல, குற்ற உணர்வுகளுள் சிக்கிய அவன் நெகிழ்ந்து கசிந்து விம்மினுன்.

பிறகு, மனதை கணவதி ஒருநிலேப் படுத்திக் கொண்டு பூரணத்தின் கட்டிலடிக்குச் சென்ருன்.

பூரணம் முகத்தில் சாந்தி தவழப் படுத்துக் கிடக்கின்ருள். பூனைக் கண்களில் அமைதி தவழ, அவள், கணவதியைப் பார்த்து இளநகை செய்தாள். அலைந்து கலைந்த தலைமயிர் அவளின் வட்டமான முகத்தில் நாலூறு

அழிக்கும் கருப்புப் பொட்டாக அவளுக்குத் தெரிகின்றது. பொட்டுப்பொட்டாக அவள் முகத்தில் அரும்பி நிற்கும் வியர்வைத் துளிகள்கூட அவளின் முகத்திற்கு புது மெருகை அள்ளித் தெளிக்கிறது.

அவள் தன்னுடைய இரண்டு கைவிரல்களையும் பின்னி, ஊதிய வயிற்றின்மேல் மூடிவைத்தபடி கிடக்கின்றாள்.

நினைவு ஓலை சட்டங்களாய் இழிந்து, சிந்தனை நீருள் மிதக்கிறது ......

'அவளுக்கு நான் என்ன சுகத்தை வைச்சன்? ஒரு வருஷங்கூட நாங்க சந்தோசமாச் சீவிச்சமா? குப்புறப் படுத்திருந்த அவளை நான் படுத்தின பாடு ... அவளுக்கு நன்மையெண்டுமில்லை ... தீமையெண்டுமில்லை ... நெடுகலு மடுப்புக்கைதான் கிடப்பாள் ... ஒரு நகையோ? நகையளை ஆரு போடுகினம் ... நான் கள்ளுக் குடிக்கிறகொட்டிலை நடத்துற முதலாளி வீட்டுப் புள்ளையள் அம்மனுட்டம் நகை போட்டிருக்கு ... என்ரை இவள் என்னட்டை அடி வாங்கினதும் ...... சாய் மட்டை நொருங்கினதும்தான் கண்டது ... இனி ... '

கணவதியின் கண்கள் நீரைக் கக்குகின்றன.

அவனுடைய தீய எண்ணங்கள் நீறுறி, வெடித்த பேத்தை ஆயின.

'அவள் புள்ளைப் பெத்ததுதான் என்னோடை கண்ட மிச்சம் ... புள்ளையளுக்கு நான் வேண்டினது செய்தனோ? ... '

புரண்டெழும் உணர்வுகளின் மோதலில் கணவதி திசைமாறி வாசலை நோக்கினான்.

அதே வேளையில் பூரணத்தின் குரல் காதிற்குள் இனிமையைக் குருப்பிக்கிறது :

" இஞ்சாரும், இதிலை வாரும்! "

அவள் அவனுக்கு கட்டிலடியில் இடம் ஒதுக்குகின்றாள்; கணவதி அவளது தலைமாட்டு ஓரமாக அமர்கிறான். அவள்

தலையின் இரு புறமும், பிதுங்கி உயர்ந்திருக்கும் தலையணையின் மூலைகளில் அவனுடைய கண்கள் மேய்கின்றன.

"என்னவும் வாடிப் போயிருக்கிறீர்... சாப்பிட்டனீரா?"

அவளுடைய குரல், தூண்டில் முள்ளாகி அவன் நெஞ்சைக் குத்திப் பிடிக்கின்றது. உலகம் முழுவதிற்குமாக அவள் உருவம் பொலிந்து நிற்பதைப் போல அவனுக்கு ஒரு பிரமை.

அவள், அவனையே ஊடுருவுகிருள். "மெய்யனை... ஏன் ஒரு மாதிரி யிருக்கிறீர்?"

அவளுடைய குரலில் எழும் இனிய தாபமும் இரக்கமும் கணவதியை என்னவோ செய்கின்றன. பழைய நினைவுகள் நெஞ்சிற்குள் வலை பின்னுகின்றன. அந்த வேகத்தில் அவன் தன் வாழ்வை நினைத்துக் கொள்ளுகிருன். கடன் என்ற ஓயாத தொல்லையுடன் கிளித்தட்டு விளையாடும் வாழ்வை ஒழித்துவிட்டு, புதிய வாழ்வை ஆரம்பிக்க வேண்டுமென்று ஆசைகள் நெஞ்சிற்குள் சுவாலை பரப்பி எரிகின்றன. கண்கள் உறுதி பெற்ற துடிப்பில் படபடக்கின்றன. முகத்தில் புதிய அமைதி.

"இஞ்சேரும், சும்மா ஒண்டுக்கும் யோசியாதையும்... அங்கை, அந்தப் பிருக்கித் தட்டிலை பாலிருக்கு... எழும்பும், எடுத்துக் குடியும்..."

அவளுடைய கை, அவனது முதுகை வருடுகிறது. அவன் மேலே பார்க்கிருன். குரலில் உறுதி கிளர்கிறது:

"பூரணம், இந்தச் சோளகம் முடியப் பிறகு பாரனை... இனி... உங்களுக்கு ஒரு குறையும் நான் வைக்கன்..."

பூரணம் அவனைப் பச்சாதாபத்துடன் பார்க்கின்ருள். மனக் கண்களில் அந்த வேளையில், அவளுடைய வீட்டின் வடக்குத் திண்ணையில் கிடக்கும் மட்டை கிளறும் ஓடும், அலவாங்கும், மட்டைக் கீலங்களும் தோன்றி மறைகின்றன.

துவளும் மனதோடு அவள் அழுதாள். துன்பங்கள் முட்டி, திமிங்கிலங்களைப்போல மோதிய வேளைகளிலும் அவள் சிரித்தாள். சிரிப்பும், அழுகையும் அவள் வாழ்க்கையில் சேருய்க் கலங்கி, சுரிநாற்றம் கிளப்பிய பொழுதும் அவளது குடிசையிலே, அவளது அளவற்ற பொறுமை அமைதியைப் பாயாய் கட்டி வாழ்க்கைத் தோணியை நிம்மதிக் கடலில் பாதுகாப்புடன் எதிர் நிச்சல் போட வைத்தது என்பதையும் அவள் உணராமலில்லை.

கணவதி ஏழு வருடங்களுக்கு முன்பாக இருந்து சொல்லிக் கொண்டுவரும் வார்த்தைகள் அவளது காதோடு கேட்கின்றன. அந்தச் சொற்கள் வெறும் ஒலி வடிவில் எழுந்து, காற்றில் கலந்து மடிந்துவிட்டன.

ஆனால், வரப்போகும் சோளகங்கள் ?

தாழையடி சபாரத்தினம்

# தெய்வம் நின்று கொல்லும்

நீதி அரசே, 'கடைசியாக ஏதாவது கூற விரும்புகிறாயா?' என்று சம்பிரதாயப்படி கேட்கிறீர்கள். இந்தச் சம்பிரதாயத்தை, எனக்குக் கிடைத்த அரிய வாய்ப்பாக எண்ணிக் கொண்டு, என் மனதில் உள்ளதைக் கூறப் போகிறேன் :

சந்தர்ப்ப சாட்சியங்கள் என்னைக் கொலைகாரன் என்று சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபித்து விட்டன. 'நான் இந்தக் கொலையைச் செய்யவில்லை' என்றுதான் இப்பொழுதும் கூறுகிறேன். என் கூற்றை நிரூபிக்க நான் எவ்வித முயற்சியும் செய்யாததைக் கண்டு, நீங்கள் ஆச்சரியப்பட்டு இருப்பீர்கள்.

ஆனால் —

இந்த வழக்கில் நான் நிரபராதி என்பது உங்களுக்கு நிச்சயமாகத் தெரியும். இருந்தும், உங்களால் என்னைக் காப்பாற்ற முடியவில்லை.

முதல் நாள் பெய்த மழையில் நனைந்து போயிருந்த தேங்காய்களை அவனும் நானும் அலவாங்கில் உரித்துக் கொண்டு இருந்தோம். திடீரென்று அவன் அலறினான். தேங்காய் உரிக்கும்போது கை வழுக்கி விட்டதால் அவன் அலவாங்கில் வீழ்ந்து விட்டான். வயிற்றில் குத்தி முதுகு வழியே பீறிட்டு நிற்கும் அலவாங்கை நான் ஓடிச் சென்று இழுத்து எடுத்தேன். அவன் அலறியதைக் கேட்டு சிலர்

ஓடி வந்தார்கள். அவர்கள் வரும்போது நான் அவன் உடலில் குத்தி நின்ற ஆயுதத்தை இழுத்து எடுத்தது உண்மை. ஆனால், அவர்கள் நான் அலவாங்கால் குத்தியதை நேரில் கண்டதாகக் கூறுகிறார்கள்.

உங்கள் தீர்ப்பைக் கண்டு நான் கலங்கவில்லை. மனிதன் மனிதனை ஏமாற்றலாம். ஆனால், தெய்வத்தை அவனால் ஏமாற்ற முடிவதில்லை என்ற உண்மையை இப்பொழுது நான் நன்கு உணருகிறேன்.

ஐந்து வருடங்களுக்குமுன் ஒரு நாள், நான் ஒருவனைக் கொலை செய்தேன். ஆனால், ஒருவராலும் என்னை நீதியின் முன்னால் நிறுத்த முடியவில்லை.

அவள் — பொன்னி — என் முறைப் பெண். நான் அவளுக்கு, அவள் எனக்கு — என்று எப்பொழுதோ முடிவு செய்தாகி விட்டது. அப்பொழுது நான் கள் இறக்குவதைத் தொழிலாகக் கொண்டிருந்தேன். என் மாமன் — பொன்னியின் தந்தை வண்டி ஓட்டிப் பிழைத்துவந்தார். அப்பொழுதெல்லாம் பொன்னி என்மீது உயிரையே வைத்திருந்தாள். எங்களுக்கிடையே போட்டியாக முளைத்தான் ஒருவன்.

சிறு வயது முதலே தறுதலையாகத் திரிந்த வேலன் — எங்கள் கிராமத்தை விட்டு என்றோ பட்டணம் போனவன் — திரும்பி வந்திருந்தான். கையிலே கடிகாரம், மேலிலே சட்டை சகிதம் வந்து சேர்ந்தவனைச் சற்று சபலத்தோடு எங்கள் கிராமத்து இளம் பெண்கள் பார்த்தார்கள் என்பது உண்மை. ஆனால், அதைப் பற்றி எல்லாம் நான் சிறிதும் சட்டை செய்யவில்லை; என் நினைவெல்லாம் பொன்னிமேல் மட்டும்தானே.

பட்டணத்தில் அவன் சொந்தத்தில் ரிக்ஷா வைத்திருந்தானாம். கையில் ரொக்கமாக முந்நூறு ரூபா வைத்திருக்கிறான் என்று கேள்விப்பட்டதும், என் மாமனின் வாய் ஆச்சரியத்தால் அகல விரிந்தது.

வேலனைக் கண்டதும், "வா தம்பி, உட்காரு" என்று தடபுடலாக உபசரிக்க ஆரம்பித்தார். பட்டணத்து வாழ்க்கையை அவன் வர்ணிக்கும் போது, திறந்த வாய் மூடாமல் ஆச்சரியக் கடலில் மூழ்கி விடுவாள் பொன்னி.

"நாளொன்றுக்குப் பத்து ரூபா கூட சம்பாதிக்கலாம் என்கிறாய் ... அப்புறம் ஏன் இந்தத் தரித்திரம் பிடித்த கிராமத்துக்கு வந்திருக்கிறாய்?" மாமன் இப்படிக் கேட்டதும், அவன் புன்சிரிப்போடு கூறினான் :

"அவ்வளவைச் சம்பாதித்து என்ன பயன், மாமா — காலா காலத்துக்கு ஆக்கிப் போட ஒருவர் இல்லையென்றால் ... "

"உண்மைதான்; உன் ஆத்தாளும் போய்விட்டாள். உனக்குத்தான் வேறு யார் இருக்கிறார்கள்?"

"நீங்கள் இருக்கிறீர்களே போதாதா, மாமா? என்னிடமும் நாலு காசு இருக்கு. யாரையாவது பார்த்துக் கட்டி வையுங்கள். நான் மறுநாளே அவளை இழுத்துக் கொண்டு பட்டணம் போய்விடுகிறேன்."

கட்டினவளைப் பட்டணம் கூட்டிப் போகிறேன் என்று வேலன் சொன்னதும், பொன்னி குதூகலத்தோடு துள்ளி ஓடியதைக் கவனித்த நான், அவளைத் தொடர்ந்து சென்றேன். பின் வளவில் கட்டி நின்ற பசுக்கன்றை அவள் அணைத்தபடியே, "நான் பட்டணம் போனபின் உனக்கு யார் புல்லுப் போடுவார்கள்?" என்று செல்லமாகக் கொஞ்சினாள். என் இதயத்தில் வெடிப்பு ஏற்பட்டது.

மாமன்தான் பணத்துக்கு அடிமைப் பட்டுவிட்டார் என்றால், பொன்னியுமா என்னை மறந்து விட்டாள்? அவளையே நேரில் கேட்டுவிடுவது என்று முடிவு செய்தேன்.

"எங்கள் இதயங்கள் இரண்டறக் கலந்து விட்டன; நாங்கள் ஒருவரை ஒருவர் காதலிக்கிறோம் ... "

பொன்னியா இப்படி பேசுகிறாள் என்று அதிசயித்தேன். அவள் இந்தப் பட்டணத்துப் பாஷையை எப்படிக் கற்றாள்?

"மச்சான், உன்னில் நான் எம்மட்டு ஆசை!" என்றுதான் அவளுக்குச் சொல்லத் தெரியும். அவளுக்கும் பட்டணத் தானுக்கும் இடையே உள்ள சகவாசம் வலுவடைந்து விட்டது என்பதை நான் புரிந்து கொண்டேன்.

பாவாடை கட்டத் தெரியாத காலத்திலிருந்து அவள் மீது நான் அன்பு செலுத்தி வந்திருக்கிறேன். 'அத்தான்' என்ற வார்த்தை அவள் வாயிலிருந்து அன்பு கனிய உதிரும் போது, நான் இந்த உலகையே மறந்து விடுவேன். இப்பொழுது அவள் என்னை விட்டுத் தூர விலகிப் போய் விட்டாள். அந்த இழப்பை என்னுல் தாங்க முடியவில்லை.

அவள் அன்பை நான் மீண்டும் பெற வேண்டும். அதற்கு வழி? பட்டணத்தான் ஒழிய வேண்டும்—ஒழித்துக் கட்ட வேண்டும்!

இந்த நினைப்பு என்னைக் கிடுகிடுக்க வைத்தது. அவனைக் கொலை செய்வதென்று முடிவு கட்டிவிட்டபின் என்னுல் தூங்க முடியவில்லை. அவனைக் கொலை செய்யுமுன் நானே இறந்து விடுவேன் போல் இருந்தது. கொலை செய்வது ஒன்றும் இலகுவாகத் தோன்றவில்லை. அவனைக் கொலை செய்யும் அதே வேளையில் நானும் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது.

இந்த நிலையில் நான் காத்திருந்த சந்தர்ப்பம் வந்து வாய்த்தது. கிராமத்தில் மூன்று மாதங்களுக்கு மேல் தங்கி இருந்த வேலன், சும்மா இருக்க விரும்பாமலோ என்னவோ, கள்ளிறக்க ஆரம்பித்தான். கள் இறக்குவது எங்கள் கைவந்த தொழிலானுலும், மரம் ஏறுவதில் அவனுக்கு அவ்வளவு பயிற்சி போதாது. ஒரு மரத்தில் இருந்து மற்ெருரு மரத்துக்குக் கயிற்றில் லாகவமாகச் செல்ல வேண்டுமானுல், அதற்கு நிறையப் பயிற்சி வேண்டும். அனுபவமில்லாத அவன் மரத்திலிருந்து வீழ்ந்து விட்டா னுனல், யாரும் யாரையும் சந்தேகிக்க மாட்டார்கள்.

அதிகாலை மூன்று மணி அளவில் வேலன் கள்ளிறக்கும் தென்னையில் விடுவிடென்று ஏறி, ஒரு மரத்திலிருந்து மற்ற

மரத்துக்குச் செல்வதற்கென்று கட்டப்பட்டிருந்த கயிற்றைப் பாதிவரை அறுத்து வைத்துவிட்டு இறங்கி மறைந்தேன்.

காலையில் வழக்கம்போல் கள்ளிறக்கச் சென்ற வேலன், மற்ற மரத்துக்குச் செல்லக் கால் வைத்த உடன் கயிறு அறுந்து விட்டது. தலை குப்புறக் கீழே வீழ்ந்தவன் வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

அவன் இறந்து விட்டான் என்று கிராமத்தார் கூறினர். கொலை செய்யப்பட்டான் என்ற விஷயம் என்னைத் தவிர வேறு ஒருவருக்குமே தெரியாது. இல்லை; ஆண்டவனுக்குத் தெரியும் என்ற உண்மை இப்பொழுதுதான் எனக்குப் புலப் படுகிறது!

அவனைக் கொலை செய்ததால் எனக்கு எவ்வித பயனும் ஏற்படவில்லை. வேலன் இறந்துவிட்டான் என்ற செய்தி கேட்டதும், பைத்தியம் பிடித்தவள்போல் வீதியில் இறங்கி ஓடிய பொன்னியின் சடலத்தை ஒரு பாழுங் கிணற்றி லிருந்து கண்டெடுத்தோம். அன்றிலிருந்து ஒரு பிணமாகத் தான் உலகில் நடமாடி வந்திருக்கிறேன். ஒரு கொலையை என் கைபடச் செய்தேன். பொன்னியின் மரணத்துக்கும் நானேதான் காரணம். ஆகவே, எனக்கு விதிக்கப்பட்டு இருக்கும் மரண தண்டனை நியாயமானதே ... தெய்வம், மனிதன் மூலமாக நீதி வழங்கி விட்டது. இவ்வளவுதான் நான் கூற விரும்புவது.

* * *

கருமையான அங்கி அவன் முகத்தை மறைத்தபோதும், தூக்குக் கயிறு அவன் கழுத்தை அணைத்தபோதும், அவன் கலங்கவில்லை. சற்றும் சலனமற்ற தெளிந்த நீரைப்போல — முற்றும் துறந்த முனிவனின் நிலையிலே — அவன் மரணத்தை தழுவிக் கொண்டான்.

நகுலன் | வாழ்வு மலருமா?

கோட்டடியில் நிற்க, எனக்கு வெட்கமாகவே இருந்தது. பிரபல வழக்கறிஞர் ஒருவர் விசாரணை நடத்த விருக்கும் கொலை வழக்கு இன்றுதான் நடைபெறவிருக்கிறது. அதனால், எள்ளுப் போடவும் இடமில்லாமல் சனத் திரள் திரண்டு வந்திருக்கிறது. நாலா பக்கமும் கூட்டம் கூட்டமாகத் திரண்டு வந்திருக்கும் சனத்திரளைக் கண்டதும், வழக்கை விட்டுவிட்டு, வீட்டுக்கு ஓடத்தான் மனம் வந்தது. ஒரு நாளாவது கோட்டையே பார்க்காத— கோட்டுப் படியிலேயே ஏறாத — வழக்குகளிலே ஈடுபடாத எனக்கு, அந்தச் சனத்திரளைப் பார்த்ததும் என்னவோ போல இருந்தது.

அந்தக் கோட்டு முன்றலில் நிற்கும் மலைவேம்பு மரங்களின் கிளைகள் சடைத்து — நீண்டு — வளர்ந்து நிழலைப் பரப்பிக் கொண்டிருந்ததால், பங்குனிமாத வெயிலின் சூடு ஒருவரையுமே தாக்க முடியாமற் போய்விட்டது!

ஒரு மரத்துக்குக் கீழே, நானும் எனது உறவினர்களோடு ஒதுங்கி நின்றேன். எனது தகப்பனார் எங்களோடு உதவிக்குக் கூடவந்த உறவினர்களுக்கு, தேநீர் வாங்கிக் கொடுக்கின்றார். தாயார் தேநீர் குடித்தவர்களுக்கு வெற்றிலை பாக்கு முதலியன கொடுக்கின்றார். தேநீர் குடித்த தற்காகவோ என்னவோ உறவினர்களிற் சிலர், என் வாழ்க்கையில் அக்கறை உள்ளவர்களைப் போலப் பேசித் தள்ளுகின்றனர்.

அவர்களுக்கென்ன? அவர்கள் பேசிக்கொண்டே இருக்கின்றனர். நான் சுற்றும் முற்றும் பார்த்தேன். பக்கத்து மரத்துக்குக் கீழே நிற்பவர்கள், 'கசமுசு, கசமுசு' என்று பேசும் சத்தம் என் காதுக்கு எட்டியது. அவர்களது கதைக்கு என் காதைக் கொடுத்தேன். "உங்கை பார், இருபத்தைந்து வயதுக் 'கன்னிப் பெண்' போலத் தெரிகிறது. உந்தப் பிள்ளையும் வேறை வேலையில்லாமல் கோட்டுக்கு வந்திருக்குது. இண்டைக்குப் பாருங்கோவன், என்னென்ன கேள்வி கேட்கிறுங்கள் எண்டு. அவங்கள் கேட்கிற கேள்வியிலே, சீலை தான் உரிஞ்சு விழும். எந்தெந்தப் பெரிய அறிவாளிகளெல்லாம் கோட்டிலை வந்து மானங் கெட்டுப் போயிருக்கினம்." — இப்படியே ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக என்னைப் பார்த்துப் பார்த்துக் கதைத்தனர். எனக்கு வெட்கமாகவே இருந்தது; என் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் சொட்டுச்சொட்டாக விழுந்து சிதறிக் கொண்டிருந்தன.

என் கண்களிலிருந்து கண்ணீர் முத்துக்கள் அரும்புவதைக் கண்ட என் அக்காள், "நீ பயப்படாதை பிள்ளை. என்ன கேள்வியைக் கேட்டாலும் 'நான் அவருடன் போக மாட்டேன்' என்று சொல்லு. பிறகு வாறதை நாங்களெல்லே பாக்கிறோம். பத்தில்லை, பதினைந்து வருசம் செண்டாலும் வழக்கொழுக்கா ஆடித்தான் பாக்கிறது" என்றுள். அக்காளுக்கென்ன, அக்காள் சொல்கிறுள். எனக்கிருக்கும் வேதனை எனக்கல்லவா தெரியும்! மற்றவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது? பத்துப் பதினைந்து வருசம் வரை, நான் எப்படித் தனிமையாக இருக்க முடியும்? தனிமையாக இருக்க, நானென்ன கலியாணம் கட்டாத கன்னிப் பெண்ணு?

* * *

நானும் அத்தானும் கலியாணம் செய்து, ஐந்து மாதங்கள் வரையில்தான் ஒன்ருக இருந்து குடும்பம் நடாத்

திஞேம். அத்த ஐந்து மாதங்களில், நானும் அத்தானும் நடாத்திய இல்லற வாழ்க்கையைக் கண்டு, பெருமைப் பட்டோரும் பொருமைப் பட்டோரும் பலர். எனக்கும் அத்தானுக்கும் இடையே எந்த விதமான சண்டை சச்சரவும் ஏற்படவில்லை. அத்தான் படித்தவர் — பண்புள் ளவர். அவரது குணத்துக்கு அவரோடு வாழ்நாள் பூராவும் மகிழ்ச்சியாகவே வாழலாம். என்னை ஒருநாளாவது 'எடி பிடி' என்று ஏசியதேயில்லை. நான் தெரிந்து தெரியாமல் ஏதாவது குற்றம் செய்தாலும், எனக்கு அவர் ஒருவித குற்றமும் செய்ததில்லை. சுருங்கச் சொன்ஞல், அவர் ஒரு 'பச்சைத்தண்ணி' என்றுதான் சொல்லலாம் !

அத்தானின் பெற்றேரும், சகோதரிகளும் மிகவும் நல்ல வர்கள். அத்தானின் மூத்த சகோதரன் எஞ்சினீயருக்கும், இளைய சகோதரன் டாக்டருக்கும் படிக்கின்றனர். மாமா வுக்குக் கிட்டதட்ட ஐம்பது வயதிருக்கும். அவர் ஒருவித உத்தியோகத்துக்கும் போவதில்லை. அதஞல் அத்தானின் வருவாயில்தான் காலத்தைக் கழிக்கவேண்டி இருந்தது.

அத்தானுக்கு இரண்டு சகோதரிகள் இருந்ததஞலோ என்னவோ எனக்கு அங்கே ஒருவிதமான கஷ்டமும் ஏற்பட வில்லை. ஆசைக்கென்று ஒரு வேலையைச் செய்யப் போஞலும், என் மச்சிமார் என்னை வேலை செய்ய விடவே மாட்டார்கள். "நாங்கள் மாடுகள் மாதிரி இருக்கும்போது நீங்கள் வேலை செய்யப் போகிறீர்களா ?" என்று சொல்லி என்னைக் குசினிக்குப் போக விடமாட்டார்கள்.

எனக்கு அத்தான் வீட்டிலே 'இராச' மரியாதை தான். அத்தானின் சம்பளத்தைப்பற்றி நான் அக்கறைப் படுவதேயில்லை. சகோதரர்களைப் படிப்பித்து உத்தியோக மாக்குவதும், சகோதரிகளுக்குக் கலியாணம் செய்துவைப் பதும் அத்தானின் கடமைதானே ? ஒரு குடும்பத்தில் மூத்த வர்களாய்ப் பிறந்தவர்கள் அதைச் செய்யத்தானே வேண்டும் !

எனக்குப் பழவகைகளிலே அதிக விருப்பம். மாமி சந்தைக்குச் சாமான் வாங்கப் போனுவென்றுல், ஏதாவது ஒரு பழம் வாங்கி வராமல் திரும்பமாட்டா. விளாம்பழம் வாங்கி வந்தால், அதை உடைத்து — அதற்குள்ளே சர்க்கரை போட்டுக் குழைத்துக் குழைத்து — கிள்ளிக் கிள்ளித் தருவா. மாமி தன் கையினுல் குழைத்துத் தரும் விளாம்பழத்தைத் தின்னும்போது எனக்குண்டாகும் மகிழ்ச்சிக்கு எல்லையே இருக்காது!

மாமி கடவுள் பக்தி உள்ளவ. அவ எதற்கெடுத்தாலும் 'கந்தா! கந்தா!!' என்று கந்தனின் திருநாமத்தைச் சொல்லித்தான் எதையும் செய்வா. அவ ஒவ்வொரு நாளும் அந்த ஊர்க் கோவிலுக்குப் போவா. அவ போகும் பொழுது, என்னையும் கூட்டிக்கொண்டுதான் போவா. அவ கோவிலுக்குள் போனதும், திருநாவுக்கரசரின் சகோதரி திலகவதியாரின் நினைவுதான் என் கண்முன்னே தோன்றும். கோவிலைக் கூட்டுவா, மெழுகுவா, கழுவுவா. நானும் அவவுடன் சேர்ந்து எல்லா வேலைகளையும் செய்வேன். வீட்டிலே ஒரு வேலையும் செய்யவிடாத மாமி, கோவிலிலே எந்த வேலை செய்தாலும் தடுக்கமாட்டா. ஒரு நாள் பூசை நடைபெறும்போது, "கந்தா! என் பிள்ளைக்கு ஒரு மகனைக் கொடுத்துவிடு" என்று சொல்லி வழிபட்ட நிகழ்ச்சி இன்னும் என் ஞாபகத்திலிருந்து மறையவில்லை.

கோவிலுக்கு, அல்லது கூட்டத்துக்குப் போவதற்குச் சேலை உடுக்கும்போது மாமியோடு காலந்தள்ள முடியாது. அவ 'உந்தச்சீலை சரியில்லை. உப்பிடி உடுத்தது சரியில்லை' என்று சொல்லி, என்னை அலங்கரித்து விடுவதும் மாமிதான், மாமியோடு மச்சிமாரும் சேர்ந்துவிட்டால் போதும், சுவாமிக்கு ஐயர் சாத்துவதுபோல என்னைச் சோடித்தே விட்டுவிடுவார்கள்!

மாமிக்கு என்னிடத்தில் மாத்திரம் அக்கரை அதிகம். யார் ஒருவர் அழகான சேலை கட்டிக்கொண்டு வந்து

விட்டார்களோ, அதே போலச் சேலை எனக்கும் வாங்கிக் கொடுக்கும்படி அத்தானுக்குச் சொல்லி, வாங்கித் தந்து விடுவா. மற்றவர்களிலும் பார்க்க, எந்த விஷயத்திலும் நான் குறையக்கூடாது என்பது மாமியின் எண்ணம்.

எனக்கு எப்பொழுதாவது சுகவீனம் வந்துவிட்டால் போதும். உடனே, இல்லாத மருந்தெல்லாவற்றையும் கொண்டுவந்து சேர்த்துவிடுவா. "யாரோ கண்ணுக்கை வைத்துவிட்டாளவை" என்று சொல்லி, வீட்டுப் படலையடியில் கண்ணூற்றுக்கு எரிப்பா.

இப்படியே அத்தான் வீட்டில், 'மாமியின் ராஜாத்தி' போல இருக்கும்போது ஒருநாள், அப்பா வந்தார். வந்தவர் என்னையும் அத்தானையும் வருடப்பிறப்புக்குத் தங்கள் வீட்டுக்கு வரும்படி கேட்டார். அத்தானும் அப்பாவின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு, வருவதாகச் சொன்னார். அடுத்த நாள் நானும் அத்தானும் என் பிறந்த வீட்டுக்குப் போனோம். மாமியின் அன்பிலே மூழ்கி, பிறந்த இடத்தையே மறந்திருந்த எனக்கு, முதன் முதலில் பிறந்தகம் பித்துப்போலத்தான் இருந்தது.

* * *

ஒருநாள் — அத்தானைப் பற்றியும் மாமியைப் பற்றியும் பேச்சு எழுந்தது. நான் மாமியைப் பற்றியும், அத்தானைப் பற்றியும், மச்சிமாரைப் பற்றியும் — ஏன்? அங்குள்ளவர்கள் எல்லோரைப் பற்றியுமே — புகழ்ந்து தள்ளினேன்; பொய்யையல்ல — உண்மையைத்தான். உள்ளதை உள்ளபடியே சொல்வதுதானே சிறந்தது. நான் அவர்களைப் பற்றிச் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்த என் அம்மா, "பிள்ளைக்கு மாமியாரை நன்றாய்ப் பிடித்துவிட்டது. என்ன மருந்து போட்டாளவையோ, என்ன மாயம் செய்தாளவையோ? அவளவைக்கு என்ன, குடும்பச் செலவெல்லாத்தையும் ஏற்று நடத்தினால் ஆர்தான் நன்மை சொல்ல மாட்டாளவை. நல்லவர்களைப் போலப் பாசாங்கு செய்து நடித்

தால்தானே எல்லாத்தையும் அபகரிக்கலாம்" என்று சொல்லி, அவர்களை இழிவாக ஏசினுள். அவர்களை வீணுகக் குற்றம் சாட்டுவது எனக்குப் பிடிக்கவேயில்லை. "அவவைப் போல ஒரு மாமியை, மாமியாகப் பெறுவதற்குக் கொடுத்து வைக்க வேணும்" என்றேன் நான். "அத்தானுக்கு எவ்வளவு சம்பளம் வரும்? மாதம் எவ்வளவு மிச்சம் பிடிக்கிருய்?" என்று கேட்டாள் என் அக்காள். "அத்தானுக்குச் சம்பளம் நானூற்றி ஐம்பது ரூபா. மாதம் மாதம் நாங்கள் சீட்டுப் போடுவதில்லை. எங்கள் செலவுக்கே போதாது; எப்படி மிச்சம் பிடிப்பது?" என்றேன் நான். "என்ன! உவ்வளவு சம்பளம் எடுத்தும் மிச்சம் பிடிப்பதில்லையா? அப்படியென்ன செலவு வருகுது?" என்று கேட்டாள் என் அக்காள். "எங்களோடு மொத்தம் எட்டுப் பேருக்கு சாப்பாட்டுக்கு எவ்வளவு வரும். உடுபுடவைக்கு எவ்வளவு வரும். அத்தோடு மைத்துனர்களின் படிப்புக்கும் என்ருல், எப்படி மிச்சம் வரும்?" என்றேன் நான். "உவைக்கெல்லாம் நீங்களேன் செலவு செய்யவேணும்? மாமன் மாமிக்குத்தான் கொடுக்கிறீர்கள் என்ருல், அவையின்ரை பிள்ளைகளுக்கும் நீங்களே கொடுக்க வேண்டுமா?" என்ருள் அக்காள். "என்ன செய்வது? அதுகளும் பாவங்கள் தானே?" என்றேன் நான். "ஓ! இப்ப நல்லவர்களைப் போல நடித்து, உங்களைக்கொண்டு செலவழித்துப் படிப்பாங்கள். படித்து முடிந்ததும், உங்களை நாயென்றும் தேடமாட்டாங்கள். உங்க பார், எங்கடை மீராவின் மச்சான் என்ன செய்தவன்?" என்ருள் என் அக்காள். "எல்லோரும் ஒரே மாதிரி இருக்க முடியாது. என்ரை மச்சான்மார் நல்லவங்கள். பின்னடிக்கு எங்கடை பிள்ளையளைப் பாப்பாங்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு" என்றேன் நான். "என்னவோ, நான் சொல்வதொன்றும் உனக்குக் காதிலை விழுகுதில்லை. செவிடன் காதிலை ஊதின சங்குமாதிரித்தான் இருக்குது. உப்பிடிச் செலவழித்துப்போட்டு ஒரு காலத்திலை நடுத்தெருவிலைதான் நிற்பாய்" என்ருள் என் அக்காள்.

"ஓம் பிள்ளை, கொக்கா சொல்வதைக் கேள். கொக்கா உன்னைக் கெட்டுப்போகும்படி ஒருநாளும் சொல்லமாட்டா." என்ருள் என் அம்மா. அக்கா சொல்லும் அபிப்பிராயத் துக்கு அம்மாவும் ஆமாப் போட்டுக் கொண்டிருந்தா. அக்கா எதைச் சொன்னுலும் அம்மா தட்டவே மாட்டா. அம்மா என்ன, அப்பாவும் அப்படித்தான். "அப்படி யென்ருல், நான் என்ன செய்வது ?" என்று கேட்டேன் நான். "அங்கே இருந்தால்தான் உந்தச் செலவெல்லாம் வரும்; இனிமேல் அங்கு போகாமல் இங்கேயே இருந்துவிடு" என்ருள் என் அக்காள். "அவர் வரும்படி கேட்டால் ..." என்று இழுத்தேன் நான். "வரமாட்டேன் என்று அழுங்குப் பிடியாக நில்" என்ருள் என் அக்காள். "அவர் கோபித் துக்கொண்டு போய்விட்டால் ?......" என்றேன் நான். "போனுல் என்ன ? எப்படியாவது திரும்பி வருவார் தானே" என்ருள் என் அக்காள்.

முன்பு அக்காவுக்கும் அத்தானுக்கும் கலியாணம் பேசிய பொழுது, அக்கா அழகில்லை என்று சொல்லி அக்காவைக் கலியாணம் செய்ய அத்தான் மறுத்தது உண்மை. அதை மனதில் வைத்துக்கொண்டு, இராமன் பாலகனுய் இருக்கும் பொழுது மண்ணுண்டையால் விளையாட்டாகச் சுண்டி யதை மனதிலே வைத்து, கைகேயியின் மனதைக் கலக்கி, இராமனைக் காட்டுக்கு அனுப்பிய கூனியைப்போல, எனக் காகப் பரிந்து பேசுவது போன்று பேசியதை நான் சிறிதும் சிந்திக்கவில்லை. இரண்டு பிள்ளைகளுக்குத் தாயானபின்பும், பழைய சம்பவத்தை மனதிலே வைத்து வஞ்சம் தீர்ப்ப தற்காக, என் வாழ்க்கையில் நெருப்பை அள்ளிப் போடு வாள் என்று எனக்கெப்படித் தெரியும் ?

நானும் அத்தானும் ஒற்றுமையாக இருக்கக்கூடாது — இருக்க விடக்கூடாது என்று என் அக்கா தீட்டிய திட் டத்தை நம்பி அவர்கள் சொல்வதைச் சிறிது சிந்தித்துப் பார்த்தேன். அநுபவம் வாய்ந்த என் அம்மாவும் அக்காவும்

என்னைச் சந்தியில் நிற்கப் புத்திமதி கூறுவார்களா? அவர்கள் இருவரும் கூறியது எனக்குச் சரிபோலத் தோன்றியது!

புது வருடத்தைக் கொண்டாடிவிட்டு, "லீவு முடிந்து விட்டது. அடுத்த கிழமை வந்து கூட்டிக்கொண்டு போகிறேன்" என்று சொல்லிப்போட்டுப் போனவர் ஒரு கிழமையில் வந்தார். வந்தவர் என்னை வரும்படி கேட்டார். "இவ்வளவு காலமும் அங்கே இருந்தோம். இங்கும் ஒரு வருடத்துக்கு இருப்போம்" என்றேன் நான். "இங்கே இருக்கச் சரிவராது. கெதியில் புறப்படும்" என்ருர் அத்தான்.

"அங்கே வரமுடியாது."

"ஏன்?"

"சொல்லமுடியாது."

"வருகிறீரா, வரவில்லையா?"

"வரமுடியாது."

"வரமுடியாது?"

"முடியாது, முடியாது, முடியாது" என்று சொன்னேன் நான். அவ்வளவுதான், அவர் போய்விட்டார். அத்தானுக்கு அவ்வளவு கோபம் வருமென்று எனக்குத் தெரியவே தெரியாது.

* * *

ஒரு வருடமாக என்னை வரும்படி அத்தான் கடிதம் எழுதிக்கொண்டே யிருக்கிருர். பதில் போடவேண்டாம் என்று அக்காள் கூறியதால், நான் அவருடைய கடிதத்துக்குப் பதில் எழுதவில்லை. நான் ஒரு வருடமாகப் பதில் எழுதாததால், தங்கள் ஊரில் உள்ள பெரியவரான "லோட்டி மாமா"வை ஒற்றுமையாக்கும்படி எங்கள் வீட்டுக்கு அனுப்பிவைத்தார் அத்தான். லோட்டி மாமாவின் சொல்லை யாருமே தட்ட மாட்டார்கள். அவர் யாருக்குமே

துரோகம் செய்வதில்லை. பிரிந்திருக்கும் குடும்பங்களை ஒற்றுமையாக்குதல் — சண்டை சச்சரவினுல் ஏற்படும் வழக்குகளை நீக்குதல் — கலியாணங்கள் செய்து வைத்தல், இவைதான் அவரது தொழில். அவரை எல்லோரும் "லோட்டி மாமா" என்றுதான் கூப்பிடுவார்கள். அவரது சொந்தப் பெயர் அநேகருக்குத் தெரியாது !

"லோட்டி மாமா" வந்தார். வந்தவர் அம்மாவோடும் அக்காவோடும் கதைத்தார். "விரும்பினுல் அவர் இங்கு வரட்டும். வந்து, இந்த வீட்டிலேயே குடும்பம் நடாத்தட்டும்" என்று சொன்னுள் அக்கா. "பிள்ளை, ஒரு குடும்பத்தை ஒற்றுமையாக்குவது என்ருல் ......" என்று இழுத்தார் லோட்டி மாமா.

"நீங்கள் எதைச் சொன்னுலும் நாங்கள் ஒற்றுமைக்கு வரமாட்டோம்" என்று கூறினுள் அக்கா. "ஓம் ! லோட்டி மாமா ! இருந்தவள் இப்படியே இருக்கட்டுக்கு. ஒரு வருச மாச் சாப்பாடு கொடுக்காமலா விட்டுவிட்டோம் ? அவருக்குச் சீதனமாகக் கொடுத்த ஐம்பதினுயிரம் ரூபாவையும் சாகும்வரை சாப்பிட்டுவிட்டுச் சாவாள்" என்று அக்காவுக்குப் பக்கத் துணையாக அம்மா சொன்னுள். லோட்டி மாமாவுக்குக் கோபம் வந்துவிட்டது. "நீங்கள் இருவரும்தான் இந்தக் குடும்பத்தைக் குலைத்து வைத்திருக்கிறியள். உங்களைப்போல ஒருத்தி இருந்துவிட்டால், இந்த உலகமே நாசமாய்ப் போய்விடும்" என்றவர், "இஞ்சை வா, பிள்ளை" என்று என்னைக் கூப்பிட்டார். நான் அவருக்குப் பக்கத்தில் போய் நின்றேன். "பிள்ளை, நான் என்ரை காலத்துக்கை எத்தனையோ குடும்பங்களைச் சேர்த்து வைத்து விட்டேன். என்ரை எழுபது வருட அநுபவத்தைக் கொண்டு உனக்குச் சில புத்திமதிகள் சொல்ல வேண்டியிருக்கு. நீ மற்றவையுந்தை சொல்லைக்கேட்டு 'எடுப்பார் கைப்பிள்ளை' போல நடவாதை. நன்ருக ஆலோசித்துச் சொல்லு. எத்தனை வருசமெண்டு தனிமையாக இருக்க

முடியும்?" என்று ஒரு பிரசங்கத்தைச் செய்து முடித்துவிட்டு, எனது சம்மதத்தைக் கேட்டார் லோட்டி மாமா. நான் அம்மாவையும் அக்காவையும் பார்த்தேன். அக்கா பல்லைக்கடித்து, 'மாட்டேன்' என்று சொல்லு என்பது போலச் சைகை காட்டினாள். "என்னால் வரமுடியாது" என்றேன் நான். "கலியாணம் செய்தபின் கட்டிய கணவனின் எண்ணப்படிதான் நடக்கவேண்டும்" என்றார் லோட்டி மாமா. "ஏன்? லோட்டி மாமா, பிள்ளையைப் போட்டுக் கரைச்சல் படுத்தறியள். அடுத்தமாதம் வழக்குத் தொடரப்போறம். அதிலை ரண்டிலை ஒண்டு தெரியுந்தானே" என்றாள் அம்மா. "சரிசரி, நானும் நல்லதைச் செய்யலாமெண்டு வந்தேன். அதுக்கு நீங்கள் இளநாக்கடிக்கிறியள். நான் என்ன செய்கிறது?" என்று சொல்லிவிட்டு, சால்வையை எடுத்து இரண்டு மூன்று முறை உதறித் தோளில் போட்டுக் கொண்டு, வீட்டை விட்டு வெளியேறினார் லோட்டி மாமா.

* * *

"பிள்ளை! பிள்ளை!! உன்னைத்தான் கூப்பிடுப்படுகுது. பயப்பிடாமைக் கேக்கிற கேள்விக்குக் கடகட எண்டு பதிலைச் சொல்லு" என்றாள் பக்கத்தில் இருந்த அம்மா. பழைய நினைவை அப்படியே அறுத்துவிட்டு உறவினர்கள் புடைசூழக் கோட்டுக்குள் நுழைந்தேன்.

"நாகர் கந்தையா... வேலுப்பிள்ளை... மனோன்மணி." என்று கோட்டு முதலியார் தொண்டையடைக்கக் கத்தினார். வழக்காளிக்குரிய இடத்தில் போய் நின்றேன். எதிரே அத்தான் நின்றார்.

"இவதானா உன் மனைவி?" அத்தானைப் பார்த்து முதலியார் கேட்டார்.

"ஆம் ஐயா" என்றார் அத்தான்.

"இவர்தானா உன் கணவன்?" என்று என்னைப் பார்த்துக் கேட்டார் முதலியார்.

" ஆம், ஐயா " என்றேன் நான். அத்தானைப் பார்த்து, " நீ உன் மனைவியை ஒரு வருசமாகத் தாபரிக்கவில்லையாம்; உண்மைதானே ? " எனக் கேட்டார் முதலியார்.

" ஆம், ஐயா. "

" காரணம் ? "

" அவ என்னோடு வரமாட்டாளாம்."

" வந்தால் கூட்டிக்கொண்டு போவாயா ? "

" ஆம், ஐயா, அவ என்னோடு வந்தால், தாரளமாகக் கூட்டிக்கொண்டு போவேன், ஐயா " என்றார் அத்தான். நான் அவரோடு போகமறுத்தால் நிச்சயம் தவணை போடுவார்கள். தவணை என்றால் ஒருமுறையில் இருமுறையில் முடிந்துவிடுமா ? விளக்கத்தில் அத்தானையும் என்னையும் அக்குவேறு ஆணிவேருகக் கேள்வி கேட்டு மானபங்கப் படுத்திப் போடுவார்கள் என்பது எனக்கு நன்ருகத் தெரிந்து விட்டது. அத்தான் பாவம். என்னாலே ஏன் வீணாக மான பங்கப்படுவான் ? அவரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. " இஞ்சார் மனோன்மணி ! உன்னைத் தன்னோடு வரட்டாம். உனக்கு உன் புருஷனோடு போக விருப்பமே ? வீணாகக் கரைச்சல் படாமைப் போவேன் " என்றார் முதலியார்.

" ஐயா ! அத்தான் எனக்கு ஒருவிதமான கொடுமையும் செய்யவில்லை, ஐயா. நான்தான் ஐயா, பிறர் சொல்லைக் கேட்டுக் கண்மூடித்தனமாக இப்படி நடந்துவிட்டேன். இனிமேல் பிறர் சொல்லைக் கேட்கமாட்டேன். அத்தானோடு போகிறேன், ஐயா." என்றேன் நான். நான் சொல்லி முடிப்பதற்குள், என் அம்மாவும் அக்காவும் குனிந்த குனியிலே ' கோட்டை ' விட்டு வெளியேறி விட்டார்கள்.

சொக்கன் | # உறவு முறை

## 1

பிரபல எழுத்தாளரும், தமிழறிஞருமாகிய சுந்தர ராஜன் காலமாகிவிட்டார். அவரது படிப்பறையாகவும், சயனக்கிருகமாகவும், பண்டகசாலையாகவும், சாமியறையாகவும், எல்லாமாயிருந்த அறையில் ஒரு மரக் கட்டிலின்மீது அவரது சடலம் கிடத்தப்பட்டு வெள்ளைத் துணியால் மூடப் பட்டிருந்தது. தலைப்பக்கத்திலே ஒரு குத்து விளக்கு. கால் பக்கத்திலே கண்ணீருங் கம்பலையுமாக அவர் மனைவி—சிவபாக்கியம். ஒன்று எரிந்து கொண்டிருந்தது; மற்றது புகைந்தபடி யிருந்தது.

சுற்றிவர, உற்றாரும் உறவினருமாகிய பெண்களின் கூட்டம். அவர்களின் ஒப்பாரி இடைக்கிடை எழுந்து, சிவபாக்கியத்தின் நெஞ்சக் குருத்தைக் கருக்கி, அவளை அழவும் சக்தியற்றவளாய் ஆக்கியபடி இருந்தது.

பற்றாக் குறையும், பஞ்சமும் நோயுமாக வாடி வதங்கிய வேளையிலும் முற்றாகக் கருகிப் போகாத ஒரு குளிர்மையைத் தமது பேச்சாலும், ஆதரவாலும், அன்பாலும் ஏற்படுத்தி வந்த அவர், அவளைத் தவிக்கவிட்டுப் போய் விட்டார். தாய், தந்தை, சகோதர சகோதரிகள் யாருமற்ற அநாதை யான அவளுக்கு எல்லாமாயிருந்த அன்புருவம், வெறும் சவமாகக் கிடக்கிறது. இனி, அவளுக்கு யார் துணை?

கண்களோடு இதயமும் இருண்டு கொண்டு வந்தது. சிந்தனையோடு உயிரும் செத்துக் கொண்டிருந்தது. சிவ

பாக்கியம் சுருண்டு 'அவராயிருந்த' அதன் கால்களிலே தலையை வைத்துக் கிடந்தாள்.

வெளியிலே இடைக்கிடை சந்தம் பிசகாது எழுந்து கொண்டிருந்த பறைச் சத்தமும், பந்தல் போடுபவர்களின் ஆரவாரமும், வருவோர் போவோரின் ஒலிகளும், ஏன், உள்ளே வந்து தன்னைக் கட்டிப் பிடித்துக் கதறி அழுது அநுதாபத்தை வெளியிடும் பெண்களின் ஓலமுங்கூட அவளுக்குக் கேட்கவேயில்லை.

எங்கோ ஆழத்திலே அதலபாதலத்திலே, தலைகுப்புற விழுகின்ற ஓர் அந்தர நிலையிலே —

படுபாதலம் — கச இருட்டு — பயங்கர சூனியம். இனி—

## 2

சரியாகப் பத்தாண்டுகளுக்கு முன்பு சிவபாக்கியம் சுந்தரராஜனின் கைத்தலம் பற்றி ஸ்ரீமதி சுந்தரராஜனானாள். சிறந்த எழுத்தாளர், தமிழ் அறிஞர், நாடறிந்த பிரபல மானவர் என்பதை யெல்லாம் தெரிந்துகொண்டு, அவள் அவருக்குக் கழுத்தை நீட்டவில்லை. கலையுணர்வு பற்றியோ, அழகு ரசனை பற்றியோ அவளுக்கு ஒரு மண்ணுந் தெரியாது. பாவாடை கட்டும் பருவம் கழியுமுன்னரே, பாடசாலையை விட்டுக் குச்சுக் கொட்டிலில் உரல் உலக்கைகளோடும், அம்மி குழவிகளோடும் உறவாடி வளர்ந்த ஓர் அப்பாவிக் கிராமப் பெண் அவள்.

திருமணச் சந்தையிலே மலிவுச் சரக்காயிருந்த சுந்தர ராஜனை, அவளின் தாய், தான் குத்தியிடித்து இரத்தம் பிழிந்து உழைத்த பணத்திற்குப் பெற்றுக் கொடுத்தாள். அவர்களுடைய திருமணம் ஏழ்மைக்கும் ஏழ்மைக்கும், அநாதைத் தனத்திற்கும் அநாதைத் தனத்திற்குமிடையே ஏற்பட்ட ஒரு பந்தமேயல்லாது வேறன்று.

சுந்தரராஜன் ஒரு தமிழாசிரியர்; இருநூறு ரூபா சம்ப ளத்திற்குப் பெட்டி படுக்கை சகிதம் ஊர் விட்டு ஊர்

செல்லும் தலைவிதியைப் பூண்டவர். அவருடைய கல்வித் தராதரம் அரிவரி தொடங்கி ஐந்தாம் வகுப்பு வரை 'படித்துக் கொடுக்கும்' அளவிற்குத்தான் தகுதி பெற்றிருந்தது.

ஆனால், அவரது திறமை அந்தத் தராதரப் பத்திரத்தினுள்ளே சிறை செய்யப்படவில்லை என்பதை ஈழத்துத் தமிழுலகமும், அறிஞருலகும் அறிந்திருந்தன. 'சுந்தரன்' 'ராஜன்' 'அபிதன்' என்ற புனைபெயர்களிலே கவிஞனாக, சிறு கதை எழுத்தாளனாக, கட்டுரையாசிரியனாக, நாடக மேதையாக அவர் பத்திரிகை உலகிலும், கலையுலகிலும் உலாவி வந்தார்; இலக்கிய, சமயக் கூட்டங்களில் தேன் மாரியாகப் பிரசங்க மாரி பொழிந்தார். இலங்கையின் எங்கோ ஒரு மூலையில், மாதத்தில் ஒரு தடவையாவது நடைபெறும் இலக்கிய, சமய மகாநாடுகளில் சொற்பெருக் காற்றுவது கடந்த பத்தாண்டுகளிலே சர்வ சாதாரணமாகியிருந்தது.

இவை அவருக்குப் பணத்தைச் சம்பாதித்துக் கொடுக்கவில்லை; சில சந்தர்ப்பங்களில் கையைக் கடிப்பதும் உண்டு. ஆனாலும், ஓயாத கலைத்தாகமும், புகழ் வெறியுங் கொண்டு அவர் அலைந்து திரிந்தார்.

அவ்வேளையில் சிவபாக்கியத்திற்கு அவரின்மீது பத்திரிகைகள் அவ்வப்போது பாடிய புகழ் மாலைகளும், பத்திரிகைகளில் வந்த அவரின் புகைப்படங்களும் நினைவில் வந்தன. ஒரு குழந்தையின் உற்சாகத்தோடு சுந்தரராஜன் அவற்றைத் தனக்குக் காட்டி மகிழ்ந்த நாட்கள் அவளுள்ளே படங்களாய் விரிந்தன.

அவர் ஒரு குழந்தைப் பிள்ளைதான்! பொறுப்பில்லாமல் திரிவது தொடங்கி, உணர்ச்சி வசப்பட்டு அழுவது, சிரிப்பது வரை, சுந்தரராஜன் குழந்தையிலும் குழந்தையாகத்தான் இருந்தார். "என்ன இப்படிச் சிறுபிள்ளை மாதிரி இருக்கிறீர்களே? கொஞ்சங்கூடப் பொறுப்புணர்ச்சி

இல்லையே உங்களுக்கு" என்று அவள் சொன்னால், "இதோ பார், ராணி! உனக்கு ஆறு குழந்தைகள் இருக்கின்றன. அந்த ஆறோடு என்னையும் ஏழாக நினைத்துக் கொள்ளேன். இதில் — என்ன குறைந்து விட்டது?" என்று சொல்லி விட்டு, குழந்தைகள் பக்கத்தில் இருந்தாலும் பொருட்படுத் தாமல் சிவபாக்கியத்தின் மடியிலே படுத்துவிடுவார். அந்த நேரத்தில் அவர் இடிஇடி என்று சிரிக்கும் அந்தச் சிரிப்பு !

"அத்தான்! உங்கள் ராணி, இன்று ஆறு குஞ்சு களோடு அநாதையாய் நிற்கிறாளே, தெரியவில்லையா உங்களுக்கு?" என்று சிவபாக்கியம் குருதிக் கண்ணீர் வடிக்கையில் —

நடந்ததையும், நடக்கப் போவதையும் புரிந்து கொள் ளாத அவளின் குழந்தைகள் அங்குமிங்கும் ஓடியாடித் திரிவது மங்கிய நிழல் வடிவாய் அவளுக்குத் தோற்று கின்றது.

அந்தக் குழந்தைகளைப் பரிதாபத்தோடும், ஆதுரத் தோடும் பார்க்கிறவர்களின் பார்வையும், கைகளாலே தடவுகின்ற தடவலும் —

அவள் வயிற்றைக் கலக்கி, இதயத்தைச் சுக்கு நூறாக்கி —

கடவுளே! என் குழந்தைகளின் எதிர்காலம் —"

சிவபாக்கியம் தன்னுள்ளே தானாகிச் சமாதி நிலையில் கண்மூடிக் கிடக்கிறாள்.

பறை முழங்குகின்றது. பெண்கள் — ஆண்கள் — மாறி மாறி வருகின்றனர்; போகின்றனர்; வேலைகள் துரிதமாக நடக்கின்றன.

சவமாகிவிட்ட சுந்தரராஜன் சாம்பராக இன்னும் சில மணித்தியாலங்களே இருக்கின்றன.

குருக்களும் வந்துவிட்டார்.

## 3

பாடசாலைகளை அரசாங்கம் எடுத்ததால் யாருக்காவது நன்மை ஏற்பட்டிருந்தால், அவ்வாறு நன்மை பெற்ற ஒரு சிலரில் சுந்தரராஜனும் ஒருவர். இதுநாள்வரை வெளியூர் களிலே கடமையாற்றி இலங்கைப் புகையிரதப் பகுதிக்கும், இ. போ. ச. விற்கும், உணவு விடுதிகளுக்குமே தமது சம்ப ளத்தைப் பகிர்ந்து கொடுத்துவிட்டுத் தமது குடும்பத்தை அரைப் பட்டினியிலே போட்டு வந்த அவருக்கு, ஊரோடு மாற்றம் வந்தது பெரும் வரப்பிரசாதமாகவே யிருந்தது. ஐந்து வருடங்களுக்கு முன்பு யாழ்ப்பாணத்திற்கு, அதுவும் பெரியதொரு கல்லூரிக்கு மாற்ற உத்தரவு கிடைத்தபொழுது சுந்தரராஜன் மகிழ்ச்சி வெள்ளத்திலே முக்குளித்தார் என்று சொல்ல வேண்டும்.

சிவபாக்கியத்திற்கோ ஆனந்தம் அளவிட இயலாத தாய் இருந்தது. சுந்தரராஜனிலும் நூறு மடங்கு கூடிய நிம்மதி அவளுக்குத்தான் ஏற்பட்டது. கொட்டில் வீட்டைக் கல்வீடாய் மாற்றி அமைக்கலாம் என்றும், அடகிலே கிடக்கும் நகைகளை மீட்கலாம் என்றும், குழந்தைகளுக்கு வயிருர உணவு கொடுத்து, மரியாதையைக் காக்க நல்ல துணிமணிகளை வாங்கலாம் என்றும், அவள் எத்தனையோ கனவுகளைக் கண்டாள். எல்லாவற்றிலும் மேலாக அவர் என்றைக்கும் பக்கத்திலேயே இருப்பார் என்ற நினைவே அவளுக்குப் பெரிய ஆறுதலாக இருந்தது.

ஆனல் — குச்சு வீடு குச்சு வீடாகத்தான் இருந்தது. நகைகள் சுவரில் அடித்த பந்து போலச் சில நாட்கள் வீடு திரும்பி அவளிடம் இருந்துவிட்டு, மீண்டும் அடகுக் கடை யையே நாடிச் சென்றன. பிள்ளைகள் போஷாக்குக் குறைந் தவர்களாயும், பிணிகொள் கலங்களாயுந்தான் இருந் தார்கள்.

சுந்தரராஜன் வந்த வழி அது. தமிழாசிரியரின் சிக்கன சுபாவத்திற்கு மாருக ஒரு கலைஞனின் ஊதாரிக் குணத்

திற்குத்தான் அவர் எடுத்துக்காட்டா யிருந்தார். மாதம் முழுவதும் கல்லூரியிலே கத்துவதற்குக் கிடைத்த பணம், கிடைத்த இரண்டொரு நாட்களில் அந்தர்த் தியானமாகி விட எஞ்சிய நாட்களை அவர் கழிப்பதற்கு முடியாது திண்டாடுவது வழக்கமாகிவிட்டது.

சிவபாக்கியம் ஏழ்மை வாழ்விற்குப் பழக்கப்பட்டவள் தான். ஆனுல், ஊதாரித்தனத்தால் கணவன் ஏற்படுத்து கின்ற கட்டாய வறுமையைத்தான் அவளால் சகிக்க முடியாதிருந்தது.

சம்பளம் கிடைத்த அன்று, குடும்பம் முழுவதும் கார் பிடித்துக்கொண்டு படத்திற்குச் செல்லவேண்டும் என்பது சுந்தரராஜனின் நியதி. பணம் இருக்கையில் குழந்தைகள் எதைக் கேட்டாலும் வாங்கிக் கொடுத்துவிடுவார். அவை, ஒரு நிமிடத்தில் வாங்கியதைப் போட்டு உடைத்து நொறுக் கிஞலென்ன, கிழித்துக் குதறிஞலென்ன; அதைப்பற்றிச் சிறிதும் வருத்தப்பட மாட்டார்.

இந்த அநியாயச் செலவுகளைப் பற்றிச் சிவபாக்கியம் மூச்சுவிடக்கூடாது. "அநுபவிக்க வேண்டிய காலத்தில் எல்லாம் அநுபவித்துவிட வேண்டும். பணத்தைச் சுடலைக்குப் போகும்போது கட்டிக்கொண்டா போகப் போகிறேம்? குழந்தைகளின் முகங்களிலே காணப்படும் ஒரு நிமிஷ மலர்ச்சியின் பெறுமதி, நான் செலவழிக்கும் பணத்திலும் எவ்வளவோ மேலானது" என்றெல்லாம் அவர் பேசும்பொழுது சிவபாக்கியத்திற்குக் கோபம் கோப மாக வரும். வந்து என்ன செய்வது? சுந்தரராஜனைத் திருத்தக் கடவுளாலும் முடியாது.

அநுபவிக்க வேண்டியதையெல்லாம் அநுபவித்துவிட்டு அவர் போய்விட்டார்.

இனி அவள் கதி? குஞ்சுங் குருமானுமான பிள்ளை களின் கதி?

கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்கக்கூட நாதியற்ற அவளுக்கு இனி யார் துணை? எந்த ஆதாரத்திலே அவள் தனது வாழ்க்கையைக் கொண்டிழுக்கப் போகிருள்?

மிச்சம் மீதியென்றிருந்த ஒரே ஒரு சங்கிலி, இன்று சுந்தரராஜனின் கடைசிப் பயணச் செலவுகளுக்காக நகைக் கடையை நாடிச் சென்றுவிட்டது?

நாளை?

திரும்பிய பக்கமெல்லாம் அநாதரவும் அந்தகாரமுமாய்த் தெரிய, அவள் கிடந்த இடத்திலேயே, சுந்தரராஜனின் குளிர்ந்த கால்களுக்குமேல் சுருள்கிருள்.

பலவந்தமாக அவளை இழுத்து அப்பால் விட்டு, நாலு பேர் வந்து கட்டிலோடு சடலத்தைத் தூக்கிச் செல்கிருர்கள்.

குளிப்பாட்டவாம்!

குழந்தைகள் ஒன்றும் புரியாது விழித்துப் பார்க்கின்றன. சவத்தின் பின்ஞல் ஓடுகின்றன.

சிவபாக்கியம் நிலத்திலே விழுந்து குப்புறக் கிடக்கிருள். அறிவுக்கும், அந்தகாரத்திற்கும் இடைப்பட்ட நிலை.

சுந்தரராஜனுக்குச் சிறிய தாய் முறையான கிழவி ஒருத்தி தன் சேலைத் தலைப்பால் அவளுக்கு விசிறுவது கனவுக் காட்சி போலத் தெரிகிறது.

அவள் கிடக்கிருள்—

## 4

“அந்தாள் தமிழ் வாத்திதான். எண்டாலும் பெரிய வீரனல்லே? இலங்கையிலை அந்தாளைப் போலத் தமிழ் எழுத இரண்டொருத்தராலைதான் முடியும். பேச்செண்டால் சுந்தரராசன்தான் — எண்டு பேரும் எடுத்துப் போட்டுது, இந்த இளம் வயசிலை எத்தனை தமிழ்ச் சங்கங்களுக்குத் தலைவர், காரியதரிசி தெரியுமே? உம்... என்ன இருந்தென்ன? வாழத் தெரியல்லை. இப்பிடிக் குறுக்காலை யமன்

வந்திட்டான். பொடிச்சிதான், பாவம்.'' இளைப்பாறிய சிங்கப்பூர்ச் சந்திரசேகரம் இவ்வாறு பேசுவது சிவபாக்கியத்தின் காதுகளிலே விழுகிறது.

சிவபாக்கியம் உள்ளுக்குள்ளே சிரித்துக்கொள்கிருள். செத்த பின் வாய் வார்த்தைகளால் அபிஷேகம் செய்து விடுவது சுலபந்தான். ஆனல், இந்த வார்த்தைகள் அவளின் வாழ்க்கைப் பாதையிலே எவ்வளவு தூரம் தொடர்ந்து வரப் போகின்றன ?

சிவபாக்கியம் பல விஷயங்களை நினைவுத் திரையிலே ஓட்டி ஓட்டிப் பார்க்கிருள். இவ்வளவு பேசுகின்ற இந்தச் சந்திரசேகரம், நோட்டுக்கு ஆயிரம் ரூபா கடன்தருமாறு சுந்தரராஜன் கேட்ட பொழுது சொன்ன வாசகங்களை, வாழ்க்கையிலே மறந்துவிட முடியுமா ? —

"இஞ்சை பாரும் மாஸ்டர் ! நீர் பிள்ளைகுட்டிக்காரன்; சும்மா கூட்டங்கள் நாட்டங்களெண்டு திரியிற ஒரு விசரன்; உம்மிட்டை என்ன பொறுப்பு இருக்கெண்டு நான் கடன் தாரது ? சும்மா கசாம், புசாமெண்டு பத்திரிகையிலே நீர் எழுதின இரண்டொரு கதையைப் பொறுப்பாய் வைச்சே காசுதரச் சொல்லுறீர் ? எனக்கு ஒளிச்சு மறைச்சுப் பேசத் தெரியாது. சொல்லுறன், கேளும். உமக்குக் காசு வேணுமெண்டால் உம்முடைய இரண்டு பரப்புக் காணியை ஈட்டுக்குத் தாரும். ஆயிரமல்ல, இரண்டாயிரந் தாரன்.''

இத்தனைக்கும் சந்திரசேகரம் சுந்தரராஜனுக்கு ஒன்றுவிட்ட தாய்மாமன் முறையானவர். ஆனல், அவர் அன்று பேசின அந்தக் கொழுத்த பேச்சு !

சுந்தரராஜன் உணர்ச்சி வசப்படுபவரல்லவா ? அவர் சந்திரசேகரத்தைக் கண்டபடி பேசிவிட்டு, வீட்டிலே வந்து பாக்கியத்தின் தோள்களிலே தலையைச் சாய்த்துக்கொண்டு விம்மிவிம்மி அழுதார்; சிவபாக்கியமும் அவரோடு சேர்ந்து அழுதாள்.

அவளால் வேறு என்னதான் செய்ய முடியும் ?

ஒழுகுகின்ற கிடுகுக் கூரையை ஓட்டுக் கூரையாக மாற்ற அவர் எடுத்த முயற்சி இப்படிப் பிசுபிசுத்துப் போகவும், அவர் அவமானப்படவும் காரணம்? —

சந்திரசேகரம் அன்று பேசிய பேச்சு! அவர் தாம் இன்று சுந்தரராஜனுக்குப் புகழ்மாலை சூட்டுகிருர்!

சுந்தரராஜன் அன்று பாடிய பட்டினத்தார் பாடல் வரிகள் சிவபாக்கியத்தின் நினைவில் மிதக்கின்றன:

'ஊருஞ் சதமல்ல உற்ருர் சதமல்ல
உற்றுப் பெற்ற பேருஞ் சதமல்லப்
பெண்டிர் சதமல்ல — — —'

சிவபாக்கியத்தை, அணைத்துப் பிடித்துக்கொண்டு, கடைசித் தடவையாக, அரப்பு, எலுமிச்சங்காய் வைப்பதற்காக, சுந்தரராஜனைக் குளிப்பாட்டும் இடத்திற்கு அழைத்துச் செல்கிருர்கள்.

குழந்தைகளுக்கு எண்ணெய் வைக்கையில், அவர்களோடு வரிசையில் வந்து நின்று தானும் ஒரு குழந்தையாகி எண்ணெய் வைப்பிக்கும் சுந்தரராஜனுக்கு, அவள் அரப்பும் எண்ணெயும் வைக்கப் போகிருள்.

கடைசித் தடவையாக —

அடிவயிற்றிலிருந்து குடலைக் கிழிப்பதுபோல ஓர் ஓலம் எழுகிறது, சிவபாக்கியத்திடமிருந்து —

ஆண்கள்கூடத் தங்கள் சால்வைகளால் கண்களைத் துடைத்துக் கொள்கிருர்கள்.

## 5

அன்றைக்குப் பிறகு சுந்தரராஜன் யாரிடமும் கடன் கேட்பதில்லை. பத்து ரூபாவுக்கும், பதினைந்து ரூபாவுக்கும் 'டியூஷன்' கொடுக்கப்போய் ஓடாய் உழைத்தார். இரவும் பகலும் கதை, கட்டுரை என்று எழுதி எழுதித் தள்ளினர்,

ஆனால், அவர் எதிர்பார்த்த பண வருவாய்தான் எட்டாக் கனியாய் நின்று ஏய்த்தது. எப்பொழுதாவது இருந்திருந்து பத்திரிகையில் வெளியாகும் கதை, கட்டுரைகளுக்குப் பத்தோ பதினைந்தோ இருபதோ அனுப்புவார்கள்.

ஒரு தடவை சுந்தரராஜன் ஒரு கிழமை இரவும் பகலும் முயன்று கம்பனின் கவிதைகளிற் சிலவற்றிற்கு நீண்டதொரு விமர்சனம் எழுதினார். அந்தக் கவிதைகள் பல்கலைக் கழகப் புகுமுக வகுப்பு மாணவருக்குப் பாடமாய் இருந்தபடியால், பத்திரிகைகளில் அக்கட்டுரைக்கு வரவேற்பு இருக்கும் என்ற நம்பிக்கை, அவருக்கு! பத்து இதழ்களிலாவது அது வெளியாகும். ஓர் இதழுக்கு இருபத்தைந்து ரூபாவீதம் இருநூற்றைம்பது ரூபாவாவது கிடைக்கும் என்று அவர் மனக் கோட்டை கட்டினார்.

அவரது நம்பிக்கை பழுதாகவில்லை. பத்திரிகையில் அக்கட்டுரைகள் வெளியானபோது பாராட்டுக்கள் குவிந்தன. தனிப்படக் கூடப் பல தமிழறிஞர்கள் அவருக்குப் புகழ்மாலை சூட்டிக் கடிதங்கள் எழுதினார்கள்.

ஆனால் பணம் — ? அவர் கட்டிய மனக்கோட்டை நொறுங்கிச் சரிந்து போகும் வகையில், கட்டுரைகளை வெளியிட்ட பத்திரிகை மௌனமாகவே இருந்து விட்டது. ஒரு சதங்கூட அனுப்பவில்லை!

சுந்தரராஜன் மனம் நொந்து போனார். "இந்தக் கட்டுரையை எழுத எத்தனை நூல்களை ஆராய்ந்து குறிப்புக்கள் எடுத்திருப்பேன்! எவ்வளவு நாள் சிந்தித்திருப்பேன்! எத்தனை நாட்கள் கண் விழித்து எழுதியிருப்பேன்! குறைந்தது நான் எழுதிய தாள்களுக்கும், மைக்குங் கூட, ஒரு பத்து ரூபாக் காசு கிடைக்கவில்லை. பார்த்தாயா?" என்று அவர் கண்கலங்கிச் சொன்ன வேளையில் —

சிவபாக்கியத்தால் அழத்தான் முடிந்தது.

வேறு என்ன செய்வாள்?

பந்தலிலே கட்டிலைப் போட்டுப் பிரேதப் பெட்டியை அதன்மீதுவைத்துச் சுந்தரராஜனைக் கிடத்தியிருக்கிறார்கள். வெள்ளை வேட்டி, நேஷனல் சட்டை, தோளில் உத்தரியமாய்ப் போட்டிருக்கும் பட்டுச் சால்வை, தலைப்பாகை, பூமாலை சகிதம் சுந்தரராஜன் மாப்பிள்ளைக் கோலத்திலே கிடக்கிறார்; இல்லை—கிடக்கிறது.

அழுகை, ஆரவாரங்கள் எல்லாம் அடங்கிப் போய்விடுகின்றன. குருக்களின் மணியோசையும், மந்திரங்களும் அங்கு கம்பீர நாதமாய் எழுந்துகொண்டிருக்கின்றன.

சுற்றிவர, ஒரே மனிதக் கும்பல் நின்றும், இருந்தும், புதினம் பார்க்கிறார்கள். ஆசிரியர்கள், சுந்தரராஜன் கல்வி கற்பித்த கல்லூரி அதிபர், மற்றும் ஊழியர்கள், பத்திரிகாசிரியர்கள், எழுத்தாளர்கள்... இன்னும் பலர்...

மாவிலையோடு சேர்த்து உரலின் இடையிலே வெள்ளைத் துணி கட்டி, அதனுள்ளே உலக்கையையிட்டு, அதிலே ஒரு கையைப் பிடித்தவண்ணம், மூத்தவன் — எட்டே வயதானவன் — இராஜராஜன் நிற்கிறான். தலைமயிரை ஒட்ட வெட்டி, மார்பு கையெல்லாம் குறிகளோடு, வெள்ளைத் துணியொன்றை அரையில் உடுத்தி, மார்பிலே பூணூல் அணிந்து, ஐயோ !...

அவனைத் தாங்கிக்கொண்டு சந்திரசேகரம் நிற்கிறார். திருப்பொற் சுண்ணம் தொடங்குகின்றது.

'முத்துநற் றுமம்பூ மாலை தூக்கி...'

இராஜ இராஜனுக்குப் பக்கத்தில் தேன்மொழி, மங்கை, தயாளன், சீராளன், சுந்தரராஜனின் சிறிய தாய் — கடைசிக் குழந்தை இராஜேந்திரனைத் தூக்கி இடுப்பில் வைத்து நிற்கிறாள், அது தனது சிறிய வாயிலே விரலை வைத்துச் சூப்பியபடி, சூழ இருக்கும் உலகினை விழித்து விழித்து மிரளமிரள நோக்குகிறது.

திருப்பொற்சுண்ணம் முடியும்வரை சிவபாக்கியம் வாய் விட்டுக் கதறி அழக்கூடாது.

கைகளும் கால்களும் உடலும் சோர்ந்து விழ, அவள் இதயத்தினுள்ளே குலுங்கிக் குலுங்கி, தேம்பித் தேம்பி, குமுறிக் குமுறி அழுகிருள்.

## 6

எல்லாம் நடந்து முடிந்துவிட்டன. இனிப் பிணத்தை பாடையிலே ஏற்றவேண்டியதுதான்.

ஆனுல்... திடீரென்று பிணவீடு மேடைப் பேச்சரங்காய் மாறுகின்றது.

சுந்தரராஜனின் படிப்பித்தற்றிறமை, பழகும் பண்பு, பலதரப்பட்ட ஆற்றல்கள் பற்றி, அவர் படிப்பித்த கல்லூரி அதிபர் உணர்ச்சி வசப்பட்டுப் பேசுகிருர். அவரைத் தொடர்ந்து சில ஆசிரியர்கள் சுந்தரராஜனுக்குப் 'பாவல்' செய்கின்றனர்.

"சுந்தரராஜனைப் போன்ற சிறந்த எழுத்தாளர்கள் அடிக்கடி தோன்றுவதில்லை. அவரது எழுத்தாற்றல் நாடறிந்த செய்தி. எங்கள் பத்திரிகை அவரது கதை, கட்டுரை, கவிதைகளால் பெருமை பெற்றது என்று தயங்காது கூற விரும்புகின்றேன். கலை — கலைக்காகவே என்று அவர் வாழ்ந்தார். அவர் நினைத்திருந்தால், தமது எழுத்தாலேயே ஆயிரம் ஆயிரமாய் சேர்த்திருக்கலாம். ஆனுல், இலக்கியத்தைக் கொண்டு பணம் பண்ண விரும்பாத பண்பாளராய் அவர் வாழ்ந்து மறைந்தார். இப்படிப் பட்ட பெருமகனை இனி என்று காணப்போகின்ருேம்? அவரது ஆன்மா சாந்தியடைவதாக."

பிரபல நாளிதழொன்றின் ஆசிரியரும், மாதம் ஐயாயிரம் ரூபா சம்பளம் பெறுபவரும், ஆடம்பரமான பெரிய கார் ஒன்றிலே வந்திறங்கியவருமாகிய திருவாளர் பொன் செண்பகராசன் வழங்கிய மதிப்புரை — பாராட்டுரை

— இறுதியுரைதாம் இந்த வாசகங்கள். இவர்தாம் சுந்தர ராஜனது கம்பன் கவிதை விமர்சனக் கட்டுரையை வெளியிட்டவர்.

தமது பேச்சு முடிந்ததும், சந்திரசேகரத்தைக் கொண்டு, வீட்டுச் சுவரிலே தொங்கிய சுந்தரராஜனது நிழற்படத்தை வாங்கியவராய், அவர் தமது காரை நோக்கிச் செல்கிறார். அவரைத் தொடர்ந்து எழுத்தாளர் சிலர் ஏதோ பேசிக்கொண்டு செல்கிறார்கள். "நாளைப் பத்திரிகையில் சுந்தரராஜனின் படத்தோடு வெளியிட ஒரு கட்டுரை எழுதித் தாரும்" என்று அவர் தம் பக்கத்திலே செல்லும் எழுத்தாள நண்பரைக் கேட்பது, சிவபாக்கியத்தின் காதுகளிலே தெளிவாக விழுகின்றது; அவள் சிரித்து அழுகிறாள்.

பாடை தூக்கப்படுகிறது. பெண்களின் ஒப்பாரி கிளம்பி வளர்கிறது. சிவபாக்கியம் அழவும் மறந்து, சோர்ந்து போய்ப் பந்தல் தூண் ஒன்றைப் பற்றிய வண்ணம் இருக்கிறாள். இராஜராஜனையும், கைக்குழந்தையையும் தவிர்ந்த மற்றைய குழந்தைகள் அவளுக்கு அருகிலே வந்து நின்று, இப்பொழுதுதான் உண்மையை உணர்ந்தவைபோலக் கதறி அழுகின்றன. அவளோ சமாதியாகி, நிலந்தோய அமர்ந்திருக்கிறாள்.

சந்திரசேகரம் திடீரென்று அவளருகே ஓடிவந்து, கீழே குந்திக்கொண்டு, "பிள்ளை! ஒரு விஷயம்" என்று குசுகுசுக்கிறார். அவள் "என்ன?" என்று விழியாலும் துடிக்கின்ற உதடுகளாலும் கேட்கிறாள்.

"பிள்ளை! நீ தந்த சங்கிலிக் காசு கொஞ்சம் போதாது போலையிருக்குது. பறைகாரன், பாடைக்காரனுக்கெல்லாம் காசு குடுக்க வேணும், என்ன செய்யிறது?" தயங்கித் தயங்கிப் பேசுவது போலச் சந்திரசேகரம் கேட்கிறார்.

சிவபாக்கியம் ஒன்றும் பேசாது தனது காதோலைகளைக் கழற்றி அவரிடம் கொடுக்கிறாள்.

அவர் வேதனைப்படுவது போலக் காட்டிச் சிறிதே நின்றவர், "உம்... உன் நிலையும் இப்படியாய்ப் போச்சுது; என்ன செய்யிறது? நான் இதை அடகாய் வைச்சுக் கொண்டு நூறு ரூபா செலவழிக்கிறேன். நீ வசதிபோலத் தா" என்று சொல்லியவராய், வராத கண்ணீரைச் சால்வையால் துடைத்துக்கொண்டு எழுந்து, சவத்தைத் தொடர விரைவாய் நடக்கிறார்.

பறையின் சப்தம், சிவபுராண ஒலி, கதறல்கள், அழுகைகள் எழுந்துகொண் டிருக்கின்றன.

பிரபல எழுத்தாளர் சுந்தரராஜனின் இறுதிப் பயணத் திற்கு அவை கட்டியம் கூறுவது போலிருக்கிறது.

மஹாகவி

# புள்ளி அளவில் ஒரு பூச்சி

புத்தகமும் நானும், புலவன்
எவனோ, தான்
செத்தபின்னும் ஏதேதோ சேதிகள்
சொல்ல மனம்
ஒத்திருந்த வேளை ; ஒழுங்காக
அச்சடித்த
வெள்ளைத்தாளின் மீதில், வரியின்
முடிவினிலே
பிள்ளைத்தனமாய்ப் பிசகாகப்
போட்ட 'காற்
புள்ளி'யைக்கண்டு புறங்கையால்
தட்டினேன் —
நீ இறந்துவிட்டாய்! நெருக்கென்ற
தென் நெஞ்சு!
வாய்திறந்தாய், காணேன், வலியால்
உலைவுற்றுத்
"தாயே!" என அழுத சத்தமுமே
கேட்கவில்லை ;
கூறிட்ட துண்டுக் கணத்துள்
கொலையுண்டோர்

கீருகத் தேய்ந்து கிடந்தாய் ; அக்
கீறுமே
ஓரங் குலம்கூட ஓடி
இருக்கவில்லை !
காட்டெருமை காலடியிற் பட்ட
தளிர்போல,
நீட்டு ரயிலில் எறும்பு
நெரிந்தது போல்,
பூட்டா நம் வீட்டில் பொருள்போல
நீ மறைந்தாய் ;
மீதியின்றி நின்னுடைய மெய் பொய்யே
ஆயிற்று !
நீதியன்று நின்சா ; நினையாமல்
நேர்ந்ததிது ;
தீதை மறந்துவிட மாட்டாயோ
சிற்றுயிரே ?
காதில் அப் பூச்சி கதை ஒன்றே
வந்து வந்து
மோதிற்று ; மீண்டும் படிக்க
முடியவில்லை ;
பாதியிலே பக்கத்தை மூடிப்
படுத்து விட்டேன்.

—0—

என். எஸ். எம்.
ராமையா

# வேட்கை

முழங்காலைப் பிடித்துக் கொண்டு படிகளில் ஏறிவந்த ரங்கையாக் கிழவன், கடைசிப் படியில் நின்று வாயால் ஊதிக் கொண்டான். பத்துப் பதினைந்து படிகள் ஏறியதில் அவனுடைய கிழட்டுக் கால்கள் 'வெட வெட' வென்று நடுங்கின. சற்று நின்றுவிட்டு தன் லயத்து வாசலை நோக்கி நடந்தவன், சூழ்நிலையில் ஒரு மாற்றம் தெரிவது உணர்ந்து நின்று நிதானித்துப் பார்த்தான்.

அவனுடைய வீட்டிலிருந்து மூன்று வீடுகள் தள்ளியிருக்கும் சிவசாமியின் வீட்டுக்குள்ளிருந்து, ஒளி வெள்ளம் வெளியே பாய்ந்து கொண்டிருந்தது. அந்த லயத்தின் ஒன்பது வீடுகளிலும் சிணுங்கிக் கொண்டிருந்த லாந்தர் வெளிச்சத்திலும், சின்னப் போத்தல் விளக்குகளின் மங்கிய ஒளிக்கும் மத்தியில், அந்த ஒரு வீட்டு வெளிச்சம் மட்டும் வாசலை நோக்கி வைரச் சுடரை அள்ளி வீசிக் கொண்டிருந்தது.

ஒளியின் சக்தி மகத்தானதுதான்!

கிழவன் விட்டிலாக அந்த வீட்டு வாசலில் போய் நின்று எட்டிப் பார்த்தான். உள்ளே அறையின் மேல்பகுதியில் ஓடும் பெரிய மரத்தில் கட்டித் தொங்கிய கம்பியில், பெட்ரோமாக்ஸ் லைட் ஒன்று 'உஸ்' என்று பலமாக இரைந்தவாறு தொங்கிக் கொண்டிருந்தது.

வாசலில் நின்றவாறே, "எலே! செவசாமி ..." என்று குரல் கொடுத்தான் கிழவன். "யாரது?" என்றவாறு

வெளியே வந்தான் சிவசாமி. வெளிச்சத்தில் கிழவனைக் கண்டதும், "யாரு, தாத்தாவா? வாங்க ..." என்றான்.

"லைட்டா ... லே வாங்கிருக்கே?"

"ஆமா, தாத்தா."

"அடி சவாசு!"

"ரொம்ப நாளா ஓர் ஆசை. இப்பத்தான் வாங்க முடிஞ்சுது. வாங்கிப் போட்டேன்" என்றான் சிவசாமி; குரலில் பெருமிதம் தொனித்தது.

காஸ் லைட் கிழவனை காந்தமாக இழுத்தது; உள்ளே போய், நெற்றியில் இடிப்பது போல் தொங்கிக்கொண்டிருந்த லைட்டை, விழிகள் மின்ன மெள்ளத் தொட்டான். அது லேசாக ஆடியது.

"ஐயய்யோ! ஆட்டாதே தாத்தா! 'மெண்டுலு' கொட்டிப் போகும்" என்று கூக்குரல் இட்டான், சிவசாமியின் பையன் ஒருவன். "யார் ராது?" என்று திரும்பிய கிழவன், பையனின் விழிகளில் தெரிந்த பரபரப்பை ரசித்தவாறு, "அடெங்கப்பா! பெரிய இவுக" என்று அவனை நோக்கி நாக்கைத் துருத்தியவாறு கையை ஓங்கினான். வீட்டுக்குள்ளிருந்த குஞ்சு குளுவான் எல்லாம் 'கொல்' லென்று சிரித்தன. கிழவனும் பல்லில்லாத முரசு தெரியச் சிரித்தான். குழந்தையினது போல அந்தச் சிரிப்பு மோகனமாக இருந்தது.

ஒளியில் திளைத்த அந்த அறையைச் சுற்று முற்றும் பார்த்துவிட்டு, மீண்டும் லைட்டை ஏறிட்டுப் பார்த்தான். வெள்ளி மாதிரி மின்னிய லைட்டின் கீழ்ப் பகுதியில் அவன் முகம் நீள வாட்டாக நீண்டு, விகாரமாக பிரதிபலித்தது. "இது எம்புட்டு செவசாமி?" என்றான்.

"வெலைதானே? அது தலையை தின்னுருச்சு! நூத்தி இருவது ரூவா" என்றான் சிவசாமி. கிழவனுக்கும் அது பெரிய தொகைதான். ஆனாலும் அது ஒரு பொருட்டாகவே

படவில்லை. "எம்புட்டு குடுத்தாத்தான் என்ன? சீதேவியே வீட்டுக்குள்ளே வந்தது மாதிரி இருக்கு!" என்று பரவசமாகக் கூறினான். வெளியே நடந்தவன், வாசலில் இறங்கி நின்று பார்த்து விட்டு, "செவசாமி!" என்று உள்ளே பார்த்தவாறு, "நம்ப லயம் இப்ப எப்படி இருக்கு தெரியும்லே—ஒம்பது கெழவிக நடுவே கொமரிப் பொண்ணு ஒருத்தி இருக்கிற மாதிரி இருக்கு—ஒன் வீடு" என்று கூறிச் சிரித்தவாறு நடந்தான்.

கிழவன் தன் வீட்டுக்குள் நுழைந்த போது அவன் கண்களில் முதலில் பட்டது—அழுது வடிந்து கொண்டிருந்த தகரலாம்புதான். விரல் நீளத்துக்கு சுடரும், முழ நீளத்துக்கு புகையுமாக எரியும் அந்த விளக்கு வெளிச்சத்தில்தான் இவ்வளவு கால வாழ்க்கையும் ஓடியிருக்கிறது என்பதை இப்போது நினைக்கும்போது, நம்ப முடியாத அதிசயமாகப் பட்டது. அதே சமயத்தில், எஞ்சியிருக்கும் சொற்ப காலத்தை இதே வெளிச்சத்தில் கழிக்கப் போவதும் சகிக்க முடியாத கொடுமையாகப் பட்டது.

உள்ளே சாப்பாட்டுக் கடை நடந்து கொண்டிருந்தது.

நான்கு பிள்ளைகளுக்குத் தகப்பனாகிவிட்ட கிழவனின் மகன் வேலு, சிறிதும் பெரிதுமான பேரப் பிள்ளைகள் எல்லோரும் கோப்பையை வழித்துக் கொண்டிருந்தார்கள். கிழவனைக் கண்டதும், அவனுடைய வெண்கலக் கும்பாவை எடுத்துக் கழுவினாள் கிழவனின் மருமகள். "ஆமா, ஆத்தா! எனக்கும் என்னமாவது கஞ்சித் தண்ணி தா!" என்றவாறு தலை முண்டாசை எடுத்து உதறி, அதே கையோடு தரையையும் தட்டிவிட்டு உட்கார்ந்தான்.

மருமகள் கொண்டுவந்து வைத்த சோற்றைப் பிசைந்து உருட்டி உருட்டி, பொந்துக்குள் கூழாங் கற்களை வீசுவது போல வாய்க்குள் போட்டுக் குதப்பும்போது, தாடையும் மீசையும் ஒழுங்கு இல்லாமல் நெளிந்து வளைந்தன.

சாப்பாட்டுக்கு இடையில், "செவசாமி லேட்டு வாங்கி இருக்கான்!" என்று கூறினன். அவன் சொல்லித்தான் அவர்களுக்குத் தெரிய வேண்டுமென்பதில்லை. ஆயினும், அந்த ஆனந்தத்தை தனக்கே மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்வது போல கூறினன். வாய் நிறைந்த சோற்றுடன் 'உம்' என்று முனகிக் கொண்டான் வேலு. "லேட்டு போட்டப் பொறகு எப்படி இருக்குங்கிறே... அடடா...! சீதேவி வெளேயாடுது!" என்று பரவசமாகக் கூறிய கிழவன், சற்று நேரம் அந்தப் பரவசத்திலேயே லயித்து வெறித்தவாறு இருந்துவிட்டு, "செலவோட செலவா, நமக்கும் ஒண்ணு வாங்கிப்புடு வேலு; நல்லாருக்கும்" என்றுன்.

வேலு சட்டென்று தலையைத் தூக்கி மனேவியைப் பார்த்துவிட்டு, கிழவனே திரும்பிப் பார்த்தான். அவன் முகத்தில் தெரிந்த ஏளனத்தைக் கண்டு கிழவன், தலையைக் குனிந்து கொண்டான். அதுவரை நிலவிய சகஜநிலை மாறி ஓர் அசாதாரண மௌனத்தை உணர்ந்த கிழவன், தான் ஏதும் உளறி விட்டோமோ என்று எண்ணிக் கொண்டான்.

"லேட்டா? ஹூம்! அது மட்டுந்தான் நமக்குக் கொறைச்சல்" என்று எரிச்சலாகச் சிரித்த வேலு, "செவசாமி லேட்டு வாங்குருன்னு, அவன், அவன் என்னத்தையோ பண்ணி வாங்குருன். நாம எங்கே போறது?" என்றுன். சிவசாமிக்கு சாராய பிஸ்னஸ் உண்டு. ஒளிவு மறைவாகத் தான் கிழவனுக்கும் அது தெரியும். எப்போதாவது வசதிப் படும்போது இரண்டு ரூபாய்க்கு வாங்கி ஊற்றிக் கொண்டு, 'என்னலே! காட்டமாவே இல்லே?' என்று உள்ளங் கைகளால் மீசையை ஒதுக்கிக் கொள்வான்.

வேலுவின் பதில் நியாயம்தான். ஆனலும், கிழவனுக்கு பெரிய ஏமாற்றமாக இருந்தது. "முடியாட்டி, என்ன பண்றது? வாங்கின நல்லா இருக்குமேன்னு சொன்னேன்.

அம்புட்டுதான்" என்ருன். குரல் ரொம்பவும் இறங்கிப் போயிருந்தது.

"அம்மான் சொல்றதும் நெசந்தான். வெளிச்சம் இருக்கிற எடத்துலேதான் 'லெச்சுமி' இருப்பா" என்ருள் கிழவனின் மருமகள். கிழவன் மனம் புண்படாமல் இருக்க வைத்த ஐஸ்! "யாரு இல்லேங்கிரு? நெசந்தான் இந்த வீட்டுலே சம்பாதிக்கிற நீ, நானு, ஒம்மகன், மூணு பேருட்டு சம்பளம்—அப்பாவுட்டு பெஞ்சன் காசும்தான்—மாசத்தை ஓட்டவே என்னைப் புடி, உன்னைப் புடிங்குதே! அதுலேயும் சின்னவுக, இப்பல்லாம் காசைக் கண்ணுலேயும் காட்ருக இல்லே" என்றவாறு கிழவன் பக்கம் திரும்பி, "ஒங்க பேரப் புள்ளே, ரெண்டு மாசமா ஒத்தைச் சதங்கூட வீட்டுச் செலவுக்கு குடுக்கிறதில்லே" என்ருன்.

சாப்பிட்டு முடிந்து திண்ணையில் கால் மேல் கால் போட்டவாறு கிழவன் வெற்றிலை இடித்துக் கொண்டிருந்த போது, அவனுடைய பேரன் வெளியே இருந்து உள்ளே வந்தான். அவனேடு குப்பென்று பீடி மணமும் வந்தது. கறுத்த ஒல்லியான உடம்பை மேலும் ஒல்லியாக்கிக் காட்டும் கையில்லாத பெரிய பனியனும், கணுக்காலுக்கு மேல் கண்டைச் சதைவரை இறங்கியிருந்த சாரமும் அணிந்து, சிறுவனுகவுமில்லாமல் வாலிபனுகவுமில்லாத இரண்டுங் கெட்டான் பருவம். அவனைக் கண்டதும், "எலே, நில்லு!" என்ருன் கிழவன். "என்னலே, நொப்பன் என்னமோ புகாரு பண்ருன்."

"என்னவாம்?"

"வீட்டுச் செலவுக்கு ஒத்தச் சதங்கூட குடுக்கிறது இல்லியாம்."

"அதெல்லாம் இன்னம் ரெண்டு மூணு மாசத்துக்கு யாரும் சல்லிப் பேச்சு பேசப்படாது."

"அடி ஆத்தே! என்ன விசயம்?"

"நான் கைக்கு உருலோசு ஒண்ணு வாங்கப் போறேன்" என்றவாறு உள்ளே நுழைந்து, படுக்கையைச் சுருட்டிக்கொண்டு வெளியே வந்தான்.

"எலே! நேரா நேரத்துக்கு மட்டும் வந்து திங்கிறியே, சல்லி குடுக்க வாணுமா?" என்ருன் கிழவன். "அதான் என்னோட கூப்பன் அரிசி, மாவு, எல்லாம் வருதே, அப்புறம் என்ன?" என்றவாறு, இரண்டு வீடுகள் தள்ளி இருக்கும் நண்பனோடு படுத்துக் கொள்ள சென்றுவிட்டான். எரிச்சலோடு 'ஆங்!' என்று அவன் போகும் திசையையே பார்த்தவாறு, "என்ன, அடக்க ஒடுக்கம்!... முருகம்... முருகம்...!" என்று முணகியவாறு வெற்றிலையை இடிக்கத் துவங்கினன்.

* * *

மறுநாள் மாலை...

சிவசாமியின் வீட்டின் முன்றல் அந்த லயத்துப் பிள்ளைகளின் பட்டாளமே குழுமி இருந்தது. எல்லாருக்கும் தலைமை வகிப்பதுபோல கிழவன் திண்ணையில் அமர்ந்திருந்தான். எதிர்த் திண்ணையில் சிவசாமி அமர்ந்து லைட்டைத் துப்புரவு செய்து கொண்டிருந்தான். கிரீடம் மாதிரி மேலே இருந்த மூடியைத் திறந்து, உள் பகுதியை, பைப் வளையங்களில் மெண்டல் இடிபட்டு பஸ்பமாகி விடாமல் ஜாக்கிரதையாக எடுத்து, உள்ளே வாயால் ஒரு ஊது ஊதினன். பின்னர், அவைகளை மீண்டும் பொருத்தி, உள்ளேயிருந்த கிண்ணத்தில் ஸ்பிரிட்டை ஊற்றி தீப் பற்ற வைத்தான்.

சற்று சூடேறியதும் காற்று அடிக்கும் 'பம்ப்'பை இழுத்திழுத்து அமுக்கும்போது சத்தம் 'விக் விக்' என்று உச்ச ஸ்தாயியை நோக்கி ஏறியதைக் கிழவன் ரசித்துச் சிரித்தவாறு, "வெள்ளைக்காரன் வெள்ளைக்காரன் தாண்டா! காத்தை புடிக்க முடியுமா? சட்டியிலே அடக்க முடியுமா? அடைச்சுப்புட்டான், பாரேன்!" என்று வியந்துகொண்டிருந்தான்.

சிவசாமி மேல் பகுதியை தொட்டுப் பார்த்துவிட்டு, வளையத்தை முன்புறம் பின்புறமாக திருகினன். அதுவரை அழுக்கு மஞ்சள் நிறத்தில் எரிந்துகொண்டிருந்த சுடரை 'டப்டப்' என்று அடித்துக்கொண்டு, குபீரென்று குளுமை யான வெள்ளி ஒளி பரவியது. குழந்தைகளும் கிழவனும் காரணமில்லாமல் படபடவென்று கை தட்டினர்கள். "செத்தவனைத் தான் பொழைக்க வைக்க முடியுதில்லே! என்னென்ன வேலை பாரு!" என்றவாறு எழுந்தான் கிழவன். எப்பாடு பட்டேனும் தங்களுக்கும் ஒரு லைட் வாங்கி விட வேண்டுமென்ற உறுதி அவன் மனதில் பிறந்தது. லைட் வாங்குவதென்ருல் யாரை நம்பியும் பயனில்லை. தன் கையே தனக்குத் துணை என்று எண்ணிக்கொண்டு, மறு நாள் பொழுது விடிந்ததும் மண்வெட்டியைத் தூக்கிக் கொண்டு காய்கறித் தோட்டத்துக்குள் இறங்கினன். தோட்டமென்ருல், அது ஒன்றும் பெரிய சேனை அல்ல. சரிவான பூமியில், பிணம் புதைத்த மண்மேடு மாதிரி ஏழெட்டு பாத்திகள். ஆகக் கீழ் பாத்தியின் ஓரமாக வேலி யைத் தொட்டுக் கொண்டு இரண்டு வாழை மரங்கள். இன்னெரு இடத்தில் அவரைச் செடி ஒன்று, ஆதரவுக்காக நட்டிருந்த மர அலம்பலில் தாறுமாருய்ப் பின்னிக் கிடந்தது. ஒரு பாத்தியில் வெங்காயச் செடிகள், நுனியில் மஞ்சள் பூத்து, புல்களுக்கு மத்தியில் தலைநீட்டிக் கொண்டிருந்தன. மற்றும்படி ஒரே புற்காடு.

தனி மனிதன் ஒருவன் முழுநேரம் பாடுபட்டால் மாதம் ஐம்பது ரூபா காணலாம் என்ற நம்பிக்கையோடு 'அப்பனே சம்முகா' என்று முனகிக்கொண்டு, மண்வெட்டியை ஓங்கி ஓங்கிப் போட்டான்.

* * *

இப்போதெல்லாம் பொழுது விடிந்தால் கிழவனுக்கு காய்கறித் தோட்டத்துக்குள் தான் வேலை. ஒளியைத் தேடும் வேட்கையில் அவனுக்குள் அசுர வெறியே ஏற்பட்டிருந்தது.

காடாக மண்டிப் போயிருந்த புல்பூண்டுகளை அழித்து, பாத்திபிடித்து, பளீரென கேழ்வரகுப் பிட்டுபோல கருமண் ஜொலிக்க, இரண்டுவார காலத்துக்குள் அற்புதத்தையே விளைவித்திருந்தான். மேலே இருந்த இரண்டு பாத்திகளில் பத்து நாளைய போஞ்சிக் கன்றுகள் மண்ணைப் பொத்துக் கொண்டு குஞ்சு இலைகளும் பிளந்த விதையுமாக நின்றன.

"தாத்தா" என்ற குரல் கேட்டது. நிமிர்ந்து பார்த்தான். மேலே வேலி ஓரமாக சிவசாமியின் தலைமட்டும் வேலிக் கம்பில் வெட்டிச் சொருகியது மாதிரி தெரிந்தது.

"என்ன, தோட்ட வேலையா ?"

"ஆமா !" பல்லில்லாத முரசு தெரியச் சிரித்துவிட்டு, தலைத்துண்டை எடுத்து முகத்தைத் துடைத்துவிட்டு, வியர்வை கசகசத்த கழுத்தையும் மார்பையும் துடைத்துக் கொண்டான் கிழவன்.

"ஒரு அஞ்சாறு பாத்தி தக்காளி போடுங்க. அப்பத் தான் காசைப் பார்க்கலாம்" என்றான் சிவசாமி.

இன்னும் பயிரிடப்படாத வெற்றுப் பாத்திகளைப் பார்த்து விட்டு, "பாப்பம்..." என்று தலையை ஆட்டிக்கொண்டான். சிவசாமியின் யோசனை உருப்படியான யோசனையாகத் தான் பட்டது.

மழை பெய்யும் போலிருந்தது. 'டப்டப்' என்று மழைத் துளிகள் கையிலும் முதுகிலும் விழத் துவங்கின. மேலே அண்ணுந்து பார்த்தான். சூல் கொண்ட கருமேகக் கூட்டம் பரவி வந்து கொண்டிருந்தது. துளி துளியாக விழ ஆரம்பித்த மழை சரம் சரமாக இறங்கத் துவங்கியவுடன், கிழவன் மண்வெட்டியை தோளில் வைத்தவாறு தோட்டத்தை விட்டு வெளியே வந்தான். கையோடு பீலியடிக்கும் போய் கைகால்களை கழுவிக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்த போது, கூரைத் தகரத்தின்மீது கணகணவென்ற பேரிரைச்சலோடு மழை கடுமையாகப் பெய்யத் தொடங்கியது.

கிழவன் வேறு உடை அணிந்து கொண்டு, சிவப்புக் கரை போட்ட கறுப்புப் போர்வை ஒன்றைப் போர்த்தியவாறு திண்ணையில் வந்து உட்கார்ந்தான். மழையில் நனைந்து கொண்டிருந்த வெளி உலகம், வாசல் வழியாக மங்கிய ஓவியம்போல் தெரிந்தது.

கிழவன் தோட்டத்தை நினைத்துக் கொண்டான். பூமி நன்ருகக் குளிர்ந்துவிடும். இன்னும் சில தினங்களுக்கு தண்ணீர் போட வேண்டிய அவசியமிராது. இல்லாவிட்டால், அது வேறு சிரமம். பீலியடியிலிருந்து தண்ணீர் கொண்டு போவது — அதுவும் பத்துக் குடித்தனங்களுக்கு மத்தியில் — என்பது பிரச்சினை அல்ல; சாதனை. வேலுவே ஒரு நாள் சலித்துக் கொண்டான். கிழவனோடு சேர்ந்து கொண்டு அவனுடைய சிறுசுகள் செம்பிலும் குடத்திலும் தண்ணீர் கொண்டு போவதைப் பார்த்துவிட்டு, “ இஞ்சே ! ஒங்களுக் கெல்லாம் என்ன புடிச்சிருக்கு ?” என்று பல்லைக் கடித்தவாறு தோட்டத்துக்குள் எட்டிப் பார்த்துவிட்டு, “ ம்க்கும் ” என்று வெறுத்துச் சலித்துக் கொண்டான். தோட்ட வேலையால் அவனுக்கு ஏதும் நஷ்டமில்லை. ‘ லைட் லைட் ’ என்று சாவதுதான் அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆனல், சில தினங்களிலேயே அவனும் தோட்டத்தைப் பற்றி அக்கறை காட்டத் தொடங்கினன்.

கிழவனின் மருமகளின் கைங்கரியம் அது !

“ ஒங்களுக்குத்தான் வாங்கிக் குடுக்க முடியல்லே. கஷ்டப்பட்டு நாலு காசு சேத்து வாங்கறவுக வாங்கட்டுமே ! ” என்று அவள் சொன்னது அவனுக்கு நியாயமாகப் பட்டிருக்க வேண்டும். இப்போதெல்லாம் குடும்பத்தின் அன்ருடப் பேச்சுக்களில் தோட்டத்தைப் பற்றியும் சில பேச்சுகள் இடம்பெறுவதும், எல்லோரும் அக்கறை காட்டத் துவங்கி இருந்ததும், கிழவனுக்கு ஆறுதலாகவும் தெம்பாகவும் இருந்தது.

ஏழு எட்டு வருடங்களுக்கு முன்பு என்றிருந்தால் நிலைமையே வேறு ......

தை, மாசி மாதங்களில் கொழுந்துக் காலம் ஆரம்பித்து விட்டால், கிழவனும், அந்தத் தோட்டத்திலே வேகமாக கொழுந்து எடுப்பதில் தேர்ந்தவர்களான இன்னும் சில ஆண்களும், அனுமதி கேட்டுக்கொண்டு கொழுந்து வேலைக்குச் செல்வார்கள். மூன்று மாதங்களில் யாரும் எடுக்காத சம்பளம் வாங்கிக் கொண்டு வருவார்கள். அந்தக் காலத்தில் இந்த ஆசை வந்திருந்தால், ஒரே மாதத்திலேயே வீட்டில் லைட் தொங்கி இருக்கும்.

கிழவன் பெருமூச்சு விட்டுக் கொண்டான். ஒருமுறை தோட்டத்திலேயே அதிக சம்பளத்தையும், பாராட்டாக துரையிடமிருந்து பத்து ரூபாயும் பெற்றுக் கொண்டு வந்த அன்று, இறந்து போன அவன் மனைவி அவனுக்குத் 'திட்டி' சுற்றிப் போட்டது ஞாபகம் வந்தது. தனது ஓங்கார இரைச்சலோடு மழை பொழிந்து கொண்டிருந்தது.

*　　　*　　　*

விடியற் காலையில் கிழவனுக்கு விழிப்பு கண்டபோது, அப்போதுதான் படுத்து உடனே கண் விழித்தோமோ என்று ஒரு கணம் எண்ணிக் கொண்டான். இரவு பெய்த கடுமை சற்றும் குறையாமல் அதே இரைச்சலோடு மழை பெய்து கொண்டிருந்தது. கிழவன் எழுந்து உட்கார்ந்தான். சற்று நேரத்தில் 'மஸ்டரு'க்காக மணி அடிக்கும் சத்தம் கேட்டது. கொஞ்ச நேரம் தொடர்ந்த அந்த மணிச் சத்தம் நிறுத்தப்பட்டு, சில விநாடிகளுக்குப் பிறகு மீண்டும் ஒலிக்கத் துவங்கியபோது, கிழவன் கிடந்த அறையில் உட்புறம் நோக்கி, "இன்னைக்கி வேலே இல்லே போலே ருக்கு" என்றான்.

குளிருக்காக அடுப்பருகில் உட்கார்ந்திருந்த வேலு "இந்த மழையிலே எப்படி தான் போறது?" என்றான்.

"அநியாயம்! ஒரு நாள் சம்பளம் போச்சு" என்று சலித்துக்கொண்டாள் கிழவனின் மருமகள்.

வாசல்புறம் ஏதோ சத்தம் கேட்டது. கிழவன் எட்டிப் பார்த்தான். படிகளின் அருகில் குடையோடு நின்ற அதே லயத்தைச் சேர்ந்த ஒருவன் ஏதோ சத்தம் போட்டுச் சொல்லிக் கொண்டிருந்தான். கிழவன் கையை ஆட்டி, "என்னது லே!" என்று இரைந்து கேட்டான். குடையோடு நின்றவன் வாசல் அருகில் வந்து, "ராத்திரி மழையிலே நம்ம தோட்டம் பூரா அப்பிடியே கீழே எறங்கிட்டுது" என்றான்.

"என்னது!" என்ற கிழவன் ஒரு கணம் பொறி கலங்கி நின்றான். மறுகணம், கையில் கிடைத்த குடை ஒன்றைப் பிடித்துக் கொண்டு படிகள் வழியாக கீழே இறங்கினான். ஏற்கனவே வேறு சிலரும் இறங்கி நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். கிழவனும் அவர்கள் மத்தியில் போய் நின்று, தோட்டத்தைப் பார்த்தான். அந்த லயத்துக் குடும்பங்களுக்கு தோட்டமாகப் பிரித்துக் கொடுத்திருந்த நீண்ட பூமி, இடித்துத் தள்ளியதுபோல சரிந்து கீழே இறங்கி, ஒற்றையடிப் பாதையையும் மூடி, அதற்குக் கீழே உள்ள தேயிலை நிரைகளுக்குள்ளும் பாய்ந்திருந்தது.

கிழவனுக்கு நெஞ்சு தீப்பற்றி எரிவதுபோல இருந்தது. தனது கடைசி நம்பிக்கையான அந்தத் தோட்டத்தின் மண் குவியலைப் பார்த்துத் தளர்ந்து போய், படிகளில் ஏறி வந்து, திண்ணையில் அமர்ந்தான். வாசலருகில் நின்று கொண்டிருந்த அவனது மருமகள் அவனைக் கண்டதும் ஒதுங்கி உள் அறையின் நிலை அருகில் போய் நின்றுகொண்டாள். கிழவன் பின்னாலேயே வந்து கொண்டிருந்த வேலு திண்ணை அருகில் வந்து தலையிலிருந்த துணியால் கைகளையும் முகத்தையும் துடைத்தவாறு, "ஒண்ணுகூட மிஞ்சல்லே! அப்படியே எறங்கிட்டுது" என்றான். "ஐயய்யோ!" என்று நெஞ்சில் கையை வைத்த கிழவனின்

மருமகள், "அம்மான் ஆசையோட பாடுபட்டாகளே! போச்சே!" என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.

வேலு திரும்பி கிழவனைப் பார்த்தான். மகத்தான ஏமாற்றத்தால் தொங்கிப்போன முகத்தோடு வானத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் கிழவன்.

மழை தொடர்ந்து பெய்துகொண்டே இருந்தது......

வ. அ.
இராசரத்தினம்

# தோணி

கரு நீலமாகப் பரந்து கிடக்கும் வங்காள விரிகுடாவைப் பார்த்தவாறு எங்கள் கிராமம் இருக்கிறது. கிராமம் என்று சொன்னேன்? பூமி சாத்திர, சமூக சாத்திர நியதிப்படி, கிராமம் என்றால் எப்படியிருக்கும் என்று எனக்குத் தெரியாது. சோழகக் காற்றுச் சர சரத்துக் கொண்டிருக்கும் தென்னை மரங்களடியிலே அங்கொன்றும் இங்கொன்றுமாக ஏறக்குறைய முப்பது ஓலைக் குடிசைகள் இருக்கின்றன. ஒரு குடிசையிலிருந்து மற்றக் குடிசைக்குப் போகப் பெண்களின் தலைவகிடு போல ஒற்றையடிப் பாதைகள் செல்கின்றன. இந்தக் குடிசைகள் எல்லாவற்றையும் சேர்த்துத்தான் கிராமம் என்று சொல்கிறேன். சரியோ, பிழையோ? உங்கள் பாடு.

எங்கள் குடிசைக்கு முன்னால் தென்னை மரங்கள் இரண்டைச் சேர்த்து நீண்ட கம்பு ஒன்று எப்போதும் கட்டப்பட்டிருக்கும். அதிலேதான் தூண்டிற் கயிறுகளையும், தோணியைச் செலுத்த உதவும் சவளையும் என் தந்தையார் வைப்பது வழக்கம். அதன் கீழே தென்னை மரத்தினடியிற் பென்னம் பெரிய குடம் ஒன்று இருக்கும். அந்தக் குடத்திலே தண்ணீர் எடுப்பதற்காக ஒற்றையடிப் பாதை வழியாக அம்மா அடுத்த குடிசைக்குப் போகும்போதெல்லாம் நானும் கூடப்போயிருக்கிறேன்.

அநேகமாகக் காலைவேளையில் அம்மாவும் அப்பாவும் வீட்டில் இருக்க மாட்டார்கள். அப்பா கோழி கூவும்

போதே எழுந்து கடலுக்குப் போய்விடுவார். அம்மா விற்கு வெளியே என்ன வேலை இருக்குமோ, என்னுல் ஊகித்துக் கொள்ள முடியாது. ஆனுல், அம்மா வீட்டிற்கு வரும்போதெல்லாம் பனையோலைப் பெட்டியில் அரிசியும், மரவள்ளிக் கிழங்கும், தேங்காயும் கொண்டு வருவதை நான் பார்த்திருக்கிறேன். அம்மா வீட்டுக்கு வந்து சிறிது நேரத்திற்கெல்லாம், அப்பாவும், தூண்டிற் கயிறுகளோடும், சவளோடும், மீன் கோவையோடும் வீட்டுக்கு வந்து விடுவார்.

அப்பாவும் அம்மாவும் வீட்டில் இல்லாத நேரங்களில் ஒரே குஷிதான்! ஏறுவெய்யிலின் மஞ்சட் கிரணங்கள் சரசரக்கும் தென்னேலைகட்கூடாகவும், முகடு பிய்ந்து கிடக்கும் எங்கள் வீட்டுக் கூரைக்கூடாகவும் துள்ளிப் பாய்ந்து, நிலத்தில் வெள்ளித் துண்டுகளைப் போல வட்ட வட்டமாக ஒளியைச் சிந்தும். அந்த வட்ட ஒளியை நான் என் கையால் மூட, அந்த ஒளி என் புறங்கையில் விழ, அடுத்த கையால் நான் அதை மறைக்க, அவ்வொளி அடுத்த கையிலும் விழ, நான் கைகளை ஒளி விழுமாறு உயர்த்தி உயர்த்திக்கொண்டே போவது எனக்குப் பிடித்த மான விளையாட்டாக இருக்கும். ஆனுல், கூரைக்கூடாக ஒளி பாய்ந்துவரும் துவாரம், என்னுல் எட்ட முடியாத உயரத்தில் இருக்கிறபடியால் நான் என் விளையாட்டை முடித்துக்கொள்வேன்.

குடிசைக்கு வெளியே வந்தால், அங்கே பக்கத்து வீட்டிலிருந்து என் நண்பன் செல்லனும் வந்திருப்பான். செல்லன் என்னைவிட நோஞ்சான் — பாய்மரக் கம்புபோல நீளமாக இருப்பான். 'இன்னமும் ஐந்தாறு வருடம் சென்ருல், அவன் தென்னைமரத்து வட்டைத் தொட்டு விடுவான்' என்று என் அம்மாகூட அவனைப் பரிகசிப்ப துண்டு.

செல்லன் வந்ததும், நான் எங்கள் வீட்டுப் படலையை இழுத்துச் சாத்திவிட்டு, அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டே ஆற்றங்கரைக்கு ஓடுவேன்.

ஆற்றங்கரை, வீட்டிலிருந்து அதிக தூரத்திலில்லை. வங்காளக் கடல் சிறிது உள்ளே தள்ளிக்கொண்டு வந்து ஒரு சிற்ருருக எங்கள் கிராமத்திற்கூடாகச் சென்று கொண்டிருந்தது. அந்த ஓடையில் பூரணையன்று வெள்ளம் வரும்போது, தண்ணீர் எங்கள் வீட்டு முற்றத்திற்கே வந்துவிடும்.

அந்த ஆற்றங்கரையின் ஓரமாக, ஆற்றில் நீண்டு வளர்ந்த கோரைப்புற்கள் சடைத்துக் கிடக்கின்றன. அந்தப் புற்களினடியில் நீருக்குள் ஓசைப்படாமல் இரு கைகளையும் கூட்டிவைத்து இறல் பிடிப்பதில் எங்கட்குப் பரம திருப்தி; என்ருலும், இந்த விளையாட்டில் எங்கட்கு அலுத்துத் போய்விடும். அதன்பின், நாங்கள் நேரடியாகக் கடற்கரைக்கே போய்விடுவோம்.

கடற்கரையில் கச்சான் காற்று சுழற்றிச் சுழற்றி அடிக்கும். அந்தக் காற்றில் இராவணன் மீசைகள் எல்லாம் நிலத்தில் பட்டும் படாமலும் உருண்டு உருண்டு, பந்தயக் குதிரைபோல வேகமாக எங்களை நோக்கி ஓடிவரும். அவைகளைத் துரத்திப் பிடிப்பதற்காக, நானும் செல்லனும் எங்கள் அரையில் கட்டியிருக்கும் துண்டைக் கழற்றிக் கழுத்தை வளைத்துப் போட்டுக்கொண்டு, கோவணத்தோடு ஓடுவோம். இரண்டு மூன்று இராவணன் மீசைகளைத் துரத்திப் பிடித்தபின், அந்த விளையாட்டிலும் எங்கட்கு அலுப்பு ஏற்பட்டுவிடும்.

அதன்பின்ஞல், நாங்கள் இருவரும் கடற்கரை வெண்மணலில், மதாளித்துப் படர்ந்து கிடக்கும் அடம்பன் கொடிகளின் மேல் குந்திக்கொள்வோம். பதை பதைக்கும் வெய்யிலில் அந்த அடம்பன்கொடி மெத்தை எங்களுக்குக் 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்

வகை கிடைத்த குளிர்தரு' வாகத்தான் இருக்கும். அந்தப் பட்டு மெத்தையின் மேல் வீற்றிருந்துகொண்டு, எதிரே கடவுளைப்போல ஆதியும் அந்தமும் அற்றுப் பரந்துகிடக்கும் கருநீலக் கடலிலே, அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பாய் விரித்தாடும் பாய்த்தோணிகளைப் பார்த்துக்கொண்டிருப்போம். கடற்பரப்பிலே வெள்ளைச்சீலைப் பாய்கள் வட்ட வட்டமாக, வண்ணத்திப் பூச்சிகளைப் போல அழகாக இருக்கும். அவைகளில் ஏதோ ஒன்றில்தான் தகப்பனுர் இருப்பார். ஆனுல், எதிலே அவர் இருக்கிருர் — என்று திட்டமாக எனக்குத் தெரியாது. எனினும், ஏதாவது ஒரு தோணியைக் குறிப்பிட்டு, அதில்தான் அவர் இருப்பதாக எண்ணிக் கொள்வேன். அந்த நம்பிக்கையில், முகத்தில் 'சுள்' என்றடிக்கும் சூரியக் கிரணங்களை நெற்றிப் பொட்டில் கைகளை விரித்து மறைத்துக்கொண்டு, அந்தத் தோணியையே பார்த்துக் கொண்டிருப்பேன். அந்தச் சமாதி நிலையில், என்னுள்ளே இன்பகரமான கனவுகளெல்லாம் எழும். இன்னும் சில நாட்களில் நான் பெரியவனுகி விடுவேன்; அப்போது, அப்பாவிற்குப் போல, எனக்கும் ஒரு தோணி சொந்தமாகக் கிடைத்து விடும். அந்தத் தோணிக்கு வெள்ளை வெளேரென்று அப்பழுக்கில்லாத ஒரு பாயைப் போட்டுக்கொண்டு நான் கடலிற் செல்வேன்; ஒரு தென்னைமர உயரத்திற்கு எழுந்துவரும் கடல் அலைகளில் என் தோணி தாவித்தாவி ஏறி இறங்கிக்கொண்டே செல்லும். எல்லாத் தோணிகளையும்விட வேகமாக ஓடுவதற்காக என் தோணியின் பாய் பெரியதாக இருக்கும். அந்தப் பாய்க்குள் சோழகக் காற்றுச் சீறியடித்துக் கொண்டிருக்கையில், என் தோணி கடற்பரப்பில் 'விர்' ரென்று பறந்து செல்லும், நான் பின்னணியத்தில் தலைப் பாகைக் கட்டோடு தைரியமாக நின்று, சுக்கானைப் பிடித்துக்கொள்வேன்; செல்லன் முன்னணியத்தில் நின்று எனக்குத் திசை காட்டுவான். எங்கள் தோணி முன்னே முன்னே ஏறிச் சென்று, கடைசியாய், கடல் வானத்தைத்

தொடும் இடத்திற்குப் போய்விடும். அங்கே அம்மா இராத்திரிச் சொன்ன கதையில் வரும் ஏழு தலை நாகத்தைக் காண்பேன் ......

தூரத்தே நான் குறி வைத்திருந்த தோணி சமீபித்து விட்டது. அதிலே என் தகப்பனார்தான் இருந்தார். தோணி கரையை அடைந்ததும், அவர் பாயைக் கழற்றி வைத்துத் தோணியை ஓடை வழியாக இழுத்துச் சென்றார். நானும் அவரோடு சேர்ந்து கொண்டேன். பிறகு, நாங்கள் எங்கள் வீட்டின் முன்னால் தோணியைக் கரையில் கொறகொற என்று இழுத்து வந்தோம். அப்பா தூண்டிற் கயிறுகளை வளையமாக்கி சவளில் போட்டு என்னிடம் கொடுத்தார். தோணிக்குள் இருந்த, பழஞ்சோற்றுப் பானையையும், மீன் கோவையையும், நங்கூரத்தையும் எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டு அப்பா பின்னே வர, நான் சவளைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு, சப்த சமுத்திரங் களையும் கடந்துவந்த வீரனைப்போல முன்னே நடந்தேன்.

அன்றிரவு முழுவதும் எனக்குத் தூக்கமே வரவில்லை, பசித்தவன் விருந்துண்ணக் கனாக் காண்பதுபோல நானும் தோணியைப் பற்றியே கனாக் கண்டேன். எங் கள் வீட்டுக்கு முன்னாலுள்ள ஓடையில் ஐந்து புத்தம் புதிய தோணிகள் இருந்தன. நான், முன்னணியம் உயர்ந்து சவாரிக் குதிரைபோல இருந்த தோணியின் மேல் ஏறிக்கொண்டேன், வாடைக் காற்றானபடியால் எல்லோருடைய தோணிகளும் முன்னேற முடியாமல் கரையை நோக்கியே வருகின்றன. என்னுடைய தோணி மட்டும் எரிந்துவிழும் நட்சத்திரம் போலக் கனவேக மாகக் காற்றை எதிர்த்தும் போகிறது. கலங்கரை விளக் கின் ஒளிகூடக் கண்ணுக்குப் படாத அத்தனை தூரத்திற்கு ஆழ்கடலின் நடுமையத்திற்கே என் தோணி போய் விடுகிறது ! ......

நான் திடீரென்று விழித்துக் கொண்டேன். காலையில் எழுந்தபோதுகூட எனக்குத் தோணியின் நினைவு மாற வில்லை. அன்று நான் ஓடைக் கரையில் பழுது பார்க்க இழுத்து வைக்கப்பட்டிருக்கும் தோணி ஒன்றைத் தள்ளிக் கொண்டு கடலிற்குப் போவது எனத் தீர்மானித்துக் கொண்டேன். செல்லனைக் கூட்டிக்கொண்டு போய், இருந்த தோணியை எங்கள் பலத்தையெல்லாம் கூட்டித் தள்ளிப் பார்த்தேன். தோணி அசையமாட்டேன் என்றது. அப்படியானால் நான் தோணி விடவே முடியாதா ? சப்த சமுத்திரங்களையும் என்னால் தாண்ட முடியாதா ?

நான் கவலைப்பட்டுக் கொண்டே யிருக்கையில் ஓடை யில் முருக்க மரத்துண்டு ஒன்று மிதந்து வந்தது. அதைக் கண்டதும் எனக்கு ஒரே சந்தோஷமாகப் போயிற்று. ஆம்; எனக்கென்று ஒரு தோணி கிடைத்து விட்டது! அந்த முருக்கங் கட்டையை முன்னாலும் பின்னாலும் கொடுவாக் கத்தியினால் செதுக்கி உள்ளே குடைந்து தோணி ஒன்றைச் செய்தேன். பின்னர், அந்தத் தோணியில் செல்லனையும் ஏற்றிக் கொண்டு, என் ஆசை தீருமட்டும் ஓடையில் தோணிவிட்டு விளையாடினேன்.

மதியம் திரும்பிவிட்டது. என் தந்தை கடலிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார். தோணிவிட்டு விளை யாடிக் கொண்டிருந்த என்னைக் கண்டதும் "அடே பயலே, தோணி விடுறியா ? அப்படி யெண்டா நாளைக்கு என்னோடை கடலுக்கு வா" என்றார்.

அதைக் கேட்டதும் எனக்குச் சந்தோஷம் தாங்க முடியாமற் போய்விட்டது. "சரியப்பா, நாளைக்கு நானும் வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே, சவளைத் தூக்கிக் கொண்டு முன்னால் நடந்தேன். பெரிய தோணியில் போகப்போகிற ஆனந்தத்தில் என் முருக்கந் தோணியை மறந்துவிட்டேன்.

## 2

அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. தென்னேலைச் சரசரப்பும் சிள் வண்டுகளின் கீச்சுக் குரலும் எனக்குக் கேட்டுக் கொண்டே யிருந்தன. படுக்கையிற் புரண்டு கொண்டே ஆனந்தக் கனவுகள் கண்டு கொண்டிருந்தேன். கடைசியாய், எங்கோ ஒரு சேவல் கூவிற்று. அதைத் தொடர்ந்து எங்கள் கிராமத்துச் சேவல்களெல்லாம் போட்டி போட்டுக் கொண்டே கூவின. அம்மா எழுந்து, கை விளக்கைக் கொளுத்திக் கொண்டு சமையல் செய்யத் தொடங்கினுள்.

அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்த குடிசைகளிலிருந்து ஒருவர் மற்றவரைக் கூவியழைக்கும் சப்தம் கேட்டது. கடைசியாய், அப்பாவும் எழுந்து, "தம்பி, டேய்!" என்று என்னை எழுப்பினுர். நான் சுட்ட பிணம் போல வளைந்து நெளிந்து உட்கார்ந்து கொண்டேன். இரா முழுவதும் தூக்கம் இல்லாததனல் கண்ணிமைகள் கல்லாய்க் கனத்து அழுத்தின. ஆனுலும் உற்சாகத்தோடு எழுந்திருந்தேன். அப்பா சோற்றுப் பானை நிறையத் தண்ணீரை ஊற்றி எடுத்துக் கொண்டு, நங்கூரம் தூண்டில் கயிறு சகிதம் வெளிக் கிளம்பினுர். நானும் சவளைத் தோளில் வைத்துக் கொண்டு புறப்பட்டேன்.

படலையைத் திறந்து வெளியே வந்ததும், முகத்தில் வாடைக் கடுவல் ஊசி குத்துவதைப் போலச் சுளீர், சுளீரென்று அடித்தது. எனக்கு உடம்பெல்லாம் நடுக்கமெடுத்தது. மேல் துண்டை முகத்தை வளைத்துக் கட்டிக் கொண்டு முன்னுல் விறுவிறு என்று நடந்தேன். தூரத்தே குடிசைக்குள் இருந்த அகல் விளக்குகள் இருளைக் 'குத்து குத்' தென்று குத்தின.

ஓடைக் கரையை அடைந்தபோது, பரமார்த்த குருவின் ஆறு சீடர்கள் கண்ட ஆற்றைப் போலத் தூங்கிக் கொண்டிருந்தது. கண்டல் இலைகள் பொட்டுப் பொட்

டென்று ஆற்றில் எங்கே போகிறோம் என்ற பிரக்ஞையே அற்ற வண்ணம் போய்க்கொண்டிருந்தன. கோரைப் புற்களின் மேலே சிலந்தி வலை போலப் பனிப் படலம் மொய்த்துக் கிடந்தது.

அப்பா கரையிலே இருந்த தோணியை ஓடையிலே தள்ளினார். அதற்குள்ளே சோற்றுப் பானையையும் மற்றைய சாமான்களையும் வைத்தார். உடனே தோணியை ஆற்றிலே விட்டுவிட்டுக் கோரைப் புற்களினடியில் 'அத்தாங்கை' வீசி, இருல் பிடிக்கத் தொடங்கினார். நான் வெடுவெடுக்கும் குளிரில், வள்ளத்தின் முன்னணியத்தில், ஒடுங்கிப் போய் குந்திக் கொண்டிருந்தேன். கிழக்கே கூரையில் தொங்கும் புலிமுகச் சிலந்தியைப் போல, வானத்தில் விடிவெள்ளி நடுங்கிக் கொண்டு இருந்தது. இன்னமும் கீழே கிழக்கு வெளுக்கத் தொடங்கியது.

பறி நிறைய இருல் பிடித்ததும், அப்பா வள்ளத்தில் ஏறிக் கொண்டார். வள்ளமும் சமுத்திரத்தை நோக்கி ஓடத் தொடங்கிற்று. பலாரென்று விடிந்தபோது வள்ளம் நடுச் சமுத்திரத்தையே அடைந்துவிட்டது. அப்பா நங்கூரத்தைத் தண்ணீரில் எறிந்துவிட்டு தூண்டிலில் இருலைக் குத்திக் கடலில் எறிந்தார். நானும் தூண்டில் போட்டுக் கொண்டிருந்தேன். சமுத்திராதேவி நிர்க்கதியான தன் குழந்தைகளைத் தன் அலைக்கரங்களை எறிந்து எறிந்து தாலாட்டிக் கொண்டிருந்தாள்.

வெய்யில் ஏறிக்கொண்டே வந்தது. முதுகுத்தோலை உரித்துவிடுவதுபோலச் சுளீரென்று அடிக்கும் வெய்யிலுக்கு ஆற்றுமல் அப்பா தன் சட்டையில் கடல் தண்ணீரை அள்ளி அள்ளி ஊற்றிக்கொண்டேயிருந்தார்.

மதியத்தை அண்மியபோது, நாங்கள் ஆளுக்கு ஐந்து "கருங்கண்ணிப் பாரைகள்" பிடித்துவிட்டோம். என் உழைப்பைக் கண்டு எனக்கே திருப்தி ஏற்பட்டுவிட்டது.

அந்தத் திருப்தியில் பழஞ் சோற்றைக் கரைத்துக் குடித்த தண்ணீர் எனக்குத் தேவாமிர்தமாகத் தான் பட்டது. வயிறு நிறைந்ததும், நங்கூரத்தை தூக்கி வைத்து, தோணியைத் திருப்பத் தொடங்கினோம். வள்ளம் ஓடிக் கொண்டிருக்கையில் என் உள்ளம் பகற்கனுக் காணத் தொடங்கியது. "இந்தப் பத்துக் கருங்கண்ணிப் பாரைகளைக் கண்டதும் அம்மா சந்தோஷப்படுவா. பக்கத்துப் பட்டினத்துச் சந்தைக்கு அதைக் கொண்டு போனால், பத்து ரூபாய்க்கு விற்கலாம். சந்தையிலே, எதிரே வரும் பொங்கலுக்காகக் கமுகம் பூப் போன்ற பச்சையரிசியும், பாசிப்பயறும், சர்க்கரையும், முட்டி நிறையப் பாலும் வாங்கிக் கொள்ளலாம். 'எங்கள்' வீட்டுத் தென்னை மரத்தின்கீழே புதுப்பானை 'களக் களக்' என்று பொங்கும் போது நான் புது வேட்டியை உடுத்து, கரும்பைக் கடித்துக் கொண்டு ......

வள்ளம் கரையை அண்மிவிட்டது. கடற் கரையிலே புத்தம் புதிய பைசிக்கிளிற் சாய்ந்தவாறு ஒருவர் நின்று கொண்டிருந்தார். சூரிய கிரணங்கள் பைசிக்கிள் தகடுகளின்மேற் பட்டு ஜொலித்தன. அப்பா ஏதோ மந்திர சக்தியால் கட்டுண்டவரைப் போலத் தோணியை அங்கே திருப்பினார்.

தோணி கரையை அடைந்ததும் மீன்களையெல்லாம் பைசிக்கிள்காரரிடம் போட்டுவிட்டுத் திரும்பவும் வீட்டை நோக்கித் தோணியை விட்டார்.

எனக்கு ஏமாற்றமாக இருந்தது.

தோணி வந்து கொண்டிருக்கையில் நான் கேட்டேன்: "ஏன் அப்பா மீன்களை யெல்லாம் அங்கே போட்டுவிட்டு வருகிறீர்கள் ?"

அப்பா சொன்னார்: "அவர்தான் நம் முதலாளி. இந்தத் தோணி — எல்லாம் அவருடையதுதான். நாம் மீனைப் பிடித்து அவருக்குத்தான் கொடுக்க வேண்டும்."

"நமக்குக் காசு தரமாட்டாரா ?"

"நம் கடனிலே கழித்துக் கொள்வார் விலையை. நமக்குச் சாப்பாட்டிற்காக மேலும் கடன் தருவார்."

"அப்படியானல், நாம் ஒரே கடன்காரராகத்தானே இருக்க வேண்டும் ?"

"என்னமோ அப்பா ; நானும் தலை நரைக்குமட்டும் உழைத்து விட்டேன். கடனை இறுக்க முடியவில்லை. நமக்கென்று புதிதாக ஒரு தோணி வாங்கவும் முடியாது."

"எல்லாத் தோணிகளும் அந்த முதலாளியுடையது தானு, அப்பா ?"

"ஆம், ஓடைக்கரையில் இழுத்து வைக்கப் பட்டிருக்கும் எல்லாமே அவருடைய தோணிகள் தான்."

வெள்ளம் ஓடைக்கரையை அடைந்து விட்டது. நாங்கள் தோணியைக் கரையில் இழுத்து வைத்துவிட்டு வீட்டை நோக்கி நடந்தோம். என்னுள்ளே ஒரு பயங்கரமான உண்மை புலனாகியது : இந்தத் தோணி எனக்குச் சொந்தமில்லை; ஆம், தூண்டிற்காரனுக்குத் தோணி சொந்தமில்லை ; அப்படியே உழுபவனுக்கு நிலம் சொந்தமில்லை ; உலகில் உழைப்பவனுக்கு எதுவும் சொந்தமில்லை.

அன்றிலிருந்து தோணி எனக்குக் கனவுப் பொருள் ஆகிவிட்டது. எப்படியாவது கஷ்டப்பட்டு உழைத்து, ஆகக் குறைந்து ஒரு தோணியாவது சொந்தமாக வாங்கிக் கொள்ள வேண்டும். அதன்பின் மீன் பிடித்தால் சந்தையில் கொண்டுபோய் நம் இஷ்டத்திற்கு விற்கலாம். பொங்கலுக்குக் கரும்பும், பாலும், பச்சையரிசியும், சர்க்கரையும் வாங்கலாம் ...... பிடித்த மீனையெல்லாம் முதலாளிக்குக் கொடுத்து விட்டு வெறுங்கையோடு திரும்பிவரத் தேவையில்லை ......

* * *

நாட்கள் கடந்து விட்டன. நான் பெரியவனாகி விட்டேன். சொந்தத் தோணி இன்னமும் வெறுங் கனவாகவே

இருந்துவந்தது. தகப்பனுர் வாழ்ந்துவரும் அதே பாதை யிற்ருன் என் வாழ்வும் போய்க் கொண்டிருந்தது. இந்த வாழ்வில், எனக்கு நேரகாலத்தில் கல்யாணம் முடித்து வைத்துவிட வேண்டும் என்பது அம்மாவின் ஆசை.

ஒருநாட் சாயந்திரம் ஓடைக்கரையில் இராட்டினத்தில் நூல் முறுக்கிக் கொண்டிருந்தேன். மேலே நீல நிறமான ஆகாயம் ஓடையின் தெளிந்த தண்ணீரிலும் விழுந்து பிரதிபலித்துக் கொண்டிருந்தது. ஓடை முகத்துவாரத்தில் இருந்த மணல்தீவில் கடற் புட்கள் கூட்டங் கூட்டமாக வந்து விழுந்து கொண்டிருந்தன.

"தண்ணீர் எடுத்துக்கொண்டு வருகிறேன்" என்று வீட்டுக்குப் போன அம்மாவை இன்னமும் காணவில்லை. எனக்குத் தாகமாயிருந்தது. வீட்டுப் பக்கம் திரும்பிப் பார்த்தேன். கனகம் செம்பிலே தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்தாள்.

கனகம் எங்கள் கிராமத்துப் பெண்தான். நீரின் இடைமட்டத்தில் ஆடும் பாசிக்கொடியைப்போல எப் போதும் மென்மையாக ஆடிக்கொண்டுதான் அவள் நடப்பாள். கற்பாரில் நிற்கும் செம்மீனைப் போலச் செக்கச் செவேலென்று அழகாக இருப்பாள். வண்டலிலே மின்னும் கிளிஞ்சல்போல் இருக்கும் அவள் கண்களை இன்றைக்கு முழுவதுமே பார்த்துக் கொண்டிருக்கலாம்.

அவள் அருகால் வந்தபோது, "கொஞ்சம் தண்ணி தந்திட்டுப் போறியா?" என்று கேட்டேன் நான்.

கனகம் ஒன்றும் பேசாமல் என்னிடம் செம்பை நீட்டினுள்.

நான் தண்ணீரைக் குடித்துக் கொண்டிருக்கும்போது, அம்மாவும் தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்துவிட்டாள். அம்மாவைக் கண்டதும், கனகம் ஏதோ செய்யத்தகாத காரியத்தைச் செய்தவள்போல வெட்கப்பட்டுக்கொண்டு போய்விட்டாள்.

அம்மா சொன்னாள் : "என்ன வெட்கமாம் அவளுக்கு? நாளைக்கு அவளைத்தானே நீ கல்யாணம் முடிக்கப் போகிறாய்?"

"போ அம்மா, எனக்கென்று ஒரு தோணி இல்லாமல் எனக்குக் கல்யாணமே வேண்டாம்" என்றேன் நான்.

"ஏண்டா! அவள் அப்பாவிடம் ஒரு தோணி சொந்தமாக இருக்கிறது. அதை உனக்கே கொடுத்து விடுவார் அவர்" என்றாள் அம்மா.

நான் யோசித்தேன். எனக்குக் கல்யாணத்திலோ கனகத்திடமோ அக்கரை இல்லாவிட்டாலும், தோணி கிடைக்கப் போகிறதே! தோணி மட்டும் கிடைத்து விட்டால், என் உழைப்பின் பயனை நானே அனுபவிக்க முடியும். என் குடும்ப வாழ்வும் இன்பமாகவே இருக்கும்......

அதன் பிறகெல்லாம் நான் கனகத்துடன் தைரியமாக நெருங்கியே பழகினேன். மனோகரமான மாலை வேளைகளில், ஓடைக் கரையில் இழுத்து வைக்கப்பட்டிருக்கும் தோணி மூலையில் குந்திக்கொண்டு, நானும் கனகமும் எவ்வளவோ கதைத்திருக்கிறோம்! கனகம் எப்பொழுதுமே தன் தோணியைப்பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்வாள். அந்தத் தோணி அவள் தகப்பனாரின் சொந்தமாக இருக்கிறபடியாற்றான் கனகம் நல்ல சேலை கட்டியிருக்கிறாளாம், கையில் தங்கக் காப்பு போட்டிருக்கிறாளாம்! 'அவள் என்றைக்குமே அப்படி இருக்கவேண்டும்' என்று என் மனதுள் எண்ணிக் கொள்வேன்.

ஆனால், இரண்டு வாரத்துள் அந்தத் துக்ககரமான செய்தி கிடைத்தது. கிராமமே பரபரப்படைந்தது. கனகத்தின் தந்தை மீன் பிடிக்கப் போனவர் புயலில் அகப்பட்டு மாண்டுபோனார்; தோணியும் திரும்பி வரவில்லை......

என் இருதயத்தில் சம்மட்டியடி விழுந்தது போன்றிருந்தது எனக்கு. பாவம்! எனக்குத்தான் சொந்தத் தோணி இல்லையென்றால் கனகத்திற்குக்கூடவா இல்லாமற் போகவேண்டும்?

இரண்டு மூன்று நாட்கள் கழித்துக் கனகம் கடற்கரைக்கு வந்தபோது அவளை நிமிர்ந்து பார்க்கவே என்னால் முடியவில்லை. அவள் கண்கள் கலங்கியிருந்தன. என்னைக் கண்டதும் அழுகை பொத்துக்கொண்டு வந்துவிட்டது அவளுக்கு. விம்மி விம்மி அழத் தொடங்கினாள். என் மடியிற் தலையைப் புதைத்துக்கொண்டு, கனகம் என்னிடம் எதை எதிர்பார்த்தாள்?

கனகத்தை மடியில் வைத்துக்கொண்டே நான் எண்ணினேன், என்னிடமோ தோணி கிடையாது. இந்த நிலையில் அவளை நான் சுகமாக வாழ்விக்க முடியாது. என் தகப்பனாரைப்போல நானும் தலை நரைக்கும் வரை உழைத்து உழைத்துச் சாகவேண்டியதுதான். என்னோடு சேர்ந்து கனகமும் ஏன் சாகவேண்டும்? பாவம், கனகம்......

எனவே, கனகத்தை யாராவது சொந்தத் தோணியுள்ள ஒருவனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்துவிடவேண்டும். என் கண் முன்னால் அவள் அழகான சேலையும், தங்கக் காப்பும் அணிந்துகொண்டு, என்றென்றைக்கும் ஆனந்தமாக வாழவேண்டும். அவள் வாழ்வுதான் எனக்கும் ஆனந்தம்......

நான் எண்ணியது சரியாகப் போய்விட்டது. அமாவாசையன்றிரவு, புங்கை மரத்தின்கீழே இருந்த வைரவர் கோவிலடியில் கனகத்துக்கும் செல்லனுக்கும் கல்யாணம் நடந்தது. கல்யாணத்தன்று பேசிப் பார்க்கவே எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது. என் கையில் இருந்த அரும் பொருள் இன்னொருவனுக்குப் போய் விட்டது......
ஆனாலும், என் கண் முன்னால் அவள் ஆனந்தமாகவே

வாழ்வாள். செல்லனிடம் ஒரு தோணி இருக்கிறது. அவன் என்னைப்போலக் கடன்காரனல்ல. செல்லனோடு கனகம் என்றென்றைக்கும் ஆனந்தமாக வாழட்டும். எனக்கென்று தோணி ஒன்று கிடைக்காமல் நான் எந்தப் பெண்ணின் வாழ்வையும் பாழாக்கப் போவதில்லை......

ஆனால், இன்னமும் தோணி எனக்குக் கனவுப் பொருளாகத்தான் இருக்கின்றது. அதனாலென்ன? உயர்ந்த கனவு செயல்மிக்க நனவின் ஆரம்பந்தான். எப்போதாவது ஒரு நாளைக்குக் காலம் மாறத்தான் போகிறது. அன்றைக்கு எனக்கு மட்டுமல்ல, என் நண்பர்கள் எல்லோருக்குமே சொந்தத் தோணி இருக்கும். எங்கள் தோணிகள் சப்த சமுத்திரங்களிலும் சுதந்திரமாகச் சென்று மீன் பிடிக்கும். அந்த மீன்களைச் சந்தையில் பகிரங்கமாக விற்போம். விற்ற பணத்திற்குச் சந்தையில் அரிசி வாங்குவோம். அரிசி வாங்கும் பணம் என்னைப் போன்ற உழைப்பாளியான ஒருவனுக்கு நேரடியாகக் கிடைக்கும். அப்போது உழவனுக்கு நிலமும் சொந்தமாக இருக்கும் அல்லவா?

யோ. பெனடிக்ற் பாலன்

# 'விபசாரம் செய்யாது இருப்பாயாக!'

என்றும்போல் இன்றும் றீற்று நடுச்சாம வேளையில் இரவின் ஊமையான இருளில் நடந்து கொண்டிக்கிறுள். எந்த நாளும், இந்த இரண்டுங் கெட்டான் பொழுதில், அவள் கையில் ஒரு 'பாக்'கும் தூக்கிக் கொண்டு, தன்னந் தனியாகத்தான் செல்வது வழக்கம். அவளுக்கு இந்த நேர மில்லை, எந்த நேரமென்றில்லை — பகலிலும் இரவிலும் உழைப்புத்தான். இன்று அவளுக்கு முன்னுல் அவளுடைய இரு பெண் குழந்தைகளும் போகின்றுர்கள். அவர்களை இவள் அழைத்துக்கொண்டு போகிருள். சிறிய காற்ருேடு சேர்ந்து வீசும் மார்கழி மாதக்குளிரில் குழந்தைகள் கைகளை மார்போடு இறுகக் கட்டிக் கொண்டிருக்கின்றன.

றீற்று இன்றைக்கு அழகாகவே இருக்கின்ருள். தன்னைச் சோடித்துக் கொண்டதிலும் குறைவில்லை. நெற்றியில் குங்குமப் பொட்டும் உண்டு. அவளுடைய முகத்தின் உணர்ச்சி நரம்புகளில் மட்டும் மனோ விகாரத்தின் விசாரணையும், எதிர்காலம் என்னவென்று தெரியாத வெருட்சியும் ஊறிவிட்டிருந்தன.

இன்று வீதிகளும், வீடுகளும் கலகலப்பாக இருக்கின் றன. நாளை வரும் கிறிஸ்மஸ் திருநாளைக் கொண்டாடும் முகமாக, கத்தோலிக்க வீடுகள் ஆயத்த வேலைகளைச் செய்து கொண்டிருக்கின்றன. இடை, இடை, அங்கங்கே வெடிச் சப்தங்களும் கேட்டுக் கொண்டிருந்தன.

உலக மக்கள் துன்பங்களில் இருந்து ஈடேற வழி கண்டு, அவர்களுக்காகத் தன்னைப் பரித்தியாகம் செய்து கொண்ட மனுக்குலத்தின் இரட்சகரான யேசு மனிதனுகப் பிறக்கப்போகின்ற தினம் நாளை.

நீற்ரு தன் பிள்ளைகளோடு ஒவ்வொரு வீட்டினதும் பிரகாசத்தையும், குதூகலத்தையும், பார்த்துக்கொண்டே செல்கிருள். ஆனுல், மனிதன் உள்ளே தனது கடந்த கால வாழ்க்கையின் அடிச்சுவடுகள் உருவெடுத்து நின்று உயிர் மூச்சு விடுகின்றன. அவள் மார்பு இன்று அதிகமாகவே உயர்ந்து தாழ்ந்து கொண்டிருக்கின்றது.

வீட்டு வாசல்களில் பலவிதமான வெளிச்சக் கூடுகள் சந்தோஷமான கிறிஸ்மஸ் கொண்டாட்டத்தை வரவேற்றுத் தொங்குகின்றன. மூன்று வாலிபர்கள் ஒரு வீட்டின் முன்னுல் நின்று, வெளிச்சக் கூடுகளை உயரத்தில் ஏற்றுவதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தனர். நீற்ரு அவர்களைத் தாண்டிச் சென்ருள்.

"கறுப்பி போருளடா!"

"எங்கை போருள் ..., அவளும் கோயிலுக்குத்தான்; துப்பட்டியும் செபமாலையும் கையிலிருக்கு!"

"ஐஞ்சு ருபா இருந்தாக் காணும்; இப்ப கூப்பிடலாம் ஆளை; நல்ல குளிர்."

"ஐயோ, டேய்! பல பேர் பார்த்த சரக்கு; நோய் பிடிக்குமடா!"

"டேய், பசாசு! பரிசுத்தமான நாளிலும் உனக்கு கெட்ட எண்ணம் போகலே!"

அந்த இளைஞர்களை அவளுக்குத் தெரியாது. அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்வது அவளுடைய காதில் குளிர் காற்ருேடு வந்தடித்துச் சுடுகின்றது. அவளுக்கு அது சர்வ சாதாரணம். அவளை யாழ்ப்பாண நகரத்தின் மூலை முடுக்குகளில் காணுதவர்கள் இருக்கவே முடியாது.

" ரக்ஸி "க்காரர்களுக்கு மிகவும் தெரிந்தவள் நீற்ரு. நகரத்தின் வீதிகளில், மார்பகங்களை உயரப் போட்டு, கால்களை மெதுவாக எடுத்து அசைத்து வரும்போது, அவளை அறிந்து விரும்புபவனும், அறியாது வெறுப்பவனும் ஒருமுறை நின்று இரசித்து விட்டுத்தான் போகவேண்டும்; அப்படித்தான் நடக்குது. ஆண்டவன் அவளுடைய அங்கங்களில் எதையும் கூடவோ, அன்றி குறையவோ படைத்துவிடவில்லை. நிறந்தான் கறுப்பு. கறுப்பா? அழகான கறுப்பு! உண்மையில் அவளுடைய கண்களின் பார்வையில் உலகம் சுழலும். அவள் அழகில் எவரும் ஏற்றுக்கொள்ளும் புனிதம் உண்டு.

இன்று அவள் எல்லாவற்றையும் மனதில் இருந்து ஒதுக்கி, மறக்கடித்து, தான் செய்த பாவங்களைக் குருவானவரிடம் கூறி தன்னைப் பரிசுத்தப்படுத்தும் நோக்கத்தோடு, பாவ சங்கீர்த்தனம் செய்வதற்காகக் கோயிலுக்குச் செல்கிருள். ஏழு வருடங்களாகப் பாவ சங்கீர்த்தனம் செய்வதை மறந்து, சுதந்திரமாக இந்த உலக வாழ்க்கையின் இருள் சந்துகளில் புரண்டு வந்தவள், இந்தக் கிறிஸ்மஸுக்கு தன் பாவங்களை ஆண்டவனிடம் கூறி, இதய பாரங்களைக் குறைக்க எண்ணினுள். இன்றைக்கு அந்த இளைஞர்கள் கூறியதைப் போன்ற வார்த்தைகளை அவளுடைய ஆத்துமா கேட்க விரும்பவில்லை. அவள் விருப்பம் போலவா எல்லாம் நடக்கிறது?

ஒரு மக்கோகனி மரத்தின் கீழ், இருட்டுப்பட்ட இடத்தில் நின்று திரும்பி அவர்களைப் பார்த்தாள். கண்கள் அந்த இளைஞர்களை அருவருப்புடன் நோக்கிச் சபித்து விட்டுத் திரும்பின. வெறுத்த மனத்தோடு அவர்களை நோக்கிக் காறித் துப்பினுள்.

தன்னை மறைத்துக் கொள்வதற்காக துப்பட்டியை விரித்து, முட்டாக்கு இட்டுத் தலையை மூடிக்கொண்டு நடந்தாள்.

'ஒரு பெண்ணை இச்சையோடு பார்க்கும் எவனும் அவளுடன் விபசாரம் கட்டிக்கொண்டதற்கு ஒப்பாவான்'— யேசு கிறிஸ்துநாதர் சொன்ன வாசகம் அவள் நெஞ்சுக்கு மனப்பாடம். ஆனால், மறந்து போனதைப் போல் அடிக்கடி சொல்லி ஞாகப்படுத்திக் கொள்வாள்; அது ஒரு திருப்தி. அவளுடைய வாழ்க்கை அனுபவத்தில், யேசுவின் வாசகத் திற்கு ஆதரவான மனதுடையவன் எவனும் இல்லை; அவள் காணவேயில்லை.

கிறிஸ்தவர்கள் அநேகர்கள் கோயிலுக்குச் சென்று பாவ சங்கீர்த்தனம் செய்துவிட்டுத் திரும்பி வந்துகொண் டிருக்கிறார்கள். நீற்ரு, கோயிலில் யாருமின்றி, கோயில் வெறுமையாக இருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். அவள் கோயிலில் தனிமையை விரும்பினாள். அவள் வீடு இருண்டு கிடக்கும். தாய்க்கிழவி பாயோடு கிடந்து நித்திரை. யேசுநாதரின் படத்துக்கு முன்னால் மட்டும் நித்திய விளக்கு எரிந்து கொண்டிருக்கும்.

இருட்டைச் சாதகமாக்கி எத்தனை பேர், நடந்து கொண்டிருக்கும் அவள்மீது கண்களை ஆசையோடு வீசி விட்டுப் போகிறார்கள் — மரியாதைக்குப் பயப்படுபவர்களும் தான்! நீற்ருவுக்கு அந்த நகரத்தில் பெரிய மனிதர்கள் என்று கூறுபவர்களின் நிறை எவ்வளவு என்று தெரியும். இந்த உலகத்தின் போலித் தனத்தையும் அவள் மதிக்க வில்லை. ஒரு காலத்தில் பெரிய மதிப்பு வைத்திருந்தாள். கணவன் இறந்து, பகிரங்கமாக வெளியே வந்துவிட்டபின், இப்போது உலகம் அவள் காலடியில் கிடப்பதுபோல்.

"டேசி, மரியா! மெதுவா நடவுங்கோ!"

குழந்தைகள் சற்று விரைவாக நடந்துவிட்டார்கள். நீற்ருவின் இதயத்தைத் தடவிக் கொடுப்பவர்களும், அணைத்துக் கொள்பவர்களும், சிரிப்பு மூட்டிக்கொள்பவர் களும் அந்தக் குஞ்சுகளே.

அவர்களை நன்றாக வாழவைக்க அவள் வாழ்கிறாளாம்; வாழ்க்கை அப்படி அமைந்துவிட்டது — தன்னையே என்றும் தானே விலை பேசிக் கொள்ளும் உழைப்பு அவர்கள் எல்லோருக்கும் வாழ்வளிக்கின்றது!

நீற்று நீண்ட தூரம் நடந்து வந்து பெரிய கோயில் வாசலில் ஏறினாள். கால்கள் கூசின. சேலைத் தலைப்பை எடுத்து தன் மார்பைப் போர்த்துக்கொண்டாள். "ஏசுவே, என்னை இரட்சியும்." அவள் ஆசைப்பட்டதுபோல் கோயில் இருக்கிறது; அங்கு யாருமில்லை. குருவானவர் பீடத்தின் முன்னால் செபத்தில் இருக்கிறார். கோயிலின் இடதுமூலையில், மாட்டுக் கொட்டிலில், பாலன் பிறந்த காட்சியை அழகுபடச் செய்திருக்கிறார்கள். நீற்று பாலன் பிறப்பு மேடைக்கு முன்னால் முழந்தாளிட்டு இருந்தாள். இரு குழந்தைகளையும் தன் முன்னால் இருத்தி, கைகளைக் குவித்து வணங்கும்படி கூறினாள். குழந்தைகள் பயபக்தியுடன் இருந்தனர்:

'தேவனே நீற்றுவின் வாழ்வு எங்களுக்கு வேண்டாம்!'

அவள் சொல்லிக் கொடுத்ததை, இருவரும் எதையும் புரிந்துகொள்ள முடியாமல், தெய்வ உணர்ச்சியோடு வாய்க்குள் செபிக்கின்றார்கள். நீற்று என்றால், அவர்கள் தங்கள் தாயை நினைக்கவில்லை. அவள் யாரோ ஒருத்தி என்று அவர்களுக்குச் சொல்லியும் இருக்கின்றாள். அவர்கள் முணுமுணுப்பது, நீற்றுவின் இதயத்தை அழுகையோடு மீட்க, மன விசாரணையில் மூழ்கிக் கொண்டாள். செய்த பாவங்களை ஒவ்வொன்றாக நினைத்து நினைத்து, பாவ சங்கீர்த்தனத்துக்கு ஆயத்தம் செய்கின்றாள். இந்த ஏழு வருடங்களில் அவள் பூரண அறிவு அவதானத்துடனும், முழுச் சம்மதத்துடனும், கனங்கொண்ட காரியத்தில் தேவ கட்டளைகளை மீறியிருக்கிறாள். ஏழு வருடகாலத்தில் நடந்த பாவ நிகழ்ச்சிகளை எல்லாம் ஒழுங்கு படுத்தி நினைப்பதற்கு ஒரு பக்திமானுக்கு நீண்ட நேரம் எடுக்கும்.

அவள் ஒரு சில விநாடிகளுக்குள் முழுவதையும் மனதுக்கு முன்னால் கொண்டு வந்துவிட்டாள். எல்லாப் பாவங்களும் ஒரே உருவம் எடுத்து மண் புழுவைப்போல் உடலைப்புரட்டி, சாரிகண்டமாய் நெளிந்து புரள்கின்றன. எல்லாம் பச்சை நினைவுகள். திரும்பவும் திரும்பவும் ஒரே பாவச் சேற்றில் விழுந்து அழுக்குப்படும் அவளுடைய அந்தரங்கக் கோலங்கள். ஒரே தன்மையான சம்பவங்களில், பலதரப் பட்ட மனிதர்களின் அம்மணமான உருவங்களுடன் அவளும். அவள் ஒருத்தி, நீண்ட காலத்தில் பல மனிதர்கள். பசாசு வாழும் இருளில் மூலை முடுக்கு எல்லாம் இரண்டறக் கலக்கும் நிர்வாணமான காட்சிகள்; கண்களை இறுக மூடிக்கொள்கிறாள்.

"யேசுவே! யேசுவே! என் பிள்ளைகளை இரட்சியும்."

"என் வாழ்வு அவர்களுக்கு வரவேண்டாம் தேவனே!"

மூடியிருக்கும் கண் இமைகளின் வெடிப்புக்களால் கண்ணீர் பொங்கி வழிகின்றது. முழந்தாளிலிருந்து முகக் குப்புற விழுந்து கிடக்கின்றாள்; கைகள் குவிந்தபடி நடுங்குகின்றன.

"மகளே! பிள்ளாய்! பாவ சங்கீர்த்தனத்துக்காகவா வந்தாய்?"

குருவானவர் செபபீடத்தில் இருந்து எழுந்து, சற்று முன்னுக்கு வந்து நின்றார்.

"ஆம், சுவாமி!"

நீற்று கண் விழித்தாள்; வயது சென்று, முதுகு கூனி, முகமொடுங்கி நிற்கும் கறுத்த குருவானவரைக் கண்டாள். அவர், பேச்சு எதுவுமின்றிச் சென்று, பாவ சங்கீர்த்தனத் தட்டியில் அமர்ந்துகொண்டார்.

அவளுடைய இருதயம் அவளின் காதுக்குள்ளேயே அடிக்கின்றது. கைகளில் வேர்வைக் கசிவு. குவிந்த கைகள் நடுங்குகின்றன. குருவானவர் வரும்படி கை காட்டினார். அவள் எழுந்து நடந்தாள்.

"நீற்ருவின் வாழ்வு எங்களுக்கு வேண்டாம்!"

டேசியும் மரியாவும், கண் தூக்க மயக்கத்தின் இடையிலும், தாய் சொல்லிக் கொடுத்ததைக் கூற மறக்கவில்லை. டேசி தூங்கி விழ, மரியா எழுப்பி விட்டு, மரியா தூங்கி விழ, டேசி தட்டி விட்டு, இருவரும் விழிப்பாகவே இருந்தனர்.

நீற்ரு பாவ சங்கீர்த்தனத் தட்டி அருகில் முழந்தாளிட்டு இருந்தாள். இவ்வளவு காலமும் செய்த பாவங்களில் மனம் ஒன்றித்து, அப்பாவங்கள் உண்டாக்கும் பயங்கரத்தில் உள்நடுங்கி, பயபக்தியாகி விட்டாள்; நெற்றியிலும் வியர்வை துளிர்த்தது.

"ஏன் மகளே, நேரஞ் செல்ல வந்தாய்?"

"நான் தனிமையை விரும்பினேன், சுவாமி; எனக்கு நிம்மதி அதில்தான்!" அமைதி கொள்ளும் தாழ்ந்த தொனியில் கூறினாள்.

"சரி, முன் எப்போது பாவ சங்கீர்த்தனம் செய்திருந்தாய்?"

"ஏழு வருஷங்களுக்கு முன்னிருக்கும், சுவாமி!"

"ஐயோ! இவ்வளவு காலமும் நீ பசாசின் பிள்ளையாகவா வாழ்ந்தாய்? எவ்வளவு மோசம் மகளே!"

"———"

"ஏன் மகளே அப்படி இருந்து கொண்டாய்?"

"நான் விரும்பவில்லை, சுவாமி!"

"சரி, ஆண்டவனின் பிள்ளையாக இருக்க வேண்டிய நீ, பசாசின் பிள்ளையாக இருக்கலாமா? இந்த ஏழு வருட காலத்தில் என்ன பாவங்களைச் செய்து கொண்டாய்?"

குருவானவர் தலையை பாவ சங்கீர்த்தனத் தட்டியோடு சரித்து, காதுகளை மிகக் கூர்மையோடு வைத்திருந்தார்.

"அநேக பொய்களைச் சொன்னேன்!"

"ஆம்!"

"மற்றவர்களைப் பார்த்து பொருமைப்பட்டேன்!"

"ம், எப்படி? என்ன விதத்தில்?"

"மற்றவர்கள் நல்லாக வாழ்வதைக் கண்டு, நல்ல உடுப்பு உடுப்பதைக் கண்டு, நல்ல சாப்பாடு சாப்பிடுவதைக் கண்டு, நல்ல வீட்டில் வாழ்வதைக் கண்டு, மற்றவர்கள் சிரித்து மகிழ்ந்து சந்தோஷமாக இருப்பதைக் கண்டெல்லாம் பொருமைப் பட்டேன், சுவாமி!"

"ம், வேறு... பிள்ளாய்! வேறு பாவங்கள் செய்யவில்லையா?"

"கெட்ட எண்ணங்களை எண்ணினேன், சுவாமி!"

"ஆம்... ஞாயிற்றுக்கிழமைகளில் கோயிலுக்கு போகிறதா?"

"ஆம், சுவாமி!"

"போகாமல் இருந்ததுண்டா?"

"ஆம்!"

குருவானவர் கண்களை மூடிக்கொண்டார்.

"வேறு, பிள்ளை? பாவங்களை ஆண்டவனுக்கு ஒளிக்கக் கூடாதல்லவா? அவர் உன்னை அறிவார். பயப்படாதே! செய்த பாவங்களைக் கூறு!"

"ஆம், சுவாமி! தூஷண வார்த்தைகளைப் பேசினேன்!"

"ம..."

குருவானவர் அவளிடம், பாவங்கள் கூறுவதை எதிர்பார்த்திருந்தார். நீற்று கைகளைக் குவித்தபடி இருந்தாள். அவளுடைய மார்பு கனமாக உயர்ந்து தாழ்ந்தது; உதடுகள் துடித்தன.

"கெட்ட செய்கைகள் ஏதாவது செய்தது உண்டா? பாவங்களை ஆண்டவனுக்கு ஒளிக்கக் கூடாதல்லவா?"

"ஆம், சுவாமி!"

"ம் ...... சொல்லு மகளே!"

"......"

"என்ன மகளே, மௌனமாக இருக்கிறாய்?"

"விபசாரம் கட்டிக் கொண்டேன், சுவாமி!"

அவள் பற்களால் கீழுதட்டைக் கடித்துக்கொண்டு குலுங்கி அழுதாள். பாவத்தின் கொடுமையை நினைத்து உத்தம மனஸ்தாபப் பட்டாளா? குவிந்த கை விரல்கள் கண்ணில் உருண்டு கொண்டிருந்தன.

குருவானவர் இருதயமும் நலுங்கிற்று.

"மகளே, அழாதே! இந்த உலகத்தில் பிறந்த மனிதர்கள் பாவம் செய்யாமல் இருக்கமுடியாது. இங்கு சாத்தான் தன் கைகளை விரித்துக்கொண்டு இருக்கின்றான்; மனிதர் பெலயீனர். அழாதே!"

"......"

"கனங் கொண்ட ஒரு காரியத்தில் நீ தேவகட்டளையை மீறிவிட்டாய், இல்லையா?"

அவள் மௌனம்.

"ஆண்டவனுக்கு துரோகமாக, பசாசுக்கு அடிமை ஆகி விட்டாய். இது நரக நெருப்புக்கு இட்டுச் செல்லும் சாவான பாவம் அல்லவா?"

"ஆம், சுவாமி; நான் இந்தப் பாவத்தை முழு மனதோடு செய்வதில்லை. இந்தப் பாவத்தைக் கட்டிக் கொள்ளும் ஒவ்வொரு முறையும் நான் வெந்து சாகிறேன், சுவாமி!"

குருவானவர் சிறிது மௌனமாக இருந்தார்.

" இந்தப் பாவத்தை எத்தனை முறை கட்டிக்கொண்டாய், மகளே ! "

" ...... "

" மகளே, சொல்லு ; ஆண்டவனுக்கு நீ ஏன் பயப்படுகிறாய் ? ஆண்டவனிடமல்லவா உன் பாவங்களை ஒப்படைக்கிறாய் ? "

" இந்தப் பாவத்தைச் செய்ய எனக்கு சம்மதமே இல்லை சுவாமி. சுவாமி ... இந்தப் பாவத்தை அடியோடு வெறுக்கிறேன், சுவாமி ! "

அவள் பெருமூச்சுவிட்டு அழுவது குருவின் காதில் விழுந்தது.

" எப்படி இருந்தாலும், மகளே, நீ இந்தப் பாவத்தைக் கட்டிக்கொண்டாய் அல்லவா ? "

" ஆம் ! "

" அப்போ, பாவம் பாவம்தானே ; சொல்லு மகளே ? "

அவள் உதடுகள் நடுங்க, ஒன்றும் பேச முடியாமல் இருந்தாள்.

" ...... "

" மகளே ! "

" எத்தனை முறைகள் என்று என்றால் கூறமுடியாது, சுவாமி ; அநேகம் முறை ! "

நீற்று பொறுமையிழந்து, பிரலாபித்து அழுதாள். கர்த்தரின் சந்நிதி மட்டும் அது கேட்கும் என்ற நம்பிக்கை அவளுக்கு.

" அழாதே, மகளே! பயம் வேண்டாம்! தேவன் இரக்கமுள்ளவர்; உன்னைப்போல் பாவியான மரிய மதலேனம்மாளை மன்னித்து, தன்னோடு மோட்சத்துக்கு எடுத்துக் கொண்டவர், உன்னையும் நிச்சயம் மன்னிப்பாரல்லவா ? "

" விசுவாசிக்கின்றேன், சுவாமி ! "

சுவாமியார் சிறிது நேரம் தமக்குள் யோசித்துக் கொண்டார். நீற்ரு, சேலைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"உனக்கு எத்தனை வயது, பிள்ளாய்?"

"முப்பது."

"ம்... நீ இந்தச் சின்ன வயதில், இந்தக் கொடிய பாவத்தைச் செய்துள்ளாய். இது ஆண்டவனுக்கு மிகக் கோபத்தை உண்டாக்குமல்லவா?"

"உண்மை, சுவாமி!"

"நீ இந்தப் பாவத்தை எத்தனை மனிதர்களுடன் கட்டிக்கொண்டாய்?"

"என்னுல் சொல்ல முடியாது, சுவாமி; எனக்கு ஞாபகம் இல்லை!"

நீற்ருவுக்கு மீண்டும் அழுகை நெஞ்சில் கசிந்தது. குருவானவர் மௌனமாக விடும் பெருமூச்சு கேட்டது.

"நீ திருமணம் கொண்டதா, மகளே!"

"ஆம், சுவாமி!"

"ஐயோ, மகளே! திருமணம் செய்துகொண்டுமா இந்தப் பாவத்தைக் கட்டிக்கொண்டாய்?"

"என் கணவர் இறந்துபோனுர். மில்லில் வேலை செய்து கொண்டிருந்தபோது மிசினில் அகப்பட்டு இறந்துவிட்டார். எனக்கு இரண்டு பிள்ளைகள் உண்டு, சுவாமி!"

அவள் அழுகையை அடக்கி, உதடுகளைப் பற்களால் இறுகக் கடித்துக்கொண்டாள்.

"உனக்கு, உன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியாதா? ஐம்புலன்களை அடக்கத் தெரியாதா?"

நீற்ரு கண்ணீரை வழித்துவிட்டு, நிதானமாகச் சொன்னுள்:

" சுவாமி, நான் உடலிச்சையால் இந்தப் பாவத்தைக் கட்டிக் கொள்ளவில்லை. எனக்கு வாழ்வதற்கு வேறே வழியே இல்லை." குரல் உள்ளடங்கிக் கரகரத்தது.

" அதற்காக, இந்தக் கொடிய பாவத்தைக் கட்டிக் கொள்வதா? உனக்கு உறவினர் இல்லையா?"

" இருக்கிறார்கள்; எங்களைக் கவனிப்பதில்லை. கவனிக்க முடியாத கஷ்ட நிலையில்தான் அவர்களும் இருக்கிறார்கள்."

குருவானவரால் மௌனமாக இருப்பதைவிட வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. சில விநாடிகள் கழிந்தபின் நிமிர்ந்தார்:

" சரி, மகளே! நீ கனம் கொண்ட காரியத்தில் பூரண அறிவு அனுதானத்துடனும், முழுச் சம்மதத்துடனும் தேவ கட்டளையை மீறியுள்ளாய். உன் இதயத்தில் சாத்தான் குடிகொண்டு விட்டான். இருதயம் ஆண்டவன் வசிக்கும் புனித வீடு; அதில் கெட்ட சாத்தானைப் புகவிடலாமா? இது நரக நெருப்புக்கு இழுத்துச் செல்லுவதான பாவம் அல்லவா?"

" விசுவாசிக்கிறேன், சுவாமி."

நீற்றுவின் இதயம் கொதிக்கும் உலைக்குள் அந்தரமாக விழுந்து கிடக்கின்றது.

சுவாமியார் தொடர்ந்தார்:

" ஆனால், மகளே! ஆண்டவன் இரக்கம் உள்ளவர். சருவேசுவரன் சகல மனிதனின் பாவங்களுக்காகவும் பாடுபட இவ்வுலகத்தில் மனிதனாகப் பிறந்தார். அவர் உன்னை மன்னிப்பார். நீ உன் கண்ணீரால் அவர் காலைக் கழுவு! கண்ணீர்க் கணவாயில் நின்று, பிரலாபித்து அழு! உன் அழுகைச் சத்தம் அவர் சந்நிதி மட்டும் செல்லட்டும்!"

" என்ன, மகளே?"

" ஆம், சுவாமி!"

" ஆம். அபராதமாக ஒவ்வொரு நாளும் மூன்று செப மாலை சொல்லி, ஆண்டவனுக்கு ஒப்படை ! "

" நல்லது, சுவாமி ! "

குருவானவர் கண்களை மூடி, விரல்களால் அவற்றைத் தடவிக் கொண்டார் :

" இப்போது மிகவும் துக்க மனதோடு உத்தம மனஸ் தாப மந்திரத்தைச் சொல்லு."

நீற்ரு கண்களில் நீர் மல்க, தலையைப் பக்தியோடு குனிந்து, குவித்த கைகள் நாடியிலும் மார்பிலும் அணைய, உத்தம மனஸ்தாப மந்திரத்தைச் செபிக்கத் தொடங்கினாள். இருதயம் செபத்தில் ஒருமனப்பட, கண்கள் மூடிக் கொண்டன.

" என் ஆண்டவரே ! அளவில்லாத நேசத்துக்குப் பாத்திரமான தேவரீரைச் சட்டை பண்ணுமல், தேவரீருக்குப் பொருந்தாத மகா பாவங்களைச் செய்தேனே ! ... "

பக்தி மயமாக அசைந்து கொண்டிருந்த நீற்ருவின் வாயானது அசையாமல் நிற்க, பற்கள் கீழ் உதட்டை இறுகப் பிடித்துக் கொண்டன.

குருவானவர் மூடியிருந்த கண்களை விழித்தார்.

" என்ன, மகளே! செபத்தை இடையில் நிறுத்தி விட்டாய் ? " அவள் ஒன்றும் பேசவில்லை.

" ' மனத்தினாலும், வாக்கினாலும், கிரியையினாலும் இனிமேல் பாவம் செய்ய மாட்டேன் என்று பிரதிக்கினை பண்ணுகின்றேன் ' — என்று தொடர்ந்து செபத்தைச் சொல்லி முடி ... ம் ... சொல்லு, மகளே ! "

" ...... ! "

" ஏன், செபம் தெரியாதா, மகளே ! "

" தெரியும், சுவாமி .... "

"அப்ப, ஏன் தயங்குகின்ருய்? சொல்லு; சொல்லி முடித்து, ஆண்டவனின் பாவ பொறுத்தலே வேண்டிக் கொள்."

"நான் சொல்லமாட்டேன்."

குருவானவர் திகைத்துப் போனுர்.

"ஏன், மகளே! ஏன், மகளே!"

"என் தொழிலே இதுதான், சுவாமி. நான் திரும்பவும் இப் பாவத்தைக் கட்டிக்கொள்வேன்."

றீற்ருவின் கோத்திருந்த இருகை விரல்களும் ஒன்றை ஒன்று இறுகப் பிடித்துக் கொண்டன.

"உனக்கு வேறு தொழில் கிடையாதா?"

"கிடைக்கும், சுவாமி; ஆனுல், அதைக் கொண்டு நானும், என்னுடைய இரு பிள்ளைகளும், என் வயதுபோன தாயும் வாழவே முடியாது. நான் என் இரு பெண் குழந்தைகளுக்காகவே வாழ்கிறேன். அவைகள் என்னைப்போல் வாழக் கூடாது...வாழவே கூடாது, சுவாமி..."

குருவானவர் கண்கள் சிவந்தன.

"வேறு நல்ல தொழில் செய்து உன்ருல் ஏன் வாழ முடியாது?"

"நமது வாழ்க்கையை போக்கக் கூடிய கூலி கிடைக்கும் ஒரு நல்ல தொழிலும் கிடையாது, சுவாமி. ஒழுங்காகக் கிடைக்கக்கூடிய ஒரு நல்ல வேலையும் இல்லை."

குருவானவர் இரு கைகளையும் கோத்து, நெற்றியில் வைத்து, யோசனையில் இருந்தார். றீற்ரு குருவானவர் பக்தியோடு கூறுவதை எதிர்பார்த்து இருந்தாள். குருவானவர் மனம் உறுதி கொண்டது.

"மகளே! நமது வேதம் உனக்கு என்ன போதிக்கின்றது? உள்ளதைக் கொண்டு திருப்தியாக இருக்க முடியாதா?"

"கிடைப்பது உயிர் வாழவே முடியாது, சுவாமி. நான் இந்தத் தொழிலை முழுமனதோடு வெறுக்கிறேன், சுவாமி. மற்றவர்கள் என்னை அருவருப்போடு பார்க்கும்பொழுது எரிந்து செத்துக் கொண்டிருக்கிறேன், சுவாமி. நான் செய்து பாராத தொழிலே இல்லை, சுவாமி. நான் அனுபவத்தைக் கொண்டுதான் சொல்லுகின்றேன்."

அவள் கூறியதைக் கேட்ட குருவானவருக்கு கோபம் எழுந்தது, அவரது சுருங்கிய கன்னங்கள் ஆடின. கைகளை மடியில் இருந்த செபப் புத்தகத்தில் வைத்துக் கொண்டார்.

"அப்படிக் கூருதே, மகளே! இந்த உலகத்தில் அழுகின்றவர்கள் பாக்கியவான்கள். ஏன் எனில், அவர்கள் அந்த உலகத்தில் ஆறுதல் அடைவார்கள். ஆண்டவன் உன்னைச் சோதிக்கும்போது நீ தைரியமாக இருக்க வேண்டும். ஆனல், நீ பசாசுக்கு அடிமையாகி விட்டாய். மனம் திரும்பி மோட்ச வழியில் நடக்க உனக்கு மனம் இல்லை. நீ ஆண்டவனின் பிள்ளையல்ல. சாத்தான் உன்னைப் பலமாகப் பற்றிக் கொண்டான். எழுந்துபோய்விடு, போ!"

குருவானவரின் உதடுகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

"சுவாமி, நான் உண்மையைத் தான் சொன்னேன். என்னுடைய நிலைமை இது. நீங்கள் ஒரு முறை என்னுடன் வந்து உலகத்தைப் பாருங்கள். அப்போது என் ஆத்மா உங்களுக்குப் புரியும்." நீற்ருவின் வார்த்தைகள் அமைதியான மெலிந்த குரலில் வந்தன.

"நீ சாத்தானின் பிள்ளை! என்னுடன் பேசாதே! எழுந்து போய்விடு!"

நீற்ரு கண்களைத் துடைத்து விட்டு, எழுந்து நடந்தாள். குருவானவர் பாவ சங்கீர்த்தனக் கதிரையில் இருந்து எழுந்து, அவள் மனம் திரும்புவதற்காக மனதுள் பக்தியோடு செபித்துவிட்டு, அவளைப் பார்த்துக்கொண்டு நின்ருர்.

அவள் தன் இரு பிள்ளைகளுக்குக் கிட்டச் சென்றாள், 'நீற்றுவின் வாழ்வு எங்களுக்கு வேண்டாம்' என்று அப் பிள்ளைகள் செபித்துக் கொண்டிருந்தன. அவள் இரு பிள்ளைகளையும் எழுப்பி, இரு கைகளிலும் பிடித்துக் கொண்டு தெருவைப் பார்த்து திரும்பி நடந்துவிட்டாள்.

" மகளே ...! "

அவள் திரும்பிப் பார்த்தாள்.

குருவானவர் பூசைப் பீடத்துக்கு முன்னால் வந்து, செபப் புத்தகங்களைக் கையிலேந்தி நின்றார்.

" மகளே ! நாளை யேசு பிறக்கப் போகின்றார். இந்தப் புனித நாளில் நீ மனம் திருந்தி, நீ நல்ல வழியில் நடக்க வேண்டும் என்று என் ஆத்மா விரும்புகின்றது. இந்தப் புனித நாளில் உனக்கு யேசுவின் ஊழியனாக நின்று சொல்கின்றேன். இது யேசுவின் கட்டளை: மகளே ! விபசாரம் செய்யாது இருப்பாயாக !"

குருவானவர் எதிர்பார்த்தது நடக்கவில்லை.

றீற்று தெருவில் இருளைக் கிழித்து நடந்து கொண்டிருந்தாள்.

கே. டானியல்

# வீராங்கனைகளில் ஒருத்தி

கடல் இன்று செத்துப்போய்க் கிடக்கிறது. அதன் பெரு மூச்சுக்கள் ஓய்ந்துபோய்விட்டன. ஆனி மாதம் என்ருல், இப்படித்தான் கடல் செத்துப்போகிறது.

இருட்டிப் போய்விட்ட பின்பு, இளந்தாரி மீன்கள் துள்ளிக் குதிப்பதனுல் ஏற்படுமே உப்புக் கரிப்பின் மின் வெட்டு, அதைக்கூடக் கடலில் காணவில்லை.

வருடத்தில் ஒரேஒரு மாதம்! இந்த ஒரேஒரு மாதத்திற்குத்தான் கடலை இப்படிச் சாகடித்துவிட வல்லமை இருக்கிறது.

நெருப்பாயெரிந்த பகற்பொழுது கடலைக் கருக்கி வேக வைத்துவிட்டது. ஆனிமாதப் பொழுதென்ருல், அது இப்படித்தான். அது உலகத்தையே கருக்கிவிட வல்லது.

பௌர்ணமிக் கட்டி தலைநீட்டிப் பார்க்கிறது. அதனுல் கடல் பெருகிவர நினைக்கிறது. மெதுவாக நுரைத்துக் கொண்டு கடல் உயிர்த்து விட்டது. இன்னும் சிறிது நேரத்தில் கடல் பிரவாகத்தின் திசைமாறி நுரைக்கத் தொடங்கிவிடும்! அந்த நுரைப்புக்கு முந்திக் கொண்டு தூண்டியை வீசி ஆகவேண்டும்.

என்னைத் தவிர எல்லோருமே தூண்டிகளை வீசி விட்டனர்.

நான் பெரும் சோம்பேறி!

போனால் போகட்டும், நான் என்ன வயிற்றுப் பிழைப்புக்காகவா இப்படித் தூண்டிபோட வந்திருக்கிறேன்?

மனதின் சேட்டைக்காக வந்திருக்கிறேன்.

கடற்காற்றோடு அடிபட்டுக் கிடந்து எனது பேனுவுக்குத் தீனி போடத்தான் வந்திருக்கிறேனு? கடற்கரையைச் சுற்றித்தான் கற்பனை பிரவகிக்குமாம்! இதை ஒரு பேனு மன்னன் சமீபத்தில் சொல்லிவைத்தான். மாலை வேளை; சின்னஞ் சிறுசுகள் மென் வெயில்பட, கை கோர்த்துக் கொண்டு இந்த நீண்ட பாலத்து வீதியில் வருங்கள்; போங்கள். இந்தச் சின்னஞ் சிறுசுகளின் காதல் பிரவாகச் சேட்டைகளைப் பார்த்துப் பார்த்து ஒண்டிக் கட்டையான என்னை நொந்துகொள்ளத்தான் நான் வந்திருக்கிறேனு?

காற்றின் மிருதுவான அலைகளோடு கலந்து வருவது மாதா கோயிலின் மணிநாதக் கூர்கள்தானு? இன்னும் இந்த நாதக்கூர்கள் அப்படியேதான் வருகின்றன.

இந்த இரண்டாண்டு கால இடைவேளைக்குப் பின், புலன்கள் இந்த நாதக்கூர்களை சரியாகவே இனங்கண்டு கொண்டன.

இந்த நாதக்கூர்கள் வந்துவிட்டபோது, இதனோடு சேர்ந்து வருவதுபோல குட்டியம்மாளும் வருவாள்.

அவளின் நினைவு வரும்போதெல்லாம், இந்த மாதா கோயில் மணியின் நாதக்கூர்களும் சேர்ந்துகொண்டே இருக்கின்றன.

குட்டியம்மா, உன் வரவால் இந்த நாதக்கூர்கள் என் புலன்களோடு சேர்ந்துபோய் நிற்கின்றன.

குட்டியம்மா, இன்று நீ இல்லை. நாதக்கூர்கள் மட்டும் தனித்து வருகின்றன; உன்னைக் காணவே முடியவில்லையே!

நீ எங்கே போய்விட்டாய்?

செத்துப் போனுயா?

அந்த — அத்தை மகனென்ற கிழப்பயல் உன்னைச் சாகடித்துவிட்டானா?

நீ தூக்குப்போட்டுக் கொண்டு மடிந்துபோனாயா?

மானத்தை இழந்துவிட்டதனால் கடல் தாய் உன்னை விழுங்கி விட்டாளா?

அந்தக் கிழப்பயல் உன்னை ஏமாற்றியே விட்டிருப்பான்!

குட்டியம்மா நீ சின்னப்பெண்ணாக இருந்தாய்!

உனக்கு உலகமே தெரிந்ததாக இல்லை.

முனியப்பசாமி கோயிலுக்கு முன்னாலுள்ள டாக்கீஸ் மண்டபத்துக்கு மட்டுந்தான் போனாயா?

அவன் — அந்தக் கிழப்பயல் — உனக்குப் புதுச்சட்டை வாங்கித் தந்ததாகச் சொன்னாயே!

குட்டியம்மா அவன் உன்னை நன்றாக ஏமாற்றி, உன்னை விழுங்கியிருப்பான். அவனின் காமச் சூட்டின் தகிப்பால் பிஞ்சாகிய நீ கருகிச் செத்திருப்பாய்!

ஊரெல்லாம் இப்படித்தான், ஏமாளிப் பெண்கள் சாகிறார்கள். சாவைத்தான் அணைத்துக்கொண்டு, தங்கள் புனிதத்தைக் காப்பாற்றிக் கொள்வதாக நினைக்கிறார்கள்.

நேற்றுக்கூட எனது அடுத்த வீட்டுக்காரப் பெண் ஒருத்தி நஞ்சு குடித்துச் செத்துப்போனாள்.

அவளும் உன்னைப் போலத்தான் சின்னவள். உலகமறியாத அவளை 'யங்கி மைனர்' ஒருவன் நன்றாக ஏமாற்றி விட்டான்.

அவளை அவன் சுற்றித் திரிந்தபோது அவளின் அப்பனுக்கு நான் எச்சரித்தேன். அந்தச் சோமாறிப் பயல் என் மீது சீறினான்.

நேற்று அவள் செத்துவிட்டபோது, அவள் வயிற்றுள் சிசு இருப்பதாக டாக்டர் சொன்னார்.

அந்தச் சின்னப் பெண்ணால் டாக்டரை ஏமாற்றிவிட முடியவில்லை.

குட்டியம்மா, நீயும் இப்படித்தான் ஆனாயா ?

அந்த நாட்களில் — இரண்டொரு அனாதைப் பிணங்கள் கடற்கரையில் கிடந்ததைப் பத்திரிகைகளில் படித்தேனே ; அதில் ஒன்று உன்னுடையதாகத்தான் இருக்கவேண்டும் !

குட்டியம்மா ...... நீ ......

"சாமி, எனக்கொரு மீன் குடு, சாமி !" என்று கை நீட்டிப் பிச்சை கேட்டு வந்தாயே !

* * *

யாழ்ப்பாணப் பகுதியிலிருந்து விடுபட்டுப்போய் — கடலுக்கு அப்பால் இருந்த சிறு தீவுகளை இணைத்து விடுவதற்காக பாலமமைக்க மண் சாக்குகளைக் கடல் நீளம் பரப்பி, அதன்மேல் காட்டுக்கற்களைப் போட்டிருந்த காலம் — இன்றைக்கு இரண்டாண்டுகளுக்கு முன்பு ......

ஆற்று வாய்க்கால் மறிக்கப்பட்டபோது மீன்கள் கரைபுரண்டு ஓடின.

மீன் வேட்டைக்காரர்கள் படையெடுத்து வந்தனர். கடலில் தெப்பத்தோடு கிடந்து மீன் பிடிப்பதைவிட, கரையோடு கரையாக சாவகாசமாக மீன் பிடிப்பதென்றால், மீன் வேட்டைக்காரர்கள் படையோடு வரவே செய்வர்.

மீன் வேட்டையில் எனக்குக் கொள்ளை ஆசை ! தங்கூசிக்கயிற்றில் தூண்டியை இணைத்துக்கொண்டு மிகப் பெரும் நிபுணன் போல் நானும் வந்தேன்.

குட்டியம்மாள் வந்தாள்.

மைமல் பொழுதில் — செக்கர் வேளையில் — அவளைக் கண்டேன்.

அவள் சின்னப்பெண்.

சமீபத்தில், எப்படியோ இக்கரைக்கு வந்து சேர்ந்து விட்ட இந்திய வம்சாவழியினள்.

"சாமி, எனக்கொரு மீன் குடு, சாமி !" என்றுதான் அவள் கை நீட்டினாள்.

பிடித்து வைத்திருந்த மீன்களில் ஒன்றை அவளுக்குக் கொடுத்தேன். ஏதாவது நன்றி தெரிவித்தாளா அவள்?

ஒரு கடன்காரனிடம் அலுப்போடு கடனைப் பெற்றுக் கொண்டு போவதைப்போல அவள் இருட்டோடு போனாள். கல்லடுக்குகளில் அணிவகுத்துக் கொண்டு இருந்தவர்களிடமும் அவள் கை நீட்டினாள்.

அவள் பெயர் குட்டியம்மாள்.

நான் மீன் வேட்டைக்குப் போய் இருந்த ஓராண்டு காலமும் அவளை இந்தக் கோலத்தில் பார்த்தேன்.

அவள் வேடிக்கையான பிச்சைக்காரி!

மீனாகவே பிச்சை கேட்கிறாள்! பிச்சையா அது? கப்பம் போல!

"ஒரு மீன் குடு, சாமி!"

பிச்சைக்காரி யென்றால் இப்படி மிடுக்காகத்தான் கேட்பாளா? யாராவது ஒருத்தன் ஏதாவது சொல்லி விட்டால், "என்னா சாமி, நீ கடல்லே மீனை வளத்து விட்டிட்டா புடிக்கிறே? ஏதோ, ஊருக்கெல்லாம் சொந்தமானதை நீ தூண்டியைப் போட்டுப் புடிக்கிறே. போனாப் போவுது, எனக்கு ஒண்ணைக் குடுத்திட்டு, நீ இன்னொண்ணைப் பிடிச்சுக்கோண்றன்; பிகு பண்ணுறியே!" இப்படிப் பட்டென்று பேசுவாள்.

"பிச்சைக்காரக் குட்டிக்கு வாயைப் பார்!" இப்படி ஒருத்தன் கேட்டதற்கு, அவள் சொன்னாளே ஒரு பதில்! அதை வலுவில் மறந்துவிட முடியுமா?

"நீ என்னைவிடப் பெரிய பிச்சைக்காரன்! கடல் தாயெட்டை நீ கைநீட்டி நாள் முழுதும் தூங்கி வடிஞ்சு பிச்சை கேக்கிறே. அவ குடுக்க மறுத்தாலும், விடாப் பிடியாத் தவமிருந்து சாகிறே. போய்யா நீ!"

அப்பாடா! இப்படிப் பேச அவள் கற்றுக் கொண்டாளே!

அவள் வளர்ந்திருந்தாள்.

அவளைச் சுத்தஞ் செய்து, தாவணி அணிவித்துவிட்டால், அவள் முழுப் பெண்ணுகவே காட்சி தருவாள்.

அளவுக்குப் பெரிதான சட்டையையும், சிறு கொய்யகச் சேலையையும் உடுத்திக் கொண்டு, அழுக்கோடு, நாகரிகமற்றிருந்தாள்.

அவளுக்கு வெட்கமோ, பெண்மைக்குரிய நாகரிகமோ இருந்ததாக எனக்கு ஞாபகமில்லை.

விருப்புடன் வருவாள் ; போவாள்.

எல்லோரையும் தொட்டுப் பேசுவாள் ; குங்கி பண்ணுவாள்.

எல்லோரும் அவளைச் சின்னப் பெண்ணென்றுதான் நினைத்தார்கள்.

நான் எப்போதும் அவள் வரவுக்காகக் காத்திருப்பேன்.

எனக்கு ஏன் அந்த ஆசை? ' ஆசை மட்டுமல்ல, ஏக்கமும்கூட '— என்று தான் சொல்வோமே. இதில் என்ன வெட்கம் !

" குட்டியம்மா ! "

" என்ன சாமி ? "

" நீ இப்படி அலைஞ்சு திரியிறியே, உனக்கு இது நல்லாயிருக்கா ? "

" ஏஞ்சாமி அப்படிக் கேட்டுட்டீங்க ! "

" ஆம்பிளைகள் இருக்கிற இடத்துக்கு இருட்டோடு நீ வந்துபோகலாமா ? "

" வந்துபோனு என்னுசாமி ? "

" குட்டியம்மா, விளங்காத மாதிரி நீ வளைஞ்சு வளைஞ்சு கேக்கிறியே ; இப்படி வந்துபோக உனக்கு வெக்கம் வாறதில்லை ? "

அவள் சின்னப்பெண் !

என் வயசுக்கு அவள் மகள்போல்.

நான் இதை வெறுமனே தான் கேட்டேனா? அல்லது, அவள் மனதை அவளே தொட்டுப் பார்க்கக்கூடிய விதத்தில் ஒரு ஞானத்தைத்தான் ஊட்ட முற்பட்டேனா?

"குட்டியம்மா, நீ இப்படி இரவெல்லாம் அலைஞ்சு திரிஞ்சிட்டுப்போனா உன்னை யாரும் திட்டமாட்டாங்களா?"

"எனக்கு யாரு சாமி இருக்கா? நான் நெனைச்சபடி நடந்திட்டுப் போவேன். என்னை யாரு அதிகாரம் பண்ணப் போறு?"

அவள் என்னிடமும் பட்டென்று பேசினுள் ஒருநாள்.

"நெனைச்சபடி நடந்திட்டுப் போவேன்!" என்ன துணிச்சலான வார்த்தை! ஒரு பெண்ணுக்கு இருக்கக் கூடாத நினைப்பு!

அவளைக் குழந்தை என்று சொல்லலாம்?

"குட்டியம்மா, நீ யாரோடை தங்கி இருக்கிருய்?"

"எனக்கு அத்தை மவன் ஒருத்தன் இருக்காஞ்சாமி; கடலை வண்டி இழுத்துக்கிட்டு, ஊரெல்லாம் சுத்திட்டுத் திரியிருன்! அவனும் என்னைப்போல அநாதையாஞ்சாமி. முந்தாநாள் பெருமாகோயில் வீதியிலே அவன் என்னைப் பாத்தாஞ்சாமி. எனக்கு அவன்தான் அத்தை மவனெண்ணு அவன்தாஞ் சொன்னுஞ்சாமி!"

"நீ அதை நம்பினியா குட்டியம்மா?"

"ஏஞ்சாமி, நம்பறத்துக்கென்ன? என்னைக் கூட்டியிட்டுப் போனுன்; எனக்குச் சாப்பாடெல்லாம் வாங்கிக் குடுத்தாஞ்சாமி. அடுத்தாப்போலே எங்கையோ ஒரு ஊர்லை அவனுக்கு சம்சாரமும் நாலு குழந்தைங்களும் இருக்காஞ் சாமி. பாவம், வயது போன நேரத்திலே அதுகளுக்காக அவன் மாடா உழைச்சுச் சாகிருஞ்சாமி!"

குட்டியம்மாள் மனங்கசிந்து பேசினுள்.

"இந்தப் புதுச்சட்டை அவன் வாங்கிக் குடுத்தது தாஞ்சாமி!"

இப்போதுதான் அவள் அணிந்திருந்த புதுச்சட்டையின் வாசனை என் மூக்கைப் பிடுங்கியது. அதில் கவர்ச்சியான வர்ணங்கள் தீட்டப்பட்டிருந்தன. அவளுக்கு அத்தை மகனாக வந்தாலும் ஒரு நான்கு பிள்ளைக்காரன்! பாவம், குட்டியம்மா மோசம் போனாளா?

"சாமி சாமி, நேரமாச்சு சாமி; நான் மீனை வித்திட்டுப் போகணுஞ்சாமி, அந்த முனியப்பசாமி கோயிலுக்கு முன்னாடி இருக்கிற டாக்கீசுக்கு என்னைக் கூட்டியிட்டு போவ அவன் காத்திருப்பாஞ்சாமி. நான் போயிடுறஞ் சாமி; நாளைக்கு வந்து பேசிறஞ்சாமி!"

குட்டியம்மாள் போய்விட்டாள்.

அவசர அவசியமாக — காற்றோடு கரைந்துவிட்டது போலப் போய்விட்டாள்.

அன்று பௌர்ணமி நிலவு, அந்த நிலவொளியில் வெகு தூரம்வரை அவள் ஓடிச்செல்வது தெரிந்தது.

பௌர்ணமிக்கு மறுநாளும், அதற்குப் பின்பும் அவளைத் தேடினேன். நாளை வருவதாகச் சொல்லிப் போனவள் வரவேயில்லை.

அவளுக்காக நான் ஏங்கினேன்.

எங்கோ எப்படியோ அவள் போய்விட்டாள்.

அவள் சினிமாப் பார்க்கப் போயிருந்தாளே, அத்தோடு அவள் குழந்தைத்தனமும் போய்விட்டதா?

குட்டியம்மா, நீ 'நினைச்சபடி நடந்துக்குவேன்' என்றாயே! பொல்லாத இந்தத் தொடர் என் செவிகளுக்கு இன்னும் கேட்கின்றது. என் புலன்களெல்லாம் உன் அத்தை மகனாக வந்தவனை நோக்கி ஒருமித்து நிற்கின்றன. குட்டியம்மா, பருவப் பூரிப்புக்குப் பக்குவப்பட்டு நின்ற உன் உடல் வனப்பை அத்தை மகனான அந்தக் கிழப்பயல்

நிச்சயமாக விழுங்கிவிட்டான். அவனுடன் டாக்கீசுக்குப் போவதாகச் சொல்லிச் சென்ருயே. அவன் உன்னை முதலாங் 'கிளா'சுக்கு அழைத்துப் போயிருப்பான். அங்கே ... அல்லது அதற்குப்பின் ... ? கிழப்பயல்! ... நாலு பிள்ளைக்காரன்! ...

போயும் போயும், உனக்குப் பதின்மூன்று வயதிருக் காதே!

* * *

அடிவானச் சுரிக்குள் சூரியனின் சிறகுகள் தோய்ந்து, சுருங்கி, அதனை மிகக்கீழாக இழுத்துச் செல்கிறது.

கடலின் பெருமூச்சு இப்போது பலமாகக் கேட்கிறது. இது உலக முகடுவரை கேட்டுவிடப் போகிறது. காற்று இதனை இப்படித் தட்டிவிட்டிருக்கிறது.

மேல் வானத்தின் அசட்டுத்தனமான கருங்கல ஒளிக்குப் பின்னுல் இரவு விரைந்து வந்துவிட்டது.

அடிவானத்திலே ஒளிப்பிழம்பாக நெளிந்தோடுபவை மின்னல் கொடிகள்.

கடலின் அந்தத்திலோ அல்லது நடுப்பகுதியிலோ மழை பெய்து கொண்டிருக்க வேண்டும்.

வெள்ளம் நுகைத்துவரும் வேளை தூண்டில் உயிர்த் துடிப்பிழந்து கிடக்கிறது.

தூண்டிலின் இருல் பருக்கையை அரிப்பான் பூச்சி மீன் கள் சிதம்ப வைத்துத் தின்று தீர்த்துவிட்டனவா? இப் போது மட்டும் உயிராக ஒரு இருல் புச்சி கிடைத்தால், ஈயக்கட்டியைக் கழற்றி விட்டுவிட்டு நீரோடு தூண்டியை மிதக்கவிட்டால், நிச்சயமாக கொடுவா மீன் கிடைக்கும். என்ன விலை கொடுத்தாவது ஒரு இருல் பூச்சி உயிருடன் வாங்கிவிட வேண்டுமே! எந்தப் பயல் தரப் போகிருன்? வெளியே வேண்டுமானுல் ஒரு கூடை இருல் தரவும்

தயாராக இருப்பவன், தூண்டி போடும்போது ஒரு பூச்சி கூடக் கடன் தரமாட்டானே! ம்... சரி... ஒரு தடவை போய்த்தான் பார்ப்போமே!

ஐயோ, கற்கூர்க்கள் கால்களைக் குத்துகின்றன! அந்த மதவுக் கண்வரை நடக்கவேண்டுமே!

என்னால் வலுவில் நடக்க முடிகிறதா? நிலையாகக் குந்தியிருந்து, கால்கள் விறைத்துப் போய்விட்டனவே!

சற்று வேளைக்குமுன் கண்ணுக்குத் தெரிந்த உருவங்கள் இப்போது மறைந்து போய்விட்டன. நாலு சுவடுகள் தாண்டினால் கால் பரப்பும் போய்விடும்!

வெகுதூரம் வந்துவிட்டேன்.

" அண்ணை ஒரு உயிர் இருல் பூச்சி தருவியா?"

"..............."

"அட, இவன் பேசக்கூட மாட்டானுமே!"

"அண்ணை, ஒரு இருல் பூச்சி தருவியா?"

"இருல் பூச்சி இல்லேத் தம்பி. கணவாய்க் கூந்தலை போட்டிட்டிருக்கன்."

கிழட்டுக் குரல். தூண்டில் முகத்தில் கடன் கொடுக்கக் கூடாதென்ற சம்பிரதாயத்தை நிட்சயமாக நம்புபவனாகத் தான் இருப்பான்! அடுத்தவனைப் பார்ப்போம்...

"அண்ணை, ஒரு இருல் பூச்சி தருவியா?"

"எங்கிடை இல்லை, சாமி!"

இது யார் குரல்? பெண்ணொருத்தி பேசுகிறாளே!

பழகிய குரல்!

குட்டியம்மாளின் குரல்போல!

"யாரது?"

"அது நாந்தாஞ்சாமி!"

"யாரு, குட்டியம்மாளா?"

"ஆமா, சாமி!"

குழந்தையின் கீச்சுக்குரலொன்றும் தொடர்ந்தாப்போல் கேட்கிறது.

குட்டியம்மாள் என்னை அடையாளம் கண்டு கொண்டாள். அவள் முதுகுப்புறச் சேலை ஏணைக்குள் குழந்தை ஒன்று முடங்கிக் கிடக்கிறது!

" குட்டியம்மா, நீயும் தூண்டிலா போடுகிருய்?"

" ஏஞ்சாமி, நான் போடக் கூடாதா?"

" ........................"

" ஏஞ்சாமி, மலைச்சு நிக்கிறீங்க?"

" குட்டியம்மா, இது யாரு குழந்தை?"

" ஏஞ்சாமி, எங் குழந்தைதாஞ் சாமி!"

இதைச் சொல்லும்போது நெஞ்சுக்குள் இன்பங் கசிகிறதா அவளுக்கு? ஆமாம், கசியவே கசிகிறது! வாய் நிறைந்துபோக அவள் தன் குழந்தை என்கிருள்!

" குட்டியம்மா?"

" என்னங்க சாமி?"

" உன் அத்தை மகன் என்னுனுன்?"

" அவன் போயிட்டாஞ்சாமி! என்னை வாயும் வயிறுமா விட்டிட்டு எங்கையோ ஓடிட்டாஞ்சாமி! கிழட்டுப்பய, சோமாறிப் பய, ஓடிட்டாஞ்சாமி! பாவம், வயசான நேரத்திலே எங்கை போய் தொலைஞ்சானே?"

" ... ... ... ... ... ..."

" சாமி, கொஞ்சம் பொறுங்க, சாமி. கொடுவா மீன் பட்டிருக்கு சாமி!"

மிகவும் நுணுக்கமாக தங்கூசி நூலை விட்டுக் கொடுத்து, அநாயாசமாகப் பெரிய கொடுவா மீனென்றை தூக்கி வெளியே போட்டுவிட்டாளே!

அது கொடுவா மீன்தான்!

குட்டியம்மாள் மீன்பிடித் துறையில் மிகவும் அனுபவசாலியாகிவிட்டாள்.

இருல் பூச்சியை கௌவி இழுப்பது கொடுவாதான் என்று சரியான கணக்குப் போடுமளவிற்கு அவள் அனுபவம் முதிர்ந்திருக்கிறது.

கடல்ப் பரப்பெல்லாம் மழை சழசழக்கிறது.

ஏனைய தூண்டிக்காரர்களின் ஆரவாரமும் பரபரப்பும் கேட்கிறது. அள்ளிப் பிடித்துக்கொண்டு எல்லோரும் ஒதுக்கிடம் நோக்கி ஓடுகின்றனர். குட்டியம்மாள் மட்டும் அடுத்த கொடுவா மீனுக்காகத் தூண்டியை அமைதியாக வீசுகிருளே!

மழையின் சழசழப்பையும் மிஞ்சிக்கொண்டு குழந்தையின் முனகல் கேட்கிறது.

"எண்டா நல்லக்கண்ணு, சத்து பொறுத்துக்கடா!"

புறங்கையால் குழந்தையைத் தட்டிக் கொடுக்கிருள் குட்டியம்மாள். ஆனாலும், குழந்தை முனகிக்கொண்டே இருக்கிறது.

"கண்ணு, டேய் குட்டிக்கண்ணு, சத்துப் பொறுத்துக் கடா, ராஜா! கண்ணு, சத்துப் பொறுத்துக்கடா! ..."

குட்டியம்மாள் அவனை ஆசுவாசப் படுத்துகிருள். அவள் நெஞ்சத்தின் கனிவு என் நெஞ்சுவரை கேட்கிறது.

அவள் கயிற்றை நிதானப்படுத்திக் கொள்கிருள்.

"சாமி, இன்னொரு கொடுவா பட்டிருக்கு சாமி. உங்க கயிற்றையும் வீசுங்கசாமி, மழைத் தூத்தலுக்குக் கொடுவா தான் படுஞ்சாமி."

என்னை நான் நிலைப்படுத்துவதற்குள் அவள் இன்னேர் மீனைப் பிடித்துவிட்டாள்!

காற்று இழகிப்போக, மழைத்தூற்றல் மடிந்து வருகிறது.

"இந்தா சாமி, இருல் பூச்சி உசிரோடை இருக்கு; குறி வீசு சாமி!"

எனக்குக் கட்டளை போட்டுவிட்டு, அவள் தொழிலில் இலயித்துப் போகிருள்.

பௌர்ணமிக் கட்டி மேல் நோக்கி நகர்ந்து வருகிறது. கடலின் பட்டுப்போன்ற மார்புகளில் அதன் ஒளி மின்னி நெளியாட்டம் ஆடுகிறது.

கடலின் துடிப்புக்கள் யாவும் சாவை நோக்கி ஒடுங்கி வருவது போன்ற நிலை.

" என்னு சாமி, மீன் பூச்சி ஏதாச்சும் அருட்டுதா சாமி? பேசாம, அப்படியே கல்லாட்டமா இருக்கிறியே சாமி?"

அவள் என்னைப் பேசவைக்க நினைக்கிருள்.

" குட்டியம்மா. இப்படி யெல்லாம் சீவிக்கிறத்துக்கு உன்னுலே முடியுதா?"

" என்னு சாமி, என்னை செத்துப்போகச் சொல்லுறியா? படு ஆள் தானையா நீ!"

நான் பேசி வாய் மூடுமுன் கணீரென்று அவள் பேசி விட்டாளே!

கடலின் முடிவில் எழுந்த மின்னல் கொடி என் கண் களைக் குற்றிவிடத் துளாவிப்பாய்கிறது.

கண்களால் கண்டும் ஒப்புக் கொள்ள மறுக்கும் என் நெஞ்சத்தைக் குத்திக் கிழித்துவிடவா, அது மறுபடியும் துள்ளி எழுகிறது?

" பொல்லாத மின்னல் சாமி! கண்ணை மூடிக்கோ சாமி! இல்லாட்டி கண் போயிடுஞ்சாமி!"

குட்டியம்மா என்னை எச்சரிக்கிருள்.

"நந்தி" | நூலைப்போல

தயிலம்மா தனது கையை நீட்டினாள். கையின் அசைவுக்கு ஏற்ப அதே நேரத்தில் தனது முகத்திலும் ஒருவித கெஞ்சும் பாவனையைப் படரவிட்டாள். அவள் உள்ளங்கையில் ஒரு சதம் விழுந்தது. அதில் ஒரு பெண்ணின் முகம் சிரித்துக் கொண்டிருந்தது. சதத்தைத் தனது இடுப்பில் சொருகியிருந்த சேலைப் பையில் நழுவவிடுவதற்குமுன், இங்கிலாந்தின் மகாராணி இரண்டாம் எலிஸபெத்தின் முகத் தோற்றத்தைக் கண்ணுக்குக் கிட்ட வைத்துப் பார்த்து, அவள் இலேசாகச் சிரித்தாள்.

'ஹூம், காசிலே உன் முகமிருக்கு — என் முகத்திலே காசிருக்கு ...'

அவள் மடியிலே ?

அழகில் தாயையும் வெல்லும் ஒரு பச்சைக் குழந்தை அவளின் இடது மார்பக இடுக்கிலே முகத்தைப் புதைத்து நிம்மதியாக உறங்கியது. விரியும் மொட்டின் மயக்க நிலைச் சிரிப்பைப் போல் குழந்தையின் முகத்திலும் ஏதோ கனவின் புன்னகை அவ்வப்போது அரைகுறையாக விரிந்தது. எதிர்காலத்தில் அந்தப் பரம்பரை அழகு ப-ண-மா ? அல்ல, அல்ல !

'கண்டிப்பாக எம் புள்ளை கை நீட்டிப் பிச்சை எடுக்க மாட்டாள். ஒரு நாளும் பிச்சையெடுக்க மாட்டாள். என் அம்மா முதலிலே கை நீட்டிப் பிச்சை மாத்திரம் எடுத்தாளாம். அதன் பின்பு ... நான் !'

அவள் கண்ணோரங்களில் கண்ணீர் திரண்டது.

'எனக்கும் முதலிலே பிச்சை யெடுக்கக் கை வர இல்லேடி ... கை வர இல்லே. பின்பு உடலெல்லாம் பிச்சை யெடுத்து... நீ !'

அவள் கொடுத்த நனைந்த முத்தம் குழந்தையைத் திடுக்கிட்டு விழிக்கச் செய்தது. எழுந்து அவள் மடியில் இருந்தது. அதற்கு இன்னும் சரியாக ஒரு வருடம் ஆக வில்லை. 'டாடா' என்று சொன்னால் வெறுமனே கையை ஆட்டும் வயது — ஆமாம், பெரிய இடத்துப் பிள்ளையாக இருந்தால்.

* * *

தயிலம்மாவுக்குத் தன் அழகிலே அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது.

'மூதேவி வஸ்கோப்புக்காரி போல முகத்தை வைச்சுக் கொண்டு என் பின்னாலேயே திரியுது. முழுசா பத்து வய சாச்சு. ஏண்டி, உன்னைச் சுமந்த ஒவ்வொரு மாசத்துக்கும் ஒவ்வொரு முழு ஆண்டுகளாக என்னை விழுங்கினது போதாதா? உனக்கு என்னடி வெக்கம்?'

'உனக்கு' என்பதில் ஒலியின் ஏளன அழுத்தம் இருந்தது.

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு, அவளைப் பெற்ற தாய் கொடுத்த அழகுச் சாட்சிப் பத்திரம் இது.

இப்படி நாளுக்குப் பத்துத் தடவையாவது அழகுப் பத்திரம் வாங்கியபின், ஒரு நாள் தயிலம்மா தன் தாயினால் விடை கலைக்கப்பட்டாள்.

அவள் தந்தை?

அது மனிதச் சேவல்களில் ஒன்று. இருபத்தைந்து வருடங்களுக்கு முன் அது கொழும்பு கொட்டாஞ் சேனைப் பகுதிகளில் சிறகடித்துப் பறந்து திரிந்து ......

அது எப்பவோ நடந்துபோன, ஓர் ஆள் மறந்த நிகழ்ச்சி.

சிறுமி தயிலம்மா ஒரு பழைய துருப்பிடித்த பேணியைக் கையில் எடுத்தாள். தொப்பூழ் மட்டத்தில் சுருக்கிக் கட்டப்பட்ட ஓர் அழுக்கடைந்த பாவாடை முழங்கால்களுக்குச் சற்றுக் கீழே தனது மறைக்கும் வேலையை முடித்து விடுகிறது. பாவாடையின் மட்டத்துக்கு மேலே வெறும் நெஞ்சு. ஆமாம், சட்டை மட்டை ஒன்றும் இல்லை. பத்து வயதுதானே? பால்குடி மறந்தபின், அது திரும்பவும் ஞாபகத்திற்கு இன்னும் வராத ஓர் இடைவெளி வயது.

மசங்காமரச் சந்தியிலே ஒரு மரத்தின் கீழே தாய் விட்டுப் போன இடத்திலேயே நின்றாள். கால்கள் வலித்த நேரங்களில் சட்டையை ஒதுக்கிக் குந்தி இருந்தாள். அக்கம் பக்கமெல்லாம் பிச்சைக்காரர்.

'அம்மா, தாயி ... ஐயா ... ஐய்ய்யா ஆ !'

அவள் !

வாய் திறக்காமல் கீழே பார்த்தபடி இருந்தாள். சல்லியும் விழவில்லை.

அவளுக்குப் பசி குடலைத் துளாவியது. இயற்கையின் வெளிச்சம் மங்க, செயற்கை வெளிச்சம் போடப்பட்டது.

"அடி மூதேவி ! உனக்கு ஒண்ணுமே யாரும் போடலையா ? பணக்காரப் பிள்ளைபோல திமிர் பிடிச்சு இருந்தா, யாரும் இரங்குவாங்களா ? ஏண்டி, வாய்திறந்து கேட்கக் கூடாதா ? ராசாத்திமவளே, வா சனியனே ; திமிரைப் பாரு திமிரே !"

வழக்கமான தேநீர்க் கடைக்குக் கூட்டிப் போய்க் கோதம்ப ரொட்டியும், பருப்பும், பால் போட்ட தேநீரும் வாங்கிக் கொடுத்தாள் தயிலம்மாவின் தாய். இரவு பூட்டப்பட்ட, மிளகாய் அரைக்கும் ஒரு மில்லின் தாழ்வாரத்தில் படுத்துத் தூங்கினார்கள். தயிலம்மாவின் தாய்க்குத் தூக்கத்தோடு கனவு. தூக்கத்துக்கு இடையில் நனவு. எல்லாம் தன் மகளைப்பற்றி.

'சே! அது என் தவறு. நான் பத்துப் பேருக்குப் பல்லைக் காட்டிச் சம்பாரிச்சேன். அவளை இலேசாக வாழ வைச்சேன். அவளுக்கு வாழத் தெரியவில்லை. அப்பவே என்னுடன் பிச்சை எடுக்கச் செய்திருக்கணும். ஏன்? எத்தனை நாள் சொல்லி இருப்பேன்; செய்தாளா? ரோசக் காரப் பொண்ணு! யாரோ ரோசக்காரப் பணக்காரனுக்குப் பொறந்திருக்கிரு ...'

கவலை மிகுதியில் கிண்டலைத் தன் மேலேயே நகைக்க விட்டுச் சிரித்தாள்.

இரவெல்லாம் யோசித்தாள் தாய்.

காலையில் ...

தயிலம்மாள் விழித்தபோது தாயைக் காணவில்லை. அன்றும் மரத்தின் கீழே குந்தியிருந்தாள் தயிலம்மா. அவ்வப்போது பேணியை நீட்டினுள். மாட்டினி ஷோ முடிந்து பட ரசிகர்கள் போய்க்கொண்டிருந்தார்கள். அந்தியாகியும் அவள் பேணியில் இரண்டு சதங்கள்தாம் இருந்தன. பேணியைக் குலுக்கி, அவற்றைக் கதைக்க விட்டாள். அதற்குள் ஒவ்வொரு சதங்களாக விழுந்தது. ரொட்டி, பருப்பு, பிளேயின் டீ, இவற்றிற்குப் பணம் சேர்ந்தது.

அன்றிரவு அவள் அம்மாவை வழக்கமாக அவர்கள் படுக்கும் மில்லின் தாழ்வாரத்தில் சந்தித்தாள். அவள் கேட்டாள்:

"தயிலம்மா சாப்பிட்டாயா?"

"ம்."

"பொய் சொல்லுறே. சொல்லு, ஏதாவது வாங்கித் தாறேன். நீ என் வவுத்திலே புறந்தாய். பிச்சை எடுப்பது எங்கள் பரம்பரைத் தொழில். அதிலே என்னடி வெட்கம்?"

தயிலம்மாவின் தாய் தொடர்ந்து கேட்டாள் :

"இத்தனை நாளும் உனக்கு வவுத்துக்குப் போட்டது போல் இனியும் என்னுல் முடியுமா? உன் வவுத்தைக் கழுவவாவது உழைச்சுக்கொள். இனி நான் மத்தவங்களைப் போல புளைக்க வேண்டாமா?"

அந்த நேரத்தில் ஒரு டக்சி வந்து நிற்க, தயிலம்மாவின் தாய் அதில் ஏறிப் போய்விட்டாள். அதன்பின் அவள் அந்த இடத்தில் படுப்பதற்கும் வருவதில்லை.

தயிலம்மாவும் கைதேர்ந்த பிச்சைக்காரியாக மாறினுள். பேணியில் குலுங்கும் சதங்களின் பின்னணி ஒலிக்கேற்ப ... 'ஐய்யா, தர்மவான்களே! ... ஐய்யா, ராஜாக்களே!' என்று அவ்விடத்தால் வருபவர் போபவர் அனைவரையும் பெரிய மனுசராக்கினுள்.

வருடங்கள் வளர்ந்து பக்குவமடைந்தன. தயிலம்மா அசல் பிச்சைக்காரியாக அந்தப் பகுதியில் உலாவினுள். பகிரங்கப் பெண் மல சலக் கூடங்களைச் சேர்ந்த குளிக்கும் இடங்களைத் தனது அலங்கார அறைகளாக்கிக் கொண்டாள். தியேட்டர்களின் கியூவரிசைகளில் அவள் அழகுக்கு நிறையச் சன்மானம் கிடைத்தது.

ஆமாம், அவள் முகத்தில் காசு இருந்தது.

ஐந்து, பத்து, இருபத்தைந்து சதக் குற்றிகளாகச் சம்பாதித்தாள்.

அதில் என்ன வெட்கம்?

ஒரு நாள் ஒரே ஒரு நோட்டாகக் கிடைத்தது.

பத்து ரூபா!

அதன் பின்பு அவள் வெறும் பிச்சைக்காரியல்ல. அவள் மூலம் ஹோட்டல்காரரும், டக்சிக்காரரும் வாழ்ந்தார்கள். அவளுக்குத்தான் எவ்வளவு செலவு — சேலை, மார்புக்கச்சை, பவுடர், அத்தர், குதிச் சப்பாத்து என்று தேவைப் பட்டியல் நீண்டு கொண்டே வந்தது. கையிலும்,

முதுகிலும், மார்பிலும் கிரந்திபோல் போட்ட சொறியைக் குணப்படுத்த மருந்து, மாந்திரீகம் என்று எவ்வளவோ செலவு செய்தாள். ஆனால், இவற்றினால் ஒருவிதப் பயனும் இல்லாமல் போகவே, கைப்புண்களை, அவற்றைச் சுற்றிப் பச்சை குத்துவிச்சு மறைத்துக் கொண்டாள்.

அவளுக்கு 'வயிறு கழுவவும்' பணம் பல தடவை தேவைப்பட்டது. முழுசாக நூறு ரூபாய் ஒவ்வொரு முறையும் அள்ளிக் கொடுத்தாள். ஆனால், இந்த முறை அவளால் தனது வயிற்றையும், அதனால் பிறருடைய வாயையும் கட்ட முடியவில்லை. வாய் உள்ளவர்கள் எல்லோரும் அவள் வயிற்றைச் சுட்டிக்காட்டிக் கதைத்தார்கள்.

அவள் மருதானை பிரசவ விடுதிக்குப் போய் தன்னைக் காண்பித்தாள். அங்கே அவளுடைய கை நாளத்திலிருந்து சிறிது இரத்தமும் எடுத்துச் சோதித்தார்கள்.

சில நாட்களில் கொழும்பு ஆஸ்பத்திரியின் தோல் நோய்ப் பகுதியிலிருந்து ஒரு பெண்மணி அவளைத் தேடி வந்து, ஏதோ மிக இரகசியமாகக் கூறிவிட்டுச் சென்றாள்.

தயிலம்மா அவள் வேண்டியபடியே ஒழுங்காக ஆஸ்பத்திரிக்குச் சென்று பென்சிலின் ஊசிகளைப் போடுவித்தாள். கையிலிருந்த புண்களும், இரகசியமாக இருந்த புண்களும் மாறி மறைந்தன. அப்பாடா, அவளுக்கு எவ்வளவு நிம்மதியாக இருந்தது. ஆஸ்பத்திரி உபதேசங்கள் அவள் மனத்தை மாற்றின.

அவள் பழையபடி வெறும் பிச்சைக்காரியாக மாறினாள். பிச்சைக்கார வயிறானாலும், நோய் மறைந்த உடலான படியால், அவளுக்குப் பிறந்த குழந்தை சுகமாகவும், அழகாகவும் இருந்தது. ஆஸ்பத்திரியின் வார்டுசிஸ்டர் தாங்கள் நடத்தும் அநாதைக் குழந்தைகள் விடுதியில் பிள்ளையை விடும்படி வற்புறுத்தினாள்.

"இல்லை சிஸ்டர், நான் பிச்சையெடுத்து என் குழந்தையைக் கௌரவமாக வளர்க்கிறேன்" என்றாள் தயிலம்மா.

சிஸ்டர் சொன்னாள்.

"தயிலம்மா, அனுபவத்தினால் உனக்கு மனத் தைரியம் வந்திருக்கிறது. ஆனால் உனது மகள் எப்படி இருப்பாளோ ? அவள் வயது வந்ததும் பிச்சையெடுப்பாள்.... பின்பு... "

சிஸ்டரின் நா தழுதழுத்தது.

" இல்லை அம்மா " என்று தடுத்தாள் தயிலம்மா. " என் மகள் ஒருநாளும் கை நீட்டிப் பிச்சை எடுக்க மாட்டாள். அவளுக்காக நான்தான் பிச்சை எடுப்பேன். "

ஆஸ்பத்திரியின் படிகளால் இறங்கி வரும்போது, தயிலம்மா தனது சின்ன மகளின் நெஞ்சைக் கொஞ்சினாள்:

'உன்னை யாருக்குமே கொடுக்க மாட்டேன்டி.'

அவள் மடியிலிருந்த குழந்தை, தாயின் முகத்தைப் பார்த்துத் தனது நான்கு பற்களையும் காட்டிச் சிரித்தது. அதன் கன்னங்களிலே குமிழ் சுழியோடியது. அதைப் பார்த்ததும் தயிலம்மாவுக்குப் புளிச்ச நினைவு நுரை தள்ளியது.

இருபது மாதங்களுக்கு முன், கன்னங்களில் குமிழ் விழும் அழகுடன் ஓர் இளைஞன் வந்து, அவள் முன்னால் களிசானுடன் குந்தி இருந்தான்.

'என்ன ?' என்று கேட்டாள் தயிலம்மா.

'சாஸ்திரம் சொல்லுவியா ?'

அவளுக்குப் பக்கத்திலும் சுற்றியும் பல குறத்திப் பெண்கள் வெற்றிலையைக் குதப்பும் தங்கள் வாய்களால் 'சாஸ்திரம், சாஸ்திரம்' என்று கூவித் தெருவால் போனவர்களின் கவனத்தை ஈர்க்க முயற்சி செய்தனர்

சாஸ்திரத்தை மனப்பாடம்போல் தங்களுக்கே உரித்தான உச்சரிப்போடு ஒப்புவித்த சிலரின் கரகரத்த குரல்கள், தெருப்புழுதியோடும், மில்களிலிருந்து வந்த மிளகாய், பல சரக்குகளோடும் இரண்டறக் கலந்து காற்றில் மிதந்தன. அவர்களின் முன், இராம கதையின் பல படலங்களைக் காட்டும் தனித் தனிப் படங்கள் விரிக்கப்பட்டிருந்தன. சாஸ்திரம் சொல்லுவது பலர் கேட்கப் பகிரங்கமாக நடந்து கொண்டிருந்தது.

தயிலம்மா சொன்னாள்:

'நான் பிச்சைக்காரி, சாஸ்திரம் தெரியாது.'

'தெரியாமல் இருக்காது. தெரிந்ததைச் சொல்லு.'

அவனுடைய உள்ளங்கை மிருதுவாகவும் வியர்த்தும் இருந்தது. நடுவிரலின் சுட்டுவிரல் பக்கத்தில் மட்டும் பேனு அழுத்திய வடு தடித்து இருந்தது.

அவள், அவன் முகத்தைப் பார்த்துச் சிரித்தாள்:

'பணக்காரப் புள்ளை இங்கே வந்திருக்கிறுரு.' தாவணியைச் சரிப்படுத்தினாள்.

'ஏன் வெட்கமோ —?'

சிரிப்பு! தொடர்ந்து வேறு விதமாகச் சிரிப்பு. சுட்டு விரலை நீட்டி, 'அந்த ஹோட்டலுக்குப் போ' என்றாள் அவள்.

குழந்தை - 'ம்மா' என்று அழைத்தது. அவள் மார்புச் சட்டையை விலக்கிப் பால் அமுதூட்டினாள். குழந்தையின் கீச்சிட்ட அந்தக் குரல் மீண்டும் அவள் சிந்தனையைச் சுரக்க வைத்தது. அன்று, கணக்கிடப் போனால், மடியிலிருக்கும் குழந்தையின் வயதைக் கருவிலிருந்தே நிர்ணயிக்கக் கூடிய ஒரு நாளில், கீச்சிட்ட ஒலி எழுப்பிய குரல்வளை அமைப்புள்ள ஒருவன்......

மற்றும் குழந்தையின் சுருண்ட மயிரைப்போல் மோதிர வடிவ மயிருள்ள ஒரு வியாபாரி......

இன்னும் ......

' இதில் எவன் ? ' — பிரம்மா செய்யவேண்டிய ஆராய்ச்சியை அவள் செய்து கொண்டிருந்தாள். அவள் கண்ணீர் குழந்தையின் கண்களில் விழுந்ததோ ?

குழந்தை வாயை முலையிலிருந்து எடுத்துக் கண்களை வெட்டி வெட்டி விழித்து, மறுபடியும் மடியில் எழுந்து இருந்தது.

தயிலம்மா தான் செய்த எல்லாவற்றையும் நினைத்துத் துக்கப்பட்டாள். தன் மீதும் குற்றம், தன் தாய்மேலும் குற்றம் என்பதை அவளால் மறுக்க முடியவில்லை. கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

சிறிது தூரத்தில் புஷ்கோட் அணிந்த ஒரு நடுத்தர வயதுப் பேர்வழி அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை அவதானித்தாள்; அவள் முகத்தை எதிர்ப்பக்கம் திருப்பி எங்கேயோ கண்களைச் செலுத்தினுள். எதிர்பார்த்த படியே சில நிமிடங்களில் அவளுக்கருகில் செருமல் சத்தம், கதவைத் தட்டும் இடைவெளி விட்டு விட்டுக் கேட்டது. அவள் வானத்தைப் பார்த்துக் கொண்டே, சூனியத்தில் கண்களை நிறுத்திக் கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் பிணைக்கும் இந்த நிகழ்காலத்தின் ஆராய்ச்சியில் ஈடுபட்டாள். அவள் தீர்மானித்துவிட்டாள்.

அவள் அவனிடம் பிச்சைகூட வாங்கப் போவதில்லை.

அவனிடம் பிச்சை, முற்பணம் வாங்குவதுபோல. தூ !

ஆனுல் குழந்தை ?

குழந்தை அவனைப் பார்த்தது. பின்பு, தாயைப் பார்த்தது ... தன் சிறு கையை நீட்டியது. கையை ஓர் ஐம்பது சத நாணயம் நிரப்பியது. குழந்தை சிரித்தது. பிறகு, அவன் சிரித்தான்.

தயிலம்மாவின் உடலில் பூகம்பம் ஏற்பட்டதோ ? அவள் உடலெல்லாம் நடுங்கியது. எதிர்காலத்தின் கோர

ரூபத்தைக் கண்டவள் போல, காலநேர உணர்வு தடுமாறிய ஒரு நிலையில், அந்த ஐம்பது சதக் குற்றியை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆஸ்பத்திரி சிஸ்டரின் பால் போன்ற முகமும், அநாதைப் பிள்ளைகள் விடுதியைப் போன்ற ஒரு கட்டிடமும், அங்கே நூற்றுக் கணக்கான பிள்ளைகளும் — அவளுக்குத் தெரிந்தன.

அடுத்த நாள்......

அவள் மடியிலே பிள்ளை இல்லை; மனத்தில் நிறைவு இருந்தது.

செ. கதிர்காமநாதன்

# குளிர் சுவாத்தியம் ஒத்து வராது

தபால் நிலையத்திற்குப் போய், அங்குள்ள தனது கருமத்தை முடித்துக்கொண்டு, அப்படியே கடை வீதிக்குச் சென்று வரவேண்டுமென்பது, காலையில் நடேசு வாத்தியார் போட்டிருந்த திட்டம். இந்தத் திட்டத்தில் ஒரு பகுதி இப்பொழுது நிறைவேறி யிருக்கிறது. ஒரு மணித்தியால மாகக் கால் கடுக்கக் காத்திருந்து, கவுன்டர் பகுதியிலுள்ள லிகிதரின் அலட்சியத்தை யெல்லாம் சகித்திருந்து, ஒரு மாதிரிக் காசுக் கட்டளை எடுத்தாயிற்று; இனி அதை அவரது மனைவி மீனுவுக்கு அனுப்ப வேண்டும். அதை அவள் பெற்றுக் கொண்டு மலர்ந்து சிரிக்க வேண்டும். அம் மலர்ச்சியில் உள்ளம் நைந்து, 'உங்களது உடம்பை சரிவரக் கவனிக்காமல் நீங்கள் உறண்டி, இப்படி எங்களுக்கு பணம் அனுப்ப வேண்டியிருக்கிறதே' என — அவருக்கு அவள் கடிதம் எழுத வேண்டும்.

தபாற் கந்தோரில் எடுத்த காசுக்கட்டளை இலக்கத்தை கையில் இருந்த காகித உறையில் வெகு அவதானமாகக் குறித்துக் கொண்டு, காசுக்கட்டளையை மடித்து, மனைவி யின் முகவரியிடப்பட்ட தபாலுறைக்குள் திணித்து, தபா லுறையிலுள்ள பசையை நாவால் தடவி, ஈரவித்து ஒட்ட வைக்கிறார். தபால் உறை 'டங்' என்ற சிறு ஒலியுடன் தபாற் பெட்டியின் அடித்தளத்தில் மண்டுகிறது.

நடேசு வாத்தியாருக்கு மனம் நிறைந்த திருப்தி. குடையின் விசையை அமுக்கி குடையை விரிக்கிறார். தபால் நிலைய வாசல் வரை வந்ததும், சிறிது தாமதம்;

ஏதோ ஒரு சந்தேகம். காசுக்கட்டளை இலக்கத்தைக் குறித்து வைத்திருப்பேனே இல்லையோ, என்ற திடீர் தடுமாற்றம். வரவர, ஞாபகசக்தி — சில சமயங்களில் — 'பார்ச்சா' காட்டி விடுகிறது. சட்டைப் பைக்குள் கையை விட்டுப் பார்க்கிறார். காகித உறை தட்டுப்படுகிறது. சந்தேகத்தை நிவர்த்திக்க அவர் வெளியே எடுத்துப் பார்த்த அக் காகித உறையில் '0078' என்ற இலக்கம் 'இருக்கிறேன்' என அபயம் கொடுக்கிறது. அவ் இலக்கத்தின் கீழ் ஒரு கோடு; அன்றைய திகதி ......

அவரது மனைவிக்கு இந்த மாதம் அனுப்புகிற பணம் நூற்றி எண்பது ரூபாய். வழக்கத்தைக் காட்டிலும் இருபது ரூபா மேலதிகம். அடுத்த மாதம் இதைவிடக் கூடுதலாக அனுப்ப வேண்டும். அதற்காக, இப்பொழுதே யோசனை பண்ணினுற்றுன் ஏதாவது செலவைச் சுருக்கலாம். அப்படி என்ன செலவைச் சுருக்குவது? குறைக்க வேண்டிய செலவு எல்லாற்றையும் குறைத்தாயிற்று ......

கடந்த மாதம் மிச்சம் பிடிக்க விருப்பம் வந்ததில் கடைச் சாப்பாடு நின்றது. ஒரு மண்ணெண்ணெய் அடுப்பு, நாலைந்து எவர் சில்வர் பாத்திரங்கள் — அறைக்குள் வந்து குவிந்தன ... சொற்ப நிமிடங்கள் செலவழிந்ததும், அருமையான பாகம் ... தனது கைச் சமையலை ரசித்து ரசித்துச் சாப்பிடலாம்; உள்ளத்துக்கும் சுகமாக இருக்கிறது.

மேல் மிச்சமாகத் தேறிய இருபது ரூபாவை நினைத்ததும் நடேசு வாத்தியாருக்கு தத்துவ விசாரம் மனதில் சுரந்தது. மெல்லிய சிரிப்பொன்றை ஓசைப்படாமல் சிரித்தார். எத்தனை விதங்களில் சிக்கனங்கள்? எத்தனை விதங்களில் சுகங்களைக் குறைத்து, உடலை வருத்தி, தேடிக் கொண்டிருக்கின்ற தேட்டங்கள்? ஒரு சதமாக, பத்து சதமாக, பத்து ரூபாவாக, நூறு, ஆயிரம் என — பணமே சகலதும் என்ற சித்தாந்தத்தில், உறக்கமற்ற கவலைகள்; உழைப்பு முயற்சிகள்.

நடேசு வாத்தியார் ஆசிரிய சேவையில் புகுந்து பன்னிரண்டு வருடம். இன்னும் முன்னூறுக்கு மேல் நகராத சம்பளம். தமிழ்ச் சட்டம்பிமாருக்கு வேதனம் ஏன் குறைவு என்பது அவருக்குத் தெரியாதது. வெள்ளைக்காரன் நிர்ணயித்திருக்கிறுன். தமிழ் படித்து, பிச்சைச் சம்பளம் எடுக்கிறுர் ... குடியில்லாமல், படமில்லாமல், குதூகலமான கேளிக்கைகள் இல்லாமல், பணம் கொடுத்து துய்க்கக் கூடிய சகல சௌகரியங்களையும் ஒதுக்கி, பஞ்சம் கொட்டிக் கொண்டு, செட்டாக வாழ்ந்தால் தான் — பிள்ளைகளைப் படிப்பிக்கலாம்; உடை துணிகள் வாங்கலாம்; எல்லோருடைய வயிறும் துடிக்காமல் மூன்று நேரக் கஞ்சி ஊற்றலாம் ...... ஆகக் குறைந்தது, ஒரு சிறிய அழகிய வீடு கட்டலாம்.

— இந்த இலட்சணத்தில் வீட்டுக்கு அனுப்புவது போக எஞ்சியதில், வீட்டு வாடகை, சாப்பாடு, லோண்டரி; இடையிடையே யாழ்ப்பாணப் பயணம்; மற்றும், இதர செலவுகள்.

போயா முன்தினமே சமையலுக்கு ஆக வேண்டிய பொருட்களைப் பேரம் பேசி வாங்கிக் கொண்டால் சௌகரியம்; இடையில் தேவையென்ருல் பிறகு பார்த்துக் கொள்வது. அதுதான் கடைக்குப் போக வேண்டுமென்பது — காலையிலேயே திட்டம்.

கையில் கூடை; கடைவீதியை நோக்கி வாத்தியார் வந்து கொண்டிருந்தார். நேரத்துக்குப் போய் சமைக்க வேண்டும்; சமைத்து முடிந்ததும் நீர்வீழ்ச்சியில் ஆசைதீர முழுக்கு ஆட வேண்டும்; அப்புறம் ஒரு தூக்கம் தூங்கி, மாலை ஐந்து மணிக்கு எழவேண்டும்; அதற்குமப்புறம் சிறிசேனுவைக் காண வேண்டும். அவர் மூலம் ஏதாவதொரு ஏற்பாடு செய்ய வேண்டும். எல்லாம் சுமுகமாக முடிந்து விட்டால், அவருக்கு யாழ்ப்பாணத்திலுள்ள ஒரு பாடசாலைக்கு மாற்றம் கிடைத்தது போலத்தான்.

நடேசு வாத்தியார் கடைவீதிக்கு வந்து கொண்டிருந்தது, குறுகலான வளைவான பாதை. பொதுவாக மலைநாட்டில் நேரிய, விசாலமான பாதைகள் இராது. எல்லாம் நெளிந்து, தாழ்ந்து, உயர்ந்து, ஓடும் ......

பாதையில் வந்து கொண்டிருந்த அவருக்கு, எண்ணம் கரவெட்டியில் போய் நின்றது. மீனுவை நோக்கி வட்டமிட்டது. குழந்தைகளைத் தூக்கி ஆரத்தழுவியது. தற்சமயம் அவர்கள் குடியிருக்கும் ஓலைவீட்டை இடித்துவிட்டு, நவீன மோஸ்தரில் 'கொன்கிறீட்' கல்லால் ஓட்டு வீடு கட்டவேண்டுமெனத் திட்டமிட்டது ......

'இப்ப குழந்தைகள், வீட்டில் என்ன செய்து கொண்டிருக்குங்கள் ... ஓ!... ஓடுங்கள் ... பாடுங்கள்... குதியன் குத்துங்கள். தாய் — மீனுவுக்குச் சினமாக இருக்கும். பத்தாததற்குப் பக்கத்து வீட்டுக் குழந்தைகளும் வந்து விடுங்கள் ... என்ன செய்வது? பல்லைக் கடித்துச் சகித்துக் கொண்டு — தனக்கே உரிய பாஷையில் — 'பலயரங்களைப்' பெத்தேனே எனப் புறுபுறுத்துக் கொண்டிருப்பாள் ......

பத்துக்கும் பதினொரு மணிக்குமிடையில், சொல்லி வைத்தாற் போல, பாதையால் தபால்காரன் போய்க் கொண்டிருப்பான். மீனுவின் விழிகள் உடனே பரபரக்கும் ... இருப்புக்கொள்ளாது; ஓடிப்போய் படலையைத் திறப்பாள் ......

இன்றைக்குத் திகதி இருபத்தைந்து; அவரிடமிருந்து நிச்சயம் காசுக்கட்டளை வரும் என்று தெரியும். படலையைத்தாண்டி தபால்காரன் அப்பால் போவான். திகிலாக இருக்கும் ... ஏமாற்றம், அழுகை ... 'இது என்ன ஒருநாளுமில்லாத திருநாளாக இருக்கே' என எரிச்சல் தூக்கியடிக்கும். 'வீட்டில் இருக்கிற கரைச்சல்கள் அவருக்கு எங்கே தெரியப்போகிறது' என மூக்கில் சிணுக்கம் வரும் ......

'நான் நேற்றே பணம் அனுப்பி யிருக்கலாம். நேற்று அனுப்ப, திடீரென்று ஏனோ நேரமில்லாமல் போச்சு ... அவள் என்ன புலம்பிக் கொண்டு இருக்கிறாளோ ? ......'

நடேசு வாத்தியாருக்கருகில் 'கிறீச்'சென்று சத்தம். அவருக்குத் தூக்கிவாரிப் போடுகிறது. கரவெட்டி எண்ணம் காற்றில் பறக்க, உடல் பூராவும் நடுங்குகிறது. மரணபயம் நெஞ்சில் உறைத்தது. எதிரே—உனக்கு இப்போ இயமனாகி யிருப்பேனே என்பது போல ஒரு லொறி. கொஞ்சம் பிசகினாலும் கிடுகிடு பள்ளம். பள்ளத்தைப் பார்த்ததும் நடேசு வாத்தியாருக்கு ஒரே திகில் ......

'ஒரு எலும்பு கூடப் பொறுக்கியெடுக்க முடியாதே ... 250 அடி ஆழம் இருக்கலாம் ......'

அவருக்கு ஆத்திரம் வந்தது. டிரைவருக்கும் ஆத்திரம் வந்தது. இருவரும் திட்டினார்கள். கைகாட்டிப் பேசினார்கள். ஒருவர் மொழி ஒருவருக்கு புரியவில்லை. இவர் தமிழ்; அவன் சிங்களம் ......

"பாவிப்பயலே ...... சைத்தானுட்டம் தெருவழியே என்ன பராக்கு வேண்டிக் கிடக்கு? கொஞ்சம் அவதானமில்லாமல் லொறியை நான் ஓட்டி வந்தால் நானுமில்லை; நீயுமில்லை. கிடுகிடு பள்ளத்துக்கே போய்க் கிடப்போம் ...... நேரகாலத்துக்கு வீட்டுக்குப் போய்ச் சேருவோம் என்று நினைச்சு ஓட்டி வந்தால் — பேயிலாந்திக் கொண்டு இவங்கள் தரவழிகள் குறுக்கே ஓடி வாறுங்கள் ...... அட, நான் ஏழு பிள்ளைகளுக்குத் தகப்பன். என்னை விட்டா, அதுகள் நிர்க்கதியாப் போய்விடுங்கள். எல்லாமே குஞ்சும் குளுவான்களுமாக, இன்னும் தலைப்படயில்லை ...... உனக்கும் தான் எத்தனையோ ...? நீயும் நானும் மண்டையை மடார்னு போட்டுக்கிட்டால், அதுகள் ... அதுகளை நினைச்சாவது அவதானமாக வரக்கூடாதா ...?"

டிரைவர் போய்விட்டான். பயத்தில் அவனது கைகள் சிலுவை அடையாளம் போடுவதைக் கண்டு கொண்டார் நடேசு வாத்தியார். அச்சிலுவை அடையாளம் அவருக்கு ஆத்திரத்தை ஊட்டுகிறது :

'கண்மூக்குத் தெரியாமல், தலைதெறிக்க ஓட்டி வந்துவிட்டு, தப்பினேம் பிழைத்தோமென்று வீருப்புப் பேசி விட்டு ஓடுகிருன், திமிர் பிடித்த பயல்.'

* * *

ந த்தை வேகத்தில் தள்ளம்பாறி நடந்து, சுயமற்றுச் சென்றதால்தான் ஒரு விபத்து நடக்க ஏதுக்கள் தோன்றின போல — நடேசு வாத்தியாருக்கு அதிர்ச்சியும் படபடப்பும் நீங்கியதும் — ஸ்மரணை வந்தது. யோசனைகள், பராக்குகள், எதுவுமின்றி கால்களை எட்டிப்போட்டார். மலை ஏற்றத்தில் வேகமாக நடப்பது, சிறிது சிரமமாகத் தோன்றியது. உடற் கட்டை உந்திக் கொண்டு சுவாசம் இரைத்தது.

வாடிக்கையாக காய்பிஞ்சுகள் வாங்கும் அமீரின் கடை வந்ததும், அவர் நின்ருர். கடைவீதியின் நான்கு கரையும் கண்கள் சுழன்றன. அவருக்குத் தெரிந்த யாரும் கடை வீதியில் இல்லை என்று தெரிந்தது. கூடப் படிப்பிக்கின்ற ஆசிரியர்கள் எவரினதும் — நிழலைக் காணேம். 'இன்றைய ஓய்வில், படத்துக்குப் போயிருப்பார்கள்; அல்லது — எப்போ லீவு வரும்; எப்போ யாழ்ப்பாணத்துக்குப் போக லாம்; அங்கே இருந்துகொண்டு மூன்று நான்கு நாளைக்குத் தொடர்ந்தாற்போல் 'பொய்' மெடிக்கல் சேர்டிபிக்கேற் — சுகமில்லையென அனுப்பி, லீவை விஸ்தரிக்கலாம் என்ற திவ்விய யோசனையோடு ஊருக்குப் போயிருப்பார்கள். அல்லது......?

அடுத்து — அவர்கள் என்ன செய்து கொண்டிருப் பார்களென நடேசு வாத்தியார் யோசித்துக்கொண்டிருக்க,

அப்படியொன்றும் அவசரம் குதிர்போடவில்லை. அவர்கள் எதையாவது செய்துவிட்டுப் போகட்டும். அவருக்கு இப்போ வேண்டியது காய்பிஞ்சுகள்; அவற்றை அவர் வாங்குவதைப் பார்த்து, அவர்கள் யாராவது பகிடி பண்ணுமல் விட்டால் போதும்.

அமீர் அவரைக் கண்டதும், 'வாருங்கள் வாருங்கள்' என வாய்கொள்ள வரவேற்ருன். வரவேற்பு சற்றே பலமாக இருக்கிறது. அவனுக்குச் சேரவேண்டிய பாக்கிப் பணம் அவரிடமிருந்து இன்றைக்கு கிடைக்கிற நாள். வாய் கொள்ள அவன் மலர்ந்து சிரிப்பதை, இருபத்தைந்தாம் திகதி பூரணமாகப் பார்க்கலாம். 'பூரண சந்திரன்' என்பார்களே, அப்படியொரு மகிழ்ச்சி பொலிந்த தேஜஸ்... பின்னர் நாளொரு தேய்வு, தோற்றம். புன்னகை நலிந்து, கடைசியில், அழுகிருற்போல் ஆகிவிடும். அதைப் பார்த்தால், நடேசு வாத்தியாருக்குக் காய்கறி வாங்க மனம் வராது; வாங்காமலும் இருக்க முடியாது.

ஒரு கடைக்காரன் முன், மாதம் தப்பாமல் அரசாங்கத்தின் வேதனத்துக்குப் பாத்தியதை கொண்டாடுகிற 'மாட்சிமை தங்கிய மகாராணி'யின் ஒரு உத்தியோகஸ்தர், இந்தப் பணத்தால் நாணித் தலைகுனிந்து, அற்ப புழுப்போல் அவன் பார்வைக்கு ஆளாகி, 'சீ' என அவன் அருக்குளிக்கும் நிலையில் — ஒரு மத்தியதரவர்க்க மனுஷனின் வாழ்க்கையே பொதுவாக இப்படித்தான் — என தன்னுள் சமாதானம் கொண்டு — தானே வலிந்து பல்லுக்காட்டிச் சிரிக்கின்ற ஒரு நிர்க்கதி வந்துவிடுகிறது. சிரித்துப்பேசி, மாதச் சம்பளத்தைப் பணயமாக வைத்து, வாழ்க்கையை கடனில், 'வாடிக்கை' என்ற 'கௌரவ'மான சொல்லால் பூசி மெழுகி ஒட்டுகிறோம் என்பதை — ஒரு கணம் — வாத்தியார் நினைத்துப் பார்த்ததும், 'இல்லையென்றுல், நாமும்தான் எவ்வளவு கஷ்டப்பட்டுப் போவோம்' எனத் தெளிந்து, நியாயம் கற்பித்து, மான

அவமானப் பிரச்சினைகளுக்கு இடம் கொடுக்காமல் தன்னைச் சமாளித்துக்கொண்டு விடுகிருர்......

"என்ன வேணும்?"

"காய்பிஞ்சுகள்?"

"கனக்கவோ ...... நிறுத்துப் போடுகிறேன்."

"அரை இருத்தல் தக்காளி; அரை இருத்தல் போஞ்சி; அரை இருத்தல் கோவா ...... ஒரு தேங்காய் ......"

"என்ன ...... எல்லாம் அரை இருத்தலாக அடுக்கிக் கொண்டு போகிறீர்கள்? பார்த்துப் பாராமல் வயிற்றுக்கு குளிர்ச்சியாகச் சாப்பிட வேணும் ......... அப்பதான் சுவர் இருக்கும்; சித்திரம் எழுதலாம்; வீட்டுக்காரர்களும் பயனடைய முடியும் ......"

"இருக்கிற உடம்பு போதும் ...... இல்லை, அது காணு தென்று நீ கவலைப்பட்டுக் காய்பிஞ்சுகளை இலவசமாகத் தந்துவிடப்போருய் போலை ......"

"தந்துவிட்டால் போகிறது ......"

"நீ தருவாய்; நான் வாங்குவேன்; கதையை விட்டிட்டு ... இருத்தல் தக்காளிப் பழம் என்ன விலை?"

"எழுபது சதம்."

"எழுபது சதமா? கூடிப் போச்சு."

"நம்பினுல் நம்புங்கள்; எழுபது சதம்."

"பக்கத்து புஞ்சி பண்டா இருத்தல் அறுபத்தைந்து சதத்திற்கு விற்கிருன்; உனக்கு வாங்கித்தரவா?"

"அப்படியா ... அது என்னுடைய கடையிலே இருக்கிற தக்காளிப் பழம்போல் இருக்காது ...... இங்கே, இப்படி, ஒருக்கால்...பழத்தை எடுத்துப் பாருங்கள். என்ன இரத்தச் சிகப்பு. இன்றைக்கே மரத்தில் இருந்து ஆய்ஞ்சதுபோல, ஒரு புழுக்குத்தல், ஒரு சொத்தை, ஒரு அழுகல், எதுவுமே இல்லை. அவன் வாடிவதங்கிய, அழுகல் தக்காளிகளை

வாங்கி வைத்திருப்பான்; அல்லது, யாழ்ப்பாணத்து தக்காளிப் பழமாக இருக்காது ......"

"கயிறு திரிக்காதே ......"

"அப்படியென்ருல், நீங்கள் அந்த புஞ்சி பண்டாவெட்டையே வாங்குங்கோ ... 'மாஸ்டர் எனக்கு வேண்டியவர், நம்ம ஆள்' என்று பார்க்கப்போரு, நீங்க என்னை ஏதோ வேறு ஆள் மாதிரிப் பார்க்கிறீங்கள் ...... நமக்கென்ன? உங்க இஷ்டம் ......"

"சரி ...... கடைசி விலையைச் சொல்லு."

"அறுபத்தெட்டு சதம் ...... எனக்குத் தெரிந்தவராய், வேண்டியவராய், வாடிக்கைக்காரராய் இருக்கிறதாலே, இந்த விலைக்குத் தாறன் ...... வேறு யாருமென்ரு போய் விட்டு வாரும் என்று அனுப்பியிருப்பேன் ... உங்களோடை என்ன பேரம் ...... பிடியுங்கோ ......"

"என்ருலும், விலை கூடித்தான் போச்சு. இந்த நெருப்பு விலையிலே வாங்கிச் சாப்பிட, எப்படிக் கட்டுப்படியாகும்?"

"இன்னும் என்னை நம்ப மாட்டேன் என்கிறீர்கள் ... இந்த வியாபாரத்தில் எங்களுக்கு என்ன இலாபம் இருக்கு? ஒரு சதத்திற்காக ஒரு நாள் பூரா தூங்கிக் கொண்டிருக்கிருேம். இனி கடையை மூட வேண்டியதுதான்."

"எல்லோரும் நடேசு வாத்தியாராகவா இருக்கப் போருங்கள்? ஏமாந்தவன் கழுத்தில் கட்டியடிக்காமலா விடுவாய் நீ?"

அமீர் சிரித்தான், கோபம் வரவில்லை; சிரிப்புதான் அவனுக்கு அஸ்திரம், இராஜதந்திரம், குயுக்தி எல்லாம். அவனை வெருட்டி, மடக்கி, பேரம் பேசி; மலிவாக காய் பிஞ்சுகளை வாங்கிக்கொண்டு போவதாக நடேசு வாத்தியார் நம்புவதில்தான் அவனுக்கு கண். அப்படி நினைத்தாற்ருன், நாளைக்கும் அவர் அமீரிடம் வருவார்; விற்பனை நடந்தேறும். விட்டுப் பிடிப்பதுபோல நடித்து, இலாபத்

திற்குப் பழுதில்லாமல், அவரது தலையில் கட்டியடிக்கும் திறமை அவனுக்குத் தெரியும்.

அவன் அவரிடம் சொல்லுவான் :

"மாஸ்டர், பொஸ்தகப்படிப்பு படித்திட்டாமட்டும் ஆகிவிடாது ... அனுபவப்படிப்பும் கொஞ்சம் தேவை. அந்தப் படிப்பு எங்களுக்கு நிறைய இருக்கிறதாலை தான் நாங்கள் வாழுகிறம்."

நடேசு வாத்தியார் காய்பிஞ்சுக் கூடையுடன் தனது குச்சு அறைக்கு வந்தபோது, அறையின் கதவில், கதவுச் சட்டங்களின் நீக்கலுக்குள் கடிதமொன்று செருகிக்கிடக்கிறது. சரேலென இழுத்து எடுத்துப் பார்க்கிறார். மீனு எழுதியிருக்கிறாள். அவளது தந்தக் கை போன்ற, மணி மணியான கையெழுத்து. ஊறுகாயைப் பார்த்துக் கொண்டே சாப்பிடலாம் போல, கையெழுத்தை ஒரு நாள் பூரா பார்த்துக்கொண்டே இருக்கலாம். கையெழுத்து அழகென்றால் தலையெழுத்துச் சிறப்பாக இருக்குமென்பது என்ன நிச்சயம்? எந்த முட்டாள் சொன்னானோ? இவள் மீனுவுக்கு நல்ல கையெழுத்து இருந்தும் — அஷ்ட தரித்திரம் — ஒன்றும் கொழித்துக் கொட்டவில்லை. ஒரு ஆசிரியையாகக்கூட அவள் ஆகவில்லை. சமையலறைக்குள், வீட்டுக்குள் முடங்கிக் கிடக்கிறாள் ... ஆசிரியையாக அவளும் ஆகியிருந்தால், மாதம் முன்னூறுவது மிச்சமாக இருக்கும் ... உண்ணாது, குடியாது, உடல்வற்ற வைத்து, ஒரு சதத்திற்கு 'ஜெபம்' செய்யவா வேண்டும்?

மீனுவின் கடிதம் நடேசு வாத்தியாரின் உள்ளத்தில் பெரும் யோசனையைக் கிளப்பி விட்டிருக்கிறது. அவள் எழுதியவற்றையெல்லாம் நினைத்து நினைத்துப் பார்த்தார். இந்தப் பிறப்பில் அவருக்கு எங்கே — யாழ்ப்பாணத்துக்கு மாற்றமே கிடைக்காது போலிருக்கிறது; அப்படித்தான் எழுதியிருக்கிறாள். மாற்றம் இல்லையென்றால், அவர்கள் முன்னேற இயலாது என்று சபிக்கிறாள் ......

உடனேயே ஓட வேண்டும் என உள்ளம் துடிக்கிறது; ஓடிப்போய் சிறிசேனுவின் காலில் 'நீயே தஞ்சம்' என விழ வேண்டும்; 'ஒரு மாற்றம்—எப்படியாவது எடுத்துத் தந்து விடு' என்று கெஞ்ச வேண்டும். யாழ்ப்பாணத்து எம். பி. களை நம்பிப் பலனில்லை.

மீனு தத்ரூபமாக மனதில் பட்டதை எழுதியிருக்கிருள் ......

"— நீங்கள் ஒரு, கண்டறியாத ஓட்டை மேளம். உங்களுக்கு எப்படி முன்னேறுறது என்று தெரியாமை, இங்கை லீவிலை வந்து நிற்கிற நாட்களிலை, 'சண்டிக் கட்டு'க் கட்டிக்கொண்டு, 'அது இது' என்று அரசியல் பேசுவியள் ...... ஒரு மாலை போட்டு, நிறை குடம் வைத்து, ஊர்வலத்திலை முன்னுக்கு ஓடி, கார் வாங்கக் காசு தெண்டி — ஒரு எம்.பி. யா வரக் கூடிய வனுக்குப் பாடுபடத் தெரியாது ...? இலட்சியம், கொள்கை, கோட்பாடு என்ற பேரிலை, இலட்சியங் களாலையே அழிந்து கொண்டிருக்கிற கட்சியோடை மாரடிக்கிறியள் ...... உங்களுக்கு ஒரு தமிழனும் உதவ மாட்டான் ... நீங்கள் நம்புகிற கட்சியிலை இருக்கிற இரண்டொரு சிங்கள எம். பி. க்களை யாவது பிடிச்சு 'ஒரு மாற்றம்' எடுக்க முயற்சித்துப் பாருங்கோவன்... கதையோடு கதையாக கந்தப்பு வாத்தியார், புதுவீடு ... குடிபுகு விழாவுக்கு அழைப்பிதழ் தந்திருக்கிருர் ... எங்கள் வரவு செலவில், செலவுக் கணக்காக ஒரு இருபத்தைந்து ரூபாவுக்கு இடமிருக்கும் ......"

மீனு எழுதிய கந்தப்பு வாத்தியாரை நினைத்ததும், யாழ்ப்பாணத்து மோகம் அதிகரிக்கிறது; ஏக்கமாக இருக் கிறது. மாற்றம்—கட்டாயம் எடுத்துத்தான் தீர வேண்டும் என வேகம் எழுகிறது ...... அவருக்கும் அவனுக்கும் ஒரே வயது; ஒரே வகுப்பில் படித்தவர்கள். ஒன்ருக ஆசிரிய கலாசாலைக்குச் சென்றவர்கள். அவன் நிரந்தரமாக ஊரில்

— ஒரே பள்ளிக்கூடத்தில் — படிப்பிக்கிருன். இவர் ‘காடு மேடாக’ அலைகிருர். ஆசிரிய சேவையில் புகுந்த காலம் தொடக்கம், ஊவா மாகாணமும், மத்திய மாகாணமும், தென் மாகாணமும் — தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் உள்ள இடமெல்லாம் — தலைகீழ்ப் பாடம் ......

முன்னூறு ரூபாயைத் தாண்டாத அவரது சம்பளத் தோடு, சொந்த ஊரான யாழ்ப்பாணத்தில் இருந்து விடுவ தால் பிரமாதமான ‘மோட்சம்’ வந்துவிடாது என்று நடேசு வாத்தியாருக்கு சொல்ல விருப்பமில்லை. மோட்சம் இல்லையெனச் சொல்லுவது வெறும் சமாதானம்; வெறும் போலி. வரண்ட அனல் காற்றும், புழுங்கி, வெயர்த்து வடிய வைக்கும் வெப்பமும் ஊரில் நிறைந்திருந்தாலும் அங்கே இருப்பதில் ஒருவித நிறைவு, அமைதி; அலைச்சல் கிடையாது. பணம் மிஞ்சி, தமிழ் சட்டம்பிகள் மனிதர்க ளாகிருர்கள் ......

கந்தப்பு வாத்தியாருக்கு நிலம் ஏராளம்; சொத்து ஏராளம்; பற்ருததற்கு, நவீன மோஸ்தரில் மீண்டும் ஒரு கல்வீடு கட்டியிருக்கிருர்; லொறி இருக்கிறது; கார் இருக்கிறது; மீண்டும் ஒரு லொறி வாங்கத் திட்ட மிட்டிருக்கிருர்...

... அவருக்கும் சம்பளம் முன்னூறைத் தாண்டவில்லை ... ஆனல், சொத்துக்கள்? ......

நடேசு வாத்தியாருக்கு என்னவோ போலிருந்தது. சமைக்க மனமில்லை. குளிர் ஜலம் கூசாவில் கிடந்தது. நாலைந்து ‘குவளை’ தண்ணீரை மடமடவெனக் குடித்தார் ...... பெருமூச்சு வந்தது. அவருக்கு கார் வேண்டாம்; லொறி வேண்டாம்; அளவுக்கு மீறி காசு பணம் வேண் டாம் ...... வாழ ஒரு காணி இருந்தால் போதும்; வாழ ஒரு வீடு இருந்தால் போதும்; சராசரி வாழ்வு வாழப் பணம் இருந்தால் போதும்.

சாய்மனைக் கட்டிலை எடுத்து விரித்து, படுத்தார். ஒரே யோசனைகள்; யாழ்ப்பாணத்துக்கு மாற்றம் வேண்டும் என்ற யோசனைகள்......

... காலையில் நேரமிருக்கிறது; மாலையில் நேரமிருக் கிறது. பாடசாலைக்குப் போகுமுன்னரும், போன பின்னரும், தோட்டத்துக்குப் போகலாம்; காய்பிஞ்சு செடிகள் நடலாம்...... நீர் இறைக்கலாம்... உழைக்க லாம்... செலவு குறையும்; பணம் மிஞ்சும்... கஷ்டப் படாமல் வாழ்க்கை ஓட்டலாம். பிள்ளை குட்டிகளின் நலனுக்கு அக்கறை எடுக்கலாம்......

இது, முன்னூறு ரூபாய் சம்பளம்... இந்த சம்பளத் துடன் அவருக்கு வெளிநாட்டு ஜீவியம்; மனைவி பிள்ளை களுக்கு யாழ்ப்பாணத்துச் ஜீவியம்...... பிள்ளைகளும் ஒன் றில்லை, இரண்டில்லை; நான்கு, ஐந்து பெண்கள்......

அவருக்குப் பயமாக வந்தது......

'போயும்... போயும் ஒரு தமிழ்ச் சட்டம்பியாக உத்தி யோகம் பார்க்கக்கூடாது... அப்பிடிப் பார்க்கிறதைவிட... சீ... நான் அப்படி, என்னையே ஏன் தாழ்த்திக்கொள்ள வேண்டும்... எங்களைப்போலப் படித்த — இரு வருடங்கள் எங்களைப்போல் பயிற்சியிலிருந்த — ஆங்கிலமொழி மூலம் பயிற்றப்பட்ட ஆசிரியர்களுக்குச் சம்பளம் கூட, என்று 'சம்பள சிபார்சு' செய்த இந்த முட்டாள் கமிஷன்களின் சட்டதிட்டங்களைக் கிழித்தெறிந்து விட்டு — இனி ஒரு விதி செய்ய வேண்டும்...... எத்தனை நாளைக்குச் சகிப்பது?

ஒரு நாளல்ல, இரண்டு நாளல்ல — பன்னிரண்டு வருடங்கள். மலைநாடு பூரா சுற்றி அலைந்து, அலுப்பும் தட்டிவிட்டது. இனி வேண்டியது — யாழ்ப்பாணம்... எத்தனையோ பேருக்கெல்லாம் யாழ்ப்பாணத்துக்கு இட மாற்ற உத்தரவு வருகிறது. இரண்டுவருடம் இருந்தவனுக்கு மாற்றம் கிடைக்கிறது. ஐந்து வருடம் இருந்தவனுக்கு

மாற்றம் வருகிறது. ஒருவனுக்கு தொய்வாம்; குளிர் சுவாத்தியம் ஒத்து வராது. இன்னொருவனுக்கு அடிக்கடி தடிமலாம்; மலைநாட்டுக் காற்று, அவனது உடம்புக்கு மோசம் செய்கிறது. இன்னொருவன் பாம்புக்கடி மருந்து செய்ய நிபுணனும்; அவனுக்காக யாழ்ப்பாணத்து மக்கள் கல்வி இலாகாவோடு 'வழக்குப்' பேசத் தயாராக இருக்கிறார்கள். இங்கே பன்னிரண்டு வருடங்களாக படிப்பிக்கிற அவருக்கு, சுற்றிச்சுற்றிச் சுப்பர் கொல்லை மாற்றங்கள். மலைநாட்டு மூலை முடுக்கிலுள்ள பாடசாலைகளுக்கெல்லாம் "போ, போ" என்று பிடித்துத் தள்ளுகிறார்கள்; போய்க் கொண்டிருக்கிறார்.

...மீறு எழுதியிருக்கிற கந்தப்பு வாத்தியாருக்கு ஒருநாள் பார்த்து, வெளியூரில் போய் படிப்பி என்று மாற்ற உத்தரவு வந்ததில்லை; அப்படி வந்தாலும் அதைத் தடுத்து நிறுத்த அவனுக்கு இருக்கவே இருக்கிறார்கள் — அரசியல் வாதிகள் ... கொஞ்சம் என்றதும் வித்தியாதிபதி கந்தோரில் அவனுக்காகப் பல்லைக் காட்டுகிறார்கள் ... எல்லாம், காரணத்தோடில்லாமல் நடக்குமா? ... நல்ல ஜனநாயகம் ... நல்ல மக்கள் பிரதிநிதிகள் ... எவன் தன்னுடைய பாராளுமன்றப் பிரதிநிதித்துவத்துக்கு ஆதரவு தந்தானோ, அவனை மனதில் குறித்துப் புரிகின்ற சேவகம் ......'

சுவரில் கிடந்த காலண்டர் தாள்கள் படபடத்தன. நடேசு வாத்தியார் எழுந்து சென்று காலண்டர் அருகில் நின்றார்; மெதுவாக இரண்டொரு தாள்களைப் புரட்டினார் ... மேலும் மேலும் புரட்டினார். அவர் பார்க்க விரும்பிய திகதி வந்தது. அந்தத் திகதியில்தான் அடுத்த பருவ விடுமுறை ஆரம்பம். அதோடு, அவருக்கும் யாழ்ப்பாணத்துக்கு மாற்றம் வரவில்லையென்றால், ஒரு கை பார்க்கத்தான் வேண்டும் ... நடேசு வாத்தியார் லேசுப்பட்டவனில்லை என்பதை நிரூபிக்கத்தான் வேண்டும் ......

*போயா முன்தினமும் போயாவும், வந்ததும் தெரிய வில்லை; போனதும் தெரியவில்லை. வேகமாகக் கரைந்து விட்டன. என்ன வேகம்? என்ன ஓட்டம்? அந்த இரண்டு நாளும் அவர் என்ன செய்தார்? மீனு குற்றம் சாட்டுவாளே, அது போல படுத்தார்; எழும்பினார்; சாப்பிட்டார்; படுத்தார். மாற்றம் சம்பந்தமாக சிறி சேனவைப் பார்க்கலாமென்றால், மனம் பயந்தது. அவ ரிடம் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லியாகிவிட்டது. அடிக்கடி போனால் — 'பெரிய மனிதர்' — விரும்புவாரோ தெரியாது. சேலையில் ஒட்டிக்கொண்ட பேன் மாதிரி விடாமல் காலைக் கட்டிப் பிடித்திருக்கிற இந்த மாஸ்டரை எப்படித் தட்டிக் கழிப்பது எனச் சினம் மூண்டாலும் மூண்டு விடலாம் ......

அன்று பாடசாலை இடைவேளை நேரம்; நடேசு வாத்தி யாரின் பெயரில் இரண்டு கடிதங்கள், வெவ்வேறு இடத்தி லிருந்து வந்திருந்தன. ஒன்று — கரவெட்டி; மீனுவிட மிருந்து வந்திருக்கிறது. பாடசாலை நாட்களில் அவளுடைய கடிதம் பாடசாலையை நோக்கித்தான் வரும். மற்றது கொழும்பு; கையெழுத்து விளங்கவில்லை. முதலில் மீனுவின் கடிதத்தைப் பிரிக்க, மனம் பரபரக்கிறது. பிரித்து படித்துப் பார்க்கிறார். அதிர்ச்சியாக இருந்தது. அதே நேரம் மகிழ்ச்சியும் வந்தது. நம்ப முடியவில்லை. எல்லாமே நேற்றுப்போல—இன்னும் கண் இமைக்குள் நிற்பதுபோல — இக்கணமே ஊருக்குப் போய் கடிதத்திலுள்ளது உண்மை தானு என உறுதிப்படுத்தினாலன்றி, கண்கட்டு ஜாலம் போல — அவருக்குத் தோன்றுகிறது ... அவருடைய மகள் ராணி தவழ்ந்தது, மழலை பேசியது, ஓடியது, ஆடியது, பாடியது, அனைத்தும் அதற்கிடையில் எப்படி மறைந்தது?

---

*போயா என்பது சிங்களச்சொல். அமாவாசை, பூரணை, என்ப வற்றை இது சுட்டும். சனி, ஞாயிறுக்குப் பதிலாக 'போயா' இலங்கையில் கருதப்படும்.

அவளுக்கு இப்பொழுது பதின்மூன்று வயது ஆகி விட்ட தென்பது மலைப்பாக இருக்கிறது. வாய்க்குள் விரல் வைத்தால் கடிக்கத் தெரியாதவளாக, சூது, வாது, தெரியாமல் ஊர் பூராவும் சிட்டுக் குருவியாய்ப் பறந்து திரியும் சுதந்திரமான சிறுமி அவள். அவளின் பரந்த உலகம் குறுகுகிறதென்ருல் அதை அவர் எப்படி நம்ப முடியும்? மகிழ்ச்சி சுரக்கவேண்டிய விஷயம் நெஞ்சைப் பிருண்டு கிறது. பாழாய்ப்போன பதின் மூன்று வயது, ஏன் வந்ததாம்? இப்பொழுதே சிக்கனம்; இனியும் கடுமையாக சிக்கனம். ......ம்...... உடலை ஒறுத்து, வாயைக் கட்டி, கலியாணம் பண்ணியும் துறவியாக — உண்மையான, இக் கட்டான, சோதனைகள் மலிந்த துறவு திருமணமானவனுக்குத்தான் இருக்கிறது என்ற சமாதானத்தை தன்னுள் ஏற்றி, திருப்தி கொள்ள வேண்டியதுதான்.

... நடேசு வாத்தியாரின் மகள் ராணி பக்குவப்பட்டு விட்டாள்!

மகிழ்ச்சியான அந்த விஷயத்தை மனைவி மீனுவும் — பொருளாதாரம் என்ற வெம்மைக்குப் பயந்து — நிறைந்த கவலையோடு எழுதியிருக்கிருள்; பொறுப்புக் கூடுகிறதாம்! செலவைக் குறைக்கட்டாம் ......

"நேற்று, சின்னக் கவுன் அணிந்து எங்களுடைய சிறிய ஊரடங்கலும் பாத்தியதை கொண்டாடிய ராணிக்கு நாலு வேலி கொண்ட எங்கள் வீடு உலகமாக மாறியிருக்கிறது. பழைய கலகலப்பு இல்லை; பழைய குறும்பு இல்லை; எடுத்ததற்கெல்லாம் வாய் கொள்ளச் சிரித்து, கதைகளால் மொலுமொலுக்கிற குணம் இல்லை... தன்னடக்கமான பார்வை; அளவான கதை; கவர்ச்சியான, அத்து மீருத சிரிப்பு; எல்லாம் வந்து கொண்டிருக்கிறது — அவள் பெரிய மனுஷியாகி விட்டாள் ... இது, நானும் கொஞ்ச நாளாக அவதானிச்சது தான் ...... நேற்று, தம்பி தங்கைகளோடு

'சலக்கோல்' விளையாடிக் கொண்டிருந்தா ... பின்னர் 'அம்மான்னு' மெதுவாகக் கூப்பிட்டா ... 'என்னடி' என்று திரும்பினேன். அப்படி ஒரு வெட்கத்தை அவ முகத்திலை நான் கண்டதில்லை ... 'எனக்கு என்னமோ மாதிரி இருக்கம்மா ... கவுனை பார்' என்றாள் ... பார்த்தேன் ...... பெரிய பிள்ளையாகிய தோற்றத்தோடு, அம்மன் விக்கிரகம் போல நின்றாள் ! ..."

மகளுடைய பக்குவ நிகழ்ச்சியை வர்ணித்து விட்டு, மீண்டும் தொடர்ந்து மீனா எழுதியிருக்கிறாள் ...... இரவு முழுக்க நன்றாக சிந்தித்திருப்பாளோ ... ?

"இத்தனை நாளாக எங்களுக்கு குமரிப்பிள்ளைகள் இல்லையென்ற துணிவில், எல்லாமே சின்னஞ் சிறுசுகள் என்ற நம்பிக்கையில், எந்தக் கவலையுமே இல்லாமல் இருந்து விட்டோம் ... ஆனால் — ராணிக்கு — இன்னும் நாலைந்து வருடங்கள், அறமிஞ்சிப்போனால் எந்தப் பொறுப்புமில்லை என்று நினைத்து நாம் சகிச்சுக் கொண்டு இருந்திடலாம் ... அப்புறம் ... அவளுக்கு நாம் செய்யவேண்டிய சில கடமை இருக்கே, அது நமக்கு மலைபோலத் தோன்றலாம் ; நாம் சரிவரச் செய்யாமலும் இருந்திடலாம் ... ராணிக்குப் பின்னாலும் நமக்கு பெண் பிள்ளைகள் இருக்கிறார்கள் ...... அவர்களும் பக்குவப்பட அதிக காலம் பிடிக்காது ... உங்களுக்கு ஊரோடை மாற்றம் வந்துது என்றால், சொஞ்சப் பணமாவது — வீட்டு வாடகை, சாப்பாட்டுக்கூலி என்றில்லாமல்—மிஞ்சும் ... நீங்களும் தோட்டம் துரவு கவனிக்கலாம் ..."

— சிறிய ஓட்டையோடு கடலில் கரைதேடி விரைவாக ஓடிக்கொண்டிருக்கிற தோணி, நடுக்கடலிலேயே பெரும் ஓட்டைகளை அடைந்து விட்டால் ... ?

நடேசு வாத்தியார் மற்றக் கடிதத்தை உடைக்கிறார். அகில இலங்கை அரசினர் ஆசிரியர் சங்கத்திலிருந்து

வந்திருக்கிறது; நீண்ட, அச்சிட்ட இரு நோட்டீஸ்கள், மனதுக்கு இதம் தரும் தகவல். மலைக்காற்ருக — குளுகுளு என்றிருக்கிறது. செத்துப்போன அரைகுறை நம்பிக்கை, சடைத்துப் பெருத்து, ஆலாகி, விழுது எறிகிறது.

— அடுத்த போயா முன்தினம் கண்டி மாநகர சபை மண்டபத்தில் ஆசிரியர் சங்கத்தின் கூட்டம்; பெரும் பிரமுகர்களை அழைத்திருக்கிருர்கள் ......

" ஆசிரியர்களுக்கு இடமாற்ற விஷயத்தில் இழைக்கப்படும் அநீதிகளை வன்மையாகக் கண்டிக்கும் எங்கள் சங்கம், இனியும் இயலாது என்ற கட்டத்தில் போராடத் துடிக்கிறது.

" பத்து வருடங்களுக்கு மேலாக, தொடர்ந்து, பிற நாட்டில் சேவையாற்றிய ஆசிரியர்களுக்கு யாழ்ப்பாணத்திற்கு கட்டாயமாக இடமாற்றம் வழங்க வேண்டுமென நாங்கள் கோருகிருேம். அதே நேரத்தில் யாழ்ப்பாணத்தில் — நீண்ட காலமாக சேவையாற்றிய இதுவரை மாற்றம் என்பதையே கண்டிராத — இளம் ஆசிரியர்கள் மலைநாட்டுப் பகுதிகளுக்கு இடமாற்றம் செய்யப்பட வேண்டும். எங்கள் நியாயமான கோரிக்கையை முன்வைத்து எங்கள் போராட்டம் அமையும்; எங்கள் மாற்ற விஷயங்களில் அனுவசியமாகத் தலையிடும், 'தங்களை மக்கள் பிரதிநிதிகளெ 'னச் சொல்லிக் கொள்ளும் பாராளுமன்ற உறுப்பினர்களை நாம் வன்மையாகக் கண்டிக்கிருேம் ......"

நடேசு வாத்தியாருக்கு சுறுசுறுப்பு வந்தது. கையிலிருந்த தோல் 'பையை' திறந்தார்; உள்ளே கிடந்தவற்றை வெளியில் எடுத்தார். நாலைந்து காகித உறைகள், கடிதம் எழுதும் தாள்கள், தபால் தலைகள், ஒரு பச்சைப் பத்து ரூபாய் நோட்டு — இவை இருந்தன.

தாளை எடுத்தார், பேனுவைத்திறந்தார்; மளமள என எழுதினுர். அழகான, மணிமணியான எழுத்துகள்:

'போராட்டம் வெல்லட்டும்; வாழ்த்துகிறேன்!'

எழுதிய கடிதத்தை எடுத்துக்கொண்டு, பாடசாலை வாசல்முன் இருந்த தபாற் பெட்டியை நோக்கி நடந்தார்; நின்ருர். அருகில் இருந்த கடையில் பார்வை பதிந்தது; கண்ணுடி கேஸ்களை ஊடுருவியது... முறுவல் ததும்ப, நகர்ந்தார்.

ராணியின் பெயரால், பாடசாலையிலுள்ள சக ஆசிரியர் களுக்குக் கொண்டாட்டம் — பிஸ்கட் சாப்பிட்டார்கள்.

‘ இலங்கையர்கோன் ’

# அனுதை

‘ புத் ’ என்ற நரகத்தில் இன்றைய மனிதனுக்கு நம்பிக்கை இல்லை. பிள்ளை இல்லாதவர்களுக்கென்றே ஒரு தனி நரகம் என்ருல், நரகத்திற்கு அதிபதி எவனே அவன், நரகத்தின் பெரும் பகுதியையே இந்தப் ‘ பாபி ’களுக்கென்று பிரத்தியேகமாக ஒதுக்கி வைக்க வேண்டுமே! இந்த வகையைச் சேர்ந்தவர்களின் தொகை எண்ணில் அடங்காது. ஆயிரமாயிரமாக நோன்புகள் நோற்கிருர்கள்; தான தருமங்கள் செய்கிருர்கள் ; வைத்தியர்களிடம் ஆலோசனை கேட்டு மருந்து உண்கிருர்கள்; கத்தி வெட்டுச் சிகிச்சையும் செய்து கொள்கிருர்கள். செயற்கை வழிகளில் பாழ்பட்ட உதரங்களில் கருவேற்ற முயலுகிருர்கள் ...... எல்லாம் தம் சந்ததி அழிந்து படாமல் இருப்பதற்காக!

என்ன மமதை! சந்ததி அழிந்து போனுல், ஏதோ பெரும் தீங்கு விளைந்து விடப்போகிறது என்று நினைப்பதற்கு, ஒரு தனிமனிதன் இந்தப் பிரபஞ்சத்தின் அகன்ற படைப்புத் தொடரில் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவனு?

வழமை போல் என் அலுவலகத்தில் கடுதாசிகளையும் ‘ பைல் ’களையும் புரட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். பிரதமலிகிதர் அப்பொழுது தான் அன்று வந்த கடிதங்களைத் தன் குறிப்புக்களுடன் என் பார்வைக்கு அனுப்பிவிட்டிருந்தார்.

என் சிறிய அறைக்கு வெளியே குழந்தை அணில்கள் குரலும் குதிப்பும் பழகிக் கொண்டிருந்தன. கடிதங்களில்

கண் ஓடவில்லை. குழந்தை அணில்கள் என்ற எண்ணம் — கோழிக்குஞ்சுகள், நாய்க்குட்டிகள், ஆட்டுக்குட்டிகள், பூனைக்குட்டிகள் — என்று ஓடி, மனிதக்குட்டிகளிற் போய் நிலைத்தது ...

அறை வாசலில் இருந்து விம்மல் விக்கல்களுடனும், கண்ணீருடனும் கலந்த ஒரு பெண் குரல், "ஐயா, என் குழந்தை ..." என்றது.

சிந்தனை கலைந்து நிமிர்ந்து பார்த்தேன். என் அலுவலகத்தில் மனிதர்கள் வந்து தமது கஷ்டங்களைச் சொல்லி அழுவதும், மூக்குச் சிந்துவதும், அவ்வளவு அரிதான சம்பவங்கள் அல்ல. ஆனால், இதில் ஏதோ சாதாரணம் அல்லாதது இருந்தது. அது முகத்தில் தெரிந்தது. குரலில் தொனித்தது. என் ஊற்றுப் பேனவை — அது உண்மையில் மை ஊற்றுகிற பேனதான் — மேசைமேல் வைத்து விட்டு நிமிர்ந்து உட்கார்ந்தேன். உடனே, என் நாற்காலியின் சாய்வுப் பகுதியில் பிரம்புப் பின்னலின் தொளைகளில் பதுங்கிக் காத்திருந்த மூட்டைப் பூச்சிகளுக்கு என் வீரத் தமிழ் ரத்தம் மணத்துவிட்டது. இன்னும் ஒரு பத்து நிமிஷங்களுக்காவது அவைகளுக்கு நல்ல வேட்டை !

"ஏன், என்ன ? இதோ, இப்படி இந்த நாற்காலியில் அமருங்கள். ஏதோ, உங்கள் குழந்தை என்றீர்கள்..."

அந்தப் பெண் தன் கையில் இருந்த பையிலிருந்து ஒரு சாணளவு கைக்குட்டையை எடுத்துத் தன் கண்களை லேசாக ஒற்றிக்கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தாள். கண்ணீர் பட்ட இடங்களில் அவள் முகத்தில் பூசியிருந்த வாசனை மா அழிந்திருந்தது. 'நீலிக் கண்ணீர்' என்று முதலில் நினைத்த நான், பவுடர் அணியும் பெண்களுக்கும் உணர்ச்சிகள் உண்டு என்று அறிந்ததும், அதனுல் உண்டான என் ஆச்சரியத்தை அடக்கிக் கொண்டேன்.

அவள் அழகான, ஆனுல் மலிந்த, ஒரு 'நைலான்' சேலையும், அதற்கு நிறப் பொருத்தமுடைய ஒரு 'சோளி'

ரவிக்கையையும் அணிந்திருந்தாள். ஒரு மணிக்கட்டில் ஒரு அடக்க விலைக் கைக்கடியாரம், மற்ற மணிக்கட்டில் ஒரு பவுன் அல்லது இமிட்டேஷன் பவுன் காப்பு, காதுகளில் பிளாஸ்டிக் குண்டலங்கள், கழுத்திலும் மூக்கிலும் ஒன்றும் இல்லை. எனக்கு ஆச்சரியம் குறையவில்லை. அவள் ஒன்றையும் கவனியாதவள் போலத் தன் கைப்பையை எடுத்து, அதில் அடங்கியிருந்த ரகஸ்ய சாதனங்களைக் கொண்டு தன்னை அழகு செய்ய எத்தனித்துக் கொண்டிருந்தாள் — நான் ஒரு வெறும் மனிதன் அவள் முன்னால் இருக்கிறேன் என்பதையும் கவனியாமல்!

எனக்குச் சிரிப்பு வந்தது. பெண்களின் சுய கௌரவம்! கௌரவம், என் ஆண்டவனே! அழுத பெண் அலங்காரம் செய்கின்றாள் — கண்ணீர் காய்வதன் முன்!

"இது அலங்காரம் செய்யும் இடம் அல்ல. இது ஒரு கந்தோர். இது ஏழைகள் ஆதரவும், உதவியும், சிறிதளவு அன்பும் தேடி வரும் ஒரு ஆலயம் போன்றது. கூற வேண்டிய முறைப்பாடு இருந்தால் உடனே கூறவேண்டும்; ஆவன செய்வேன்."

"என் முதற் குழந்தையை, உங்கள் அதிகார எல்லைக்குள் இருக்கும் ஒரு தாழ்த்தப்பட்ட பொம்பிளை வளர்த்து வருகிறாள். அக் குழந்தையை என் கையில் எடுத்துத் தர வேண்டும், ஐயா!"

அவள் கருதியது — பலாத்காரமாகப் பறித்துத் தர வேண்டும் என்று!

"உங்கள் முறையீடு எதுவென்று விவரமாகச் சொல்வீர்களா?"

"என் குழந்தை என்றோ ஒரு நாள், கிட்டத்தட்ட ஏழு வருடங்களுக்கு முன் ... அது வேறு ஒரு தேசம் ... வேறு ஒரு சூழ்நிலை ... அங்கே ......"

ஆ! குதிரையின் முன் வண்டியை இணைக்க முயலும் ஒரு மூடனைப்போல — நான் பின்வருவதை முன்னல் கூற முயல்கின்றேன் ...

மன்னிக்கவும்.

இவை எல்லாம் என் கடமைகளில், ஒரு நாள், ஒரு பொழுது என்பது போல; ஆனல், இது அடுத்த நாள்.

"என்ன நயிந்தை, உமக்குச் சொக்குப் பொடி போட்டிட்டாளாம் அந்த — அந்த, என்ரை வாயிலை ஏன் வருகுது — பாக்க, ஓ! சொல்லிப் போட்டன்!" அவள் கோபித்தவள் போலப் பேசினலும், அன்பாகவே, அந்தப் பூரணமான, ஆனல் பொருட்செல்வம் குன்றி ஏழமையடைந்திருந்த இருதயம் எவ்வளவு அன்பைப் பேச்சில் வெளிப்படுத்த முடியுமோ, அவ்வளவு அன்பையும் வெளிப்படுத்தினள்.

அவள் பெயர் மாதி.

அவள் தன் 'காடு வெட்டி'ச் சேலையின் முந்தாணையால் தன் வயோதிப மார்புகளை மறைப்பதற்குக் குறுக்குக் கட்டாக அணிந்திருந்தாள்.

"போ, மாதி!"

"என்ரை ஐயாச்சி, உண்மையைச் சொல்ல! ஆர் இஞ்சை நேத்து வந்தது, நம்மைத் தேடி ..."

அவள் கிழக் கண்களிலே திடீரென்று கண்ணீர் மல்கிப் பெருகியது — ஆருக. சேலையின் முந்தாணையை எடுக்க முடியாதாகையால், தன் கைகளால் கண்ணீரைத் துடைத்தாள். ஆனல் துடைக்கத் துடைக்க மீண்டும் பெருகியது...

இரக்கம் என்ற உணர்ச்சி சாதாரணமாக இல்லாத என் மனத்திலும், ஆழியில் அலை பொங்குவது போல, என் அநுதாப உணர்ச்சி தலை தூக்கியது.

"ஏன், என்ன?"

" நயிந்தை, என்ரை பிள்ளையை, எண்ணைக் கிடங்கிலை போட்டு வளத்த பிள்ளையை, நான் கிழவி எண்டாலும், ஒரு குமரியைப் போலை பாடுபட்டு வளத்த பிள்ளையை, என்ரை பிச்சைச் சம்பளக் காசையும் சிலவழிச்சுப் படிக்க வைச்ச பிள்ளையை ..."

என் மனத்தை என்னவோ செய்தது, தலையைக் குனிந்து கொண்டேன்.

ஆம், அவள், அரசாங்கத்தார் தரும் தருமப் பணம் பெறுபவள்தான் — பத்து ரூபாய் மாத வீதம் !

" நயிந்தை, நீர் யோசிக்கிறது எனக்குத் தெரியும். நான் கூலி வேலை செய்து, அதில்லாட்டிப் பிச்சை எடுத்து, அந்தப் பொடியின்ரை சீவனையும் என்ரை சீவனையும் காப் பாத்துவன் எண்டதுதானே !"

" நீ கெட்டித்தனமுள்ள ஒரு பெண் !"

" ஏன், நீரும் ஒரு ... என்ரை பிள்ளை என்னோடை எப்பவும் இருக்க வேணும். அதுக்கு எனக்கு உதவி செய்யடி, என்ரை துரை !"

இவள் முதலில் அழுத கண்ணீர் உண்மையோ என்று ஒரு கணம் மலைத்தேன். அல்லது, இவளுடைய சிரிப்புக் கலந்த பேச்சுத்தான் உண்மையோ? இந்த மாதிரி அந்த முதியவள் என்னுடைய அன்புக்கு முன்னரே பாத்திர மானவள்.

என்னுடைய அகங்காரத்தையும் என்னுடைய உத்தி யோக கௌரவத்தையும் நிலைநாட்டி என் முன்னால் அழுது சிரித்த அந்த ஏழைக்கு என்னால் ஆன உதவி செய்ய வேண்டும் என்று என் மனம் மிகவும் பேதலித்தது. அதனால் என்னுடைய கற்பனை உலகில் புகுந்து விட்டேன். அணைத்துக் காத்துப் பாலூட்டா விட்டாலும், தாலாட்டிச் சீராட்டி, செல்வம் என போற்றித் தன்னுடைய வயோதிப வாழ்வை வாழ்விக்க வந்த தெய்வம் என ஏற்றி வைத்து

வளர்த்த ஒரு செல்வனுக்காக இவள் ஏங்குகிருள் என்று நான் நினைத்தேன். இவை எல்லாம் கற்பனை என்று முன்னரே சொல்லிவிட்டேனே! எனக்கோ இந்த மூதாட்டியின் முறையீடு சற்றுமே விளங்கவில்லை. என்னுடைய கீழ் அதிகாரியிடம் இதை அனுப்பலாம் என்ருல், அதுவும் எனக்கு உடன்பாடாக இல்லை.

அதற்குள் என் காரியாலயத்திலுள்ள பலர் கூடி விட்டனர். என் அறையின் வாசலிலே — ஏதோ ருசிகர மான விளக்கம் நடப்பதாக எண்ணி!

என் மனம் வேதனைப்பட்டது, அந்தக் கிழவிக்காக.

"சென்று, அடுத்த திங்கள் வா!" என்று நான் சொன்னேன்.

அவள் தான் அணிந்திருந்த விலை குறைந்த அந்த 'காடு வெட்டி'ச் சேலையின் முந்தானையைச் சிறிதே தளர்த்தி, மறுபடி தன் தொங்கும் மார்புகளின்மேல் வரிந்து கொண்டு போனுள்.

என் மனத்தில் துக்கம் பொங்கியது! எத்தனை ஏழைகள் ...... ஆனுல், எத்தனை தாய்மார்கள் ......

* * *

முதல் முறை வந்த அந்த சினிமாக்காரி போன்ற உடை அணிந்த பெண் மறுபடியும் என் முன் உட்கார்ந்திருந்தாள். இன்று அவள் முகத்திலே வாசனை மா மட்டும் அல்ல, கன்னத்திற்குச் சிவப்பும், வாய்க்கு 'லிப்ஸ்டிக்' என்ற அதனிலும் கோரமான கடுஞ்சிவப்பும் அணிந்திருந்தாள். அவள் தன் கழுத்திலே அணிந்திருந்த வாசனை மா அலங்கோலமாக வரி வரியாக, அவளுடைய வேர்வையின் ஈரம்பட்டு அதன் நிறம் குன்றி, வெள்ளை வெளீரெனத் தெரிந்தது. அந்த அழகில்லாத காட்சியைப் பார்க்கும் பொழுது, "ஏய், உன் கழுத்தைச் சாண் அளவு கைக் குட்டையால் ஒருதரம் துடைத்துக் கொண்டு விடேன்!"

என்று சொல்ல எனக்குத் தோன்றியது. ஆனால், எனக்குச் சிரிப்பது சாத்தியமில்லை. என்னுடைய உத்தியோகப் பரம்பரை என்னுடைய வெளிப்படைச் சிரிப்பைக் கொன்றே விட்டுவிட்டது. எனக்குச் சிரிக்கத் தைரியமில்லை, ஏன், சிரிப்பதற்கு ஆண்மையில்லை என்று கூடச் சொல்லி விடலாம்.

" ஏன் ? "

" அன்று நான் வந்த விஷயம் எப்படியாயிற்று ? "

" எந்த விஷயம் ?"

" என் மகனின் விஷயம்."

" அதுவா ? அதை இன்றே தீர்த்து வைக்கிறேன் ! "

அவள் மீண்டும் அழுதாள். அழுதாள் என்பதென்ன ; தன் கண்களை ஒரு சாண் கைக்குட்டையால் ஒற்றிக்கொண் டாள். அவள் உடனே எழுந்து நின்று, ஆவேசம் வந்தவள் போலப் பேசினாள் :

" ஓய் ! நீர் ஒரு உத்தியோகாறன் என்று தேடி வந்தால் எனக்கு ஞாபகம் பேசுகிறீர், என்னுடைய பிள்ளையை இன்று என்னுடைய கையில் ஒப்படைக்க வேண்டும்."

" அம்மா, அந்தப் பிள்ளை உங்களுக்கு எப்படி வாய்த்தது ? "

" அது என் பிள்ளை."

" எப்படி ? "

" என் பிள்ளை என்று கூறுமிடத்து, நீர் திருப்தி அடைய வேண்டும்."

எனக்குக் கோபம் வந்தது, இந்தச் சினிமாக்காரியின் உதாசீனத்தைச் சகிக்க வேண்டுமா என்று !

" இந்தக் குழந்தை உன்னுடைய திருமணத்தால் பிறந்த குழந்தையானால் உன் கணவன் இங்கு வந்து நிற்க வேண்டுமே ! அவன் அல்லவோ குழந்தைக்காக வாதாட வேண்டும்."

அவள் மீண்டும் அழுதாள். அத்துடன் அந்த மூதாட்டியும் வந்தாள். அவளுடைய ஒக்கலையில் ஒன்பதுவயதுக் குழந்தை ஒருவன் இருந்தான். என் மனம் மிகவும் சங்கடப் பட்டது. இதை எங்ஙனம் இருவர் மனமும் நோகாமல் தீர்த்து வைக்கலாம் என்று !

அந்த மூதாட்டி சொன்னுள் :

" நயிந்தை, இது என்ரை பிள்ளை. நயிந்தை எண்டாலும், மற்றது சுப்பிறீம் கோட்டு ராசா எண்டாலும், என்ரை பிள்ளையைப் பறிச்சு, இந்தப் பொம்பிளையிட்டை குடுக்கிற தெண்டால் அப்ப என்ரை உசிர் என்ரை உடம்பிலை இருக்கும் எண்டுதான் நயிந்தைக்கு எண்ணமோ ? "

" பெத்தா, யார் அப்படிச் சொன்ஞர்கள் ? யான் அப்படி ஒருநாளும் சொல்லவில்லை. ஏன், உன்னுடைய பிள்ளை என்று கூறுகின்ருய் ? "

" நான் பெத்த பிள்ளை இல்லை, நயிந்தை, வளர்த்த பிள்ளை ! இந்தப் பிச்சைச் சம்பளம் பத்து ரூபாயை வைச்சுக் கொண்டு, அதோடை என்ரை பிள்ளைக்கு காற் சட்டை சப்பாத்து வாங்கிக் குடுத்து, அதை ஒரு ஆளாக்கி விட எண்டுதான் எண்ணினன் நயிந்தை."

எனக்கு எல்லாம் புரிந்து விட்டது. என் மனத்தை மறுபடி என்னவோ செய்தது.

" இந்தப் பிள்ளை உண்மையில் யாருடைய வயிற்றில் பிறந்தவன் ? "

" ஏன் நயிந்தை, என்ரை வயித்திலை அல்லது என்ரை மேனின்ரை வயித்திலே இப்படி பிள்ளை பிறக்கப்படாதோ?"

நான் சொன்னேன், " இந்தக் குழந்தையின் சம்மதத்தை முதலில் கேட்கலாம் " என்று.

" ஓம் ஐயா ! "

" ஆம், அப்படியே. குழந்தை, உன் அம்மாவிடம் வருகிருயா ? "

அழுகை!

"ஐயோ, என்ரை குஞ்சு என்னத்துக்கு அழுகிறார்! நான் வளத்த குஞ்சு!"

அந்த சினிமாக்காரி போன்றவள் மறுபடியும் விம்மினாள். என் மனம் அவள்பால் பெரிதும் வயிரம் அடைந்திருந்தாலும் சிறிது இளகிற்று.

"நயிந்தை, உந்த மாய்மாலங்களுக்கு நீர் இளகப்படாது. என்ரை பிள்ளை என்னோடை எப்பவும் இருக்க வேணும்." அவள் மறுபடி சிரித்தாள். "நயிந்தைக்கு வயது போதாது போலை; அதுதான் இப்பிடி யோசிக்குது......"

நான் மறுபடி சிரித்தேன். எனக்குச் சிரிப்பதற்கு ஒன்றும் இல்லை. ஆனால், இது என்னுடைய கடமை.

"நான் யோசிக்கவில்லை, மாதி."

"நயிந்தைக்கு விளங்கிச்சிதோ?"

"என்ன மாதி, எனக்கு நீயா என்ரை உத்தியோகத்தைச் சொல்லித் தரப்போறாய்?"

"என்ன நயிந்தை சொல்லுகுது?"

"நான் என்னத்தைச் சொல்லுகிறது? இது உன்ரை பிள்ளை இல்லை — உன்னைப் போன்ற வயோதிப மாதிற்கு இந்த வயதிலே இப்படி ஒரு இளம் வயதுப் பிள்ளை எப்பிடிப் பிறக்கும்? இது உன்ரை பேரப்பிள்ளையும் இல்லை."

அந்த நவநாகரிக நங்கை உடனே எழுந்து நின்றாள். அவள் எழுந்த உடன் வாசனை என் முகத்தில் வந்து வீசியது.

"என் பிள்ளை எனக்கு இல்லையோ?" என்றாள். "உமக்கு இந்த உத்தியோகம் தகாது!"

"அம்மா, ஏன் இவனை உங்கள் மகனென்று கூறிக் கொள்கிறீர்கள்?"

" அது நான் உமக்கு எதற்குக் கூறவேண்டும். நீங்கள் தான் நீதி செய்ய மாட்டேன் என்று கூறிவிட்டீர்களே!" அவள் வேகமாக எழுந்து 'நைலான்' ஆடை சிலுசிலுக்க நடந்துவிட்டாள்.

நான் கலங்கினேன், மாதி சிரித்தாள்.

" நயினந்தை, என்ன ஒரு மாதிரித் துக்கமாய் இருக்குது. என்ரை பிள்ளையை அந்தத் தேவடியாளிட்டைப் பறிச்சுக் குடுக்கேல்லை எண்டது போலை துக்கம்? என்ன நயினந்தை?"

என் மனம் உடனே தெளிவு பெற்றது.

" மாதி, என்ன விஷயம்?"

" என்ன நயினந்தை! பாவத்துக்குப் பிள்ளைப் பெத்தா பரியாரி என்ன செய்யிறது? நான்தான் என்ரை 'சீமாட்டிக்கு' ஒரு எதிரி! வா, மேனே போவம்! இந்தக் கிழட்டுக் கட்டை இருக்கும் வரைக்கும் என்ரை 'ராசாத்தியை' ஆரேன் கொண்டு போறதெண்டால், எடியே என்ரை ராசாத்தி, உடனை நானும் யமராசாவோடை போடுவன்."

அணிற் குஞ்சுகள் —

முருகையன்

# தரிசனம்
## (கவிதை நாடகம்)

நாடக மாந்தர்: ஒருவனும், ஒருத்தியும்.

'உகமுடிவிதுவோ? ஒழிவுறு கணமோ? உயர்வுகள், மகிமை பல சாய உடைகிற பகலோ, இது? என மிகவும் உலைகிற நினைவோடு உயிர் குன்றி, சகம் முழுவதுமே தகர்கிற தினமோ? சகலமும் ஒழியும் நிலைதானோ? தரை இனி இலதாய் அழிவது நிஜமோ? தகுதிகள் கெடவோ?' எனுமாறே.........

ஊழிக்கடையின் பெருவெள்ளம் ஓடிப்பெருகிப் பிரளயமாய், ஆழித்தரங்கமாய், எதையும் அள்ளி எடுத்துப் போயிற்று.

முக்குளித்தனர்; மூச்சுத் திணறவும், 'மொகுமொகென்ற' புனல் அவர் மூக்கினது உட்புகுந்தது; திக்கித் தவித்தனர். உயிர் கலங்கி மறுபடி மீண்டது. அக்கணத்தில் அவர்களை வெள்ளமோ அகன்ற மேருவில் அள்ளி எறிந்தது. 'பக்கென்று' அந்த அதிர்ச்சி ஒழிந்ததும், பரபரப்புடனே எழலாயினர்.

அங்கு மேற்கிலே ஆதவன் மறைவதைக் காண, இங்கு நின்றவன் ஒருவன் முன் ஒருத்தி வந்திருந்தாள்.

... அ...ம்...மா ......! — என்ன? முழங்கால் கூடவா?
அடிகள் உண்மையில் பலம் தான்......சுழற்றி
மூசிய புயலின் முரட்டுக் குழப்படி
எத்தனை கொடியது? ... யாரது?
— நான்தான்.

— நீயா ? யார் நீ ? என்ன செய்கிறாய் ?
பிரளயம் முடிந்ததே அல்லவா ? பின்னும் நீ
மிஞ்சியிருப்பது வியப்பே ஆகும்.
உலகம் முழுவதும் ஒழிந்ததென் றிருந்தேன்.
கலகம் அனைத்தும் கழிந்ததென் றிருந்தேன்.
குழப்பம் விளைக்கும் கொடுமைகள் எல்லாம்,
அமைதியைக் குலைக்கும் அல்லல்கள் யாவும்,
தொலைந்துபோயிருக்கும் என்று நான் நம்பினேன்.
அனைத்தையும் கல்லி, அறுத்துப் பெயர்த்து
நனைத்துக் கழுவிக் கரைத்து விழுங்கிப்
புரண்டு விரைந்த பிரளயம், எனது
புலன்களை மழுக்கி, போதம் மறைத்து
மயங்க வைத்ததும் உண்மைதான். ஆயினும்,
வேண்டாதவைகள் எல்லாம் ஒழித்துத்
துடைத்தேயிருக்கும் என்று நான் நினைத்தேன்.
ஆனால், நீ யார் ? எப்படித் தப்பினாய் ?
விந்தை தான் !

— ஓகோ ! ...

— விளையாட்டென்ன,
இந்த வேளையில் ?......எதற்கு நீ நிற்கிறாய் ?
— அதிர்ச்சியில் மழுங்கிய கட்புலக் காட்சி
இன்னும் திறக்கவில்லையா, தெளிவாய் ?
அன்றியும் இதுவோ மாலை வேளை;
மைம்மலில் எதுவுமே மங்கலாய்த் தெரியும் !
— என்ன நீ சொல்கிறாய் ? இங்கே சற்றே
இரு நீ, அந்தப் பாறையில். நாங்கள்
ஆறுதலாக அனைத்தையும் பேசலாம்.
— என்ன பேச்சிது ? கண்களைக் கொஞ்சம்
இந்தப்புறமாய்த் திருப்புக ; உண்மையில்
அரை நாழிகையாய், அருகில் — இப்பாறையில்
இருக்கிறேன் தானே !

— நிற்கிருய் என்று தான்
நினைத்தேன்.........

— கொஞ்சம் திரும்பிப் பார்த்தால்
உள்ளது தெரியுமே, உள்ளவாருக !

*மங்கை ஆர்? என மதித்தவன், முகத்திலோர் மாற்றம் தங்க, உற்றுள தையலை ஒரு தரம் பார்த்தான்.*

— என்ன ஊமையா நீங்கள் ?

— இல்லை.........

*வாய் திறந்திலர் ஒருவரும். மனம் கலந்திடவும் போய் இரண்டு கண் பொருந்தின ; பிறந்தது புதுமை. 'நீ இருந்து கொள். நானும் இங்கு இருக்கிறேன்' எனவோ, ஆயும் நல்லிழை அகல்விழியால் உரைக்கின்ருள் ?*

பிரளயம் உன்மேற் பிரியம் வைத்து
மிச்சமாய் விட்டது மிகவும் நல்லது.
மெச்சினேன், இயற்கையின் விசித்திரப் போக்கினை.
அச்சா ! அது தான் அழகு !!

— நானே,
ஏனே பிழைத்தேன் என்று தான் வருந்திக்
கவலைப்படுகிறேன்.

— என்னடி சோர்வு ?
காலை மலர்ந்ததும் கதிரவன் வருவான்.
புற்களும் முளைக்கும் ; பூங்கொடி தழைக்கும் ;
நெற்பயிர் நிமிரும் — நிறைபயன் கொழிக்கும்.
நாங்கள் இருவரும் அருந்தி, அருந்தி,
நுகர்ந்து, நுகர்ந்து, நுகர்ந்து திளைக்கலாம்.

— ஆனல், சுற்றிலும் எவ்வளவு இருட்டு ?

— பனியோ கொடியது. பற்கள் கிடுகிடுத்து
உயிரையே துளக்கி உலைத்திடும் போலும் !
சட்டையோ ஈரம் ; சற்றே அதனை
உலர்த்த எண்ணினல்......ஒரு வழி காணேம்.

மேனியில் வெப்பம் விளைவிக்காது நாம்
இப்படியாக இருப்போமானால்,
குளிரே நமது குருதி முழுவதும்
உறையும்படியாய் ஒடுக்கவும் கூடும்.

— சரி, சரி, வாரும். சும்மா இங்கே
பேசி இருந்து பெரும் பயன் என்ன?

— இன்னும் கொஞ்சம் இருக்கிப் பிடியடி,
கையை..........நன்ருய்...........

— காணுமா?

— இன்னும்.........
பற்றிய நெருக்கம் பனிக்குளிர்ப் பகையை
முற்றுகையிட்டு முடிக்க வல்லது.
எல்லாம் சரி தான். எங்கே போகிரேும்?
செல்லும் வழியும் திசையும் இருண்டு
மயங்கிய வேளையில் வழியறியாமல்.........

— தயங்கி நின்று தவித்தல்தான் நல்லதா?
அப்படியானல் அவ்விதம் செய்வீர்.
எப்படியோ நான் என் வழிப் போகிறேன்.

— வேண்டாம் அன்பே! விரல்களைத் தளர்த்த
வேண்டாம். இன்னும் விருப்புடன் நெருக்குவாய்.
எங்கே வரும்படி என்னை அழைப்பினும்,
அங்கே நானும் உன் அடிகள் தொடருவேன்.

— அப்படி வாரும் வழிக்கு.

— என்
ஆசைக் குமரி நிகழ்த்தும்
சொற்படி தானே நடக்கும்,
துண்டப்பட் டாடும் என் ஆவி?
தப்பு விடை சொல்லிவிட்டால்,
தயவு புரிந்து பரிந்தே,

ஒப்பி என் குற்றம் பொறுத்தல்
உன் கடனும் ......

— சரி, வாரும்.

— எங்கு செல்கிறோம் என்பதைச் சொல்வதில்
மங்கை, என்ன தயக்கம்?

— அதோ! புதுத்
தங்கமோ எனுமாறு தகதகத்து
இங்கும் அந்த ஒளி வருகின்றதே!

— ஒன்றுமே என் விழியிலே பட்டிலது,
என்ன செய்யலாம்?

— ஏன், அதோ! அங்கு தான்
பாரும், அந்தப் பராபரன் கோயிலின்
சீர் மிகுந்த திருந்திய கோபுரம்.
வாரும், அங்கு வணங்கலாம் சென்று, நாம்.

— ஒன்றுமே தெரியவில்லை.
உன் சொல்லைக் கேட்டு, நம்பி
அன்றோ, நான் தொடருகின்றேன்?

— அதோ மின்னல்! அமிர்த ஜோதி
என்று தான் சொல்ல வேண்டும்,
எழுங் கோயிற் கோபுரத்தில்
நின்ற பொற்கலசம் என்ற
நிறையொளிப் புதுமை தன்னை!

— கண்டாயே போலும்! நானோ
கதிரொளிப் பளிச்சுப் பாய்ச்சும்
திண்டிரட் சுடர்கள் தாக்க
விழிகளை மூடிக்கொண்டேன்.

— கண்டாலும், காணீரேனும்
கருத்திரண் டெதற்கு வேண்டும்?
உண்டென்று சொல்லுகிறேன், நான்.

— ஒப்பவே வேண்டும் போலும் !

தனிமையான அமைதிசால் சூழலில், இனிமையான எழிலொடும், ஏகிறுன். கனிவிஞேடு, அவள் காதல் கலந்தனள். வனிதையாள்பின் அவ்வாலிபன் போகிறுன்.

போனவர்கள் கோபுரவாசலிஞல் உள்ளே புகுந்தார் கள். மண்டபத்தில் நுழைந்தபோதில்......

ஏன் நுழைந்தோம்? பெரிய தவறு இழைத்தோம்,
அன்பே !

இருட்டில் ஒன்றும் தெரியவில்லை. படிக்கல் தட்டி
நான் விழுந்து போய்விட்டேன்.

— என்ன ? ஆ.........! ஆ.........!!
நனைகிறதேன் எனது விரல்? இரத்தமா ? ஆ...... !

வாலிபனின் கால் தொட்டு, முழங்கால் தொட்ட மங்கை நல்லாள் பதறிவிட்டாள் ; மயங்கிச் சாய்ந்தாள்.

என்ன செய்வான் வாலிபனும்? பாவம்! அங்கே இருந்தபடி இருக்கின்முன், செயலிழந்து. மின்னனையாள் விழுந்தவள் தான் ; விழிக்கவில்லை. வெகு நேரம் இவ்வாறு கழிந்துபோன பின்னர், அவள் முனகலுடன் சில சொல் மெல்லப் பேசுதற்குத் தொடங்குகிருள். அவனுக்கோ தன் சென்ற உயிர் மீண்டது போல் மகிழ்ச்சி மூட்ட, சிரும்ப லுற்ற முழங்கால் நோ மறந்துபோனுன்.

எங்குள்ளேன் நான்? என்ன செய்கின்றேன்? ஏன்?
யார் மடியில் எனது தலை வைத்துள்ளேன்? ஓ!

— மங்கைநல்லாய், உன் மயக்கம் தெளிந்துபோச்சா ?

— மகிழ்ச்சி என்ன அதற்காக ?

— பேச வேண்டாம்.
அசையாதே அன்பே, நீ எங்கு செல்ல
அவ்வளவு துடிக்கின்முய் ? அதற்குள்ளே நீ
விசையாக எழுந்திருத்தல் நல்லதன்று.
வேண்டாம், நீ பழையபடி படுத்துக்கொள்வாய்,
மடிமீது தலையினை வை.

— மாட்டேன், போங்கள்.
மயக்கம் ஒன்று வந்ததுண்டே! அதனால் என்ன?
விடுவோமா எங்களது லட்சியத்தை,
விழுந்துவிட்டோம் வாசலிலே என்பதற்காய்?

— உள்ளேயோ கசை இருட்டு. மேலும் போனால்
உடைந்துவிடுவோம், நாங்கள் தூணில் மோதி.
எள்ளளவும் உயிர்மீதில் ஆசை உண்டேல்,
இவ்வாறு பிடிவாதமாக உள்ளே
செல்வதற்கு முயல்வாயோ? தயவு செய்து
திரும்புதற்குச் சம்மதிப்பாய்.

— வெளியில் மட்டும்
ஒளி நிறைந்த முழுமை நிலா வானமீதில்
உலவி வருகின்றதுவோ?

— அங்கு கூட
இருள் எனினும், திறந்த வெளி ஆகையாலே
எதனோடும் மோதிவிடும் அபாயம் இல்லை.

— சரி, சரி, ஏன் பல கதைகள்? உயிரின் மேலே
தணியாத ஆசை உள்ளதாலே தானே,
இருளிடையே முன்னேறி நகர்ந்தென்றாலும்
எம்பெருமான் அமர்ந்திருக்கும் மூலத்தானக்
கருவறையை நாம் அடைதல் வேண்டும்? ஆமாம்,
கட்டாயம் நீங்கள் இதற்கு உதவ வேண்டும்.
ஆலயத்தின் கருவறையை அடைந்த பின்னர்
ஆவி அகன்றிட்டாலும் பரவாயில்லை.

— அது தான் உன் விருப்பம் எனில், மறுத்துப் பேசி
ஆவதென்ன? தவழ்ந்து செல்வோம், வருகின்றாயா?

— வருவதற்குத் தடையில்லை. ஆனால், அந்த
வாசலிலே படிக்கல்லுத் தட்ட வீழ்ந்து
குருதி பெருக்கிய உங்கள் முழங்காலோடு
குனிந்திருந்து தவழ்வதற்கும் இயலாதன்றோ?

— நான் மறந்தே போய்விட்டேன். அவ்வாருனல் நகர்ந்து நகர்ந்தே வருவேன், உனக்குப்பின்னல்,

*சிவந்த இதழ்ச் சிரிப்பாளி தவழ்ந்து சென்ருள். சிறிது சிறிதாய் நகர்ந்து சிறந்தோன் போனன்.*

*கருவறையின் படிக்கட்டை இருபேரும் அடைந்தார்கள். களிப்பு மிஞ்சிப் பெருகுகிற சிந்தையளாய் அவள் மூலத்தானத்தைப் பார்க்கலானுள்.*

இருளில் ஒன்றும் தெரியவில்லே. என்ன செய்வோம் இனி, அன்பே?

— மூலமூர்த்தி
அருள் இருந்தால், அது போதும். அத்திசையை நோக்குங்கள், வணங்க.

— ஆனல் ...

உள்ளதுவோ, இல்லதுவோ, ஒன்றிரண்டோ,
பலவோ என்று அறியா ஒன்றை
உள்ளுருகி எப்படி நான் ஊனுருகி
வணங்கிடுவேன்?

— ஓகோ! சற்றுத்
தள்ளி இரண்டறைக்கப்பால் தீப அறை
உள்ளது. அங்கு சென்று தேடி
வெள்ளி விளக்கு எடுத்துவந்தால், அனைத்தையுமே
வெளிவெளியாய்ப் பார்க்கலாகும்.

— அப்படியா?

— வாருங்கள், அதோ, பாதை.
தீப அறை நோக்கிப் போவோம்,
எப்படியும் தரிசித்தே விடவேண்டும்
என்கின்ற எண்ணத்தாலே!

*இவை கூறி, அவனுடைய கைப்பற்றி, தீப அறை நோக்கிப் போனள். அவள் பாதை தன் பாதை ஆக்கி அவன் நகரலுற்ருன். இரண்டு பேரும் ஒருவாறு வந்தடைந்தார், விளக்கிருக்கும் அறைக்கு அருகில்.*

உந்தித் தள்ளித்
திருவாயில் தனைத் திறப்பீர், கவனமாய்.........

— இதோ !
சேச்சே........ எல்லாம் போச்சு.........

*கதவு 'படீர்' எனத் திறக்க, காற்று 'குபீர்' என நுழைந்த காரணத்தால், இதுவரையும் எரிந்திருந்த விளக்கு அணைந்து போயிற்றே! என்ன செய்வார்? உதவி இனி வேறென்ன? உலகமெங்கும் கவிந்த இருள் உள்ளும் சூழ, கதியறியாது அங்கேயே சாய்ந்துவிட்டார், இருபேரும், கதவின் அண்டை.*

இனி என்ன செய்திடலாம்? நீயே சொல்.

— ஐயையோ ! என்னைக் கேட்டால்?
பனி வெளியே, இருள் கொடிது, விளக்குமில்லை.
விடியுமட்டும் இங்கேயே தான்
தனிமையில் இவ்விரவுதனைக் கழித்திடுதல்
வேண்டும்.

— அதைத் தவிர மார்க்கம்?
கனிமொழியே ! உன்னுடைய விருப்பம்போல்
ஆகட்டும்.

— தலையை இங்கென்
மடிமீதில் வையுங்கள்.

— கண்ணயர விருப்பமில்லை ; காத்திருப்போம்.

*'என்று விடியும்? விடியும் எனில், இருளும் தொலைந்து பகல் மலரும். நன்று புதிதாய்ப் பிறந்துவரும். நாளை ஒன்று சிறந்து வரும். வென்றி மிகுந்து பூரித்தே வெயிலோன் வருவான்' எனவெல்லாம் அன்றில் இணையை அனைய வர்கள் ஆவலோடு காத்திருந்தார்.*

*ஆவலோடு காத்திருந்தார், அவர்கள். அங்கே ஒளி கூட்ட, தீபம் இல்லையானாலும், தெம்பு மிகுந்து, நெஞ்ச கத்தே மேவி, விளக்காய் மின்னியது. விளக்கின் ஒளியை, மங்காமற் காவல் காத்தார் இருபேரும். காலம் மெல்ல நகர்கிறது.*

செந்தூரன்

# உரிமை எங்கே?

காலை மூன்று மணி. பறங்கி மலைத் தோட்டம் ஏழாம் நம்பர் 'லயத்தில்' உள்ள சுப்பையா நாயக்கரின் 'காம்பிராவி'ல் கொழுந்து கணக்குப் பிள்ளையிடம் கைமாற்றாக வாங்கிய 'அலாரம்' கணீர் என்று ஒலித்தது. வழக்கத்திற்கு மாறாகத் தூங்காமலே கனவு கண்டு கொண்டிருந்த சுப்பையா நாயக்கர் மணியோசை கேட்டதும் எழுந்து விட்டார். எழுந்தவர் சும்மாயிருக்கவில்லை. நாள் முழுவதும் உழைத்த களைப்பால் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்த மனைவியையும், பிள்ளைகளையும் திட்டிக்கொண்டே எழுப்பினார் சுப்பையா.

"சனியனுங்க! நேரம் போச்சேன்னு கொஞ்சமாவது யோசனை இருக்கா? வெறகு கட்ட மாதிரில்ல ஆயியும், பிள்ளைகளும் கெடக்குதுக. ஏ, புள்ளே, மீனாட்சி! ஏந்துருடி! எந்திரிச்சி அடுப்புப் பத்த வைச்சிப் புளிச்சாறு கட்டிடு. விடிஞ்சு வெள்ளக்கோழி கூவிடிச்சே, காது கேக்கலே? காதுல என்ன மத்துக்கட்டையா வச்சு அடைச்சிருக்கு?" என்று சத்தமிட்டுக் கொண்டே மீனாட்சியை எழுப்பினார் நாயக்கர்.

"என்னங்க! என்னிக்கும் இல்லாத புதுமையா இன்னிக்கு என்ன வந்திரிச்சு? காலங் காத்தாலே எந்திரிச்சு ஏன் இப்படி சத்தம் போடுறீங்க?" என்றாள் அரைத் தூக்கத்திலிருந்த மீனாட்சி.

"ஆமாடி, வந்திரிச்சு! நமக்கு நல்ல காலம் இன்னிக்குத்தான் பொறக்கப்போவுது. இன்னிக்கே கண்டியிலே போய்ச்-

சத்தியம் செஞ்சிப்புட்டா, நாமெல்லாரும் இந்த நாட்டிலே 'பெரசை' ஆயிரலாமுடி. வரச்சொல்லி 'கண்டுரோலர்' எழுதியிருக்காருன்னு நேத்துச் சொன்னேனே; அறிவில்லே, மூதேவி, ஏந்துருடி! அடியே, செகப்பி! நீயும் ஆயோடு சேந்து தூங்காம, சட்டுப்புட்டுனு வேலையைப் பாரு. ஆறு மணி பஸ்லே போவணும். தேத்தண்ணி, கீத்தண்ணி குடிச்சுருதீங்க; அப்புறம் பஸ்ஸிலே வாந்தி எடுப்பீங்க" என்று படபடவென்று கூறிக்கொண்டே வெளியில் சென்றார் நாயக்கர்.

சுப்பையா நாயக்கருக்கு அன்று நிலை கொள்ளவில்லை. ஆமாம், இருக்காதா என்ன? எத்தனை ஆண்டுகள் அந்த ஒரு கடிதத்திற்காக அவர் தவியாய்த் தவித்தார். ஓராண்டா, ஈராண்டா? பத்தாண்டுகள் எப்படியோ ஓடி மறைந்து விட்டன. அவருடைய பாட்டன் இந்தியாவி லிருந்து வந்தது ஏதோ உண்மைதான். சுப்பையாவின் தந்தையோ கடலைப் பற்றிக் கேள்விப்படாமலே தேயிலைக்கு உரமானார். சுப்பையாவுக்குக் 'கடல் என்ன நிறம்? எப்படி இருக்கும்?' என்று கண்டவர்கள் சொல்லக் கேள்வி தானேயன்றிக் கண்டதேயில்லை. ஈழத்தின் மத்தியப் பகுதி யில் இருக்கும் ஒரு தேயிலைத் தோட்டத்தில் உழைக்கும் ஒரு தொழிலாளிதான் நாயக்கர். சுமார் பதினொரு ஆண்டு களுக்கு முன்னர் — பிரசா உரிமைச் சட்டம் வந்த புதிதில் — தம்மையும், தம் குடும்பத்தையும் இலங்கைப் பிரசைக ளாய்ச் சேர்த்துக் கொள்ளுமாறு மனுப்போட்டவர்களில் அவரும் ஒருவர். மனுப்போட்டதும் உரிமை கிடைத்து விட அவரென்ன இலட்சாதிபதியா? எத்தனை விசாரணை கள்? எவ்வளவு பணச் செலவு, அலைச்சல்? அப்பப்பா, அவர் தம் பிறப்புரிமையைப் பெறும் பொருட்டு, பஸ்களுக் கும், கடிதம் எழுதுபவர்களுக்கும், தபால் அலுவலகத் துக்கும் கொடுத்த பணம் இன்று அவரிடம் இருந்தால்

குறைந்தது ஐந்து ஏக்கர் தேயிலைத் தோட்டத்திற்காவது அவர் அதிபதியாக இருந்திருப்பார்! பாவம், இத்தனை இன்னல்களுக்குப் பின்னர், ஒரு நாள் அந்தக் கடிதம் வந்தது.

"உனக்கும் உன் குடும்பத்தாருக்கும் பிரசா உரிமை தரப்படும். கண்டியில் வந்து, பிரசா உரிமைக் கமிஷனர் முன்னிலையில் சத்தியம் செய்து, பிரசா உரிமை 'சர்டிபிகேட்' டைப் பெற்றுக்கொள்ளவும்" என்று தேதியும் குறிக்கப்பட்டிருந்த கடிதம் கிடைத்தால் சொல்ல வேண்டுமோ?

தோட்டத்துப் பெரிய கங்காணி, கண்டாக்கய்யா, கிளாக்கரையா, முதலியோருக் கெல்லாம் பிரசா உரிமை கிடைக்கு முன்னர் தமக்குக் கிடைக்கப்போவதில் அவர் உள்ளம் பூரித்தது. அந்த மகிழ்ச்சியில் பூத்த கோபத்தில் தான் காலையில் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்.

பதினறு கல் தொலைவில் இருக்கும் கண்டி நகருக்குச் செல்வதென்ருல் தோட்டத்து மக்களுக்குத் தனி உற்சாகம். நாயக்கர் மாத்திரம் அதற்கு விதி விலக்கா? ஓட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்துக்கொள்ளாதல்லவா? அதனல் பகல் உணவுக்காகப் புளிச்சாதம் கட்டிக்கொண்டு, புதிய ஆடைகளையும் அணிந்து, குடும்பத்தோடு காலை 5-45க்கு நல்ல நேரம் பார்த்து, வீட்டைத் தாளிட்டுக் கொண்டு புறப்பட்டார். அன்று வேலைக்குச் செல்வதற்காகக் காலையிலேயே எழுந்து, 'பிரட்டு'க்குச் சென்று கொண்டிருந்த தம் நண்பர்களிடம் தாம் செல்லும் விடயத்தைக் கூறி விடை பெற்ருர். 'பிரட்டு'க்குச் சென்று கொண்டிருந்த பெரிய கணக்குப் பிள்ளையும் வழியில் சந்தித்தார்.

"என்ன நாயக்கர், எங்கிட்டு இப்பிடிக் குடும்பத்தோட விருந்தாடக் கிளம்பிட்டே?" என்று வியப்புடன் கேட்டார் கணக்குப் பிள்ளை.

"விருந்தாடி ஒண்ணுமில்லீங்க. கண்டிக்கு, பெரசா உரிமைதர வரச் சொல்லியிருக்காங்க, கணக்குப் பிள்ளையா. அதுக்குத்தாங்க போறேம்" — மகிழ்ச்சியோடு கூறினர் நாயக்கர்.

"ஓகோ! அப்படியா சங்கதி. நீ கொடுத்து வெச்சவன். நாங்களும்தான் எழுதி எழுதி, ஒரு இழவையும் காணேம்." பொருமையோடு வெளிவந்தன கணக்குப் பிள்ளையின் சொற்கள்.

"எல்லாம் ஏழு மலையான் கண் பார்த்ததுங்க, இல்லாட்டி எனக்கு இப்போதைக்கு இந்தப் பாக்கியம் கிடைக்கப்போவுதுங்களா? சரிங்க.........பஸ்ஸுக்கு நேரமாகுதுங்க நான் வாரேங்க" என்று விடைபெற்ருர் நாயக்கர்.

நாயக்கரின் அவசரத்தைப் பஸ் போக்குவரத்துச் சபை அறியவில்லை போலும், அன்றைக்கென்று பஸ் பத்து நிமிடங்கள் தாமதித்தே வந்தது. அதற்குள் நாயக்கர் இலங்கை போக்குவரத்துச் சபையையே சபித்துக் கொட்டிவிட்டார், வழக்கமாக காரசாரமாகப் பேசாத நாயக்கர் அன்று சிறிது கடுமையாகவே ஏசினர்.

"மடப்பயலுக! நேரங்காலத்திற்கு வந்து தொலையிருனுங்களா? அரசாங்க உத்தியோகமின்னு அவிங்க நெனச்சபடி நடக்க நாங்க என்ன ஏமாளிங்களா? இவங்களுக்கு ஒரு 'பெட்டிசன்' எழுதிப் போட்டாத்தான் சரிப்படும்" என்று உரிமையோடு திட்டிக் கொட்டினர். ஆமாம், இன்னும் சிறிது நேரத்தில் அவரும் இந்நாட்டில் உரிமையோடு பேசப்போகிற பிரசை தானே? அதனை இப்போதே போக்குவரத்துச் சபையில் ஒத்திகை செய்து பார்த்தார்.

வண்டியும் வந்தது. ஏதோ பதினைந்து இருபது ஆயிரங்கள் கொடுத்து வாங்கிய தமது சொந்தக் காரில் ஏறி இருக்கப் போகும் உற்சாகம் அவருக்கு. 'பஸ் சாரதியும், டிக்கட் கலக்டரும் தமது சேவகர்கள்' என்ற

எண்ணம் உரிமையைப் பெறுமுன்னரே அவர் உள்ளத்தில் தோன்றி விட்டது. எவ்வளவுதான் உரிமை உடையவராயினும் டிக்கட் கலக்டருக்கு அவர் தோட்டக் காரனாகத் தான் காட்சி அளித்தார், பாவம்!

“ஏய், வாந்தி போடற மனுஷனெல்லாம் பின்னுக்குப் போ!” என்று தமக்குத் தெரிந்த தமிழில் அவரிட்ட கட்டளை, நாயக்கரையும் குடும்பத்தையும் வண்டியின் இறுதி ஆசனத்துக்கே அனுப்பிவிட்டது. நாயக்கருக்கோ அவரின் கட்டளை கோபத்தைக் கிளறியது. இருப்பினும், குடும்பத்தோடு வந்தபடியால் தகராறுக்குச் செல்ல மனம் கூசியது. அமைதியாக இருந்துவிட்டார்.

மலைகளையும் ஆறுகளையும் கடந்து தேயிலைத் தோட்டங்களினூடே வளைந்து வளைந்து செல்லும் சாலையில் ஓடிக் கொண்டிருந்தது வண்டி. சாலையின் இரு மருங்கிலும் அழகாய்ப் பச்சைப் பசேலென்று காட்சி தந்த தேயிலைச் செடிகள், தமக்கு உணவளித்துப் பாதுகாக்கும் இனத்தைச் சேர்ந்த ஒருவருக்கு இந்நாட்டு உரிமை கிடைக்கப் போகிறது என்ற மகிழ்வில் கம்பீரமாகக் காட்சி தந்தன. அவற்றைப் பார்க்கும் போதெல்லாம் நாயக்கரின் உள்ளம் பூரித்தது. அப்பொழுது எழுந்த பூரிப்பில் அவர் தம்மையே மறந்தார். மகிழ்ச்சியின் எல்லையும், வண்டியின் வேகமும் அவரது எண்ணத்தை எங்கோ இழுத்துச் சென்றன.

* * *

அடேயப்பா! முதன்முதலில் பிரசா உரிமை மனுப் போடும் பொழுது, ‘தமக்கு இந்நாட்டில் உரிமை கிடைக்காது’ என்றே கருதினார் நாயக்கர். அவர் ஈழத்தில் பிறந்ததற்கு ‘ருசு’ இல்லை. அவரது தந்தை செய்த தவறினால் பெயரில்லாத ‘பிறப்புச் சாட்சிப் பத்திரம்’ தான் ‘கச்சேரி’யில் இருந்தது. அதை வைத்துக் கொண்டு எப்படி வாதாடுவது? ஒன்றுமே அவருக்குப் புரியவில்லை. இருப்பினும், ‘ஒரு கை பார்த்துவிடுவோம்’ என்றுதான் எல்லோ

ரையும் போல் மனுப் போட்டார். 'இந்த ஊர் இல்லாட்டி, வேறே எங்கேதான் தள்ளுவான்? அதையும் பார்ப்போமே' என்ற அசட்டுத்தைரியம் அவர் உள்ளத்தில் அப்பொழுது இருந்தது. துணிந்துவிட்டார் நாயக்கர்.

ஆண்டுகள் ஆறு. எங்கும் பிரசா உரிமைப் பேச்சிலேயே உருண்டோடின. ஒருநாள் சுப்பையா நாயக்கரையும் குடும்பத்தாரையும் மூன்றும் முறையாக விசாரிக்கக் கமிஷனர் வரப்போவதாகக் கிடைத்த கடிதத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே உரிமை கிடைத்துவிட்டதாக எண்ணினார். நாட்டுரிமையென்ன அவ்வளவு மலிவாகக் கிடைத்துவிடக்கூடிய கடைச்சரக்கா? அதுவும் நாயக்கரைப் போன்ற ஒரு தொழிலாளிக்கு! விசாரணை நடத்துவோருக்கு ஆயிரம் ஆயிரமாக 'லஞ்சம்' கொடுத்தவர்களுக்கே உரிமை கிடைக்கப் பல ஆண்டுகள் செல்லும்போது, இவருக்கு உடனே நாட்டுரிமை கிடைத்துவிட்டால், தொழிலாள வர்க்கத்திற்கே விமோசனம் கிடைத்த மாதிரித்தானே? வழக்கம் போல் அன்றும் விசாரணை நேரத்தில் அடுக்கடுக்காகக் கேள்விகள் கேட்கப்பட்டன. நாயக்கரும் சிந்தித்தே பதில் அளித்தார். சில கேட்கத் தகாத கேள்விகளும் கூடக் கேட்டார்கள், அவர்கள் — தமது பொழுதைப் போக்குவதற்காக. சுப்பையாவுக்கு அவர்களது 'பகிடி' எப்படித் தெரியும்? மிகவும் பயபக்தியோடு பதில் கூறினார்.

"ஆமாப்பா, உன் பொம்பளையை நீ உண்மையாகத் தான் கல்யாணம் முடித்தாயா?" விசாரணையின் இறுதிக் கட்டத்தில் கேட்கப்பட்ட மிகவும் முக்கியமான கேள்விகளில் ஒன்று இது.

"என்னங்க, இப்படி கேட்டுட்டீங்க? நம்ம மாரியம்மாவுக்குத் தெரியுங்க! ஆத்தா கோயில்லதாங்க நான் தாலி கட்டினேன்!! நம்ம தோட்டத்திலே எல்லாருக்கும் வெத்திலைபாக்கு வைச்சேங்க!!!"

"ஒகோ, அப்படியா! நீங்க ரெஜிஸ்டர் பண்ணலையா?"

"அதெல்லாம் இப்ப வந்ததுதானுங்களே. அந்தக் காலத்துலே அதெல்லாம் ஏதுங்க? — தமக்குத் தெரிந்த வரலாற்று உண்மையை அடிப்படையாக வைத்துப் பதில் கூறினார் நாயக்கர். பாவம்! வரலாற்றுக்கும் பிரசா உரிமைச் சட்டத்திற்கும் தொடர்பில்லையென்பது அவருக்கு எங்கே தெரியப் போகிறது?

"சரியப்பா, உன்னுடைய முதல் பிள்ளையும் மூன்றும் பிள்ளையும் இலங்கையில் பிறந்தாங்கன்னு 'புரூவ்' பண்ணறே. இரண்டாவது பிள்ளைக்கு 'புரூவ்' இல்லையே!" பெரியதோர் உண்மையைக் கண்டு பிடித்தார் உதவி விசாரணையாளர்.

"இது அநியாயமுங்க, எம்மவன் கந்தையா பொறந்த அன்னிக்கே, தோட்டத்து டாக்டரய்யாகிட்டே சொன்னேனுங்களே." பரிதாபமாகக் கூறினார் நாயக்கர்.

"நமக்கு அதெல்லாம் தெரியாது. உனக்குப் பிரசா உரிமை தரத்தகுந்த 'புரூவ்' இல்லை." என்று ஒரே அடியாகக் கூறி, நாயக்கரை வெளியே செல்லுமாறு பணித்தார், எதையோ எதிர்பார்த்த விசாரணையாளர்.

சோர்ந்த முகத்தோடு வெளியேவந்த சுப்பையாவைக் கண்ட விசாரணையாளரின் கார் சாரதி, "மெய்யே, விசாரணை முடிஞ்சுதோ?" என்று அக்கறையோடு கேட்டார்.

"ஆமாய்யா, 'புரூவ்' இல்லையாம்; பெரசா உரிமையும் இல்லையாம்." சுப்பையாவின் பதில் வெறுப்பாகவே இருந்தது.

"ஓ அதுவே, நானொன்டு சொன்றேன், கேப்பியோ?"

"என்னையா? சொல்லித் தொலை."

"இங்கார், அவைக்கு ஓராயிரம் இருந்தால் கொடுமன். சரிப்பண்ணி விடுவினம்." உரிமை பெறக் குறுக்கு வழியைக் காட்டினார் அந்த சாரதி.

"ஆ...ஆயிரமா...அடேங்கப்பா, நான் எங்கிட்டையா போவேன்? மூன்று புள்ளைகளையும் மூணு எடத்திலே ஒக்கார வைச்சாலும் அவ்வளவு கெடைக்காதே!" என்று ஏங்கித் தவித்தார் நாயக்கர்.

"பின்ன ஏனப்பா வந்த நீ? எங்கடை ஐயா, அவை உன்னைப்போல ஆள் கிட்டத்தான் ஆயிரம், மற்ற இடங்களி லெல்லாம் அஞ்சாயிரம் குறையாது. அப்பிடித் தானே பிரசா உரிமை வேண்டினம்." உண்மையை ஒளிவு மறை வின்றிக் கூறினார் சாரதி.

சுப்பையா நாயக்கருக்கு என்ன செய்வதென்றே தெரிய வில்லை. இந்த நாட்டிலே பிறந்து, இங்கேயே வளர்ந்து, காடுமலைகளைச் சீர்படுத்தி, நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த வெய்யில், மழை, பனி எதையுமே பாராமல் ஈழவள நாட்டை உயர்த்துவதற்குப் பாடுபட்ட அவர் — இன்று நாடற்றவராக நிற்பதா? திகைத்துப் போய் நின்றார் நாயக்கர்.

"ஏனப்பா நிக்கறே? நேரமல்ல போகுது. ஓடிப்போயி எண்ணூறுவது பார்த்துவா. நான் ஐயாகிட்டச் சொல் றேன்" என்று நாயக்கரின் அமைதியைக் குலைத்தார் சாரதி.

ஏதோ முடிவுக்கு வந்த நாயக்கர், "சரி" என்று அவசரமாக வீட்டுக்குச் சென்றார். சற்று நேரத்திற்குப் பின்னர் நூறு ரூபா நோட்டுக் கத்தைகள் ஐந்துடன் திரும் பினார். அந்தப் பணத்தைச் சாரதியிடம் கொடுத்து, "ஐயா, நீங்கதான் எப்படியாவது இதைக் கொடுத்து, பெரசா உரிமை எடுத்துத் தரணும்" என்றார் அழாக் குறையாக.

இப்படி எத்தனை இன்னல்கள்? எண்ணவே முடியாது. அத்தனையும் தன்னை இந்த நாட்டில் உரிமையோடு வாழத் தகுதி உடையவனாக ஆக்கிக் கொள்ளத்தானே? எத்தனை பேருக்கு எப்படி எப்படிப் பணம் கொடுக்க முடியுமோ அந்த

வழிகளிலெல்லாம், தாம் அறியாமலே, தம்மால் இயன்ற தொகைகளைக் கொடுத்தார். பெரிய இடங்களில் பத்தாயிரம் என்ருல், நாயக்கரைப் பொறுத்தமட்டில் பத்து ரூபாயாக இருந்தது. எந்த வழியிலாவது உரிமை பெற்று விட்டால் நாட்டில் தலை நிமிர்ந்து திரியலாமல்லவா? பிறகு, யார் இவரை 'கள்ளத்தோணி' என்று அழைக்கப் போகிருர்கள்? நம்பிக்கையைத் தளரவிடவில்லை நாயக்கர். தொடர்ந்து முயற்சி செய்தார். பலனும் கிட்டியது. அதனை அனுபவிக்கத்தான் தனது குடும்பத்தோடு இன்பம் கண்டு கொண்டே, கண்டியை நோக்கிச் சென்று கொண்டிருக்கிருர் அவர்.

* * *

பஸ் கண்டி நிலையத்தில் நின்றதும், அன்று வண்டி மிக விரைவில் வந்துவிட்டதாக அவர் உணர்ந்தார். உரிமை வேட்கை வண்டியின் வேகத்தையே அதிகரித்துவிட்டது — அவரளவில்! மக்கள் நெருக்கம் மிகுந்த, அழகுமிக்க கண்டி நகரை முன்பின் கண்டறியாத தம் மனைவி மக்கள், வழி தவறி விடக்கூடாதே என்று எண்ணிய நாயக்கர் அவர்களைத் தம்முடனே அழைத்துக் கொண்டார்.

“ஏ ... புள்ளைங்களா, அங்கிட்டு இங்கிட்டுப் பராக்குப் பார்க்காம என்பின்னுக்கே கையைப் புடிச்சுகிட்டு வாங்க” என்று கட்டளை இட்டார். கணவன் கூறுவதில் மிகப் பெரிய உண்மையைக் கண்ட மீனுட்சி, “சரிங்க” என்று தலையசைத்தவளாய் அவரைத் தொடர்ந்தாள்.

பலரையும் கேட்டுக் கேட்டுக் கண்டி “கச்சேரி” இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதற்குள் கண்டி நகரையே பலமுறை வலம் வந்து விட்டார். அப்படி வழி தெரியாமல் கண்டியைச் சுற்றியதில் அவருக்கோ, மனைவி மக்களுக்கோ ஒரு சிறிதேனும் களைப்பு ஏற்படவில்லை. உரிமை கிடைக்கப் போகும் உற்சாகத்தோடு, அந்நகரும், அங்கு காணப்பட்ட காட்சிகளும் அவர்களுக்குப் புதிதாகவே தோன்றின. புத்தரின் தந்தம் இருந்ததாகக் கருதப்படும் “தலதா

மாளிகா"வும், கண்டி நகரை அழகுபடுத்தும் "தெப்பக் குளமும்" பூங்காக்களும் சிலைகளும் அவர்களை வியப்பில் ஆழ்த்தின. ஒருவாறு, முன்னர் சென்ற வழியிலேயே "கச்சேரி"யைக் காலை 10–30 மணியளவில் நாயக்கரும் குடும்பத்தாரும் வந்தடைந்தனர்.

அன்று, 'கண்டி, இலங்கைப் பிரசா உரிமை' அலுவலகத்திற்கு முன்னால் பல குடும்பங்கள் தமது உரிமைக்குரிய சாட்சிப் பத்திரத்தைப் பெறுவதற்காகக் காத்திருந்தன. அவற்றோடு நாயக்கரின் குடும்பமும் பெருமையோடு கலந்து கொண்டது. வந்திருந்த குடும்பங்களனைத்தும் பணம் படைத்த குடும்பங்களாகவே காட்சியளித்தன. அவர்கள் பேச்சு, நடை, உடை, பாவனை, அனைத்தும் தோட்டத்தின் உரிமையாளர்களாகவும், பெரிய ஸ்தாபனங்களின் உரிமையாளர்களாகவுமே அவர்களைக் காட்டின. இத்தகைய செல்வக் குடும்பங்களோடு வேறு எத்துறையிலும் எந்நேரத்திலும் சரிநிகர் சமானமாக இருக்கக் கனவுகூடக் கண்டிராத நாயக்கர், இன்று உரிமையை நிலைநாட்டப் போகும்பொழுது அவர்களோடு சமமாக இருப்பதை நனவிலே கண்டு உச்சி குளிர்ந்தார். தம் மகிழ்ச்சியை மனைவியிடம் கூறித் தம்மைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டும் என்று அவர் உள்ளம் அவரைத் தூண்டியது.

"அடியே, மீனாட்சி! பாத்தியாடி., வந்திருக்கிற பெரிய புள்ளிகள்? அவுங்களோட நமக்கும் பெரசா உரிமை கெடைக்கப் போவுதுடி. இப்ப தெரிஞ்சுக்க, இந்த நாயக்கர் மனம் வெச்சாருன்னா எதையும் செஞ்சுபுட்டுத் தான் சும்மா இருப்பாரு......ஆ...மா!" என்று இழுத்த நாயக்கர், தமது சுருண்டு வளைந்துள்ள மீசையை ஒரு முறை தடவிக் கொடுத்தார்.

"ஆ...மா, சும்மா இருங்க. யாரும் பார்த்தா, ஏதும் நெனப்பாங்க" என்று அவ்விடத்தில் தன்னுடைய குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றினாள் மீனாட்சி.

இலங்கைப் பிரசா உரிமை சாட்சிப் பத்திரத்தைப் பெற்ற குடும்பங்கள் ஒவ்வொன்ருக மகிழ்வோடு சென்று கொண்டிருந்தன. நேரம் நெருங்க நெருங்க நாயக்கரின் மனமும் 'படபட'வென அடித்தது. சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவரை, "சுப்பையா, யாரு?" என்ற குரல் விழிப்படையச் செய்தது.

"நான்தான், ஐயா!" — உட்கார்ந்திருந்த நாயக்கர் பயபக்தியோடு எழுந்து 'பியூனை' வணங்கினுர்.

தனக்குள் முறுவலித்த சேவகன், "உள்ளே போகலாம்" என்ருன்.

கமிஷனரின் அறைக்குள் சென்ற நாயக்கருக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. 'பயாஸ்கோப்பில் பார்த்த சிவ பெருமான் இருக்கும் கைலாசமலைக்குத் தாம் வந்து விட்டதாக' அவர் நினைத்தார். தாம் இந்நாட்டில் உரிமையோடு வாழ உரிமை அளிக்கப் போகும் தெய்வமே அவர் தானே! அவரை அப்படியே சாஷ்டங்கமாக விழுந்து வணங்க வேண்டும் என்றே அவர் எண்ணினுர். ஆனுல், 'கமிஷனர்' பேசத் தொடங்கவே அவ்வெண்ணத்தைக் கைவிட்டு, "நமஸ்காரங்கய்யா!" என்ருர், இரத்தத்தில் ஊறிய பண்போடு.

"நமஸ்காரம், நீ எந்தத் தோட்டம்?" — அதிகாரத் தோடு கேட்டார் கமிஷனர்.

"நான் பறங்கிமலைத் தோட்டங்கய்யா." பணிவோடு பதில் கூறினுர் நாயக்கர்.

"ஓ...யெஸ், குட். ஓம் பேரு?"

"எம் பேரு சுப்பையா நாயக்கர்; அவபேரு மீனுச்சிங்க."

"இன்னெரு முறை திருப்பிச்சொல்லு; ஓம் பேரு?"

"சுப்பையா நாயக்கர் தாங்க" தம் பெயரை மீண்டும் கேட்டதில் நாயக்கருக்குச் சொல்ல முடியாத மகிழ்ச்சி.

"அப்படியா, இன்னிக்கு நாங்க கூப்பிட்டது பறங்கிமலே சுப்பையா — எட் கங்காணிதானே? அவன் சம்சாரம் பேரு தெய்வானே."

சம்மட்டியால் தலையில் அடிப்பது போல் இருந்தது நாயக்கருக்கு. "ஐயா! எனக்குத் தாங்க வரச் சொல்லி கடுதாசி வந்திச்சு!" என்ருர் அழாக்குறையாக.

"எங்கே? அந்த கடுதாசியைக் கொண்டு வா" என்ற கமிஷனர், அழைப்புக் கடிதத்தை வாங்கிப் பார்த்தார். நாயக்கரின் உள்ளமோ ஏதேதோ எண்ணித் தவித்தது. நன்ருகப் பார்த்து முடித்தார் கமிஷனர்.

"சுப்பையா, கோவிக்க வேணும். இது நம்ப 'கிளார்க்' செய்த குத்தம். ஒனக்குப் 'பிரசா உரிமை இல்லே'ன்னு போடுற கடுதாசியை மாத்திச் சுப்பையா கங்காணிக்கு அனுப்பிட்டான். அவங்க கடுதாசி ஒனக்கு வந்தது. கோபிச்சிக்க வேணும், நீங்க போகலாம்" என்று அரை குறைத் தமிழில் கூறிய கமிஷனர், கோபமாக மேசை மணியைத் தட்டிச் சேவகனே அழைத்தார்.

கமிஷனர் ஏதோ சாதாரணமாக மன்னிப்பு கேட்டு விட்டார், தமக்கே உரிய முறையில். ஆனுல், நாயக்கருக்கோ, அவரது ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு அம்பாக உள்ளத்தில் பாய்ந்தது. எண்ணிய எண்ணங்கள், கட்டிய கோட்டைகள், அத்தனையும் ஒரு நொடிப் பொழுதில் தூள்தூளாயின. தலே சுற்றியது. கீழே விழுந்து விடாமல் மீனுட்சி உரிமையோடு அவரை அணைத்து வெளியே அழைத்து வந்தாள். உலகமே அவரை எள்ளி நகைப்பதாக அவர் எண்ணினுர். திரும்பிய பக்கமெல்லாம், "கள்ளத் தோணி! கள்ளத் தோணி!!" என்ற சத்தம் கேட்பதாக அவரது பேதை உள்ளம் எண்ணித் தடுமாறியது. ஏதேதோ பிதற்றினுர், சிரித்தார், அழுதார். வெளியில் நின்றவர்களில் சிலர் அவருக்காக அநுதாபப் பட்டனர்; சிலர் சிரித்தனர்.

பணம் படைத்த பிரபு ஒருவர், "இந்தத் தோட்டக் காட்டுச் சனியங்களே இப்படித்தான். எதையும் ஓர் ஆளுக்கு நாலு ஆளுகளை விசாரிக்காம வந்து, நம்ம இந்தியக் காரன் மானத்தையே வாங்குதுங்க" என்றார், இலங்கையன் என்ற உரிமையை நிலைநாட்ட வந்த இடத்தில் பாரதநாட்டு உரிமையையும் இழந்துவிட மனமில்லாமல்.

அலுவலகத்தினின்றும் தள்ளாடித் தள்ளாடி வெளியில் வந்த நாயக்கர் ஒரு மரத்தடியில் தம்மையும் மறந்து இருந்து விட்டார். தொடர்ந்து வந்த மீனாட்சியும் பிள்ளைகளும் அழுது கொண்டே அவரைச் சுற்றி அமர்ந்தனர். ஒன்றும் புரியாத நிலையிலேயே இருந்தார் அவர். நாட்டுரிமையைத்தான் மேலிடத்தாரால் பறிக்க முடிந்ததேயன்றி அவரது அன்பு நிறைந்த குடும்ப உரிமையை யாராலும் பறிக்க முடியவில்லை. மனைவி மக்களை அப்படியே கட்டித் தழுவிக்கொண்டு அழுதார் நாயக்கர். எங்கிருந்தோ அவர் அழுகையை அடக்கிக்கொண்டு மணியோசை ஒன்று கேட்டது. அவ்வோசை வந்த திக்கை நோக்கி மெதுவாக நடந்தார் நாயக்கர்.

காடாகக் கிடந்த இந்த நாட்டை வற்றாத வளங் கொழிக்கும் நாடாக உயர்த்தி உலக அரங்கிலே இதனைக் காட்சிக்கு வைத்த அவ்வேழைத் தொழிலாளிக்கு இன்று இந் நாட்டிலே உரிமையில்லை! ஆனால், எங்கிருந்தோ வந்த புத்தரின் தத்துவத்திற்கு இன்று இந் நாட்டில் கௌரவ உரிமை! அது மட்டுமா? மக்கள் அனைவரும் போற்றிப் புகழும் 'தலதா மாளிகை' எழுவதற்கும், பெரகரா என்ற யானை விழா நடப்பதற்கும், அத் தந்தம் உரிமை பெற்றுத் திகழ்வதை — ஈழத்து உரிமையையும் பாரத நாட்டு உரிமையையும் இழந்த நாயக்கர் எப்படி அறிவார்? தலதா மாளிகை நெருங்க நெருங்க நடுப்பகல் பூசையின் மணியோசை "டாங்...! டாங்......!!" என்று பலமாக ஒலித்தது. ஒவ்வொரு ஒலியும் "உரிமை எங்கே? உரிமை எங்கே?" என்று நாயக்கரின் செவியில் மாத்திர மல்ல, மலைநாடு முழுவதுமே கேட்பது போல் இருந்தது!

நாவற்குழியூர்
நடராசன்

# இல்லையான காவியம்

## கடவுள் வாழ்த்து

1. இல்லை உண்டு என்ற வாதம் இன்றும் அன்றும் என்றுமிங்
கில்லையாக இல்லையாக்கும் இல்லையான இறைவனே !
இல்லையான காவியத்துக் கெழுதுகின்ற இவ்வுரை
இல்லையான தேதுங்கொண்ட தில்லையாக வேணுமே

## அவையடக்கம்

### வேறு

2. எல்லாரு மேதோ எழுதுகிறுர், அவ்வவற்றைப்
பல்லாருங் கூடிப் பரிகசித்துத் தள்ளுகிறுர் ;
வல்லாரும் என்கவியை வசைகூற முயல்வாரோ ?
இல்லாத காவியத்துக் கென்ன சொல்ல இருக்கிறது !

## நூன்முகம்

### வேறு

3. இலக்கியமா செய்கின்றேன் ? இல்லையில்லை ;
எவரையும்நான் மகிழ்விக்க எண்ணவில்லை ;
கலக்கியடிக் கின்றசில நீதிகூறும்
கற்பனைகள் சொல்லிடவுங் கருதவில்லை ;
நிலத்தினிலே நடக்கின்ற நிகழ்ச்சிபட்டென்
நினைப்பினிலே தெறிக்கின்ற கிரணக்கற்றை
புலத்தினிலே உருவங்கள் பொறிக்குதங்கே
பொத்திவைக்க இடமில்லைப் போடுகின்றேன்.

## நாட்டு வருணனை

### வேறு

4. சூழ நீள்கடல் சூழ்ந்து கிடப்பினும்
ஆழ நீளம் அறிந்தில வாறுபோல்,
ஆளை ஆள்அங் களந்தறி யாதது
'கீழம்' என்றொரு நாடிருக் கின்றது.

5. வானை தாவி வயலிடைப் பாய்வதும்
பானை மோதப் பழவகை வீழ்வதும்
கூழை வாழைக் குலைகளைச் சாடலும்
வாழை தேனை வழங்கலும் அங்கிலை.

6. ஆனை யான அடங்கிக் கிடப்பதும்
பூனை யான புடைத்துக் குதிப்பதும்
சேனை நாயகர் சித்திரச் சிங்கங்கொண்(டு)
ஆனை ஆள நினைத்ததும் அங்குதான்.

7. மந்தி சிங்க மயிரினைப் போர்த்(து)அது
முந்தி வந்த முழுமுதல் என்(று)அயல்
நந்தி தம்மை நவைசெயும்; அங்(கு)அவை
அந்தி வண்ண மெனச்சிவந் தார்த்திடும்.

8. வானை நோக்கி வளர்ந்த பனையினைக்
கானை நோக்கிக் கவிந்த பலாவினம்
சேனை போலச் சிதைக்க வளர்ந்திட
ஆனை போல அதுவும் உயர்ந்திடும்.

9. ஆதி கால அரக்கர் பரம்பரைச்
சாதி யொன்று சதிசெய்து அங்குள
வீதி யெங்கும் வெறிகொண்டு நிற்குது
நீதி மெள்ள நிலைகுலை கின்றதால்.

10. தொன்று தொட்டு வளர்ந்த கலையினை
இன்று நேற்று எழுந்த முளையிலே
கொன்று நிற்கக் குதிகொள்ளு கின்றது ;
வென்று செல்லும் விதியதற் குள்ளதோ ?

11. ஆலை தோறும் அரசியற் பேர்களும்
வேலை தேடி விழுந்தடிப் போர்களும்
வாலை வாரி வளம்பெறு வோர்களும்
சாலை தோறும் சளக்குரைப் போர்களும்

12. கூலி பேசிக் குழப்பஞ்செய் வோர்களும்
போலி வேஷப் பொதுநலப் பேர்களும்
பாலி யாற்றுப் படுமணல் தன்னிலும்
நாலி லொன்றுக் குயர்ந்ததந் நாட்டினில்.

13. சூழ்ச்சி செய்து சுகமெடுப் போர்களே
ஆட்சி செய்யும் அரசியல் வானிடை
காட்சி தந்து களிநட மாடுவார்,
வீழ்ச்சி யெய்தும் வியப்பதும் உண்டுதான்.

நகர வருணனை

வேறு

14. பழங்குடி யறியாப் பதி ; மொழி நூறு
வழங்கிடு 'கிழும்பு' வான்நகர் அதனில்
களங்கமொர் கோடி கண்மறை வாக
விளங்கிடும் அதைநான் விரித்திட லாமோ ?

15. எத்தனை சாதி ! எத்தனை சமயம் !
அத்தனை யாகு மனுசா ரங்கள் ;
உத்தமர் களுமுளர் ஒருமணி வேளை
பத்தினி களுமுளர் பகலினி லங்கே.

வேறு

16. வந்தனைகள் செய்குவது வானவரை யல்ல
தந்தமது மேலையதி காரிகளை யாகும்;
சந்ததமு மந்தவகை சாதனைகள் செய்வோர்
எந்தவகை யாலுமுயர் வெய்துவது சாலும்.

17. மிஞ்சிவழிந் தோடுவது மேல்வீதி யெங்கும்
விஞ்சுவிசை வண்டிகளே, வெண்ணெய்தயிர் அல்ல;
கஞ்சிகழு நீரினையும் காண்பதரி(து), என்றும்
அஞ்சிடுவர் தண்ணீரும் அற்றுவிடும் என்று.

வேறு

18. மாடிகள் கோடி யங்கு, மனைகள்முன் மலர்த்தோட்
[டங்கள்,
கோடியின் பின்னுல் எங்கும் குப்பைசேர் குச்சு வீதி;
பேடிகள் போல, மக்கள் பெருகிய கூட்டத் தார்கள்,
வாடிய சிறுபான் மைக்கு வகுப்பது பிறிதோர் நீதி.

19. பூக்களோ அங்கு மல்கு பூவையர் ஒத்த வாகும்
நோக்கவே அன்றி வேறு மோக்கவோ உதவா; என்றும்
'ஆக்களோ' அடிவ ழுக்கி அதிகமாய் விழுவ
[தெல்லாம்
மாக்களின் மதத்தா லல்ல மக்களின் மதத்தா லாகும்.

நூல்

20. காவியமா எழுதவந்தேன்? இல்லையில்லை.
காவியத்துக் கிங்கேயோர் கதையுமில்லை;
மேவியநற் றலைவனிலைத் தலைவியில்லை;
மேலான என்கவியை மெச்சிமெச்சிப்
பாவினிலே உயர்ந்ததெனப் பரிசளிக்கப்
பண்புடைய வள்ளலொரு பேருமில்லை;
காவியமேன், எதற்காயிங் கெழுத வேண்டும்?
கட்டிவைப்போம் ஏட்டினை இக் கணக்கிலேயே.

தெளிவத்தை ஜோசப்

# மீன்கள்

தீப்பெட்டியின் உரசலைத் தொடர்ந்து விளக்கும் கையுமாய் நின்று கொண்டிருந்த மனைவியைக் கண்டதும் பதறிப் போனான் அவன்.

மதுவின் போதையும், மற்ற மயக்கங்களும், உயிர் நாடியில் விழுந்த அடியால் ஓடிப்போக, குப்பி விளக்கின் அந்த கொஞ்ச வெளிச்சத்தில் நிலைமையைப் புரிந்து கொண்டவன், யாரையும் நிமிர்ந்து பார்க்கும் திராணியற்று, கிள்ளிய கொழுந்தாய் தலைதொங்கிப்போய் உட்கார்ந்திருந்தான்.

வெலவெலத்துப்போய், குனிந்த தலைநிமிராமல் ஒரு வினாடி உட்கார்ந்திருந்தவனுக்கு, கழிந்துவிட்ட அந்த ஒரு வினாடியே ஒரு யுகமாய்த்தோன்ற, வெறுந்தொண்டைக்குள் காற்றை விழுங்கியபடி விருட்டென்றெழுந்தான்.

எழுந்த பிறகு, மறுபடியும் குனிந்து, தனது போர்வையை எடுப்பதின்மூலம், இக்கட்டான அந்த இடத்தில் இன்னுமொரு வினாடி இருக்க நேரிடுமே என்ற உணர்வில், கம்பளியை எடுத்துக்கொண்டே எழுந்தவன், அதை இழுத்து தோளில் எறிந்தவாறு வெளியே நடந்து இஸ்தோப்பின் இருட்டில் அமர்ந்து கொண்டான்.

தூண் தூணாய் நிற்கும் மரங்களிடையே தூரத்தில் தெரியும் மலைச்சரிவுகள் கருப்பு வண்ணத்தால் தீட்டி மாட்டிய ஓவியம் போல் தெரிகிறது.

கண்ணுக் கெட்டிய தூரம் வரை 'கருங்கும்' மென்று கிடந்த கறுப்பையே வெறித்து நோக்கிக் கொண்டிருந் தவன், இருட்டிய உலகின் அத்தனை அந்தகாரத்தையும் விட தன் மனதின் அந்தகாரம் அதிகமானதாகத் தனக்கே தெரிவதையுணர்ந்து, அதன் கனம் தாளாது தனிமையாக அமர்ந்திருக்கும் அந்த நேரத்திலும், தலையைக் கவிழ்த்துக் கொள்ளுகிறான்.

தலை உயர்ந்திருக்க வேண்டுமென்றுதான் ஒவ்வொரு மனிதனும் விரும்புகிறான். ஆகவேதான், நித்திரையின் நிமித்தம் தரைமட்டமாகப் படுக்கும்போதுகூட ஒரு அணை கொடுத்து தலையைத் தூக்கிக்கொள்ளுகிறான்.

ஆனால், மனத்தின் இருட் கனத்தால் தானகவே கவிழ்ந்துவிடும் தலையை எந்த அணையைக் கொண்டு நிமிர்த்தி வைப்பது!

'கசமுச'வென்று உள்ளே ஏதோ பேச்சுக் கேட்கிறது.

உயர்ந்த தோளிடை தொங்கும் தலையை ஒருசிறிதும் உயர்த்தாது, மிகவும் சிரமத்துடன் பக்கவாட்டில் திரும்பி, ஓரக்கண்ணல் உள்ளே பார்க்கிறான்.

ஒருக்களித்திருக்கும் கதவினூடாக, உள்ளே இருக்கும் வெளிச்சம், கோடாக நீளுவதிலிருந்து உள்ளே இன்னும் நிலைமை சீரடைந்து அமைதியாகவில்லை என்பதை புரிந்து கொண்டவன், உள்ளேயிருந்து யாராவது ஒருவர் தன் முன்னல் எந்த விநாடியும் வந்து நிற்கலாம் என்ற பயத்தில், அப்போதைக்கு அதிலிருந்து தப்பிக்கொண்டால் போதும் என்ற அவசரத்தில், இஸ்தோப்பில் இருந்து இறங்கி இருளில் நடந்தான்.

லயத்துக் கோடியில் கிடந்த நாய், அரவம் கேட்டு குரைக்க வாயெடுத்து, அவனை 'இன்னார்' என்று கண்டு கொண்டதால், குரைப்பை ஏப்பமாகவோ ஊளையாகவோ

மாற்றிச் சமாளித்து, கொட்டாவியுடன் முன்காலை நீட்டி சோம்பல் முறித்து விட்டு, வாலை ஆட்டியபடி மீண்டும் சுருட்டிக் கொண்டது.

எங்கோ உச்சியிலிருந்து ஓடிவந்து இரண்டு பாறைகளுக்கிடையில் விழுந்தோடும் நீர்வீழ்ச்சி எழுப்பும் 'சோ' என்னும் பேரிரைச்சலைத் தவிர்த்து முழுத்தோட்டமுமே இருட்டைப் போர்த்திக்கொண்டு குறட்டை விட்டது.

இரவு பதினொரு மணிப் பயங்கரத் தனிமையில், இந்த நாற்பத்தெட்டு வயதிலும், உருவத்தில் குனிவோ, நடையில் தளர்ச்சியோ இல்லாமல், 'எங்கே போகின்றோம்' என்ற கட்டுப்பாடற்ற எதேச்சையுடன் நடந்துகொண்டிருந்தவன், முகத்தில் பாய்ந்து கண்ணை மயங்கச் செய்த 'டார்ச் லைட்டின்' ஒளியால் நின்றான்.

"என்ன பெரியப்பா ... இந்த ராவுலே ... ?" உரப்பட்டி காவல் செய்பவன் தான் லைட்டும் கையுமாய் நின்று கொண்டிருந்தான்.

"தூக்கம் வல்லேடாப்பா ...... ஒரே புளுக்கமா கெடந்திச்சு ... அதுதான் இப்பிடி காத்தாட ..."

புழுக்கம் மனதில் என்பதைப் புரிந்து கொள்ளாதவனாக "இப்பிடி இந்த உரப்பட்டி விருந்தையிலே படுத்திக்கிறேன், காத்தோட்டமா இருக்கும்" என்கிறான்.

தூக்கம் தாங்காமல் கண்மயங்கும் வேளைகளில், ஒரு வாய் தேநீர் சுடவைத்து ஊற்றிக்கொள்வதற்கும், குளிர் தாங்காமல் பல்லடிபடும் வேளையில் நெருப்புப் போட்டுக் குளிர்காய்வதற்குமாக, விருந்தை மூலையில் காவல்காரர்கள் போட்டு வைத்திருக்கும், கரிபிடித்த மூன்று கற்களில் ஒன்றை இழுத்து விரிக்கும் போர்வையின் ஒரு முனையை அதன்மேல் போட்டு கரியை மறைத்து, அந்த உயரத்தில் தலையை வைத்து மல்லாந்து படுத்துக்கொண்டான்.

தேயிலைத் தளிர்களில் மிதந்து வரும் காற்று திறந்த வெளியில் கிடக்கும் உடலைத் தழுவி ஓடுகையில், எத்தனையோ சுகமாகவும் லேசாகவும் தான் இருக்கிறது என்றாலும் உள்ளம் பாரமாகவும் சூடாகவும் இருக்கையில் எப்படி நித்திரை வரும்.

சினிமாப் பாட்டொன்றை சீட்டியில் ஒலித்தபடி, லைட்டை வீசிக்கொண்டு, உரக்காம்பிராவின் மறுமுனைக்கு நடந்தான் காவல்காரன்.

வீட்டில் நிகழ்ந்துவிட்ட அசம்பாவிதத்துக்கு, முழு முதற் காரணம் தான்தானென்றாலும், தன்பக்கம் ஏதாவது நியாயம் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்வதற்காக, நடந்துவிட்டதை மீண்டும் ஒருமுறை நினைவுபடுத்திப் பார்க்கிறான்.

கசப்பானதுதான் ; ஆனால், கட்டாயம் நினைவுபடுத்திக் கொள்ளவும் வேண்டியிருக்கிறது.

'எத்தனை அசிங்கமானதெல்லாம் நடந்துவிடுகிறது ...'

இரவு பத்து மணிக்குப் பிறகு, நாட்டிலிருந்து திரும்பியவன், மெதுவாக கதவை திறந்து மூடிவிட்டு, இருளுடன் இருளாக கதவடியில் ஒரு வினாடி நின்று, கண்களை பழக்கப் படுத்திக் கொண்டான்.

கம்பளிக்குள்ளும், சேலைக்குள்ளுமாக சுருட்டிக் கொண்டு தூங்கும் உருவங்கள் இருட்டில் லேசாகத் தெரியத் தொடங்கின.

நாட்டிலிருந்து வந்திருக்கும் மயக்கத்துடன் இருட்டில் மெதுவாக காலை உயர்த்தி முதலில் படுத்துக் கிடந்த உருவத்தைத் தாண்டியபடி, 'அதோ, அதுதான் அவ' என்று மனதுக்குள் முனகிக்கொண்டான்.

அவனுடைய கணிப்பு தவறிவிட்டது. அது மகள்! "இந்தப் புள்ளை எப்பிடி ...... சேச்சே ......" என்று எச்சிலை விழுங்கிக் கொண்டவன், அருவருப்பான அந்த எண்ணங்களை வெட்டித் துண்டாக்கிக் கொண்டான்.

அந்த ஆறு காம்பிரா லயத்தில் மூன்ருவது காம்பிரா வுக்குள் அவன் பிரவேசம் செய்து ஏறத்தாழ இருபது வருடம் இருக்கும். அப்போது அவனுடைய மனைவியும் மூன்று பிள்ளைகளுமாக ஐந்து பேர்களுக்கு அந்த ஒரு காம்பிரா போதுமானதாக இருந்தது.

நான்கு சுவர் உள்ள அந்த சதுரத்துக்குள், அடுப்பைப் போட்டு இது 'குசினி' என்று ஒரு பகுதியை ஒதுக்கிவிட்டு, மிஞ்சியிருக்கும் முக்கால் அறைக்குள் மூன்று பிள்ளைகளையும் வைத்துக்கொண்டு, அவைகள் கண்டும் காணுமலும் சம்சாரம் பண்ணி இன்னும் மூன்றை பெற்றுக்கொண்டது வரை எல்லாம் அந்த ஒரே காம்பிராதான்.

அவனும் எத்தனையோ தடவை ஆபீசுக்குப், போய் துரையிடம் காலில் விழாக் குறையாகக் கெஞ்சியும், சண்டை போட்டும் பார்த்துவிட்டான்—தனக்கு இன்னெரு காம்பிரா வேண்டுமென்று.

பகல் வேளைகளில் வீடு இருக்கிறதா இல்லையா என்ற பிரச்சினையே கிடையாது. எல்லாத் தொல்லைகளும் இரவில் தான். அத்தனையையும் படுக்க வைத்தாக வேண்டுமே! கைகால் முளைத்துவிட்ட பிள்ளைகள் என்ருலும், வீட்டுக்குள் இட நெருக்கடி என்று வெளியே எங்கேயாவது போய் சுருட்டிக் கொள்ளும், முகத்து மீசையை நாசுக்காக நீவி விட்டபடி படுக்கையும் தானுமாக நடந்துவிடுகிருனே மூத்த பையன் — 'நண்பனுடன் படுத்துக்கொள்ளுகிறேன்' என்று; அதைப் போல இந்தச் சின்னஞ் சிறுசுகள் எங்கே போகும்?

வீடு வளரவில்லை என்பதற்காக பிள்ளைகளும் வளராமல் இருந்துவிடுவார்களா?

அதுவும் பெண் பிள்ளைகள்!

பெண் வளர்ச்சி பேய்வளர்ச்சி என்பார்கள். பார்த்துக் கொண்டிருக்கும் போதே வளர்ந்துவிடுவார்கள்.

இவன் வீட்டிலும் இரண்டு வளர்ந்து போய் இருக்கிறதே ; அது எங்கே போய் படுத்துக்கொள்ளும்.

மூத்த பையனைத் தவிர மற்றது அத்தனையும் அந்த முக்கால் அறைக்குள் 'ஒண்ணடி மண்ணடி'யாக உருள வேண்டியதுதான்.

இந்த லயப்பிரச்சினை பெரும் தலைவேதனையாக உருமாறிக்கொண்டு வருகிறது என்று கண்டதும், துரை நைசாக நழுவிக்கொண்டார்.

யார் யார் எந்தெந்த லயத்தில் இருக்கிறார்கள், ஒரு காம்பிராவில் எத்தனை பேர், அதில் ஆண் எத்தனை, பெண் எத்தனை, பிள்ளைகள் எத்தனை — என்பது போன்ற விவரங்களைக் காட்டும் லயத்துச் 'செக் — ரோலை' தூக்கி பெரிய கங்காணியிடம் கொடுத்துவிட்டார்.

தொழிலாளர்களின் நலனில் மிகுந்த அக்கரை உள்ளவராக இருந்தாக வேண்டும், பெரிய கங்காணி என்பவர் ; தொழிலாளர்களின் நலனில்தான் இருக்கிறது அவருடைய நல்வாழ்வு.

துரையிடம் இல்லாத ஒரு பயம், துரையிடம் காட்டாத ஒரு மதிப்பு, துரைக்குக் கொடுக்காத ஒரு ஒத்துழைப்பு — பெரிய கங்காணியாகப் பட்டவருக்கு உண்டு என்பது துரையின் நம்பிக்கை. ஆகவே, நெருக்கடி மிக்கதான இந்த வீட்டுப் பிரச்சினையை அவரிடம் நீட்டிவிட்டு, தாம் ஒதுங்கிக்கொண்ட துரை சாமர்த்தியசாலிதான். தமக்கு லயம் போதாது என்பவர்கள் துரையிடம் போவார்கள் ; துரை பெரிய கங்காணியிடம் அனுப்புவார். கங்காணி, அவர்களை விசாரித்து பெயர்களை எழுதிக்கொண்டு, 'லயம் ஏதாவது காலியானு, இல்லாட்டிப் புது லயம் கட்டினு உனக்குச் சொல்கிறேன் போ' என்பார்.

"என் வீட்டிலே ரெண்டு கொமரோட இன்னம் ஆறு பேர் இருக்கோமுங்க" என்று கூறிக்கொண்டு நின்ற இவனையும் "பெரிய கங்காணிகிட்டே போ" என்றார் துரை.

"அவங்கிட்ட ஏன் நான் போவணும், துரை, நீங்க பார்த்து ஒரு காம்புரா ஒழுங்கு செய்யுங்க..." என்று ஆபிசில் சத்தம் கேட்டாலும், படியிறங்கியதும் நேராக அவன் பெரிய கங்காணியிடம் போகவும் தவரவில்லை.

"போ, பார்ப்போம்" என்று கூறிவைத்தார், பெரிய கங்காணி. வரப்பிரசாதம் போல் அவனுக்கு காவல் வேலை கிடைத்தது.

அதன்பிறகு உரப்பட்டி, புது மலை, ஆயுதக் காம்பிரா என்று எங்காவது இராப் பொழுதைப் போக்கிவிடுவான்; வீட்டுப் பிரச்சினை அவ்வளவாகத் தோற்றவில்லை.

தான் ஒதுங்கிக்கொள்வதால் மட்டும் தீர்ந்து விடும் தொந்தரவு இல்லையே குடும்பத்தொந்தரவு; அது தொடர்ந்து கொண்டே யிருந்தது.

மனைவியின் நச்சரிப்புத் தாளாத போதெல்லாம் துரையிடம் போவான். துரை 'கங்காணியிடம் போ' என்பார். கடாபுடாவென்று கத்திவிட்டு திரும்பி வருவான்.

அவன் படியேறும்போதே துரை மனதுக்குள் சிரித்துக் கொள்ளுவார். 'சலாம்க' என்று ஜன்னலிடம் வரும் போதே, 'கங்காணிகிட்டே போ' என்று கூறிவிடுவார். ஒரு தடவை அவன் வேறு எதற்காகவோ வந்து நின்று 'சலாம்க' என்ற போது, 'கங்காணிகிட்டே போ' என்று துரை கூற, 'நான் லயத்துக்கு வரலிங்க' என்று அவன் தலையைச் சொரிய, துரை, கிளார்க், அவன், மூவருமே சிரித்து விட்டனர் — தங்களை கட்டுப்படுத்திக்கொள்ள இயலாமல்.

அவன் ஆபிசுக்கு வந்தால் லயம் கேட்கத்தான் வருவான் என்பதும், லயம் கேட்டால் 'கங்காணியிடம் போ' என்றுதான் துரை கூறுவார் என்பதும், அந்த அளவுக்கு துரைக்கும் அவனுக்கும் தெளிவான ஒன்றாகிவிட்டது.

அவனுக்கு கிடைத்திருந்த காவல் வேலையும் நின்று விட்டது. மறுபடியும் இப்போது அவன் நேரடியாகப் பிரச்சினைக்குள் அகப்பட்டுக் கொண்டான். அதன் விளைவு?

அடுத்த நாள், அந்தி நேரத்தில், பெரிய கங்காணி வீட்டுக்குப் போனான்.

"ஏன், தொரை கிட்ட போவலியோ?" பெரிய கங்காணி கேட்டார்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லிங்க..." அவன் குழைந்தான்."

"இல்லே, அய்யா நேரே ஆபிசுக்குப் போய் துரை கிட்டத்தானே கம்பிளேய்ன் பண்ணுவீக... அதுதான் கேட்டேன்." அவனுக்கு விளங்கிவிட்டது; ஐயா அவனை அடையாளம் பண்ணித்தான் வைத்திருக்கின்றார் என்பது. புதிதாகக் கட்டிய பத்து காம்பிராவில் தனக்கு ஒரு காம்பிரா கிடைக்காமல் போனதற்கும், அவ்வப்போது காலியாகும் பழைய காம்பிராக்களும் தன்னை ஒதுக்கி விட்டதற்கும், இந்த 'அடையாளம்'தான் காரணமோ...!

'சாமிக்கு ரெண்டுன்னா, பூசாரிக்கு நாலு ஒடைக்கணும் போலிருக்கே' என்று புழுங்கியபடி, "அய்யாதான் ஒதவி செய்யணும்" என்று காலில் விழாத குறையாக கூறிவிட்டு நடந்தான்.

"என்ன இந்த நேரத்திலே கங்காணி வீட்டுப்பக்கம்?"

"அதை ஏன் கேக்கிறே......நானுந்தான் நாளாய் பொழுதாய், நாய் கணக்கா அலேஞ்சு பார்க்கிறேன், ஒரு காம்பிராவுக்கு. மனுசன் அசையிருப்பிலே காணுமே...பாப்போமிங்கிருரு. நாம பார்த்துகிட்டே இருக்க வேண்டியது தான்......"

"......லயம் ஏதும் காலியானா, இன்னொருத்தனுக்கு போயிறது......அதைத்தானே சொல்லவர்ரே......?"

"பின்னே என்னங்குறேன்......"

" லேய், சும்மா கத்தாதறே ... வெறுங்கையி மொளம் போடுமா ?...... ஒரு காம்பிராவிலே ஏழெட்டை அடைச்சுக்கிட்டு கயிஸ்டப்படுறதைவிட, கங்காணிக்கு ஒரு போத்தல் சாராயத்தை வாங்கிக் கொடுத்திட்டா என்ன கொறைஞ்சு புடுது...... ? "

ஒரு போத்தல் சாராயத்தை வாங்கித் தொலைத்துவிடுவதால் ஒன்றும் குறைந்து விடாது என்பது அவனுக்கும் தெரியும். ஆனல், ஏன் கொடுக்க வேண்டும் என்ற வீம்பில் தான் இத்தனை நாளும் இருந்தான்.

ஆனல் இப்போது...... !

எந்த எளவைக் கொடுத்தாவது ஒரு காம்பிரா கேட்டாகணும் — மனம் முனகிக் கொள்கிறது.

" அந்த கொய்யா மரத்தடியிலே அப்பவே ஒரு குடிசை போட்டேன்...... "

மனதை அவன் அடக்கப் பார்த்தாலும், நடந்துவிட்ட கசப்பான நிகழ்ச்சிக்கான காரண காரியங்களைப் பற்றியே அது ஓடுகிறது.

லயம் கேட்டு ஏமாந்த ஆரம்ப நாட்களிலேயே தனது வீட்டுக்கு முன்னல் உள்ள தோட்டத்தில் நிற்கும் கொய்யா மரத்தடியில் ஒரு சிறு குடிசையை போடத் தொடங்கினன். மூலைக் கொன்ருக நான்கு மரங்களை ஊன்றி, நாணல் வறச்சிகளைப் பிடித்து, வறச்சி மறைய மண்ணைக் குழைத்து ஒரு பக்கம் அறைந்தும் ஆயிற்று. வேலிக்கு வெளியே லயத்தை ஒட்டி நிற்கும் ஈரப்பலா மரத்துநிழலில் நின்றபடி, முளைத்தெழும் குடிசையையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்த பெரிய கங்காணி தலையை ஆட்டிக் கொண்டார்.

" என்னடாலே, அது குடிசை ?...... வீடு கட்டுறியளோ! இன்னைக்கு நீ கட்டிக் காட்டு; நாளைக்கு ஒருத்தன், நாளன்னைக்கு ஒருத்தன்னு, அத்தனை பேரும் குடிசை

போடத் தொவங்கிறுவானுக ...... ஒனக்குத்தான் வீட்டுக்கு முன்னுக்கு தோட்டம் இருக்கு, தோட்டத்திலே போட்டுக்கிறே; தோட்டம் இல்லாதவன் என்ன செய்வான்? ராவோடராவா பத்து தேயிலையை புடுங்கிப்புட்டு, அதுலே போட்டுக்குவான். வெளங்குதா ...... அதினலே இந்த குடிசை வெவகாரமே வேண்டாம். ஆபீசு கீபீசுன்னு...... தொரையருதி போறதுக்குங்காட்டியும், மருவாதியாகச் சொல்றேன், இப்பவே போயி, ஒடைச்சு போட்டுரு ...... இல்லே......"

தன் அழைப்புக் கேட்டு வந்து, தனக்குமுன்னல் குன்றிப்போய் நிற்பவனை ஏசிப் பயங்காட்டி அனுப்பியதுடன், அடுத்த நாள் அந்தப் பக்கமாக நடந்து, குடிசை உடை பட்டிருக்கிறதா இல்லையா என்பதையும் 'செக்' பண்ணிக்கொண்டார். கொய்யா மரத்தடியில் குடிசைக்குப் பதில் குட்டிச்சுவர் மட்டுமே நின்றது.

இத்தனை மன உளைச்சல்களிலேயும், 'எந்த எளவைக் கொடுத்தாவது' ... என்ற எண்ணத்துடன், எப்படியோ தூங்கிப்போனன்.

ஆம் ... தூக்கம் மனிதனுக்கு ஒரு வரப்பிரசாதம்!

* * *

தேயிலைக் குச்சியால் பல்லைத் தேய்த்து துப்பிவிட்டு, ஜில்லென்ருேடும் ஆற்று நீரில் முகத்தைக் கழுவிக்கொண்டு பெரட்டுக்களத்தை அடைந்தான்.

மற்ற நாட்களில் என்ருல், கை வாளியில் சுடுதண்ணீர் காத்துக் கொண்டிருக்க வேண்டும்.

ஆனல், இன்று!

விரித்துப்படுத்திருந்த துப்பட்டியைத் தோளில் போட்டுக்கொண்டு, தன்வீட்டுப் பெண்கள் துண்டு வாங்க வரும்போது எங்கே தன்னைப் பார்த்துவிடுவார்களோ என்ற பயத்தில், சற்று மறைவாகவே நின்று கொண்டிருந்தான்.

"எப்ப காம்பிரா விட்டுப் போற......?"

"வீடெல்லாம் சரி... இன்னொரு நாலு நாள்லே..." பின் வரிசையில் கேட்ட பேச்சுக் குரலால் திரும்பிப் பார்த்த அவனுக்கு, விஷயம் பிடிபட்டுக் கொண்டது.

தோட்டத்துக்கே பழைய ஆளான பண்டா, லயத்தைக் காலி செய்துவிட்டு, நாட்டில் சொந்தமாக கட்டியுள்ள வீட்டுக்கு குடி பெயருகிருன்.

இவனுக்கு செய்தி இனித்தது.

"காலியாகும் இந்த காம்பிராவை எப்படியாவது அமுக்கிக்கிறனும்... எந்த எளவைக் கொடுத்தாவது..." என்ற எண்ணத்துடன், அன்றே பெரியவரைக் கண்டு தனக்குள்ள கஷ்டங்களைக்கூறி, ஒரு பாட்டம் அழுதுவிட்டு, ஐயாவுக்கு சந்தோசம் செய்வதுபற்றியும் இலேசாக இழை யோட்டி விட்டு, 'சரி, பயப்படாதே...' என்ற பெரியவரின் உத்தரவாதத்துடன் வெளியேறியவன், ஒரு 'வெள்ளை'யை வாங்கிக் கொண்டுவந்து தயாராய் வைத்துக்கொண்டான். வீடு காலியானதும் சென்று ஐயாவைக் கண்டு கொள்ள.

காலியாகப் போகும் காம்பிராவுக்கு முழுமூச்சாக இவனும் அடிபோடுகிருன் என்பது, 'எப்ப காம்பிரா விட்டுப் போறே, விட்டுப்போறே' என்று பண்டாவைக் கேட்டுக் கொண்டேயிருந்த இன்னொருவனுக்கு சுருக்கென்றது; முந்திக்கொண்டான்.

ஒரு வெள்ளையை வாங்கி வீட்டில் வைத்துக்கொண்டு இவன் இருக்க, இரண்டை வாங்கிக் கொண்டு போய்க் கொடுத்து, ஐயாவைப் பார்த்தும்விட்டான் அவன்!

எவ்வளவு சிறிய மீனுக இருந்தாலும், தன்னிலும் சிறியதை விழுங்கத்தானே செய்கிறது!

இரண்டு வெள்ளையைக் கண்டதும் ஐயா அசந்தே விட்டார். 'காம்பிரா உனக்குத்தாண்டா' என்று கை யடித்துக் கொடுத்தவர், அவனுக்கும் தரேன்னுேமே என்று

ஒரு வினடி குழம்பி, உடனே சுதாரித்துக் கொண்டு, ‘பண்டா லயம் விட்டுப் போற அன்னிக்கு கட்டாயம் வா’ என்று கூறி, அவனை அனுப்பி வைத்தார்.

பண்டா குடிபெயரும் தினம்; ‘சந்தோசத்தை’ ஒரு பேப்பரில் சுற்றி கமக்கட்டில் இடுக்கிக் கொண்டு, ஐயா வீட்டுள் நுழைந்த அவன், அங்கு வேறுமொருவன் இருப்பதைக் கண்டு சற்றுத் தயங்கினன்.

“யாரு...? அட நீயா...! வாவா...! என்ன கையிலே பார்சல்...?” “ஒண்ணுமில்லைங்க” என்று மழுப்பிய அவனை விடாமல் இழுத்துப்பிடித்தார் கங்காணி.

“பண்டா காலியாக்கிருன்லே காம்பிரா, அதை இவனுக்குத்தான் குடுக்கப் போறேன்...” என்று மற்றவனிடம் கூறிய அவர் இவன் பக்கம் திரும்பி, “என்னுப்பா, என்னமோ வைச்சிருக்காப் போலே இருக்கு; கேட்டா ஒண்ணுமில்லேங்கிறே ... கொண்டாயேன் பார்ப்போம் ...” என்று அதை இழுத்துப் பிரிக்கிருர்.

வெள்ளைப்போத்தல் வெளியே வருகிறது.

ஐயாவின் முகம் ஏன் இப்படி கோரமாக மாற வேண்டும்!

குழம்பிப் போய் நிற்பவனைக் கோபமாகப் பார்த்து விட்டு, ஐயா கத்துகிருர்:

“யேய், லயம் வாங்குறத்துக்கு லஞ்சம் கொண்டாந்தியோ...யப்பா நீ சாக்கி...” என்று போத்தலை உயரத்தூக்கி மற்றவனிடம் காட்டிவிட்டு, “இந்தாடா, நீயே கொண்டு போ! ஒனக்கு லயமும் கிடையாது ஒண்ணும் கெடையாது. ஓடிப்போ ...... படவா ... அதோட நாளைக்கு காலையிலே ஆபிசுக்கு வந்துடு; நீயும் தாப்பா ... நல்ல வேளை, நீ இருந்தே.” பெரிய கங்காணி மூச்சுவிடாது கத்தினர்.

வெலவெலத்துப் போன அவன் நடுங்கும் கால்களுடன் வெளியே நடந்தான்.

வட்டுக்கோட்டை
மு. இராமலிங்கம்

# தேயிலேயில் பிறந்த தெம்மாங்கு

நம் ஊரில் அளவிறந்த பொருள்கள் இருந்தபோதும், "இக்கரைக்கு அக்கரை பச்சை" என்னும் ஆசை மக்களின் மனத்தை விட்டகல்கின்றதா? "திரைகடலோடியும் திரவியந் தேடு" என்னும் மனப்பான்மை உந்தவே, மக்கள் வேற்று நாடுகளுக்குச் சென்றனர்.

மணம் செய்து நாள் செல்லுமுன் பெண்ணொருத்தி தன் கணவனுடன் இரங்கூனுக்குப் போகவேண்டுமென அடம் பிடித்தாள்.

பாலிருக்குது பழமிருக்குது
பழனிச் சம்பாச் சோறிருக்குது
ஏழெருமைத் தயிரிருக்குது
ஏண்டி போறே ரங்கத்துக்கு,

எனத் தாய் தடுத்ததும், மகளின் சீற்றம் எல்லே கடந்தது. பத்து மாதம் சுமந்து நொந்து பெற்ற தாயளே தடுக்கின்ருள் என்பதனையும் மறந்து,

பாலும் வேண்டாம் பழமும் வேண்டாம்
பழனிச் சம்பாச் சோறும் வேண்டாம்
ஏழெருமைத் தயிரும் வேண்டாம்
ஏத்திவிடு கப்பலிலே,

என்ருள் மகள். பொருளீட்டும் அவாவும், புறநாடு பார்க்கும் அவாவும், அவளை அப்படியெல்லாம் சொல்லச் செய்தன.

பாலிருக்கப் பழமிருக்கப்
பழைய சம்பா நெல்லிருக்க
ஏழெருமைத் தயிரிருக்க
ஏண்டி போறே ரெங்கூனுக்கு ?

பாலும் வேண்டாம் பழமும் வேண்டாம்
பழைய சம்பா நெல்லும் வேண்டாம்
ஏழெருமைத் தயிரும் வேண்டாம்
ஏத்திவிடு சிங்கப்பூரு,

என்னும் பாடபேதங்களும் உண்டு. சந்தர்ப்பத்திற்கேற்ப நாட்டார் பாடல்களை மாற்றி அமைத்துக் கொள்ளும் விதத்தினை இப்பாடல்களில் காண்க.

வண்டியிருக்கு மாடிருக்கு
வயற்காடு உழுதிருக்கு
ஏழெருமைத் தயிரிருக்கு
ஏண்டி போறே ரெங்கூனுக்கு ?

மஞ்சள் அரைக்கும் பெண்ணே
மதிலெட்டிப் பார்க்கும் பெண்ணே
கொஞ்சம் வளர்ந்தையானல்
கொண்டுபோவேன் ரெங்கத்துக்கு.

சாலை நடந்துவாடி
சந்தைப் பேட்டை தாண்டிவாடி
ஓடை கடந்துவாடி
ஓடிப்போவோம் ரெங்கூனுக்கு,

என்ற பாடல்களும் இரங்கூன் தொடர்பை நினைவூட்டும்.

இரங்கூனைப்போல் சிங்கப்பூரும் ஏழை மக்களுக்கு ஏற்ற தொழில்களை உதவியது. மலாயா முழுவதனையுமே சிங்கப்பூர் எனச் சொல்லினர் இத்தொழிலாளிகள்.

நாகபட்டினம் கப்பலேறி
நடுக்கடலில் பாய் விரித்து
கோலச் சிலாங் கண்டவுடன்
கேட்கிருளே குதிரைக்காடி,

என்பது இன்னொரு பழைய பாடல். சரித்திரத்தில் நாக பட்டினம் மிக்க கீர்த்திபெற்ற துறைமுகமாகும். அந்தக் காலங்களில் நாகப்பட்டினத்தில் பாய்க்கப்பல் ஏறி, மலாயா சென்றார்கள். கோலச் சிலாங் என்பது குவால சிலாங்கூர் (Kuala Selangor) போலும்.

ஆசைக்கு மயிர்வளர்த்து
அழகான கொண்டை போட்டு
கொண்டைபோட்ட மூன்றாம்நாள்
கொண்டுபோறேன் கோலாலம்பூர்,

என்பது மலாயாத் தொடர்பை என்றும் நினைவூட்டும் ஒரு பாடலாகும். "கொண்டுபோறேன் தொங்கதோட்டம்" என்றும் பாடம் உண்டு.

வங்காளம் போறேனென்று
மனக்கவலை வையாதேடி—உன்
சிங்காரக் கொண்டைக்கு நான்
சீப்புவாங்கி வாறேனடி,

என்னும் பாடலால், வேறு சிலர் வங்காளஞ் சென்றார்கள் என்று தெரியவருகின்றது.

தெம்மாங்குப் பாடல் இதுவெனத் தெரிந்துகொள்ள முடியாத ஆசிரியர் ஒருவர், இதனைக் கவியாக, மட்டக் களப்புக் கவிகளுடன் வெளியிட்டனர். இப்பாடலுக்கும் பிரதிபாடல்கள் பல வழக்கிலிருக்கின்றன. அத்துடன்,

தங்கத்தால் சீப்பு
தலைவார ஈருகொல்லி
வெங்கலத்தால் எண்ணைமுட்டி
வாங்கிவரக் காட்டிடுங்கோ,

என்பது இதனுடன் தொடர்புடைய பாடல்.

இலங்கையில் பச்சைப்பசேல் என்னும் காட்சியுடன் இன்று விசாலித்துக் கிடக்கும் தேயிலைத் தோட்டங்கள்,

ஒரு நூற்றாண்டுக்கு முன்பு, வெறும் பற்றைகள் நிறைந்த பயங்கரக் காடாக இருந்தன. பற்றைகள் நிறைந்த மலை நாட்டினைத் தேயிலைச் செடிகளால் நிறைத்துக்கொள்ளத் தென் இந்தியத் தமிழகத்தினின்றும் தொழிலாளரை ஆங்கிலேயர் கொணர்ந்தனர்.

இலங்கை ஒரு தேன் கொழிக்கும் நாடெனக் கங்காணிமாரும், அவர்கள் கையாட்களும், தென் இந்தியாவில் பிரசாரஞ் செய்தனர். சிலர் இலங்கைக்குப் புறப்பட உடன்பட்டனர்.

வேறு சிலர்,

கண்டி கிண்டி என்னாதீங்கோ
    கண்டிப் பேச்சுப் பேசாதீங்கோ
சாதி கெட்ட கண்டியிலே
    சக்கிலியன் கங்காணி,

எனக்கூறி இகழ்ந்தனர்; இலங்கை முழுவதனையும் இவர்கள் கண்டி என்றே நினைத்தனர். கண்டியிலும் சக்கிலியனா கங்காணி? மக்களைப் புறப்படாமற் செய்வதற்குக் கையாண்ட வசைமொழிகள் இவை.

அட்டைக் கடியும்
    அரிய வழிநடையும்
கட்டை இடறுதலும்
    காணலாம் கண்டியிலே.

கண்டிக்குப் போன மச்சான்
    கடுக்கன் விற்றுத் தின்ற மச்சான்
கொழும்புக்குப் போன மச்சான்
    கொண்டுவந்த ரூபா யெங்கே?

கண்டியிலே ஆறு மாசம்
    கப்பலிலே மூன்று மாசம்
கொண்டுவந்த கொழும்பு ரூபா
    செலவழிஞ்சு போச்சுதடி,

என்னும் பாடல்கள் இதனை வலியுறுத்தும்.

மணம் முடித்த அண்மையில், கணவன் கண்டிக்குப் புறப்படத் துணிந்துவிட்டான்.

கண்டி கிண்டி என்ருதேடா — மாமா
கண்டிக்கு நீ போகாதேடா!
முத்து விற்குங் கண்டியிலே — மாமா
முன் பழக்கம் ஆருமில்லை,

எனத் தடுத்துப் பார்த்தாள் அவன் மனைவி. 'முடியாது' என்ருன் அவன். கும்பலோடு கோவிந்தா போட்டுக் கொண்டு, அவளுங் கூட இலங்கைக்கு வந்துவிட்டாள். பெண்களைத் தூண்டிவிடுதற்கு, 'துட்டுக்கொரு முத்து கண்டியில் விற்கின்றது' எனக் கங்காணிமார் பிரசாரஞ் செய்தனர்.

இலங்கைக்கு வந்த முதற் கூட்டம் சீரும் சிறப்புமாய் வாழ்கின்ருர்கள் என்று இந்தியாவுக்குச் செய்தி எட்டியது. வரியாலும் வறுமையாலும் ஏழை மக்கள் அங்கு அல்லற் பட்ட காலம் அது.

மானத்திலே மழையுமில்லை
மழைபொழியக் காலமில்லை
கூடிமாடிப் பேசுங்கடி — நாம
கொழும்புச்சீமை போய்ப் பிழைப்போம்,

என்று மேலும் கூட்டங் கூட்டமாகச் சனங்கள் இலங்கைக்குப் புறப்படத் தயாராயினர்.

வாடை யடிக்குதடி
வடகாத்து வீசுதடி
சென்னல் அடிக்குதடி — நாம
சேர்ந்துவந்த கப்பலிலே.

காற்றும் மழையும் கடலில் கொந்தளிக்க, கப்பல் மார்க்கமாக இலங்கை வந்து சேர்ந்தனர்.

மேலே தந்துள்ள பாடல் நெடுங் காலமாகப் பல ஊர்களிலும் வழக்கிலிருந்து வருகிறது. எனினும், இதன் பிரதி பாடம் ஒன்றினையும் கீழே தருகின்றேன் :

வாடை யடிக்குதடி
வடகாற்று வீசுதடி
கோடை யிடிபோலே
குமுறுதடி என் மனது.

அவன் தன் சீவியம் எப்படியாகுமோ என்பதனை நினைத்துவிட்டான் போலும்.

பகிரங்க வீதிகளோ, புகையிரதப் பாதைகளோ, அக்காலத்தில் இலங்கையில் அதிகம் இருக்கவில்லை. கால்நடையாகவே எங்கும் செல்ல வேண்டியிருந்தது.

ஏத்தமடி நூரெலியா
எறக்கமடி ராதானை
தூரமில்லை நாஞேயா
தொடர்ந்து வாடி நடந்துபோவோம்.

நீலக் கருங்குயிலே
நீயும் நானும் போகையிலே
சீலம் பிறக்கையிலே
சிங்காரந் தோணுதடி,

என்ற பாடல்கள் இவ் வழக்கத்தைக் குறிக்கும். நுவரெலியா, றடல்ல, நானுஓயா என்பன இன்றும் நம் மலைநாட்டில் வழங்கும் பெயர்கள். இவ்வகைப் பாடல்களை 'வழி நடச்சிந்து' என்றும் சொல்வர்.

வேலையாட்கள் எல்லாம் காலைக் கணக்கெடுப்புக்கு (Muster) ஒன்று சேர்தல் வேண்டும். இதனைத் தொழிலாளிகள் தங்கள் பாஷையில் "பிரட்" என்பர். "பிரட்" என்னும் சொல் (Parade) என்னும் ஆங்கிலச் சொல்லிலிருந்து வந்ததாகும்.

பேர் போடும் பெரிய தொரை
பிரட்டுக்குப் போகும் சின்ன தொரை
ஆதரவாய்ப் பேருபோடும்
ஐயா கணக்கப்பிள்ளை.

இப்பாடல் தோட்ட நிர்வாக உத்தியோகத்தரைக் குறிப்பது. பெரியதுரை—சூப்பரின்டென்ட்; சின்னத்துரை—கொண்டக்டர். (பேர் போடுதல் — பெயரைப் பதிதல்.)

தொழிலாளிகளுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு உடையவர் கணக்கப்பிள்ளை. அவருடைய நட்பைச் சம்பாதித்துக்கொள்ள தொழிலாளி ஒவ்வொருவனும் போட்டியிடுவான்.

பொட்டுப் பொட்டா பொஸ்தகமாம்
பொன்பதிச்ச பேனுக்குச்சியாம்
ஆதரிச்சுப் பேரு போடும்
ஐயா கணக்கப்பிள்ளை,

என்பது கணக்கப்பிள்ளையை விளிக்கும் இன்னொரு பாடல்.

இதுவும், இதற்கு முந்திய பாடலும் ஒட்டுக்கவிகள் என்பது என் அபிப்பிராயம். ஒரே சொற்கோவை இரு பாடல்களிலும் இரண்டாம் அடியாக வருகின்றது.

முந்நூறு ஏக்கருக்குமேல் விசாலமுள்ள தோட்டங்களில் 'கொண்டக்டர்' என்னுமொரு உத்தியோகத்தரும் உண்டு. காலையில் வேலை ஆரம்பமாகும் போது,

ஐயையா கண்டாக்கையா
ஆதரிக்கும் குஞ்சரமே!
அவதிப்பட்டு நான் வாறேன்
அரைப்பெயர் போடாதையா,

என்று சொல்லிக்கொண்டு ஓடிவருவாள் பெண் ஒருத்தி. மாலையில் வேலை விடுவதற்குக் கொஞ்சம் முன்னதாக,

ஐயையா கண்டாக்கையா
ஆதரிக்கும் குஞ்சரமே!
அவசரமாய் நான் போறேன்
அரைப்பெயர் போடாதையா,

என்று சொல்லிக் கொண்டே வெளியேறுவாள் இன்னுமொருத்தி.

மாசிமலைத் தொங்கலிலே
மயிருவெட்டிக் கண்டாக்கையா
உருளோசு அடைவு வைத்து
உருட்டினுரே ஜின்னுப் போத்தல்.

என்பது அவரைக் குறிக்கும் இன்னொரு பாடல், (உருளோசு-கடிகாரம்.)

அடுத்தாற்போல் தொழிலாளிகளுடன் நெருங்கிய தொடர்புடையவர் சின்னத்துரை ஆவார். எனவே, தொழிலாளிகள் அவரது நட்பையும் சம்பாதித்துக்கொள்ள வேண்டியவர்களாயிருந்தனர்.

கொய்யா பழம் பழுக்கும்
கொடமல்லிகை பூப்பூக்கும்
சீத்தா பழம் பழுக்கும் — நம்ம
சின்னதொரை வாசலிலே.

சின்னத்துரை கருணையுள்ளவர் போலும்.

தேயிலைக்கொழுந்து பறிப்பது ஒரு நுட்பமான வேலை. அதற்குப் பயிற்சி வேண்டும்.

கண்டித் தொரை தோட்டத்திலே
கறுத்தக் குட்டி முழிமிரட்டி
கிட்டக்கிட்ட நெரைபுடிச்சு
சிட்டாப் பறக்கிருளே,

என்று சொல்லத்தக்கதாக, தேயிலைக் கொழுந்து பறித்தாள் அதில் கைதேர்ந்த பெண் ஒருத்தி. அதைப் பார்த்து அதிசயித்தனர் புதிதாக வந்தவர்கள். (சிட்டா-சிட்டுக் குருவி.)

புதிதாகத் தோட்டத்துக்கு வந்தவர்களும், புதிதாகத் தோட்ட வேலைக்குப் பதியப்பட்டவர்களும், களை பறிக்கும் கொந்தரப்பு வேலைக்கு அனுப்பப்பட்டனர்.

ஆத்தோரம் கொந்தரப்பு
அது நெடுக வல்லாரை;
வல்லாரை வெட்டியல்லோ
வாழ்வும் குறைந்ததையா,

எனக் கலங்கினர் ஒரு சிலர். வல்லாரை இளமை கொடுக்கும் ஒரு மூலிகை. வெட்ட வெட்ட அது குறையாததினல் இங்ஙனஞ் சொன்னுள்.

கொண்டையிலே பூவிருக்க
கொண்டு வந்த கங்காணி
கொந்தரப்பு வேலையிலே
கொல்லுருனே கங்காணி,

என நொந்தனர் வேறு சிலர்.

அட்டை கடிக்குதடி
அழகுரெத்தம் சிந்துதடி
செல்லு கடிக்குதடி
சீரழிந்த கண்டியிலே,

எனச் சிணுங்கினர். இன்னுஞ் சில கங்காணிமாரும்,

தண்ணி கறுத்திருச்சு
தவளைச்சத்தம் கேட்டிருச்சு
புள்ளை அழுதிருச்சு
புண்ணியரே வேலை விடு,

என்று பணி செய்யும் பெண்கள் சொல்லுமளவிற்கு அவர்களிடம் வேலை வாங்கினர். வேலைக்குக் காலவரையறை சட்டரீதியாக வந்தது அண்மையிற்றுன்.

முன்னர் தாங்கள் கேள்விப்பட்டதுபோல், நிலைமை அவ்வளவு சொகுசாக இல்லையே என ஏமாற்றமடைந்தவர்களும் மலை ஏறி இறங்க மாட்டாதவர்களும்,

கங்காணி கோவத்துக்கும்
காட்டுத்தொங்க ஏத்தத்துக்கும்
நம்மதொரை கோவத்துக்கும்
நடந்திட்டாலும் குத்தமில்லே,

என மெதுவாக நழுவப் பார்த்தனர் சிலர். கங்காணி நழுவ விடமாட்டான் என்பதும் அவர்கள் அறியாததன்று.

அநேகமான தோட்டங்களில் மழைக்காக மலை உச்சியில் ஒரு சிறு காடு விடப்பட்டேயிருக்கும். தேயிலை பறிப்பவர்கள் அக்காட்டு அந்தம்வரை போய்க் கொழுந்து எடுத்துக்கொண்டே வரல்வேண்டும். ஏற இறங்க மாட்டாதவர்களுக்கு இது பெருந் தொல்லையாக இருந்தது.

தோட்டம் பிரளியில்லே
தொரைமேலே குத்தமில்லே ;
கங்காணி மாராலே
கனபிரளி யாகுதையா,

எனக் கங்காணிமார் பேரிலேயே பிழைகளைச் சுமத்தினர். தோட்டத்து அதிகாரிகளும் வெள்ளைக்காரத் தலைவர்களும் தப்பிக்கொண்டனர்.

கங்காணி பெண்டாட்டி
காசுக்காரி எண்டிருந்தோம் ;
பச்சைக்காட்டுத் தொங்கலிலே
மொச்சைக்கொட்டை விற்கிருளே!

கங்காணி பெண்டாட்டி பெரிய சீமாட்டி என்ற நினைவுடன் இருந்தவர்களுக்கு ஏமாற்றம் உண்டாகியது.

வசதிக் குறைவுகள் பல இருந்தபோதும் வந்தவர்களெல்லாம் தோட்டங்களில் குடியேறி, வேலை செய்து கூலி பெற்றுக் குடித்தனம் நடாத்தினர். நகை நட்டும் தேடிக் கொண்டனர்.

கண்டிக்கு வந்ததுன்னு
கனத்த நகை போட்டதுன்னு
மஞ்சள் குளித்ததுன்னு
மனுசமக்க தெரியலியே,

என்று ஒருவருக்கொருவர் பெருமிதப்பட்டுச் செல்வத்தில் திளைத்தனர்.

கள்ளும் சாராயமும் குடித்துப் பொருளை வீணே விரயஞ் செய்தனர் சிலர்.

சாராயக் காரு
சதிகெடுவா சிங்களவா
நீ தந்த சாராயம்
நெனவுதடு மாறுதடா,

எனப் பாதையில் பாடிக்கொண்டு நின்றனர் சிலர்.

கள்ளுக் குடிச்சனடி — என்
கண்ணுரெண்டுஞ் சொக்குதடி
தன் வீட்டுக் குள் நுழையத்
தடமே மிரளுதடி,

என்று பாடிக்கொண்டே வீடு சென்றனர் சிலர்.

கள்ளைக் குடிக்காதீங்க
காரணமும் பேசாதீங்க
மெத்தக் குடிக்காதீங்க
பித்தம் சிரசுக் கேறும்,

என அவர் மனைவியர் அவர்களைத் திருத்த முயன்றனர்.

கண்டியிலிருந்து தாய்நாடு திரும்பிய இளைஞன் ஒருவன் தன் மைத்துனியைத் தனித்துக் காண மிகவும் தவித்தான்.

கண்டி கொழும்புங் கண்டேன்
கருங்குளத்து மீனுங் கண்டேன்
ஒண்டி குளமுங் கண்டேன் — என்
ஒயிலாளைக் காணலையே,

என்று மெல்லப் பாடிக்கொண்டு அவள் வீட்டைச் சுற்றி வந்தான். மறுநாள் அவள் தனித்திருந்த சமயம் வீட்டுக்குள் நுழைந்தான். அவனை வரவேற்று அவள் உபசரித்தாள். கண்டியைப் பற்றிய சம்பாஷணை நடந்தது. 'கொழுந்தன்' என்று ஒரு முறையாவது அவள் தன்னை அழைப்பாள் என அவன் எதிர்பார்த்தான். அவளோ அதைமட்டும் செய்தாளில்லை. கண்டியிலிருந்து அவளுக்கென அவன் மாம்பழங்கள் கொண்டு சென்றான். அவற்றை அவளிடம் கொடுக்கு முன்னர்,

பச்சை மாங்காய் ஒன்று தாரேன்
பழுத்த மாங்காய் மூன்று தாரேன்
கொழும்பு ரூபா ஒன்று தாரேன்
கொழுந்தனென்று கூப்பிடடி,

என்று மெல்லத் தன் விருப்பத்தைச் சொல்லிப் பார்த்தான். அவளோ,

பச்சை மாங்காய் ஒன்றும் வேண்டாம்
பழுத்த மாங்காய் மூன்றும் வேண்டாம்
கொழும்பு ரூபா ஒன்றும் வேண்டாம் — நான்
கொழுந்தனென்றும் கூப்பிடவில்லை,

என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லி விட்டாள். தான் கொண்டுபோனவற்றை அவளிடம் கொடுத்துவிட்டு,

மஞ்சள் மினுக்கியடி
மயிரெல்லாம் பூமினுக்கி
கொண்டை மினுக்கியடி — உன்னைக்
கொண்டு போறன் தொங்க தோட்டம்,

எனக் கூறிவிட்டு வெளியேறினான். அவளை அவன் மணம் முடித்து கண்டிக்குக் கூட்டி வந்தான் என்று கூறவா வேண்டும்?

கூடை மேலே கூடை வைத்து, இளம்பெண் ஒருத்தி கொழுந்து எடுக்கப் போகின்றாள். வழியில் ஆளரவங் கேட்டுச் சுற்று முற்றும் பார்க்கின்றாள்.

கூடைமேலே கூடை வைத்துக்
    கொழுந்தெடுக்கப் போற பெண்ணே !
கூடையை இறக்கி வைத்துக்
    குளுந்தகதை சொல்லிப்போடி,

என்றார், அவ்விடத்தே மறைந்து நின்ற தோட்டக் கணக்கப் பிள்ளை.

கூடையை இறக்கி வைப்பேன்
    குளுந்தகதை சொல்லிப் போவேன்
கொண்டவன் கண்டானெண்டால்
    கோப்பிக்கிரை வைத்திடுவான்,

என்று அச்சுறுத்திவிட்டுத் தன்வழி சென்றாள். (கோப்பி - கோப்பிக்கத்தி.) இப்பாடல்களுக்குப் பல பிரதி பாடங்களுண்டு.

கூந்தல் மறைக்கும் கம்பள முக்காட்டுடனும், முதுகு கனக்கும் கூடையுடனும் நிரைக்கொருவராக நின்று பெண்கள் தேயிலைக் கொழுந்து கொய்தனர். கண்களின் பரபரப்பும், கைகளின் சுறுசுறுப்பும், எவர் கவனத்தையும் ஈர்க்கும் தன்மையனவாய் அவர்கள் கொய்தனர். மெல்லிய மழை தூறியது. குளிருக்கும் மழைக்குமென இட்ட கம்பளி முக்காட்டுடன் கொழுந்துக் கூடையும் நனைந்தது. மலையேறிக்கொண்டே பெண்கள் கொழுந்து கொய்யும் கட்டம் வந்தது. எல்லோரும் முன்னேற ஒருத்தி மட்டும் பின் நின்றாள். முன்னேறியவர்கள் பின்நின்றவளைப் பார்த்தனர்.

கம்பளி எட்டு ராத்தல்
    கனத்த கூடை பத்து ராத்தல்
இத்தனையும் தூக்கிக்கிட்டு
    ஏறணுமே மேட்டுமலை,

என்ற பாடல் அவள் வாயில் உதயமானது.

பெண்கள் கொழுந்து பறிக்கும்பொழுது, அதே மலையில் ஆண்களும் முள்ளுக் குத்தினர். முள்ளுக் குத்துதல் என்பது தேயிலைச் செடிகளுக்கு உரமிடுதல். சூலம் போன்ற மூன்று நாக்குகளையுடைய ஆயுதங்களால் தேயிலைச்செடி நிரைகளுக்கிடையே உரத்தைப் பரவி, நிலத்தைக் கிண்டி விடுதலாம்.

பரிசம் போட்ட பெண் கொழுந்து பறித்துக்கொண்டிருந்தாள். அவளுடைய மாப்பிள்ளை முள்ளுக் குத்திக் கொண்டிருந்தான். அவன் பக்கம் அவள் திரும்பிய நேரமெல்லாம் வைத்த கண் வாங்காமல் அவன் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான். பக்கத்தே நின்று கொழுந்து ஆய்ந்த பெண்களும், முள்ளுக்குத்திய ஆண்களும் இக் காதல் ஜோடியில் கவனம் செலுத்தாது விடுவரோ? நாணம் மீதூர,

முந்நூறு ஆளுக்குள்ளே
முள்ளுக் குத்தும் என்சாமி!
முள்ளு மூணும் மண்ணுக்குள்ளே
முழிகளிரண்டும் என்மேலே,

என்று அவளுடைய நா மெல்ல நழுவவிட்டது.

காலை முதல் மாலைவரை கொழுந்து பறித்த பெண்களுக்கு அலுப்புத் தோன்றியது. வீடு செல்லத் துடித்தனர். எனினும், கணக்கப்பிள்ளை கம்பீரமாக அங்கு நிற்பது தெரிந்தது. பெண்கள் ஒருவரை யொருவர் பார்த்தனர்.

பொழுது அடைஞ்சிருச்சே
பூமரமும் சாஞ்சிருச்சே
இன்னம் இரங்கலையோ
எசமானே உங்க மனம்?

என்றாள் ஒரு வாயாடி. கணக்கப்பிள்ளையின் மனம் இரங்கிற்றா?

மறுபுறத்தில் கொழுந்து கொய்த பெண் ஒருத்தியை கங்காணி ஏசினன். அவள் அழுதழுது நின்று கொழுந்து கொய்தாள். கங்காணி அவ்விடம் விட்டகன்ற பின்னர், அவளை முன்னேறும்படி பக்கத்தே நின்று கொழுந்து கொய்த பெண்கள் அவளுக்குத் தேறுதல் கூறி அழைத்தனர்:

கூடையிலே கொழுந்துமில்லே
கொழுந்தெடுக்க சிந்தையில்லே
கங்காணி சொன்ன சொல்லு
கண்ணீரைக் கொட்டுதடி,

என்று சொல்லிக்கொண்டே பின்சென்ருள்.

கூடையிலே கொழுந்துமில்லே
கொழுந்தெடுக்கச் சிந்தையில்லே
கங்காணி ஏசுறது — எனக்குக்
கவலையாகத் தோணுதடி,

என்னும் பிரதிபாடமும் உண்டு.

இப்பொருள் கொண்ட பாடல்களை இந்தியாவில் ஏலத் தோட்டங்களில் பழம் எடுக்கும் பெண்களும் பாடி வந்தார்கள். அவற்றுள் ஒன்று இது:

பொட்டியிலே பழமுமில்லே
பழமெடுக்க மனமுமில்லே
சாக்கிலே போடச் சொல்லி
சவட்டுருராம் முதலாளி,

ஒன்றையொன்று தழுவி வருதல் காண்க. எது முந்தியது?

நேரம் ஐந்தரை மணியாகிவிட்டது. கங்காணி மீண்டும் பெண்கள் கொழுந்தெடுக்கும் இடத்திற்கு வந்தான்.

ஐந்து மணியுமாச்சு
அரைமணி நேரமுமாச்சு
வேலைவிடு கங்காணி
வெந்நீர்வைச்சு நான்குளிக்க,

என்றாள் ஒருத்தி. கங்காணியின் முகக் குறிப்பைக் கண்டதும் பெண்கள் தத்தம் கூடைகளுடன் வெளியேறினர்.

கொய்த கொழுந்தைக் கொட்டி எடைபோடும் இடத்தில் பெண்கள் ஒவ்வொருவரும் தாம்தாம் ஆய்ந்துவந்த கொழுந்தைக் கொட்டினர். கணக்கப்பிள்ளை அவைகளை நிறுத்து, அவரவர் கொய்துவந்த கொழுந்தின் நிறையைக் குறித்து, அவரவரிடம் கொடுத்தார். அரும்புடன் முற்றிய இலைகளும் உளவெனச் சிலரது நிறையில் ஒவ்வொரு இருத்தல் குறைத்தார். மழைத்தண்ணீருடன் கொழுந்தைக் கொணர்ந்து விட்டதாக, வேறு சிலரது நிறையில் இவ்விரண்டு இருத்தல்களைக் குறைத்தார். நம் பட்டினங்களில் அரிசியை நனைப்பதுபோல், நிறைக்காக கூடையுடன் கொழுந்தைத் தண்ணீருள் தோய்த்து எடுத்து வந்துவிட்டதாகக் குற்றங்காட்டி இன்னுஞ் சிலரது நிறையில் மும்மூன்று இருத்தல்களைக் குறைத்தார். அவ்விடத்தில், அவர் இட்டதே சட்டம்.

ஓடியோடி நிரை பிடித்து
ஒரு கூடை கொழுந்தெடுத்தும்
பாவி கணக்கப்பிள்ளை
பத்துக்குத்தல் போட்டானடி,

என்று கூறிக்கொண்டே ஒருத்தி வெளிச் சென்றாள். கூடையை இறக்கிவைத்து, குளிர்ந்த கதை சொல்லிப் போகும்படி அன்று முற்பொழுதில் கணக்கப்பிள்ளை கேட்ட பெண் அவளே தான் என்பதை மற்றவர்கள் எப்படி அறிவார்கள் ?

ஓடியோடிக் கொழுந்தெடுத்தேன்
ஒரு கூடை கொழுந்தெடுத்தேன்
பாவி கணக்கப்பிள்ளை
பத்து இருத்தல் சொல்லுராண்டி,

என்பது, மேற்கூறிய பாடலின் பிரதிபாடமாகும்.

இப்படியாகத் தள்ளுபடி செய்த கொழுந்தை தோட்டக் கணக்கப்பிள்ளைகள் தங்களுக்கு விருப்பமான பெண்களின் கொழுந்துக் கணக்குடன் சேர்த்துவிடுவது தேயிலைத் தோட்டச் சம்பிரதாயம் என்பர். உண்மையா ?

பறிக்கப்பட்ட கொழுந்தைப் பதப்படுத்தத் தொழிற் சாலைக்கு எடுத்துச் செல்லுமுன்னர், முற்றிய இலைகளையும் அரும்புகளையும் வெவ்வேருக்கினர் பெண்கள்.

இஸ்டோரும் கட்டியாச்சு
இஞ்சினும் பூட்டியாச்சு
இளவட்டப் பெண்டுகளா !
எலைபொறுக்க வந்திடுங்க.

இலை பொறுக்குதல் தெரிதலாகும்.

உலர்ந்த கொழுந்துகளை யந்திரங்களில் அரைத்தனர். யந்திரச் சில்லிலே வேலை செய்த ஒருவன், தான் பரிசம் போட்ட பெண்ணிடம் கண் ஜாடை காட்டி, வெற்றிலை கேட்கிருன். அவன் ஜாடைப் பேச்சு அவளுக்கு விளங்கி விட்டது. வெற்றிலை கொடுக்க விரும்பினுளெனினும் யந்திர சாலைக்குள்ளே போவதை அவள் விரும்பவில்லை.

வெங்கல ரோதையிலே
வேலை செய்யும் என்சாமி !
வெத்திலை வேணுமின்னு
வெளியே வந்து கேளுமையா,

என்ருள் அப்பெண்.

வெற்றிலை போட்டு உதடுகள் சிவப்பேறி உல்லாச நடைபோடும் கன்னியொருத்தியைக் காளையொருவன் இடைமறித்து, வெற்றிலை கேட்கிருன். அவன் பார்வையும் பகடியும் அவளுக்குப் பிடிக்கவில்லை.

பாக்கு வெத்திலை கேட்கிருரவர்
பகிடிபண்ணிச் சிரிக்கிருரவர்

கேட்குமாப் போலே கேட்கிருரோ — அவர்
கீழ்க்கண்ணுலே பார்க்கிருரோ,

என்று சொல்லிக்கொண்டே தன் வழி செல்கின்ருள்.

மாப்பிள்ளை ஒருவனும், அவன் முறைப்பெண்ணும் தனியிடத்திற் சந்திக்கிருர்கள் ஒருநாள்:

வெத்திலை போட்டபுள்ளே
விருவிருண்ணு வந்தபுள்ளே
நாக்குச் சிவந்தபுள்ளே
நாந்தாண்டி உன்புருஷன்,

என்ருன் அவன். முகத்தில் அறைந்ததுபோல்,

புத்தியும் உனக்கிருக்கா
புருஷனென்றும் சொல்லலாமா ?
மாலை மாத்துமுன்னே
மணவாளன் ஆவாயா ?

என்று சொன்னுள் அவள். இப்படியே எல்லாச் சுவைகளும் தேயிலைத் தோட்டங்களில் நிறைந்து தோன்றும்.

புது நிலவு பொழிந்து கொண்டிருந்தது. பூத்தென்றல் வீசிக்கொண்டிருந்தது. மலைமடியினின்றும் தேனருவி துள்ளிக் குதித்தோடிவிழுந்துகொண்டிருந்தது. சிறு மேசையருகே, போதை தலைக்கேறிய அதிகாரி ஒருவர் சாய்மானக் கதிரையிலே சாய்ந்திருந்தார்.

தகப்பனைத் தேடி அவ்வழி வந்தாள், தோட்டத்தொழிலாளி ஒருவனின் மகள். வாட்டசாட்டமான அவ்வடிவழகியைப் பார்த்ததும், தோட்டத்துரை தன்னையே மறந்தார்:

ஐந்து சிலினும் தாரேன்
அரைப்போத்தல் ஜின்னும் தாரேன்
கோதம்பை ரொட்டி தாரேன்
குணமயிலே வந்து போடி,

என்றூர் கதிரையைவிட்டு எழுந்து நின்று. தர்மசங்கடமாகி விட்டது அவளுக்கு. எனினும், சமயோசித புத்தி அவளுக்குக் கைகொடுத்து உதவியது:

ஐந்து சிலினும் வேண்டாம்
அரைப்போத்தல் ஜின்னும் வேண்டாம்
கோதம்பை ரொட்டி வேண்டாம்
குணமயில் நான் வரவுமில்லே,

என்று சொல்லிவிட்டு மெதுவாக அவ்விடம் விட்டகன்ருள். அவ்விசயத்தை தன் தகப்பன் அறிந்தால் என்னகுமோ என அஞ்சினுள்.

பெரியதுரையின் சமையற்காரனே 'அப்பு' என்பார்கள். பங்களா ஓரத்திலே ஒருநாள் பெண்கள் வளர்ந்த மட்டம் ஒடித்தனர். சமையலறைக்குள் நின்ற அப்பு தகாத காதல் வார்த்தைகள் சிலவற்றை ஜன்னலுக்கூடாக பெண்ணெருத்திமீது வீசினுன். செல்லாவிடத்திற் சினந் தீது என்பதை உணர்ந்த அப்பெண் ஒன்றும் பேசாது, தன் வேலையை முடித்துக்கொண்டு அகன்ருள்.

வங்களா ஓரத்திலே
வளர்ந்த மட்டம் ஒடிக்கையிலே
அப்பையா சொன்ன சொல்லு — எங்க
அப்பன் கிட்ட சொல்லாதடி,

என்று தன்னுடன்கூட ஒடித்த பெண்ணுக்கும் சொல்லி வைத்தாள்.

காதல் ஜோடி ஒன்று எங்கு சென்ருலும் இணை பிரியாது சிறிது காலம் கூடித் திரிந்தனர். பாதையால் அவர்கள் போகக் கண்டால் தோட்டத்தில் ஒரே பரபரப்பும், குசுகுசுப்பும். காதலர்களுக்கிடையில் ஏற்பட்ட பிணக்கு யாதோ! திடீரென இருவரும் தூரத்தூர நின்றனர். காதலி தனித்துச் செல்லும் காலங்களில், அங்கொரு சுடுசொல்லும்

இங்கொரு சொட்டையும் காற்றில் மிதந்தன. காதில் அவை விழுந்ததும், அவள் மனம் பதைத்தது. ஒன்றும் அறியாதவள்போல் ஒதுங்கி நடந்தாள்.

பீளிக்கரையில் பிற்பொழுதில், அவள் குளித்துக் கொண்டு நின்றாள் ஒரு நாள்.

ஓடுகிற தண்ணியிலே
　　ஒரசிவிட்டேன் சந்தனத்தை
சேந்திச்சோ சேரலையோ
　　சிவத்தப்பிள்ளை நெத்தியிலே ?

ஓடுகிற தண்ணியிலே — மீன்
　　ஆடுதடி கோரையிலே
பாடுறேண்டி உன்மேலே
　　பஞ்சவர்ணக் கிளிப்பொண்ணே,

என்று பாடிக்கொண்டு அவ்வழி வந்தான் அவள் காதலன். அவனைக் கண்டதும்,

இடுப்புச் சிறுத்தவளே
　　என் குணத்துக் கேத்தவளே !
நடையுஞ் சிறுத்தவளே
　　நான் வாறேன் உன்னத்தேடி,

என்று பாடிக்கொண்டு அவளெதிரில் வந்தான். மேலும் அவ்விடத்தில் நிற்க மனமில்லாது ஈரச்சீலையுடன் குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு, தன் கூந்தலை உலர்த்தியவண்ணம் வீடு நோக்கி நடந்தாள் அவள்.

கொடமெடுத்து இடையில் வைத்து
　　கூந்தப்பனை மயிர் உணத்தி
பாராமே போகாதடி
　　படமெடுத்த நாகம்போல,

என்று பாடிக்கொண்டே அவளைக் குறுக்கே மறித்தான். பொங்கி எழுந்த ஆத்திரத்தில்,

இனியிணங்கிப் பார்க்கமாட்டேன்
இனிமே கண்டாப் பேசமாட்டேன்
பாதையிலே போகும்போது
பதைக்குதையா என் மனசு,

என்று அவள் சொல்ல, அவன் மேலும் இடைமறித்து,

நடையா நடையழகி
நடைக்கேற்ற காலழகி — நீ
சிமிட்டி நடக்கையிலே — என்
சீவன்பறி போகுதடி,

என்று சொல்லிக்கொண்டே அவளைத் தொடர்ந்தான்,

அப்பன் கையைப் பாப்பவராம்
அறுபத்தெட்டு யோசனையாம்
கொஞ்சப் புத்திக் காரனுடே
கூடுவது மோசந்தானே,

என்று சொல்லிக்கொண்டே அவள் மேலும் நடந்தாள்.

கல்லிலடித்துத் தாறேன்
கண்ட சத்தியம் செய்துதாரேன்
வேலவர் கோயிலிலே
வேட்டிபோட்டுத் தாண்டித் தாறேன்,

என்று சொல்லிக்கொண்டே அவளைத் தொடர்ந்தான். பின் ஓரிடத்தில் நின்று, வைத்தகண் வாங்காது அவளையே பார்த்துக்கொண்டு நின்றான்.

என்னை என்னைப் பாக்காதீங்க
ஏங்கி முகம் வாடாதீங்க
உன்னைப்பெத்த தாயி கண்டால்
என்னை ரொம்ப ஏசுவாங்க,

என்றாள், தான் மறையுந் தருணம்.

ஆலமரமுறங்க,
அடிமரத்து வண்டுறங்க

உன்மடிமேல் நானுறங்க
உலகம் பொறுக்கலையே,

என்று பாடிக்கொண்டே அவன் திரும்பினான்.

பாட்டுக்குப் பணிய லயம்
பந்தடிக்கு மேட்டு லயம்
பேச்சுக்குப் பீலிக்கரை
வாச்சுதோடா உந்தனுக்கு,

என்று முனிந்துகொண்டே அவன் தாய் எதிரில் வந்தாள்.

தோட்டத் தொழிலாளர்களின் பாடல்கள் பார் பெரு மிதமுறும் பரம்பரைச் சொத்தாம். தேன் சொட்டும் தெம் மாங்குப் பாடல்கள் தேயிலைத் தோட்டங்களில் இன்றும் இல்லாமலில்லை. அவை ஊற்றெடுப்பதற்கோ, நிலைத்து நிற்பதற்கோ உறுதுணையாம் சூழல் நாளை மறைகின்றன.

கனக-
செந்தில்நாதன்

# சங்கங்கள்

தமிழிலக்கிய வரலாற்றில் சங்ககாலம் என்று கூறப்படுகின்றது. நம் முன்னோர்கள் முச்சங்கங்கள் வைத்துத் தமிழை வளர்த்தார்களென்பது பொதுவான நம்பிக்கையாகும். நான் ஈண்டு குறிப்பிடுஞ் சங்கங்களும் அத்தன்மை உடையனவெனக் கருதத் தேவையில்லை. பொதுவாக, இலக்கிய ஆர்வத்தினை வளர்க்கவும், கருத்துப் பரிவர்த்தனைகளுக்குக் களங்களமைத்துக் கொடுக்கவும், பல சங்கங்கள் உழைத்திருக்கின்றன. சங்கங்கள் ஆற்றிய பணிகளை இப்பகுதியிலே தொகுத்துக் கூறலாமெனத் துணிகின்றேன்.

பிரமஸ்ரீ தி. சதாசிவ ஐயரவர்களின் அரிய உழைப்பினுல் நிறுவப்பட்ட ஆரிய திராவிட பாஷாபி விருத்திச் சங்கம், கலைப்புலவர் நவரத்தினம் அவர்களின் முயற்சியினுலே தோன்றிய கலாநிலையம், துடிப்புள்ள இளைஞர்களின் ஆர்வத்திலே தோன்றிய மறுமலர்ச்சிச் சங்கம் ஆகியன ஈழத்து இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய பணியினை ஏலவே பார்த்தோம்.

ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தினைப் பற்றிக் குறிப்பிடுகையில், அதனுடன் இணைந்து செயலாற்றி, இன்னும் அதன் இயக்க சக்தியாக உழைத்துவரும் தமிழறிஞர் சு. நடேச பிள்ளை அவர்களையும் நினைவிலிருத்திக் கொள்ளுதல் வேண்டும். ஈழநாட்டின் தலைசிறந்த அரசியல் ஞானியும், கல்விமானுமான சோ. பொன், இராமநாதன் அவர்களின் மருகரான அவர், பரமேஸ்வராக் கல்லூரியின்

தமிழ் வித்துவானுகச் சேர்ந்து, ஈழத்தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றத் தொடங்கியதிலிருந்து, இற்றைவரை அதன் மேன்மைக்காக உழைத்துவருகின்றார். சுதந்திர ஈழத்தில், தென்னகத்தின் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் அநுசரணையுடன், தமிழ் கூறும் நல்லுலகின் தமிழ் விழா ஒன்று யாழ்ப்பாணத்திலே நடந்தேறியது. அத்தமிழ்விழா வெற்றிகரமாக நடைபெறுவதற்கு அவர் முன்னணியில் நின்று உழைத்தார். கதிர்காமநாதன் திருப்பள்ளி எழுச்சி என்கிற அவரது பாடல்கள் வெளிவந்தபொழுதே, அவரை ஒரு சிறந்த புலவராக ஈழம் அறிந்துகொண்டது. சமீபத்தில் வெளிவந்துள்ள சகுந்தலை வெண்பா அதனைச் சந்தேகத்திற்கிடமின்றி நிலை நாட்டி விட்டது. ஆழ்ந்த தமிழ்ப்புலமையுடைய அவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய ஆராய்ச்சிப் பேருரைகளைப் பல அறிஞர்களும் புகழ்ந்துள்ளார்கள். அவர் பண்பான பேச்சாளர். அரசியலிலும் ஈடுபாடுடைய அவர் இலங்கைப் பாராளுமன்றத்தின் பிரதிநிதிசபையின் அங்கத்தவராகவும், தபால் - தந்தி - வானெலிப் பகுதி அமைச்சராகவும் கடன்மை பார்த்துள்ளார். தற்பொழுது அவர் மேற்சபை (Senate) அங்கத்தவராவர்.

யாழ்ப்பாணத்தில் நடந்தேறிய தமிழ் விழாவின் வெற்றிக்கு உழைத்தவர்களுள் இன்னொருவர் காலஞ்சென்ற கே. கனகரத்தினம் அவர்கள் ஆவர். அவர் அப்பொழுது கல்வி அமைச்சின் பாராளுமன்றக் காரியதரிசியாகக் கடன்மை பார்த்துக் கொண்டிருந்தார்.

1948-ஆம் ஆண்டிற்குப் பின்னர் ஈழத்திலே பல எழுத்தாளர் சங்கங்கள் தோன்றின. இலங்கையின் இடதுசாரி இயக்கங்களுடன் ஒத்துழைத்த கே. இராமநாதன், கே. கணேஷ், எம். பி. பாரதி போன்றோரால் இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தாபிக்கப்பட்டது. அவர்களால் நடாத்தப்பட்ட பாரதி என்னுஞ் சஞ்சிகை இலக்கியத் துறையில்

மார்க்ஸிசக் கண்ணேட்டத்தை அறிமுகப்படுத்தியது. அச் சங்கம் பல ஆண்டுகள் செயலற்றுக் கிடந்தது. பின்னர், கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தவர்களான எழுத்தாளரால் அதற்குப் புத்துயிரூட்டப் பெற்றது. பிரேம்ஜி அதன் பொதுச் செயலாளராக்கப்பட்டார். அதன் கிளை யாழ்ப்பாணத்தில் நிறுவப்பட்டது. அந்தக் காலத்தில் வேறு எழுத்தாளர் சங்கங்கள் செயலாற்ருத காரணத்தால், எழுத்தாளர் மத்தியில் கருத்துப் பரிவர்த்தனைகள் நடைபெறுவதற்கு ஏற்றதாகப் பல கருத்தரங்குகளை அது ஏற்பாடு செய்து கொடுத்தது. இக் கருத்தரங்குகள் யாழ்ப்பாணத்திலும் கொழும்பிலும் நடாத்தப்பட்டன. அத்துடன், பெரியோர் ஞாபகார்த்த விழாக்களையும் அது நடாத்திற்று. சோம சுந்தரப் புலவரின் ஞாபகார்த்தமாக ஒரு கவிதைப் போட்டியினை நடாத்திப் பரிசில்கள் வழங்கிற்று. 1961-ஆம் ஆண்டிற்கு முன்னர், கட்சி அரசியலை மறந்து, பல்வேறு தரப்பட்ட அரசியற் கோட்பாடுடையவர்களும் முற்போக்கு எழுத்தாளர் சங்க நடவடிக்கைகளிலே பங்கு பற்றினர்கள். கொழும்பில் ஆடம்பரமாக ஸாஹிருக் கல்லூரி மண்டபத்தில் நடாத்தப்பட்ட முதலாவது மகாநாட்டில், எதிர்க்கருத்துப் பரிவர்த்தனைக்கு இடமளிக்க மறுத்ததன் காரணமாகவும், அஃது இலங்கைக் கம்யூனிஸ்ட் கட்சியின் எழுத்தாளரது தொழிற் சங்கமே என்று நிரூபிக்கப் பட்டதனுலும், பல அங்கத்தவர்கள் அதிலிருந்து விலகினர்கள். அச் சங்கம் புதுமை இலக்கியம் என்னும் விமர்சனச் சஞ்சிகையை மிகுந்த ஆர்வத்துடன் பிரசுரித்துவந்தது. அதன் அச்சுக் கூலியிலும் பார்க்கக் கூடுதலான விளம்பரத் தொகையைக் கூட்டுறவு மொத்த விற்பனவுப் பகுதி செலுத்தி வந்த போதிலும், அதனைத் தொடர்ந்து நடாத்தாதது விசனிக்கத் தக்கதே! ஆரம்பத்தில் ஆக்க பூர்வமான வேலைகள் செய்து வந்த மேற்படி சங்கம், பிற்காலத்தில் சாகித்திய விழாக் களைக் குழப்புதலையே தனது பிரதான இலக்கியப் பணியாக வரித்துக்கொண்டது; 1962-ஆம் ஆண்டில், தமது சங்க

அங்கத்தவர்களை சாகித்திய விழாவிற் பேச அனுமதிக்க வேண்டும் என்று ஆர்ப்பாட்டஞ் செய்தது; 1963-ஆம் ஆண்டில், சாகித்திய விழாவிற் கலந்துகொண்ட பேச்சாளர்களுக்கு முட்டை யெறிந்து, அறிஞருலகின் வெறுப்பினைச் சம்பாதித்துக் கொண்டது. எழுத்தாளர் மத்தியிலே ஐக்கியத்தை உருவாக்க உழைத்தபொழுது நன்முக இயங்கிய சங்கம், அவர்கள் மத்தியிலே பிரிவினையை வளர்க்க முயன்றபொழுது தாழ்ந்தது.

மலாயாவில் தமிழன் என்னும் பத்திரிகை நடாத்திய வித்துவான் வ. மு. கனகசுந்தரம் அவர்களின் முயற்சியினுற் கொழும்புத் தமிழ்ச் சங்கம் வளர்ந்துவந்தது. அது வருடா வருடம் தென்னக அறிஞர்களை அழைத்து, விழாக்கள் நடாத்திற்று.

ஆ. க. சுப்பிரமணியம் அவர்களின் முயற்சியினுல் இலங்கை எழுத்தாளர் சங்கம் 1952-ஆம் ஆண்டிலே தாபிக்கப்பட்டது. இருப்பினும், அது செயற்படவில்லை. பின்னர், எஸ். டி. சிவநாயகம் அவர்களுடைய முயற்சியினுல் அகில இலங்கை எழுத்தாளர் சங்கம் நிறுவப்பட்டது. கொழும்பில் இயங்கிய இச் சங்கங்களுடன், சோ. சிவபாதசுந்தரம், ஆ. குருசாமி, வி. லோகநாதன் ஆகியோரது முயற்சியின் பயனுக இலக்கிய அன்பர் வட்டம் சில ஆண்டுகளாகக் கிரமமாகக் கூடிவந்தது.

யாழ்ப்பாணத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஆரம்பத்தில் வேகமாகச் செயற்படாவிட்டாலும், பிற்பகுதியில் நன்கு இயங்கியது. நாவேந்தன், முருகையன், சொக்கன், யாழ்ப்பாணம் - தேவன் ஆகியோர் அதன் செயலாளர்களாகக் கடன்மையாற்றினுர்கள். தமிழ் எங்கள் ஆயுதம் என்னுங் கவிதை நூலை அது வெளியிட்டது. வானெலிக் கவிதைப் போட்டியில் பரிசுபெற்ற மு. செல்லையாவைத் தகுந்தபடி கௌரவித்ததுடன், முதன் முதலாகச் சாகித்திய மண்டலப் பரிசுபெற்றவர்களையுங் கௌரவித்தது. தென்னகத்து

நல்லறிஞர்களும், எழுத்தாளர்களும் ஈழத்துக்கு வருகை தந்தபோது, அஃது அறிமுகக் கூட்டங்களையும் ஒழுங்கு செய்தது.

இந்த யாழ்ப்பாணத் தமிழ் எழுத்தாளர் சங்கமே, சென்ற வருடம் விரிவுபெற்று, இலங்கைத் தமிழ் எழுத்தாளர் சங்கமாக மாறியது. அதன் தோற்றம் ஈழத்தின் பல பகுதி எழுத்தாளர்களினுலும் வரவேற்கப்பட்டது. அது கிழக்கிலங்கைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்துடன் சேர்ந்து தமிழ் விழா ஒன்றைக் கோலாகலமாகக் கொண்டாடியது. ஐநூறு ரூபா பரிசு வழங்கப்பட்ட சிறுகதைப் போட்டியை வெற்றிகரமாக நடாத்திற்று. பரிசுபெற்ற கதைகளையும், பாராட்டப்பெற்ற கதைகளையுஞ் சேர்த்து போட்டிக் கதைகள் என்னும் நூலை வெளியிட்டுள்ளது. சு. வேலுப் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு, இலங்கை எழுத்தாளன் என்னும் தரமான இலக்கிய விமர்சன ஏடொன்றை மாதாமாதம் வெளியிட்டு வருகின்றது. தமிழ் விழாவின்போது அஃது அகில இலங்கை அடிப்படையில் இயங்கவேண்டும் என்கிற அபிப்பிராயம் பல பகுதி எழுத்தாளர்களாலுந் தெரிவிக்கப்பட்டு, அதன் பிரகாரம் ஒரு தீர்மானமும் நிறைவேறிற்று. இலங்கை எழுத்தாளர் சங்கத்தின் சாதனைகளிலே பெரும் பங்கு அதன் செயலாளராகக் கடன்மையாற்றும் யாழ்ப்பாணம்-தேவனைச் சாரும் எனக் கூறின் மிகையாகாது.

யாழ் இளம் எழுத்தாளர் சங்கம் எழுத்தார்வமிக்க இளைஞர்களாலே தொடங்கப்பட்டு, முறையாகக் கூட்டங்கள் நடாத்தி, அறிஞர்களை அழைத்துப் பேசச் செய்து, தனது அங்கத்தவர்களுடைய வளர்ச்சிக்காக உழைத்தது. அதன் அங்கத்தவர்கள் தற்பொழுது சர்வகலாசாலையிலும், பிற இடங்களிலும் இருந்து ஓரளவு தங்களுடைய திறமையைக் காட்டி வருகின்ருர்கள். அது வெளியிட்டுள்ள ஆண்டு மலரொன்று நல்ல முறையில் அமைந்துள்ளது. அது வெளியிட்ட கவிதைத் தொகுதியின் மூலம் அறிமுகமான இளங்

கவிஞர்கள் வளர்ந்து வருதல் மகிழ்ச்சியைத் தருகின்றது. யாழ் இளம் எழுத்தாளர் சங்கத்திலேற்பட்ட அரசியற் கருத்து வேற்றுமைகள் காரணமாக இலங்கை இளம் எழுத் தாளர் சங்கம் ஒன்றுந் தோன்றியுள்ளது.

தீவுப் பகுதி எழுத்தாளர் சங்கமொன்றும் இயங்கி வருகின்றது. கவிஞர் தில்லைச் சிவன் அதன் செயலாளராகக் கடன்மையாற்றுகின்றார்.

நாவேந்தனை நாயகமாகக் கொண்ட இலக்கிய இரசிகர் சங்கமும் இயங்கி வருகின்றது. கொழும்பில் இவ்வாறான ஓர் இலக்கிய இரசிகர் குழு பயனுள்ள வேலைகளைச் செய்து வந்தது. அதன் செயலாளர்களாக கே. கனகரத்தினம், எம். ஏ. ரஹ்மான் ஆகிய இருவருங் கடன்மையாற்றினர்.

எழுத்தாளர் சங்கம் என்று அழைக்கப்படாவிட்டாலும், குரும்பசிட்டி சன்மார்க்க சபையையும் ஈண்டு குறிப்பிடுதல் பொருத்தமுடைத்து. தமிழ்த் தொண்டர் நா. பொன்னையா அவர்களால் தொடங்கப்பட்ட மேற்படி சபை, கடந்த இருபத்தொன்பது ஆண்டுகளாக பல இலக்கியக் கூட்டங்களை நடாத்தி வருவதுடன், பண்டிதமணி சி. க. வின் சைவ நற்சிந்தனைகள், ஈழத்து எழுத்தாளர் ஐவர் எழுதிய மத்தாப்பு, ஆ. தம்பித்துரை எழுதிய ஓவியக் கலை, சிறுவர் சித்திரம் என்பனவற்றையும் அது வெளியிட்டுள்ளது.

ஈழத்துப் பண்டிதர் கழகம், பண்டிதர்களுடைய நலன்களைப் பேணுவதுடன், புதிதாகப் பண்டிதர்கள் தோன்றுவதற்கும் பணியாற்றி வருகின்றது. பண்டிதர் செ. துரைசிங்கம் அவர்கள் அதன் செயலாளராவர். அதன் தலைவராகக் கலாநிதி ஆ. சதாசிவம் அவர்கள் வந்ததுடன், மரபினைப் பேணும் இயக்கத்தை அது தீவிரப்படுத்தி வரும் அதே நேரத்தில், மற்றும் ஆற்றலிலக்கியக் காரர்களுடனும் நேச உறவினை வளர்த்துள்ளது.

மட்டக்களப்பில், 1941-ஆம் ஆண்டளவில் கலை மன்றம் என்கிற தாபனந் தோன்றிற்று. பண்டிதர் பரீட்சையில் சித்தியடைந்தவர்களை, அது பரிசில் வழங்கி ஊக்குவித்தது. வெளியூர் அறிஞர்களையும் அழைத்துத் தமிழ் விழாக்கள் கொண்டாடிற்று. அத்துடன் ஞாயிறு தோறும் பயனுள்ள ஆராய்ச்சி வகுப்புக்களை நடாத்திற்று. எவ்ப். எக்ஸ். சி. நடராசா அவர்கள் செயலாளராக இருந்தபொழுதுதான் அம் மன்றம் சுறுசுறுப்பாக இயங்கியது. துடிப்பு மிக்க இளைஞர்களால் ஆரம்பிக்கப்பட்ட வாலிபர் சங்கம் பெரிய அளவிலே ஒரு தமிழ் விழா நடாத்தியது.

இருப்பினும், எழுத்தாளர் சங்கம் 1960-ஆம் ஆண்டு வரையில் மட்டக்களப்புப் பகுதியிலே தோன்றவில்லை. மட்டக்களப்புச் சிவானந்த வாசிகசாலை மண்டபத்தில் நடைபெற்ற எழுத்தாளர் சந்திப்பு ஒன்றில், அரசியல் வேற்றுமைகளைக் கடந்து, எழுத்தாளர் ஐக்கியத்தை வளர்க்க ஓர் எழுத்தாளர் சங்கம் தோன்றவேண்டிய அவசியத்தை எஸ். பொன்னுத்துரை வற்புறுத்திப் பேசினார். இதனைத் தொடர்ந்து மட்டக்களப்புப் பகுதியிலே பல எழுத்தாளர் சங்கங்கள் தோன்றலாயின. மட்டக்களப்புத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் உதயகாலத்தில் எவ்ப். ஜி. ஜெயசிங்கம் மிகவும் உற்சாகத்துடன் உழைத்து, அதனை நல்ல நிலையில் வைத்தார். தற்பொழுது அன்புமணியைச் செயலாளராகக் கொண்டுள்ள அது, விபுலாநந்த நினைவு தினத்தை ஒழுங்காகக் கொண்டாடி வருவதுடன், தமது அங்கத்தவர்கள் ஏதாவது போட்டிகளிலே கலந்து கொண்டு வெற்றியீட்டினால், அவர்களைப் பாராட்டியும் கௌரவித்தும் வருகின்றது. மாணவர்களிடையே கட்டுரை போட்டிகளையும், பேச்சுப் போட்டிகளையும் நடாத்துகின்றது. காலஞ்சென்ற எம். எஸ். பாலு அவர்களின் ஞாபகார்த்தமாக அஃது ஒரு நாடகப்போட்டியினை நடாத்துதல் குறிப்பிடத் தக்கதாகும்.

கரவாகுப்பற்றுப் பகுதியில் **கல்முனை தமிழ் எழுத்தாளர் சங்கம்** தாபிக்கப்பட்டது. அதன் செயலாளர் **வி. எம். இஸ்மாயிலாவர்**. அது தனது முதற் பணியாக நாடகத்துறையில் எஸ். பொன்னுத்துரை ஆற்றிய தொண்டுகளுக்காக அவரைப் பொற்பதக்கஞ் சூட்டிக் கௌரவித்தது. பல புத்தக அறிமுகக் கூட்டங்களை நடாத்தியதுடன், "இலங்கையர்கோன்" ஞாபகார்த்த தினத்தை மிகக் கோலாகலமாகக் கொண்டாடிற்று. அவ் விழாவின் சிறப்பு அம்சமாக ஒரு சிறுகதைப் போட்டியை நடாத்தி, முந்நூற்றைம்பது ரூபா பரிசில் வழங்கிற்று.

முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் அக்கரைப்பற்றுக் கிளையின் தலைவர் அ. ஸ. அப்துஸ் ஸமது ஆவர். அக்கிளை சித்திலெப்பை நினைவு தினத்தைக் கொண்டாடியது.

மஹாகவி, பாலேஸ்வரி ஆகியோர் திரிகோண மலையிற் கடன்மையாற்றிய பொழுது, **திரிகோணமலை எழுத்தாளர் சங்கம்** நற்பணி புரிந்துவந்தது. அப்பொழுது ஒரு தரமான மலர் வெளிவந்தது. மலரின் கவிதைப் பகுதி அழகுற அமைந்திருந்தது. இருவரும் கொழும்புக்கு மாற்றலாகி வந்தவுடன் மேற்படி சங்கம் இயற்கை எய்திற்று.

கவிஞர் அண்ணலுடைய ஊக்கத்தினுலே **கிண்ணியாத் தமிழ் எழுத்தாளர் சங்கம்**, கொட்டியாரப் பகுதியிலே தமிழ் விழிப்பினை உண்டாக்கும் முகமாகத் தாபிக்கப்பட்டிருக்கின்றது.

துறைநீலாவணைக் கிராம நலனைப் பேணும் வகையில் ஜீவா ஜீவரத்தினம் என்பவரால் **இலக்கியப் பெரு மன்ற**மொன்று நிறுவப்பட்டுள்ளது. அஃது ஒரு கவிதைப் போட்டியையும் நடாத்தியுள்ளது.

கிழக்கிலங்கையிலே சிதறிக் கிடக்கும் எழுத்தாளர்களை ஒன்று திரட்டும் அவாவுடன் **கிழக்கிலங்கைத் தமிழ் எழுத்தாளர் சங்கம்** நிறுவப்பட்டுள்ளது. அதன் தலைவர் எஃப். எக்ஸ். ஸி. நடராசா, பண்டிதவர்க்கத்தின் நலன்களைப்

பேணவும், அதன் பொதுச் செயலாளர் எஸ். பொன்னுத் துரை ஆற்றலிலக்கிய முயற்சிகளின் ஆக்கங் கருதி உழைக்கும் வகையிலும், அஃது அமைந்துள்ளது. இச் சங்கத்தினர், மூன்று நாட்கள் தொடர்ந்து நடைபெற்ற தமிழ் விழா ஒன்றினை நடாத்தினுர்கள். முற்போக்கு எழுத் தாளர் சங்கத்தின் முதலாவது மகாநாடு எழுத்தாளர்களைப் பிரித்தது என்ருல், தமிழ்விழா எல்லோரையும் ஒன்று சேர்த்து வைத்தது, என்று சொல்லலாம். அது கிழக்கு இலங்கைப் புத்தக சபையை நிறுவி, பழந் தமிழ் ஏட்டுப் பிரதிகளை அச்சு வாகனம் ஏற்றும், அரிய முயற்சியில் ஈடுபட்டுள்ளது.

பக்கீர்த் தம்பியின் உழைப்பின் பயனுகச் சம்மான் துறையில் கலாபிவிருத்திக் கழகம் நிறுவப்பட்டுள்ளது. அது உரை மலர் என்னும் நூலை வெளியிட்டுள்ளதுடன், ஆண்டு தோறும் பேச்சுப் போட்டிகளும் நடாத்தி, விமரிசையாக ஆண்டு விழாக்கள் கொண்டாடி வருகின்றது.

மட்டக்களப்பின் இளைஞர் மத்தியிலே கலை - இலக்கிய ஆர்வத்தினை வளர்க்க மட்டக்களப்புத் தமிழ்க் கலாமன்றம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. அது கிழக்கிலங்கையிலே கலை இலக்கியத் துறைகளிலே முன்னணியில் நின்றுழைக்கும் நான்கு பெரியார்களைப் பொற்பதக்கஞ் சூட்டிக் கௌர வித்தது. கவிதைத் துறையிற் புலவர்மணி ஏ. பெரிய தம்பிப் பிள்ளையும், வரலாற்றுத்துறையில் எஃப். எக்ஸ். ஸி. நடராசாவும், புனைகதைத் துறையில் எஸ். பொன்னுத் துரையும், பேச்சுத் துறையில் செ. இராசதுரையும் கௌர விக்கப்பட்டார்கள். அது மட்டக்களப்புக் கலைஞர்களைக் கொழும்பு இரசிகர்களுக்கு அறிமுகப்படுத்திற்று. மீன்பாடும் தேனுடு தந்த தவப் புதல்வர் விபுலாநந்தரின் நினைவாக ஒரு சிலையினை நிறுவும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளது. இம் மன்றத்தின் உயிராகவும், இயக்க சக்தியாகவும் உழைத்து வருபவர் எஸ். எஸ். எம். யூசுப் (மட்டு நகர்

சாகிபு) சாகிபு அவர்களாவர். அவர் ஒரு சிறந்த நாடக நடிகராக இருப்பதுடன், கலை இலக்கிய முயற்சிகளுக்கு அள்ளிக்கொடுக்கும் வள்ளலாகவும், தன்னை விளம்பரப் படுத்தாது, பின் சக்தியாக இயங்கும் உழைப்பாளராகவும் திகழ்கின்றார். ஸ்ரீகாந்தாவைச் செயலாளராகக் கொண்டு இயங்கிய அகில இலங்கைத் தமிழ் எழுத்தாளர் முன்னேற்றச் சங்கம் பல கருத்தரங்குகளை நடாத்திற்று.

கதம்பம் ஆசிரியர் கே. வி. எஸ். மோகனைச் செயலாளராகக் கொண்டு குழந்தை எழுத்தாளர் சங்கம் ஒன்று தாபிக்கப்பட்டது. அது தென்னகத்தின் குழந்தைக் கவிஞரான அழ. வள்ளியப்பாவைத் தருவித்துக் கூட்டங்கள் நடாத்தியது. பிறிதொரு குழந்தை இலக்கிய எழுத்தாளர் சங்கம் பெயரளவிலே தாபிக்கப்பட்டுள்ளது. பெயரளவில் இருக்கும் இன்னொரு சங்கம் கவிஞர்கள் சங்கமாகும்.

தமிழ் எழுத்தாளர் மன்றம் கொழும்பில் தாபிக்கப்பட்டுள்ளது. இதன் தலைவராகப் பண்டிதர் கா. பொ. இரத்தினமும், செயலாளராக சங்கரப்பிள்ளையும் கடன்மையாற்றுகின்றார்கள். இச்சங்கம் கருத்தரங்கங்கள் நடாத்தியதோடு பல போட்டிகளில் பரிசு பெற்ற ஈழத்து எழுத்தாளர்களின் சிறு கதைகளைத் தொகுத்து, ஈழத்துப் பரிசுச் சிறு கதைகள் என்கிற பெயரில் வெளியிட்டுள்ளது.

"வீரகேசரி"யில் வெளிவரும் 'தோட்ட மஞ்சரி'யினால் மலைநாட்டைச் சேர்ந்த பல இளம் எழுத்தாளர்கள் தமது எழுத்தாற்றலை வெளிப்படுத்தி வருகின்றார்கள். மலையகத்தில் ஒரு கேந்திரமான எழுத்தாளர் சங்கத்தைத் தோற்றுவித்து, இரா. சிவலிங்கம், பெரி. கந்தசாமி, செந்தூரன், செ. மு. கார்மேகம் ஆகியோர் மலையக இலக்கிய வளர்ச்சிக்கு உழைத்து வருதல் மகிழ்ச்சி தருஞ் செயலாகும். பதுளை, நாவலப்பிட்டி, கண்டி, மாத்தளை ஆகிய பகுதிகளிலே இளம் எழுத்தாளர் சங்கங்கள் தோன்றி வருதல் மலையகத்தின் இலக்கிய விழிப்புணர்ச்சியைக் காட்டுகின்றது.

கிராமத்திற்கு ஓர் எழுத்தாளர் சங்கம், ஆளுக்கோர் எழுத்தாளர் சங்கம் என்கிற வகையிலே எழுத்தாளர் சங்கங்கள் தோன்றிப் பகையுணர்ச்சியையும் வளர்த்து வரும் ஒரு சூழலை அவதானிக்க முடிகின்றது. எழுத்தாளன் ஒவ்வொருவனும் தனது தனித்துவத்தை இலக்கியத்திலே நிலைநாட்ட விழைகின்றான். எனவே, ஓர் எழுத்தாளன் பிறிதோர் எழுத்தாளனுடன் கருத்து மாறுபாடு கொண்டிருத்தல் இயல்பாகும். ஆனாலும், இந்த வேற்றுமைகளிலே ஒற்றுமையை நிலைநாட்டுதலே சிந்தனையாளரான எழுத்தாளரின் கடன்மையாகும். ஈழம், தமிழ் என்கிற விரிந்த அடிப்படையிலே நமது எழுத்தாளர் சங்கங்கள் செயலாற்ற முற்பட்டால், மிகுந்த பயனை நாம் அறுவடை செய்து கொள்ளலாம்.

டொமினிக் ஜீவா

# நடுப்பகலில் கோடை மழை

" டீச்சர் ! " — அழைப்பில் ஒரு தனிக் குழைவு !

— 'சே...திரும்பவும் இந்த இன்பத் தொல்லை ஆரம்பிச்சுட்டுதா ?'

திரும்பினேன் ; சுற்றிலும் விழிகளைச் சுழலவிட்டேன்.

எனக்குத் தெரியும் சுந்தரேசன்தான், என்று. ஆமாம், சுந்தரேசனேதான் நின்று கொண்டிருந்தான். தனது சுடர் விடும் கண்களில் அளவுகடந்த வாத்ஸல்யம் ததும்ப, அவன் என்னைப் பார்த்தான். அரிசிப் பற்கள் பளபளத்தன.

" என்ன, சுந்தரேசன் ? "

ஏதோ குருட்டாம் போக்கில் சிந்தனையில் இலயித்தவாறு, கொக்குத் தவம் செய்தபடி, 'சாக்கட்டி'யால் மேசையில் கோணல் மாணலாகக் கோடு கிழித்துச் சித்திரம் வரைந்து கொண்டிருந்த நான், 'சாக்கட்டி'யை மேசைமீது கிடத்தி, படுக்கப் போட்டுவிட்டு, நிமிர்ந்து உட்கார்ந்தேன். மீண்டும், " என்ன சுந்தரேசன் ?... ஏன் பேசாமல் நிற்கிருய் ! ... " என்று கேட்டேன்.

சொல்வதற்கெல்லாம் சட்டென்று கீழ்ப்படியும் சுபாவம் நிரம்பப் பெற்ற அவன், நான் கேட்ட கேள்விகளுக்கு நேரடியாகப் பதிலொன்றும் சொல்லாமல், " டீச்சர் ... டீச்சர் ! " என்ருன். இந்த வார்த்தை ஒன்றையே அழைப்பு உருவாக்கி, இராகங் கூட்டி இசைத்துப் பிடித்துக் கொண்டு குழைந்து, நெளிந்தான். அந்தச் சின்னஞ்சிறு பிஞ்சு நெஞ்சில் ஏதோ ஒரு கேள்விப் புழு குடைந்து கொண்

டிருப்பதை, அப் பால்வடியும் முகம், பளிங்கைப் போல், துலாம்பரமாக எடுத்துக் காட்டியது. ஏதோ கேட்க விரும்பினன்.

"என்ன சுந்தரேசன்; என்ன வேணும்?"

"ம்...ம்" வலது கரத்தை மேசைமீது வைத்து, மேசை விளிம்பைப் பற்றிப் பிடித்த வண்ணம், ஒரு காலைச் சற்றே மடித்து, கால் விரல்களை சீமேந்துத் தரையில் உரசித் தேய்த்தவாறு, வலமும் இடமுமாக ஆடி அசைந்தபடி, மனச் சிமிழில் முளை விடும் ஏதோ ஒரு சந்தேகத்தைத் தெளியப் படுத்துவதற்காக முயன்ருன்; முடியவில்லை. தனது சாதகமான வார்த்தைகள் அகப்படாததை கண்டு சற்றுத் தியங்கித் தயங்கினன். திணறித் தயங்கிய சுந்தரேசன் முடிவில் 'கேட்பதா? — வேண்டாமா?' என்று யோசித்தான் போலும்.

"சுந்தரேசன்! ஏதாவது கேக்கிறதெண்டால் உடனே கேள்; இல்லையெண்டால் உன்ரை இடத்தில் போய் இரு! ... ஹூம்!"

வகுப்பில் உள்ள மாணவ மாணவிகள் அத்தனை பேரும் தங்கள் தங்கள் கருமங்களை மறந்துவிட்டு, சுந்தரேசனையே பார்த்துக் கொண்டிருந்தது, அவனுக்குத் தர்ம சங்கடத்தைக் கொடுத்திருக்க வேண்டும். அவனுக்கே இயல்பான முரட்டுத் தனமும், ரோஷ உணர்ச்சியும் சட்டென்று அவனை ஆட்கொண்டன.

ஒரு கணந்தான்...

தன்னில்தானே தன்னுணர்வுகளைப் புகைத்துக் கொண்டான்.

"சரி, டீச்சர்... !"

மீண்டும் சாக்கட்டியின் உதவியுடன் எனது கரம், நவீன ஒவியம் தீட்டுவதில் முனைந்திருந்தது. மேசையில் கோடுகள் கிழிக்க முனைந்தேன்.

"டீச்சர் ..." குட்டிப் பூனையின் குரலைப் போன்ற மெல்லிய தொனியில், மிகமிகப் பவ்வியமாக அழைக்கும் குரல், என் காதருகே கேட்டது. என் பொறுமையைச் சோதிக்கும் இந்த அழைப்பில்கூட, எவ்வளவு கனிவு! — எத்தகைய குழைவு. ஆத்திர உணர்வுடன் திரும்பிய எனது கோபம் கட்டுப்பட்டது. மாருக, இவ் விசித்திரச் சிறுவனின் அழைப்பில், 'என்ன அர்த்தம் பொதிந்திருக்கும்?' என்ற வினுக்கொக்கி என் மண்டையைப் போட்டுக் குடைந்தது.

"சுந்தரேசன்..." குரலில் சற்றுக் கடுமையை வரவழைத்துக் கொண்டு கத்தினேன். "உன்னுலே ஒரே கரைச்சலாய்ப் போச்சு ..."

மனநெகிழ்ச்சியை உணர்வு பூர்வமாகக் காட்டிவிட முடியுமா—என்னுல், என்னைப் போன்ற ஓர் ஆசிரியையால்? எனவே, என்னை வார்த்தைத் திரைக்குள் மறைப்பதற்காக, "என்ன கேக்கப் போகிருய் சுந்தரேசன் ... கேட்டுத்தொலை" என்றேன்.

"டீச்சர், கடவுள் ஆம்பிளையா, இல்லாட்டிப் பொம்பிளையா, டீச்சர்?"

திகைப்புணர்ச்சி ஒரு கணம் எனது கண்களில் நிழலாடியது. வார்த்தைகளை உள்ளடக்கமாகக் கொண்டுள்ள அந்த மாபெரும் வினுவின் தாக்குதலிலிருந்து நீங்கி, நான் சுயமாக சிந்திக்கவே சில நிமிட நேரம் சென்றது. சிந்தனை கிளைவிட்டுப் படர்ந்தது.

— 'கடவுள் ஆணு, அல்லது பெண்ணு?'

எனக்குள் ஒரு தடவை நானே முணுமுணுத்துக் கொண்டேன்.

'வயது வந்தவர்கள் கூடச் சிந்திக்காத, சிந்திக்க நினைத்தாலும் வாய் திறந்து வெளியே சொல்ல நினைக்காத' இப் புதிர்க் கேள்வியை, அல்லது கேள்விப் புதிரை, எட்டே வயதான இந்தச் சின்னஞ்சிறு பாலகன் கேட்டுவிட்டானே,

என்று மலைத்தேன். இக் கேள்விக்குப் பின்னல் இருக்கும் உணர்வும், சிரத்தையும், என் மனதை ஆட்கொண்டு விட்டதென்பதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

— 'இந்தச் சின்னஞ் சிறிய மூளைக்குள், எப்படி இந்தப் பென்னும் பெரிய கேள்வி அரும்பியது ?'

நான் மௌனமாக இருந்ததைப் பார்த்ததும், சற்றுத் தெம்பு ஊற, "டீச்சர், கடவுள் ஆம்பிளையா, இல்லாட்டிப் போனு பொம்பிளையா—எண்டது எனக்கு நல்லாத் தெரியும், டீச்சர் !" என்ருன் சுந்தரேசன். நல்லா என்பதைச் சற்று உரத்து அழுத்தியே சொன்னுன். தன்னைப் படிப்பிக்கும் டீச்சருக்குத் தெரியாத கேள்விக்கான பதில், தனக்குத் தெரியும் என்ற பெருமையும் அக் குரலில் நுணுக்கமாக இழையோடித் தொனித்தது.

"சரி; சொல்லடா பாப்பம் ? " — நானும் குழந்தை உணர்வு கொண்டு குழந்தையாகி விட்டேன்; அறிய வேண்டுமென்ற அவா.

"கடவுள் ஆம்பிளை இல்லை; பொம்பிளைதான். "

"என்னண்டடா உனக்குத் தெரியும் ?"

விசித்திரமான கேள்வியை அவனே கேட்டான். கேட்டு விட்டு, ஒரு விநோதமான பதிலையும் அவனே சொன்னுன். அந்த விநோதத்திற்கு என்ன விளக்கம் கொடுக்கப் போகிருனே என்ற மன ஆவலில் உந்தப்பட்டு அவனது உதடுகளையே கூர்ந்து கவனித்தேன், நான்.

ஒளி வீசிய முகக் களையும், சுடர்விடும் இரு பென்னம் பெரிய கருங்குவளைக் கண்களும், சிவந்து குவிந்த ரோஜா இதழ்களைப் போன்ற நேர்த்தியான உதடுகளும், நுனி உயர்ந்த சிறிய நாசியும், வாரி படிய வைத்திருந்தாலும் அவனைப்போலவே கட்டுக் கடங்காமல் சுருண்டு துள்ளிய படி, காற்றுடன் விளையாடும் கன்னங்கரேல் என்ற கேசமும் சுந்தரேசனை என்றென்றும் நெஞ்சில் படியச் செய்தன. நினைவில் வைத்திருக்கக் கூடிய உருவமாக்கி விட்டன.

அத்துடன் வயதுக்கு மீறிய புத்திசாதுர்யமும், படிப்பில் உற்சாகமும், விரைவில் எதையும் கண்டறியும் இயல்பும், சுயேச்சையான மனப்போக்கும், கற்பனையும் துடுக்குத் தனமும், குறும்பு செய்வதில் அசகாய சூரத்தனமும் காட்டிச் சிரித்து மகிழும் சுபாவமும், அபார புத்திதீட்சண்யமும் கொண்டவன்தான் இந்தச் சுந்தரேசன்.

அடிக்கடி புதிது புதிதான கேள்விகளைக் கேட்பதும், கேட்கும் போது, குரலையும் முகத்தையும் வைத்திருக்கும் பாணியும், மிகமிகக் கவர்ச்சிகரமானவை. அவை அவன் மீது யாருக்குமே ஓர் அலாதியான பாசத்தையே வருவிக்கச் செய்துவிடும்; நிச்சயம் செய்யும்.

குறும்புத் தனமும், புத்திக் கூர்மையும் இணைபிரியா இரட்டையர்களாக அவனது குழந்தை உள்ளத்தில் கொலு வீற்றிருந்ததால், அவன் மீது எனக்கொரு விசேடமான பற்று; ஆழமான பாசம்; அளவிட இயலாத பேரன்பு.

— இது இயற்கைதானே ... ?

ஆச்சரியம் ததும்பும் சில விசித்திரமான கேள்விக் கணைகளை அவன் தொடுக்கத் தொடங்கிவிட்டால், பல சமயங்களில் நான் திக்குமுக்காடிப் போவதுண்டு.

" டீச்சர் ..." இந்த அழைப்பு சுந்தரேசன் வாயிலிருந்து வந்தாலே போதும்; எனது நெஞ்சு 'பக் பக்' என்று பலமாக அடித்துக் கொள்ளும். மூச்சு ஒரு கணம் தடைப் பட்டுவிடும்.

— 'என்னத்தை எக்கச்சக்கமாக கேட்டுத் தொலைப் பானோ ?'

அதையடுத்து ஒரு கேள்வி பிறக்கும் :

" காகங்கள் எல்லாமே ஒரே கறுப்பு நிறமாக இருக்கே, டீச்சர்; அதுபோலை புறாக்களும் எல்லாம் ஒரே நிறத்திலை இல்லாமல், எல்லா நிறத்திலேயும் இருக்குதே, அது ஏன் டீச்சர் ? "

" டேய், சுந்தரேசா! ... பேசாமல் இருக்கமாட்டே ! "

எனது அறியாமையை மறைக்க வார்த்தையால் திரை கட்டுவேன். ஆனல், அவன் கேட்ட கேள்விகள் என் மனத்தடாகத்தில் சலனமெழுப்பி, அலைவட்டம் உண்டாக் காமலில்லை. இப்பொழுதும் என்னுள் மனச் சலனம்.

எக்கச்சக்கமான கேள்வி ஒன்றைக் கேட்டுவிட்டு, அதற்குத் தானே பதிலும் சொல்கிருன் இவன் — இந்தச் சுந்தரேசன். 'கடவுள் ஆணல்லவாம்; பெண்தாஞம்! பெண்ணேதாஞம்!' குழந்தை ஆராய்ச்சியின் புதிய கண்டு பிடிப்பு! அடேயப்பா......! விசித்திரமான, குதர்க்கம் நிரம்பிய, ஒருவகையில் சொல்லப்போனல், அதி மேதை களாலும் பதில் சொல்லமுடியாத கேள்வி ஒன்றைக் கேட்டு, அதற்குத் தானே மறுமொழியும் சொல்லிவிட்ட பெரு மிதத்தில், சுந்தரேசன் கண்களில் பளீரென்ற ஒரு பிரகாசம்; உதட்டோரம் இளமுறுவல்!

மீண்டும், "என்னண்டடா உனக்குத் தெரியும்?" என்றேன்.

"டீச்சர் நீங்க ரொம்ப நல்லவங்க. எங்கட அம்மாவும் ரொம்பவும் நல்லவ. அப்படியெண்டால் கடவுளும் — உங்க ளேயும் அம்மாவையும் போலே — பொம்பிளேயாத் தானே இருக்க வேணும்? ...... பாத்தீங்களா, நான் கண்டு புடிச் சிட்டன். கடவுள் பொம்பிளே தான்!"

'... சுந்தரேசா! ... சுந்தரேசா! ...'

என் மெய் சிலிர்த்தது. அவனது புதுவித ஆராய்ச்சிக் கண்டுபிடிப்பில் ஓர் இனிமையும், ஒரு வகைக் கவர்ச்சியும் என்னுள் ஏற்பட்டது என்னவோ உண்மைதான். அவன் மீது அன்பும் பாசமும் சுரந்தன.

வகுப்புப் பாடம் ஆரம்பிக்கும் நேரம்.

"சரி; பாடம் படிக்கிற நேரமாச்சு; சுந்தரேசன், இனிப் போய் உன்னிடத்தில் இரு. 'அமைச்சல் இல்லாத பிள்ளேயெண்டு' எல்லாரும் பேந்து என்னைத்தானே குற்றஞ் சொல்லுவினம்" என்றேன்.

" சரி, டீச்சர். "

மேசையின் லாச்சிச் சாவியை மாற்றிப்போட்டுவிட்டதால், லாச்சியைத் திறக்க முடியாமல் திக்குமுக்காடிப் போராடிக் கொண்டிருந்தேன், மேசையுடன்.

சேலைத் தலைப்பை வருடுவது போன்ற உள்ளுணர்வு; தலையைத் திருப்பி ஏறிட்டுப் பார்த்தேன்.

சுந்தரேசன் —

" டீச்சர், இந்த ' சாரி ' நல்ல வடிவாய் இருக்கு. உங்களிட்டை இருக்கிற எல்லா ' சாரி 'யுமே வடிவா, டீச்சர்? "

அவன் கேள்வியில் நேசமும், இணக்கமும், கலந்து ஒலித்தன. சேலையைத் தடவித் தடவிப் பார்த்தான்.

" சுந்தரேசா ...... ! " என்றேன், குரலில் கோபத்தை வரவழைத்துக் கொண்டே. " இனிமேல் இப்படியெல்லாம் பேசக் கூடாது. இப்ப பாடம் படிக்கிற நேரம். போய்ப் பாடத்தைப் படி ! "

சற்று முன் முகத்தில் கொப்பளித்த உற்சாகமும், குதூகலமும், தொய்ந்து சுருள, சுந்தரேசனின் முகம் தொங்கிப் போய்விட்டது. எனது கடுமையான குரலின் அதட்டலைக் கேட்டதுமே, சேலைத் தலைப்பு கை நழுவிப் போய்விட்டது. என்னைத் துயரக் கண்களால் நோக்கிய வண்ணம், இருப்பிடத்தை நோக்கிப் போகப் புறப்பட்டான். அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்தவாறே நகர்ந்து சென்றான்.

* * *

மதிய உணவுக்கான இடைநேரம்.

வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த சாப்பாட்டை பக்குவமாகப் பிரித்துச் சாப்பிட வேண்டிய ஆயத்தங்களைச் செய்து கொண்டிருந்தேன். நல்ல பசி. காலையில்கூட ஒழுங்காகச் சாப்பிடவில்லை.

அந்நேரம் மிஸிஸ் சின்னத்துரை என்னைத் தேடி வந்து விட்டாள். அவள் எனது சக ஆசிரியை. சூழ்நிலையிலி ருந்து சற்றே ஒதுங்கியிருந்து பழக்கப்பட்டுவிட்ட எனக்கு, மிஸிஸ் சின்னத்துரை பள்ளிக்கூட சக ஆசிரியைகளில் மிக மிக வேண்டியவள். வேண்டியவள் என்று ஏன் சொல்லு கிறேன் என்ருல், ஓரளவு என்னைப் புரிந்து கொண்டிருப் பவள். முன்னுல் சிரித்துச் சிரித்துப் பசப்பிக் கதையளந்து விட்டு, பின்னுல் புறங் கூறிக் கெக்களமிட்டுச் சிரிக்கும் சிலரை, எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. எனவே ஒதுங்கி இருப்பதில்கூட, ஒருவகை நிம்மதியும், மனத்திருப்தியும் இருக்கத்தானே செய்யும்? ஒதுங்கி இருந்த என்னைத் தேடி வந்த அவள், "டீச்சர், நானெண்டு சொல்லுறன் கோபப் படாமல் கேப்பீங்கள் தானே!" என்று பீடிகையுடன் ஆரம் பித்தாள். "சுசிலா, பேந்து கோபிக்கக் கூடாது" என்ருள்.

"சொல்லுங்கோ, டீச்சர். நானேன் உங்களைக் கோபிக்கப்போகிறேன்?" என்றேன். வாய்திறந்து சொல்லி விட்டாலும், 'கேக்கப் போவது எதுவாக இருக்கும்?' என்று எனக்குள்ளேயே விசாரித்துக் கொண்டேன். "சொல் லுங்கோ. இதிலென்ன கோபம்?" என்று தொடர்ந்து சொன்னேன்.

"நான் சொல்லுறனெண்டு நீங்க தப்பாக நினைக்கக் கூடாது. நீங்க பெரிய தப்புச் செய்யிறீங்களாம். மற்ற மாணுக்கர்களைவிட சுந்தரேசனை மட்டும் அதிக அக்கறை எடுத்துக் கவனிப்பதாகவும், கூடின செல்லம் குடுக்குறீங்க ளெண்டும் கதைக்கினம். மற்ற மாணவர்களை வேணு மெண்டு நீங்க அலட்சியமாக நடத்துறீங்களாம்... சரியாக் கவனிக்கிறதுகூட இல்லையாம்... 'இவ்வளவு பேர் படிக்கிற இந்த ரெண்டாம் வகுப்பிலை நீங்க தனியொரு பணக்காரப் பொடியனுக்கு விசேஷ சிரத்தை காட்டிச் செல்லம் குடுப்பது சரியா?' எண்டு மற்ற டீச்சரெல்லாம் பேசிக் கொள்ளுகினம்."

மிஸிஸ் சின்னத்துரை போய்விட்டாள்.

— 'சுந்தரேசா! சுந்தரேசா!... பாத்தியாடா உன்னுல் எனக்கு வந்திருக்கும் பேரை!'

மனம் ஓலமிட்டுக் கதறியது. அன்றைய மதிய உணவு, பிரித்தது பிரித்தபடியே கவனிப்பாரற்றுக் கிடந்தது. சுருண்டு போய்ப் படுத்துக் கிடக்கும் தூங்கு மூஞ்சிப் பூனைக்கு அன்றையதினம் பிறந்தநாள் கொண்டாட்டம்!

ஆத்மாவில் நிறைந்த மனக் கசப்புடன் வகுப்பறைக்குள் நுழைந்தேன். ஊமைக்காயம் இதயத்தை உறுத்தியது.

அறை அலங்கோலமாகக் காட்சி தந்தது.

"ஆர் இந்த வகுப்பிலை கச்சான் கோதுகளைப் போட்டது?"

ஒருவரிடமிருந்தும் பதில் வரவில்லை.

"சரி!...... எல்லோரும் எழும்பிக் கையைக் கட்டிக் கொண்டு நில்லுங்கோ."

நான் குனிந்து, குனிந்து, கோதுகளைப் பொறுக்கிப் பொறுக்கிச் சேர்த்தேன்; கை நிறைந்துவிட்டது.

"டீச்சர்! நீங்க கச்சான் கோதுகளைப் பொறுக்கினது துப்புரவில்லை, டீச்சர். இந்தா, என்ரை டெஸ்குக்குக் கீழை நாலு கச்சான் கோது கிடக்கே!" என்று இரைந்தான் சுந்தரேசன்.

'பக்' கென்று வாய்விட்டுச் சிரித்துக் கொட்டினுன்.

முன்னரென்ருல் நானும் மனம்விட்டுச் சிரித்திருப்பேன். இப்படியான சிறு சிறு குறும்புத்தனங்கள் தான் பள்ளிக் கூடத்து ஒரே சீரான நிகழ்ச்சிகளுக்குச் சிறிது மாற்ருன மனமகிழ்ச்சியை ஏற்படுத்துபவை. ஆனுல், இப்பொழுது நானிருக்கும் மன நிலையில்... ?

மௌனத்தின் மூலம் சுட்டெரிக்கும் பார்வையைச் செலுத்தி, ஒரு பார்வை பார்த்தேன்.

ஒளியும் நகையும் தவழும் கண்களில் பெரிய ஏமாற்றம்.

குனிந்து, அதையும் பொறுக்கி யெடுத்துச் சேர்த்து, வெளியே குப்பைக்குள் போட்டுவிட்டு வந்து, கதிரையில் அமர்ந்தேன். உள்ளக் குமைச்சலின் புழு நெளிவு; மனசில் நிம்மதியற்ற தவிப்பு நிலை; சிந்தனையே மந்தித்து விட்டது!

"டீச்சர்!" பத்திமா எழுந்து நின்ருள். "நுள்ளிப் போட்டான், டீச்சர்!" என்ருள். முறையிடும் முறையில் என்னை அணுகிவந்து, கண்கள் கலங்க, வலது கையை முன்ஞல் நீட்டிக் காட்டியபடியே, "சுந்தரேசன் கையிலை தாட்டுப் புடிச்சு நல்லா நுள்ளிப் போட்டான், டீச்சர்" என்று குற்றஞ்சாட்டிஞள்.

"சுந்தரேசா! டேய், சுந்தரேசா!"

வாங்கிலிருந்து மெதுவாக எழுந்தான். பையப்பைய நடந்து வந்து, என் முன்ஞல் நின்ருன், சுந்தரேசன்.

"நுள்ளினியா......?"

"ஓம், டீச்சர்." பட்டென்று ஒப்புக் கொண்டான்.

"அவ, என்னைப் பட்டம் தரிச்சா, நெய்யம் காட்டி நெளிச்சு நெளிச்சுச் சிரிச்சா ... நேத்துக்கூட அப்பிடிச் செய்தா ...?"

"அதுக்காக, உன்னை அப்படிச் செய்யச் சொல்லி யிருக்கோ?"

எனது குணத்தைப் பற்றி நானே புகழ்வதென்ருல் நன்ருக இராதல்லவா? கோபம் சட்டென்று வராது. ஆத்திரம் தரும் விவகாரத்திலும்கூட, ஆழ்ந்த பொறுமையைக் கடைப்பிடிப்பேன். குழந்தைகளைப் பொறுத்த வரை, ஓரளவு அடிப்படை மனத்தத்துவம் எனக்குத் தெரியும். குழந்தைகளுடன் பழகும் தன்மையே தனி. பாலைத் தொட்டுப் பாலைக் கறப்பது போல, அன்பைக் கொடுத்தே அன்பைப் பெறலாம் என்பது எனது தத்துவம்.

ஆனால் ... ஆனால் ...

பால் திரைந்தது போலத்தான் என் மனம் திரைந்து விட்டதே!

எனது செவிகள் எந்தச் சமாதானத்தையும் அதன் பிறகு கேட்கத் தயாராயில்லை. கேட்கக் கூடிய பொறுமையை அக்கணமே இழந்துவிட்டேன், நான். அரக்கத்தனம் — இராட்சதத்தன்மை—எப்படித்தான் என் மனதில் புகுந்து கொண்டதோ, எனக்கே தெரியவில்லை. ஆவேசம் என்னைப் பிடித்தாட்ட, நெற்றி நரம்பு புடைக்க, கோபத்துடன் இருக்கையை விட்டு எழுந்தேன்.

“நீட்டு கையை! ... கையை நீட்டடா ... !” என்று கூவிக்கொண்டே, காற்றை ஊடறுத்துச் சுழன்று, வளைந்து, சுழலும் பிரம்பினால் விளாசு விளாசென்று நொருக்கித் தள்ளிவிட்டேன். பிரம்பின் முனைப்பக்கம் சிம்பு சிம்பாகச் சிதறிப் போய்விட்டது. அப்பொழுதும் நான் ஓயவில்லை.

“டீச்சர் ... டீச்சர் ... டீச்சர்!” என்று சுந்தரேசன் கதறிய கதறல் கேட்டுப் பக்கத்து மூன்றாம் வகுப்பு ஆசிரியையான மிஸிஸ் சின்னத்துரை பரபரப்புடன் வந்து, பிரம்பைப் பிடுங்கிய பின்னர்தான், நான் நானாகி, நானாகும் உணர்வு எனக்கு வந்தது.

எனது மூளைக்குள் புகுந்த வெறி அடங்கச் சில நாழிகைகள் சென்றன.

வேட்டைக்காரனின் துப்பாக்கிக் குண்டு பட்டு, இறந்தும் இறவாத நிலையில் உயிர்த்துடிப்புடன் தீனக் குரலெடுத்து அலறுமே குட்டிமான், அந்த வேதனை மண்டிய அபயக்குரலில் கீச்சிட்டுக் கத்தினான் சுந்தரேசன். அவன் தண்டனையின் வேதனையில் மூழ்கிக் கேவிக் கேவி அழுதான். பலபலவென்று கண்ணீர் வழிந்தது.

வகுப்பில் ஒரே அமைதி ... அறையெங்கும் நிசப்தம் ...

மாணவ மாணவிகள் பயங்கலந்த கண்களுடன், பீதி நிறைந்த பார்வையால், என்னையே பார்த்துக் கொண்டிருந்தனர். முன்னர் எப்போதுமே பார்க்காத புதுப்பார்வை; புது நோக்கு.

நெஞ்சை உசுப்பிவிடும் மௌனம் ... மோனம் ...

என் கவனம் திரும்பியது. விசித்து விசித்து அழுது கொண்டிருந்த சுந்தரேசனை ஒரு விநாடி நோக்கி விட்டு, "சுந்தரேசன்!" என்றேன். எனது குரலிலும் பார்வையிலும் இருந்த கண்டிப்பு, அவனைத் திக்குமுக்காடச் செய்தது.

"பள்ளிக்கூடம் முடியுமட்டும் வெளியே போ! ... போய், வெளியே நில்லு!"

தலையசைப்பால் மீண்டும் உத்தரவிட்டேன்:

"ஹூம்!"

வியாகூலம் நிரம்பிய அவன் முகத்தில், கெஞ்சல் நிறைந்த பார்வையின் மருட்சி.

"அமைச்சல் இல்லை, உனக்கு; அடக்கம் இல்லை? டீச்சர் சொல்லுறன், போய் நில்லு, வெளியே."

அவன் முகம் சிவந்து, சிறுத்துவிட்டது.

என்னைத் துயரம் தேங்கிய விழிகளால் நோக்கிவிட்டு, மோவாயைத் தாழ்த்திக் கொண்டு, இமை விளிம்புவரை கண்ணீர் வரம்பிட்டு முட்ட, தயங்கித் தயங்கி வெளியேறினான். பாடம் நடத்துவதில் முனைந்தேன். நடித்துப் பார்த்தேன், இயலவில்லை. எனது ஆத்மா, வதை செய்யப்பட்டுத் துடித்துத் துவண்டு போய் விட்டது; இதயம் நெக்குருகியது; மன அங்கலாய்ப்பு வேறு.

— 'மலர் போன்ற ஒரு பிஞ்சு உள்ளத்தைக் கசக்கிப் பிழிந்து குப்பைக் கூடைக்குள் எறிந்துவிட்டேனா?'

மனம் அரற்றியது.

என் நெஞ்சை அழுத்திய இந்தச் சுமை, உள்ளுக்குள் கனத்தது. கனத்த உள்ளத்துடன் நிம்மதியற்றுத் தவித்

தேன். மூளையில் குவியும் வேதனைத் தாக்கத்திலிருந்து விடுபட விரும்பி, பரபரப்புடன் எழும்பி வெளியே வந்தேன்; மாமரத்து நிழல் கவியும் முற்றத்துக்கு விரைந்தேன்.

இரண்டு காகங்கள் குருவிப் போய் மாமரக்கிளையில் இருந்தபடி, சிறகுகளைக் கோதியவாறு உதறிவிட்டுக் கொண்டிருந்தன. ஈரம் கசியும் புற்றரையில் நின்று கொண்டு, வான் முகட்டை அண்ணுந்து பார்த்து நோட்டம் விட்டேன், நான்.

மூட்டம் போட்டிருந்தது வானம். கண்ணுக்குப் புல ஞகும் திசையெங்கும் ஆகாயத்தில் கருமேகம் கவிந்து, கனத்திருந்தது. தூரத்தில் விட்டுவிட்டுக் கேட்டது, இடி யோசை. வெளியே காற்றுக் குளிர்ந்திருந்தது.

மனதிற்கு இதந்தரும் குளிர்ச்சி. மேகம் துந்துமிமழை யைப் பூத் தூவல்களாக்கி அள்ளித் தெளித்தது. வானம் பன்னீர் தெளிப்பதுபோல, நீர்த்திவலைகளை வர்ஷித்தது.

அண்ணுந்து முகத்தை மேல் நோக்கி மீண்டும் உயர்த் தினேன். துமிச் சிதறல்கள் முகம் பூராவையுமே நனைக்க நனைக்க, நீர்த் திரள்கள் தெறித்து வீழ்வதுடன், என் அகத்துள் வீசிய உணர்ச்சிப் புயல் மட்டுப் படுவதையும், மனப்பாரம் நீங்கிக் குளிர்ச்சி நெஞ்சில் படிந்து வருவதை யும், சிறிது சிறிதாக என்னுல் உணரமுடிந்தது. ஆத்திர உணர்ச்சி முற்ருகக் கழுவப்பட்டது போன்ற மனப் பிரமை.

உள்ளத்தில் தற்காலிக சாந்தி; ஒருவகைக் குளு குளுப்பு. புல் வெளியில் நின்றவாறே சமாதியாகிவிட்ட யோகநிலையில் நான்!

காலடி அரவம், நிஷ்ட நிலையிலும் எனது கவனத்தைச் சட்டென்று கவர்ந்தது. தேம்பும் ஒலி, பின்னுல்; சிறு அழுகை நடுக்கம்; மூக்கு உறுஞ்சும் சத்தமும் விட்டு விட்டுக் கேட்டது.

"டீச்சர் ... டீச்சர் !..." கேவிக் கேவி அழுது ஓய்ந்து போன விக்கலுக்கும் விம்மலுக்குமிடையே இக்குரல் கேட்டது. குரலில் வேதனை சொட்டிற்று. உலக உணர்வு விட்டத்திற்குள் என்னைக் கொண்டு நிறுத்திற்று, இக் குரலோசை.

கண்களைப் புறங்கையால் அழுத்தித் துடைத்துக் கொண்டே, "டீச்சர்... ம்... ம்... மழையிலே ... நனையிறீங்க... மழையிலே நனைஞ்சா ... காய்ச்சலெல்லோ ... வரும் ... ம் ..." என்றான் சுந்தரேசன் — வெளிப் படிக்கட்டின் கடைசிப் படியில் நின்றுகொண்டே.

நான் மெதுவாக அவன் பக்கம் நடந்து வந்தேன். மெல்லத் தளிர்க் கரங்கள் இரண்டையும் தொட்டெடுத்து, எனது கைகளுக்குள் பதித்து, அழுத்திக் கொண்டேன். மயிர்க் கூச்செறிந்தது, எனக்கு; தேகம் சிலிர்த்தது; உள்ளம் புளகமுற்றது.

— என் உதட்டினோரம் உப்புக் கரிக்கின்றதே, ஏன்? மழைத் தண்ணீரில் உப்புக் கரிப்பதில்லையே ... !

"என்னாலேதானே டீச்சர் உங்களுக்குக் கரைச்சல் ... இனிமேலே, கடவுளாணை, சத்தியமா, ஒரு குழப்படியும் செய்யவே மாட்டன் !"

ஏ. இக்பால்

# மறக்காத பொருள்

உலகினி லுலவுகின் றுயரறி வினரெலாம்
உலவிடும் விதந்தனை உடனுட னுறுத்திடின்
நிலவிடு மவர் செயல் நிறுத்தி நோக்கிடின்
நிகழ்பவை தனிலெலாம் நிறைபணம் பெறுவதில்
உலவுவ ரதிகம் உண்மையை யுடையவர்
உளம்நிறை சேவையும் உறுதியாய்ப் பிடிப்பவர்
விலைமிக வேறிய வினையுடை யிவர்களின்
விளைவுகள் பெரியது ; விலைபெறல் சிறியது.

சிந்தனை குழம்பிச் சித்தமும் கலங்கி
சிந்தனை தனிலொரு சிலையென நிலைத்து
என்றனின் நிலையினில் இறங்கி யேறியோ
எமையுடன் நழுவி இன்னொரு குழுவாய்ப்
பிந்தியோ பிதற்றியோ பெருகி யிருத்தல்
பின்னோர் நாளில் பிரித்தறிந் துணர
அந்திப் போழ்து, "அங்கொடை" அணுக
அதிற்பல வகையினர் அணியணி வகுத்தனர்.

சித்தமும் சிறிதுமே கலங்கிய நிலையினில்
சிறையினி லகன்றவர் சுதந்திரமடைந்ததோர்
அத்தனை சூழலி லண்மியே யுலவினர் ;
அதிலுமே யவரவ ரழகுட லசைத்துப்

பித்துகள் செயற்படப் பிறிதொரு யிடத்திலே
பிணியிலாழ்ந்தவ ராகியே நின்றனர் ;
உத்தமர் போலொரு உறுப்பின னணுகியே
உறுவழி தனையெனுக் குன்னியே காட்டினன்.

இத்தனை கழித்துமே விடம் நகர்ந்துள்ளினில்
இருப்பவர் முகமதில் இழிந்திடும் நிலையை
உற்றிடச் செலுகையில் உறுசிறை தனிற்பலர்
உழன்றனர் ; உறுமி யுற்றுமே நோக்கினர் ;
வற்புறுத்திப் பலர் பேச்சுக் கிழுத்தனர் ;
வாய்நுரை வடிய சொல்மழை பொழிந்தனர் ;
பற்றிலா தொதுங்கிப் பற்றிடுமாடையைப்
பறித்தெறிந் தியற்கை உடலொடு வாகினர்.

ஒவ்வொரு திசையில் ஒவ்வொரு ஜீவனும்
ஒவ்வாதோரிடம் ஒருமித்திருந்தனர் ;
அவ்வழி செலுகையில் அடியேன் தனையொரு
அகதிபோ லிருப்பவர் அழைத்திட வணுகினேன் ;
"இவ்விதம் சிறையினில் இருப்பது பிடிப்பிலை
எவ்விதமாகினும் எனையழைத் தெடுத்திடு"
அவ்விதம் கூறிய அவனிட மாறுதல்
அங்குடன் கூறிடப் "பைத்தியம் விலகிடு".

என்றவ னருகினில் அதிகமா யிருந்திடா
எடுத்தடி யேகினேன் திரும்பவுமழைத்து
என்றனுக்குப் பணம் தா ! வென நீட்டினன்.
எதுவித பதிலுமே இயம்பிடாத் திரும்ப
இன்னொரு திசையினி லிருந்தவ னழைத்து
என்றனை யிரந்துமே இருகை நீட்டினன்.
வந்திடும் வழியில் வந்தெதிர்ப்பவரெலாம்
வழிவழி கையை நீட்டியே நின்றனர்.

சித்தமே கலங்கிச் சிந்தனை பிறழ்ந்து
சீர்மை யகன்ற பைத்திய நிலையில்
உத்தம ருண்மையர் உலகினில் வாழுவோர்
உழைத்திடும் பணத்தினை ஒருபொழு தினிலவர்
நித்தமே மறந்திட நினைவுமே யகன்றதா ?
நிமிஷ வாழ்விலும் நினைப்பதும் பணத்தினை
சித்தமே கலங்கியோர் சிறப்பெலாம் மாறியும்
சிந்தனை யொருநிலை பணத்திலே நின்றது.

எஸ்.
பொன்னுத்துரை

# அணி

ஏன் வாசலிலேயே நின்று விட்டீர்கள்? உள்ளுக்கு வாருங்கோ, ஐயா. இன்றைக்கு நான் மட்டுந்தான் வேலை செய்யிறன். தம்பிக்கு 'சேவ்', கையோடு முடிந்துவிடும். இளமட்டங்கள் சில, எங்களுடைய 'ஸ்டையிலை'ப் பார்த்துத்தான் உள்ளே வருவாங்கள். 'ஜங்கி ஸ்டையில்' என்று சொல்லி, நாக்கு வழிப்பதைப்போல அந்தரப்பட்டு, ஒரு படத்தையும் அதில் நடிக்கும் நடிகனின் பெயரையும் சொல்லி, அப்படியே வெட்டி விடும்படி சில விறுதாக்கள் கேட்கும். அதை ஏன் ஐயா கேட்கிறீர்கள்? மயிரைக் கவனமாகச் சீவி விடவில்லை என்பதைக் காட்டிக்கொள்ள, ஒரு மணி நேரம் அவர்கள் கண்ணுடிக்கு முன்னுல் சீப்புடன் படும்பாட்டைச் சொல்ல முடியாது. பார்த்தீர்களா? மரியாதை தெரியாமல், நிற்க வைத்தே பேசிக் கொண்டிருக்கிறேன். குடையை அந்த மூலையிலை வையுங்கோ, ஓமோம். அந்தப் 'புட்டுவ'த்திலை வசதியாக இருக்கலாம். அது நேற்றையப் பேப்பர்; இன்றைக்குப் பேப்பர்க்காரப் பொடியன் இன்னும் வரவில்லை. புழுக்கமாகத்தான் இருக்கிறது. விசிறியைப் போட்டு விடுகிறன். நீங்கள் இந்த ஊருக்குப் புதிதாக்கும்? நான் ஆக்களைப் பாத்துச் சொல்லுறதிலை கெட்டிக்காரன். பார்த்தீர்களா, சரியாகச் சொல்லி விட்டேன்! வேலை மாற்றமாகி வந்திருக்கிறீர்களாக்கும். இல்லையா? மட்டக்களப்பிலிருந்து நல்லூர்க் கந்தசுவாமி கோயில் பார்க்க வந்திருக்கிறீர்களா? இன்றைக்குக் கார்த்திகைத் திருவிழாவாக்கும். ஓம், தம்பி! மறந்து போனன்.

தம்பிக்கு சேவ் மட்டுந்தானே? இருபத்தைந்து சதம். சரி, போயிட்டு வாரும் ... ஐயா, இந்தப் புட்டுவத்திலை வந்து இருங்கோ. இது நாலுபேர் வேலைசெய்யிற பெரிய கடை தான். எலெக்ஷனுக்கு நாலு நாட்கள்தான் இருக்கின்றன. அதுவரைக்கும் நான்தான் கடையைத் தனியாப் பார்க்க வேணும். நான் ஒரு வாய் வெற்றிலை போடுகிறன், ஐயா. அப்பொழுதுதான் கை சுறுசுறுப்பாக வேலை செய்யும்.

ஏன், சுவர்களை அப்படிப் பார்க்கிறீர்கள்? இவை சலூனில் மாட்டத்தக்க படங்களல்ல என்று நினைத்துத் தானே? சினிமா நடிகைகளின் படங்களையும், சீனுக்காரி களின் கொங்கொங் படங்களையுந்தான் சுவர்களிலை மாட்ட லாமென்று பெரும்பாலான சலூன்காரர்கள் நினைக்கிருர்கள். ஒரு காலத்திலை அப்படிப்பட்ட படங்கள்தான் இங்கும் இருந்தன. இவையெல்லாம் விக்டர் செய்த மாற்றங்கள். லிங்கன், காந்தி, பாரதி, லெனின், மாஸே துங், ஜீவா னந்தம் ... அந்தப் பெயர்தான் மனதிலை நிற்கமாட்டுது ... லீயூ-சாஹு-ஸி என்று சொன்னீர்களா? ஓம். அதைப்போல தான் ஒரு பெயர். இந்த வரிசையிலை நடுவிலை இருக்கும் படந்தான் விக்டருடையது ... மீசையோடு இருக்கிற படம். அதற்குப் பக்கத்திலிருக்கும் படம் முருகேசு வாத்தியா ருடையது ... சே, இந்த நாறு வரவர வலு மோசம் ... வெற் றிலைக்கு நொங்குப் பாக்கு வைக்கல்லை.

நான் 'ஷீட்' எடுக்க உள்ளை சென்றபொழுது ஏதோ கேட்டீர்களே? நன்ருகப் பின்னுக்கு நகர்ந்து உட்கா ருங்கோ. ஏன், இந்தப் படங்களைச் சிவப்பு 'லைட்'டுகள் அலங்கரிக்கின்றன என்ரு? அதுவும் விக்டரின் ஏற்பாடு தான். இந்தப் படங்களுக்கு நீல 'பல்பு'கள் அழகாக இருக்குமென்று பலர் சொல்லி யிருக்கிருர்கள். விக்டர் அடிக்கடி சொல்லுவான்: தொழிலாளர் அணியைச் சேர்ந் தவர்களுடைய இரத்தம் சிவப்பாம். ஏன் சிரிக்கிறீர்கள்? விக்டரின் கதை யைக் கேட்டீர்களென்ருல், சிரிக்க

மாட்டீர்கள். கொஞ்சம் இந்தப் பக்கமாகத் தலையைக் குனியுங்கோ...... கதையைச் சொல்லிக் கொண்டே இருக்கும்பொழுது, வேலையும் முடிந்துவிடும்; நேரம் போறதும் தெரியாது. 'இவனிடம் தலையைக் கொடுத்து விட்டோம்; சொல்லுவதை எல்லாம் சொல்லட்டும்' என்று சிலர் நினைப்பினம். நீங்கள் அப்படி இல்லையா? சந்தோஷம்.

என்னுடைய அண்ணன் டொமினிக்தான் இந்த சலூனைத் திறந்தவர். முப்பது வருஷம் இருக்கும். அப்பொழுது இது தார் ரோட்டுமில்லை; கஸ்தூரியார் வீதியுமில்லை. மக்கிபோட்ட ரோட்; 'செம்மா தெரு' என்று சொல்லுவார்கள். வின்ஸர் தியேட்டருக்குத் 'தகரக் கொட்டகை' என்றுதான் பெயர். 'வண்ணாங் குளத்தடி பாபர் சலூன்' என்றால் எல்லாருக்கும் தெரியும். நல்ல உழைப்பு. அந்த அண்ணனுடைய மகன்தான் விக்டர். அவனை நன்றாகப் படிப்பித்து உத்தியோகக்காரனாக்க வேண்டும் என்று அண்ணனுக்கு நல்ல ஆசை. மட்டக்களப்புப் பகுதியிலை சாதி வித்தியாசங்கள் எப்படி என்று தெரியாது. அங்கு அவ்வளவாகச் சாதி பார்ப்பதில்லை என்று சொன்னீர்களா? ஆனால், இங்கு இப்பொழுதுகூடச் சாதி வித்தியாசம் பாராட்டுகிறார்கள்; முந்திய காலத்திலை, சொல்லத் தேவையில்லை. தேத்தண்ணிக் கடைகளிலை எங்களுக்கெல்லாம் கறல் பேணி, அல்லது சோடாப் போத்தில் தனியாக இருக்கும். நீங்களும் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? விக்டரைச் சம்பத்திரிசியார் கல்லூரியிலை அண்ணன் சேர்த்தார். 'ஏன், உனக்குப் படிப்பு? சவரக் கத்தியை எடுத்துக் கொண்டு சிரைக்கப் போவன்' என்று தன்னைப் பொடியன்கள் 'பகிடி' பண்ணுகிறார்கள் என்று எத்தனையோ நாட்கள் விக்டர் அழுதிருக்கிறான். யாழ்ப்பாணத்திலை சாதி வித்தியாசம் வலுபொல்லாது. தலையைக் கொஞ்சம் இந்தப் பக்கமாக... இன்னும் கொஞ்சம்... சரி. நான் எல்லாரிடமும் இப்படிக் கதைப்பதில்லை. விக்டருக்குப் படிப்பு

நல்லாக வந்தது. ஆனலும், ஏழாம் வகுப்புடன் அவனுடைய படிப்புத் தடைப்பட்டுப்போச்சுது. என் தம்பிக்காரனெருவன் அகப்பட்ட பணம் முழுவதையும் சுருட்டிக்கொண்டு, யாரோ ஒரு கரையூர் வேசையையும் 'தூக்'கிக்கொண்டு நீர்கொழும்புக்கு ஓடிவிட்டான். அத்துடன் கடையும் சீரழிந்தது. அந்த நேரத்திலை விக்டரும் எங்களுடைய தொழிலுக்கு வந்துவிட்டான். நான் சிகரெட் புகைப்பதில்லை; வெற்றிலை தான் போடுவன். நெருப்புப்பெட்டி தேவையோ? நீங்கள் புகையுங்கோ. எல்லாம் பழக்கந்தானே? ஓமோம், எனக்கும் இப்படித்தான்; நெடுநேரம் இல்லாவிட்டால் வாய் புளித்துவிடும். நெருப்புக்குச்சைக் கீழே போடுங்கோ. நான் கூட்டித் தள்ளுவன். தலையை இன்னும் கொஞ்சம் குனியுங்கோ...... எங்கை விட்டனுன்? ஆ... விக்டர் சலூனுக்கே வந்துவிட்டான். இங்கை பேப்பர் ஒழுங்காக எடுப்பது வழக்கம்; வாடிக்கைக்காரருக்குத் தேவை. சும்மா எவ்வளவு நேரந்தான் படத்தைப் பார்த்துக்கொண்டு இருக்கிறது? பின்பு, அவை கடுதாசித் துண்டுகளாகவும் உதவும். விக்டர் பேப்பர்களை ஒழுங்காக வாசிப்பான். ஆனலும், முருகேசு வாத்தியாருடைய சிநேகிதந்தான் அவனுக்கு அரசியல் விஷயங்களிலை ஆசையைக் கொடுத்தது.

ஐயா, இந்தச் சுருள் மயிருக்குக் கொஞ்சம் 'சோட்'டாக வெட்டினுல் நல்லது. அப்படியே செய்யட்டுமா?... ஓம். விக்டரின் படத்திற்குப் பக்கத்திலை இருப்பதுதான் முருகேசு வாத்தியாரின் படம். அவர் பெரும் படிப்புப் படித்த மனுஷன்! ஒரு நாள், அந்தப் புட்டுவத்திலிருந்து சொன்னர் — அவர் எப்பொழுதும் அந்தப் புட்டுவத்திலை தான் உட்காருவார் — 'விக்டர்! மனிதன் — தானும் மனைவியும் தட்டானும் என்று வாழக் கூடாது... மனிதன் உலக சமுதாயத்தின் ஓர் அங்கம். உலகத்திலுள்ள தொழிலாளர்கள் எல்லோரும் ஒரே அணியைச் சேர்ந்தவர்கள்.

அந்த அணியின் பெருமையை நிலை நாட்டும். வர்க்கப் போராட்டத்தில் அவன் ஓர் அங்கமாக மாற வேண்டும்.' அவர் வடிவாகப் பேசுவார். எனக்கு அதிகம் விளங்காது. விக்டருக்கு எல்லாம் விளங்கும்.

இப்பதான் பேப்பர்க்காரன் வருகிருன். ஏன் தம்பி? இன்றைக்கு றெயின் பிந்திட்டுதோ? கையிலை வேலை. அந்த மேசையிலை வையுங்கோ...விக்டர் நிறைய புத்தகங்களும் வாசிப்பான். முருகேசு வாத்தியார் பெரிய பெரிய புத்தகங்களை வாசிக்கக் கொடுப்பார். 'வேலையை ஒழுங்காகக் கவனிப்பதில்லை' என்று நானே எத்தனையோ தடவை அவனை ஏசியிருக்கிறன். 'முருகேசு வாத்தியார் — கொம்யூனிஸ்டு. அவருடன் சேர்ந்து கொம்யூனிஸ்டாகக் கூடாது' என்று ஒகஸ்டீன் சுவாமியார்கூடப் புத்திமதி சொல்லியிருக்கிருர். ஓ, நீங்கள் சொல்லுறது சரிதான். நாங்கள் பழங்காலத்து ஆக்கள். இப்பொழுது லெனின் படமிருக்கிற இடத்திலை, முந்தி தாடிக்கார ஜோர்ஜ் மன்னரின் பெரிய படமொன்று இருந்தது. நல்ல வடிவான படம். ஒரு நாள் அந்தப் படத்தைக் கழற்றிப்போட்டு, இந்தப் படத்தை மாட்டினுன். அன்றைக்கு இங்கை பெரிய போரல்லே நடந்தது. தகப்பனுக்கு விசர் வந்தது போலைதான். விக்டருக்கும் தகப்பனுக்கும் இடையிலை நல்ல வாக்கு வாதம். ஒரு மாதமாக விக்டர் கடைப் பக்கமும் வரவில்லை. அப்புறம், அவனை அவனுடைய போக்கிலையே விட்டிட்டம்... தலையைக் கொஞ்சம் இந்தப் பக்கமாகச் சரியுங்கோ... இன்னும் கொஞ்சம் ... ஆ ...

இன்னொரு நாள் நடந்த சம்பவத்தையும் கேளுங்கோ. அன்று 'குறப்' வெட்ட முருகேசு வாத்தியார் வந்திருந்தார். அதே சமயம் நாகையாவும் வந்திருந்தார். நாகையாவை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? சாதி வேறு பாடுகள் நல்லாப் பாக்கிற மனுஷன். கோயில்கள் சிறுபான்மைத் தமிழருக்கு திறந்துவிடப்படும் அக்கிரமத்தைப் பார்க்காது

சிவபதமடைந்துவிட்டார். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கொள்கை. அவர் முருகேசு வாத்தியாரைக் கண்டதும், நாகத்தை மிதித்தவரைப்போல பதறி, 'இந்த நளம் பள்ளுக ளுக்கு முடிவெட்டும் இவங்களிடம் நான் ஒருநாளும் வெட்ட மாட்டன்' என்று முழு நீளத்திலே 'பாஞ சாஞ' வரிகளிலே 'தேவாரம்' பாடினூர்! ஓம், 'றிங் கத்திரிக்கை' தான். அடர்த்தியான மயிரைக் கோதி எடுத்தால் வடிவாக இருக்கும். பார்த்தீர்களா, ஐயா. நாங்கள் வெட்டுவதோ அழுக்குமயிர். பேன் புழுக்கும் இந்த மயிரிலேகூட சாதி வேறுபாடு இருக்கிறதாம்.

நாகையா 'சண்டித்தனம்' செய்கையிலே, சலூனில் முருகேசு வாத்தியார் மட்டுந்தானிருந்தார். அவர் நாகை யாவிலும் 'மாத்து'க் கூடிய வெள்ளாளன். அவர் வட்டுக் கோட்டைப் பகுதி. நாங்கள் விஷயத்தை அறியாது விழித்தம். வாத்தியாரின் கண்கள் கோவத்திலே சிவந்தன. மலைத்து நின்ற விக்டரைப் பார்த்து அவர் சொன்னூர்: 'நான் ஒரு சீவல் தொழிலாளியின் கல்யாண வீட்டில், பந்தியிலிருந்து சாப்பிட்டதற்குத்தான் இந்தக் குதிப்பு. பூனை பூனைதான்; நாய் நாய்தான்; மனிதன் மனிதன்தான். வர்க்க ஒற்றுமையைச் சாதியின் பெயராலே சிதைத்து விடலாம் என்று இந்தப் பிற்போக்கு வாதிகள் மனப்பால் குடிக்கிருர்கள். உலகெங்கும் தொழிலாளி வர்க்கம், செங் கொடியின்கீழ் அணி திரண்டு வருவதை அறியாது, இந்தக் கிணற்றுத் தவளைகள் சத்தம் போடுகின்றன. இரத்தம் சிவப்பு. அது பச்சையோ, நீலமோ, மூவர்ணமோ அல்ல. இரத்தம் செங்கொடியின் நிறமேதான். உலகில் இரண்டே இரண்டு சாதிகள்தான் இருக்கின்றன. சுரண்டல் வர்க்கம் ஒரு சாதி — ஒரு அணி. உழைத்துத் தொழிலின் கௌர வத்தை நிலைநாட்டும் பாட்டாளி விவசாயிகள் மற்றைய சாதி — மற்றைய அணி. விக்டர்! நீ — நான் — அந்தச் சீவல் தொழிலாளி எல்லோரும் ஒரே அணியைச் சேர்ந்த

வர்கள். மார்க்ஸ், ஏங்கல்ஸ், லெனின், ஸ்டாலின், மாஸே துங் வழிவழி வந்த செங்கொடி நம்மை வழி நடத்தும்'. கோபம் வந்தால், அவர் மேடையிலே பேசுவதைப் போலே தான் பேசுவார். கன்னத்திலே அதிகம் மயிர் குடைந்தெடுக்க வேண்டாமென்று சொன்னீர்களா? கதை கதையாக இருந் தாலும், வேலையும் வேலைதான். சிலிம்பிக் கிடக்கும் மயிர் களைத்தான் லேசாக வெட்டி விடுகிறன். ஐயா கன்னத்திலே 'மெஷின்' போடவிடுவதில்லை என்பது பார்த்தவுடனேயே தெரிகின்றது. வாருங்கோ தம்பி, வாருங்கோ. ஐயாவுக்கு 'குறப்' மட்டுந்தான்; முடியப்போகிறது. அந்தப் புட்டு வத்திலே இருங்கோ. இன்றைய பேப்பர்தான் — பார்த்துக் கொண்டிருங்கோ.

ஐயா, கேட்கிறீர்களா? பல ஆண்டுகளுக்கு முன்னர், அதே புட்டுவத்திலே—இப்ப தம்பி உட்கார்ந்திருக்கிற அதே புட்டுவத்திலே — அமர்ந்து சொன்ஞர். அப்பொழுதுதான் யாழ்ப்பாணத்துக்கு இந்த முனிசிப்பல் சபை கிடைத்தது. புதிய வட்டாரங்கள் பிரிக்கப்பட்டிருந்தன. அவர் — அவர் தான் முருகேசு வாத்தியார் — சொன்ஞர். 'விக்டர்! தன்னலமற்றவர்கள், தியாகம் என்ற அக்கினிக்குண்டத்தில் புடம் போட்டெடுக்கப்பட்ட நாணயஸ்தர்கள் மக்கள் தலைவர்களாக வேண்டும். படிப்பை முன்வைத்துத் தலைவர் களை உருவாக்கி ஏமாந்தது போதும். உன்னதமான உத்தமத் தலைவர்கள் தொழிலாளர் மத்தியிலேதான் தோன்றுகிருர்கள். அப்படியொரு தலைவன் நீ. இந்த எலக்ஷனில் நீ பதினுலாம் வட்டாரத்திற்கு போட்டியிட வேண்டும். வெற்றி—தோல்வியல்ல முக்கியம். இலட்சியம் என்பது நீண்ட பிரயாணம். தனி ஒருவன் அந்த வெற்றித் துவஜத்தை அடைவதில்லை. ஒருவன் முன்னேறுவான்; மரிப்பான். அவன் விட்ட இடத்தில் இன்னொருவனே, சிலரோ ...... அணி முன்னேறி வெற்றித் துவஜத்தை அடையும். நீ போட்டியிடுவது, ஒரு சலூன் தொழிலாளியும்

தேர்தலுக்கு நிற்கலாம் என்ற சகஜ நிலையை உருவாக்கும் ......' நான் நன்ருகப் பேசுகிறேன் என்று சொல்லுகிறீர் களா? ஒருமுறை கேட்டால் எனக்குப் பாடம் வந்துவிடும். அந்தக் காலத்திலே கிடாய் விழுந்தானிலே கூத்துகளும் ஆடி இருக்கிறன். நீங்கள் விக்டர் பேசுவதைக் கேட் டிருக்க வேணும். புயலடிப்பது போலே தான் இருக்கும். அவன் கொழும்பு, காலி, எல்லா இடத்திலும் பேசியிருக் கிருன். சுருட்டை மயிர் படியிறது குறைவு. தலைக்குக் கொஞ்சம் தண்ணீர் போடட்டுமா?

விக்டர், நாங்கள் யார் சொன்னதையும் கேட்காமல் எலெக்ஷனுக்கு நின்ருன். இந்த ஊரே தடம் புரண்டது. 'காலம் கலிகாலம். அம்பட்டனும் தேர்தலுக்கு நிற்கிருன். எல்லாம் இரண்டு காசு துள்ளுவதினலே வந்த வினை' என்று சாதித் தடிப்புக்கொண்ட வாடிக்கைக்காரர்கள் இந்தச் சலூ னுக்கு வருவதை நிறுத்திக்கொண்டார்கள். 'இதை உலகம் ஏற்குமா? அவர்களைப் பகைத்து நாம் தொழில் நடத்த முடியுமா?' என்று—எதிர்த்துப் போட்டியிட்ட அபேட்சகர் கொடுத்த சாராயம் வேலை செய்ய — எங்கட சாதிக்காரரே விக்டரை எதிர்த்தனர். அதற்கு விக்டர் என்ன சொன்ஞன் தெரியுமோ? 'நாம் முடி வெட்டுவது அவர்களுக்கு விருப்ப மில்லை என்ருல், அவர்களும் நமது தொழிலைக் கற்றுக் கொள்ள ஒரு சந்தர்ப்பத்தை அளிக்கின்றேன்' என்ருன். அவன் பகிடியும் விடுவான்.

ஓமோம். பிடரிக்கு மட்டுந்தான் மெஷின் போடுறன். தலையை நன்ருகக் குனியுங்கோ... நெடுகிலும் நல் லெண்ணெய் வைத்து வந்தால் சொடுகு பிடிக்கும். ஏன்? ஆமணக்கெண்ணெய் தலைக்கு நல்ல குளிராக இருக்குமே. கதையைக் கேட்கிறீர்களா? அந்தத் தடவை விக்டருக்கு கட்டுக்காசு கூடக் கிடைக்கவில்லை. 'அம்பட்டனுக்கு நல்ல பாடம்' என்று எல்லோருக்கும் நல்ல சந்தோஷம்.

'முருகேசு வாத்தியார் மட்டும், செடியை நாட்டி விட்டோம்; இனி, அதனை வளர்ப்போம்' என்று விக்டரை மேலும் ஊக்கப்படுத்தினர்.

அடுத்த தடவை தேர்தல் வந்தது. விக்டர் மசியல் கள்ளன்; சரியான பிடிவாதக்காரன். அவன் மீண்டும் போட்டியிட்டான். முதல் தேர்தலிலே இருந்த சலசலப்பு இல்லை. தேர்தலைப்பற்றி வாடிக்கைக்காரர்கள் சலூனிலே கூடிப் பேசுவார்கள். அம்முறை கட்டுக்காசு கிடைத்தது. அப்பொழுது முருகேசு வாத்தியார் பூரிப்புடன் சொன்னர்: 'நமது அணியின் ஆதரவு நன்ருக வளருகின்றது.' மூன்று மாதங்களுக்கு முன்னர் தான் மூன்ரும் எலெக்ஷன் நடந்தது; சரியான போட்டி. ஒருவரும் நம்பவில்லை, விக்டர் இரண்டு வாக்குகளால் வெற்றி பெற்ருன்.

மன்னிக்க வேண்டும், ஐயா. இது கண்ணீர். அது நினைத்துப் பார்க்க முடியாத சங்கதி. இப்பவும் நெஞ்சு வெடிக்கிறது போலை இருக்குது. ஊர்வலம் புறப்படும் பொழுது, யாரோ வில்லூண்டித் துப்பாக்கிச் சூட்டைப் பற்றியும் சொன்ஞன். அவன் சரியான கரிநாக்குக்காரன் தான். வெற்றி ஊர்வலத்தில் வந்துகொண்டிருந்த விக்டர் துப்பாக்கிக் குண்டிற்குப் பலியான செய்தியை நீங்கள் பேப்பரிலை பார்த்திருக்கலாம். பார்த்திருக்கிறீர்களா? ஓமோம். அதே விக்டரின் கதையைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறன். நாலுபேர் எதிரிகள். இரண்டு பேர் எங்களுடைய சாதிக்காரர்தான்—உடன் பிறந்து கொல்லும் வியாதி. ஓம், ஐயா. விக்டருக்குப் பெண்சாதி இருக்கிருள். கிளிக்குஞ்சு மாதிரி, பாவம், சின்ன வயது இரண்டு பிள்ளைகள். பாவம், கொஞ்சம் கஷ்டப்படத்தான் போகுதுகள். நாங்கள் அதுகளை அலையவிட்டிடுவமா?

சாவதற்கு முன்னர்கூட விக்டரின் ஓர்மம் தளர வில்லை. அவன் பேசிய ஒவ்வொரு சொல்லும் எனக்கு ஞாபகம் இருக்கிறது: 'வெற்றித் துவஜத்தை அடைவதற்கு

முன்னர் பலர் பலியாகலாம். என் சாதியில் நான் முதலில் பலியாவதைவிடச் சிறந்த பேறில்லை. இதோ இரத்தம்! இது செங்கொடியின் நிறமேதான். இந்த இரத்தத்தின் மீது ஆணையாகச் சொல்லுகிறேன். நமது அணியிலே ஒரு விக்டர் மறையலாம். ஆனால், அந்த இடத்திற்கு ஆயிரம் விக்டர்கள் தோன்றுவார்கள்.'

மன்னிக்க வேண்டும், ஐயா, மன்னிக்க வேண்டும். கன்னத்து மயிரை ஒதுக்கும் பொழுது, விக்டரின் நினைவில் கை நடுங்கி விட்டது. 'பரவாயில்லை' என்று நீங்கள் சொல்லலாம். ஆனால், மன்னிக்க வேண்டும். மயிரை நன்றாகத் துடைத்து விட்டிருக்கிறன். குளிக்கத் தானே போகிறீர்கள்?... நல்லது.

'குறப்' மட்டுந்தானே? எழுபத்தைந்து சதம். தம்பி, இந்தப் புட்டுவத்தில் வந்து இருங்கோ... இரண்டு ரூபாய்த் தாளா? சில்லறை இருக்கிறது. இந்தாருங்கோ, ஒரு ரூபா இருபத்தைந்து சதம். ஓமோம். வெளியே, எதிர்ப்பக்கச் சுவரைப் பாருங்கோ. 'விக்டரின் பணியைத் தொடர டேவிட்டைத் தேர்ந்தெடுங்கள்' என்ற நோட்டீஸை. டேவிட், விக்டரின் மருமகன் ... சரி வாருங்கள், ஐயா.

தம்பி சுதுமலையல்லே? அங்க படிப்பித்துக் கொண்டிருந்த டீச்சர் பொடிச்சியைக் கிளப்பிக் கொண்டு போனவன் எந்தப் பகுதியாம்? ... மன்னிப்பாயோ? இவள் கந்தர் மடமல்லோ?...என்ன வேண்டும் ஐயா? குடையை மறந்து போய் விட்டீர்களா? அந்த மூலையிலைதான் வைத்தீர்கள். ஓம், அதோ இருக்கிறது. சரி, போயிட்டு வாருங்கோ, ஐயா.

மு. தளையசிங்கம்

# புது யுகம் பிறக்கிறது

கௌரி இன்னும் கண்ணைத் திறக்கவில்லை. ஆஸ்பத்திரிக் கட்டிலில் அசையாமல் கிடக்கிருள். பக்கத்தில் சுற்றிப்போர்த்த அந்தச் சிறு உருவம் கிடக்கிறது. அது உருவமா? உள்ளே எலும்பென்பது இருக்குமா? அந்தக் கண்கள்? அந்த வாய்? உயிர் இருக்கிறது. ஆனால், எத்தனை நாளைக்கு?

கனகரத்தினம் கல்லாய் நிற்கிருன். கௌரி இனி கண்ணைத் திறக்கும்போது அவன் என்னத்தைச் சொல்வது? எப்படிச் சொல்வது?

கனகரத்தினத்தின் நெஞ்சு கனக்கிறது. நேற்று, முந்த நாள் — ஏன், இரண்டு மாதங்களுக்குமுன், கௌரி அந்தக் கதையை ஆரம்பித்தது முதல் — அவன் என்னென்ன வெல்லாம் சொன்ஞன்!

கனகரத்தினத்தால் தாங்க முடியவில்லை. அடக்க முடியாத வேதனையோடு நினைவுகள் சேர்ந்து நெஞ்சை அமுக்குகின்றன.

இரண்டு மாதங்களுக்கு முன்பு.

"அரோகரா" என்று கேலியாகக் கத்திக் கொண்டு, சாமி அறைக்குள் எட்டிப் பார்த்தான் கனகரத்தினம்; கையில் சிகரெட் புகைந்துகொண்டிருந்தது.

ஊதுபத்தியைப் பற்றவைத்துச் சாமிப்படத்துக்கு முன்னல் கும்பிட்டுக்கொண்டு நின்ற கௌரி ஒருகணம் திரும்பினாள். முகத்தில், மேலே ஒரு மெல்லிய புன்னகை

நின்றாலும், அடியிலிருந்த சினம் தெரியாமலில்லை. கனகரத்தினத்தின் கையிலிருந்து அறைக்குள் நுழைந்த சிகரட் புகையைப் பார்த்த பின், அந்த மெல்லிய புன்னகையும் மறைந்துவிட்டது. திரும்பவும் தலையைத் திருப்பிக்கொண்டு கும்பிடத் தொடங்கினாள்.

கனகரத்தினம் கவலைப்படவில்லை. முன் விருந்தையில் இருந்த சோபாவில்போய் கௌரி வரும்வரையும் காத்திருந்தான். அவனுக்கு அதெல்லாம் பழக்கம். கௌரியின் உரிமை அது. அவனுக்கு அதில் எல்லாம் நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, அவளுக்கு இருக்கிறது. அதில் அவன் தலையிடக்கூடாது. அது அவளின் தொழுகைச் சுதந்திரம். பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம் என்றுதான் இல்லாவிட்டாலும், ஒரு படித்த மனைவிக்குக் கடைசியில் அந்தச் சுதந்திரமாவது இருக்கவேண்டும். கௌரி அடிக்கடி எழுப்பும் வாதம் அது. அதில் அவள் உண்மையான கண்டிப்புங்கூட. இப்போ கொஞ்சம் முந்தி கனகரத்தினத்தையும் அவனது சிகரட்டையும் நோக்கிவந்த அந்தச் சுண்டிச்சிவந்த பார்வை அதற்கு ஓர் உதாரணம். சாமி அறைக்குள் போய்விட்டால், கௌரி வேறு ஓர் அவதாரம். அவர்கள் வீட்டில் அந்த அறை மட்டும் ஒரு தனியான கலாசார டிப்பார்ட்மென்ட். கௌரிதான் அதற்கு அதிகாரி. கனகரத்தினத்தின் கலாசாரம் அதற்கு முற்றிலும் மாறானது, புரட்சிகரமானது; வீட்டில் எங்குமே ஆட்சி செய்தது. ஆனால், சாமி அறை வாசலுக்கு அப்பால் மட்டும் அது போவதில்லை. அப்பால் கௌரியின் ஆட்சி. புரட்சி பக்திக்குப் பணியவேண்டும். பணிய விரும்பாவிட்டால், அதில் தலையிடாமலே இருந்துவிடலாம். அது பயமுறுத்தல் அல்ல; பரஸ்பர ஒப்பந்தம், மரியாதை. கனகரத்தினத்துக்கு அதெல்லாம் பழகிப்போய்விட்டது. எழுத்துச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம், தொழுகைச் சுதந்திரம் என்பதில் எல்லாம் நம்பிக்கை வைக்கும் பேர்வழியல்ல அவன்.

அவனுடைய கட்சி வேறு. ஊதுபத்தி சாம்பிராணிபோட்டு மணித்தியாலக் கணக்காக நின்று ஏதாவது ஒருபடத்துக்கு முன்னால் முணுமுணுத்துத்தான் ஆகவேண்டுமென்றால், முன்சுவரில் தொங்கிக் கொண்டிருந்த மார்க்ஸ், லெனின் படங்களை அவன் சிபாரிசு செய்யத் தயார். ஆனால், கௌரியின் ரசனை வேறு ரகம். கோவணத்தோடு நிற்கும் முருகன் தரவழிகளைத் தவிர மற்றவர்களுக்கு அவள் உலகத்தில் அனுமதி இல்லை. அவள் வேறுயுகப் பேர்வழி—எப்போதோ பிறந்து, காலங்காலமாய் வளர்ந்து, முதிர்ந்து, இப்போது செத்துக்கொண்டிருக்கும் பழைய யுகம். பிறந்து கொண்டிருக்கும் இப்புதிய யுகத்தைச் சேராதவள் அவள். கௌரியைப்பற்றிய கனகரத்தினத்தின் அபிப்பிராயம் அது. என்றாலும், அவளுடைய விசயங்களில் அவன் தலையிடுவதில்லை. ஏதோ அவள் பட்டபாடு என்ற எண்ணம். அவனுடைய மாபெரும் இலட்சியமான ‘உலகப்புரட்சி’க்கு அவளின் அந்தச் சின்னஞ் சிறிய நான்கு சுவர் அறையிலிருந்து ஆபத்து வரப்போவதில்லை. எனவே, அறைக்கு வெளியே நின்று கிண்டல் பண்ணுவதுகூட அனவசியம். ஆனால், அப்படிச் செய்வதில்தான் அவனுக்கு ஓர் ஆனந்தம்.

சிலநேரம் சென்று வெளியேவந்த கௌரியின் முகத்தில் பழைய சினம் இருக்கவில்லை. “உங்களுக்கு எந்த நேரமும் பகிடி!” என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே வந்தாள். முகத்தில் நிம்மதி நிறைந்த சாந்தி நின்றது. நெற்றியில் விபூதிப் பொட்டு ஒளிவிட்டது — கூடவே, தாய்மையின் பூரிப்பு.

கௌரியின் முகத்தில் அப்படி ஒரு களை சதா ஒளியிடத்தான் செய்யும். ஆனால், முக்கியமாக அவள் சாமி அறையிலிருந்து வெளிவரும்போது அந்தக் களையின் ஒளிவட்டங்களைக்கூடக் கண்டுவிடலாம் என்ற ஒரு பிரமை ஏற்படும். கனகரத்தினத்துக்கு அந்தத் தோற்றம் கௌரியின் அம்மாவை நினைவூட்டும். அவன் சின்னவனாய் இருக்கும்போதே

இறந்துபோன அவனின் தாயாரை நினைவூட்டும். அம்மா வின் அம்மாவை, தாயாரின் தாயாரை என்று, அதற்குப்பின் ஒரு தொடர் நினைவுகள் ஓடும். எல்லோர் முகங்களிலும் அதேவித அமைதி; தெய்வீகக்களை; ஒளிவிடும் விபூதிப் பூச்சு. 'அதுதான் கிழக்குப் பண்பாடு' என்று ஏதோ ஒன்று நெஞ்சுக்குள் சொல்லும். சாமி அறைக்குள் போய்நின்று அந்தப் பழைய கலாசாரத்தோடு, அந்தப் பழைய பரம் பரைத் தொடரோடு கௌரி தொடர்பேற்படுத்திக் கொள் கிறளா? ஐக்கியப்பட்டு விடுகிறளா? ஆச்சரியத்தோடு கனகரத்தினம் தன்னையே அப்படிக் கேட்டுக்கொள்வான். அந்தக் கேள்விகளுக்கு அவனால் விடை கண்டுகொள்ள முடியாவிட்டாலும், கௌரியின் முகத்தில் நிற்கும் அந்த அமைதி நிறைந்த களைக்கு, மனத்துள் அவனால் மரியாதை கொடுக்காமல் இருக்கமுடியாது. அவளின் பழக்க வழக் கங்கள் பழைய பரம்பரைப் பழக்க வழக்கங்களாய் இருக்க லாம். ஆனால், அவற்றில் உள்ள அமைதியும் பொறுமையும் போற்றப்படக் கூடியவைதான். அவனது புரட்சி எண்ணங் களில், அவன் காணும் புதுயுகப் பெண்களில், அவற்றின் வெறுமையினால் ஏற்படும் குறையை அப்போதுதான் அவனால் உணரமுடியும். ஆனால், அதற்காக கௌரியிடம் அதிக அன்பைக் காட்டுவதைத் தவிர, தன் கொள்கைகளை மாற்றிக்கொள்ள அவன் விரும்புவதில்லை. கட்சியும் கொள் கையும் அறிவை அடிப்படையாகக் கொண்டவையே ஒழிய உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டவையல்ல என்ற பழக்கமான அவனின் சுலோகத்தை, அதற்குக் காரண மாகவும் காட்டிவிடுவான்.

" இண்டைக்கென்ன டைம்டேபிளில் ஒரு மாற்றம்? பகல் பத்து மணிக்கும் ஒரு கும்பிடு! — ஞாயிற்றுக்கிழமை யெண்டும் பாராமல்? " என்று கௌரியைப் பார்த்து அவன் கேட்டபோது, பகிடியோடு ஓர் இனந்தெரியாத வாஞ்சை யும் சேர்ந்து நின்றது.

"உங்களுக்கென்ன ஊர் சுற்றியிற்று வருவேங்க; விடிஞ்சாப் பொழுதுபட்டா, கட்சி கட்சியெண்டு பீத்துவேங்க, வேறென்ன தெரியும்?"

"அடேயப்பா, புதிசா ஏதோ தெரிஞ்சு வைச்சிருக்கிற போலிருக்கே!" என்று கனகரத்தினம் உதட்டைப் பிதுக்கி முகத்தைக் கோணலாக்கிச் சிரித்தான். "என்ன அமெரிக்கன்காரங்கள் சந்திரனுக்குப் போயிற்ருங்களா? அல்லது நூறு மெகடன் அணுகுண்டை வெடிக்க வைச்சிற்ருங்களா? அல்லது, கென்னடிதான் ஒரு கொம்யூனிஸ்ட்டாக மாறியிற்றேரா?"

"போங்களப்பா, உங்களுக்கு எப்பவாவது நல்லதாக ஏதாவது கதைக்க முடிகிறதா?" என்ருள் கௌரி.

கனகரத்தினத்துக்குச் சாடையாகச் சுட்டது. எப்போதாவது அவன் நல்லதாக இல்லாத ஏதாவதைப்பற்றிக் கதைத்ததுண்டா? நிரந்தரப் புரட்சி, தொழிலாளர் எழுச்சி, சோஷலிஸ அமைப்பு, முதலாளி வர்க்க ஒழிப்பு — என்பவற்றைவிட நல்லவை வேறு இருக்கிறதா?

"சரி, நீ நல்லதாக ஏதாவது கதை பாப்பம்?" என்ருன் கௌரியைப் பார்த்து வேண்டுமென்றே.

"சுசீலா இருக்கே?..." என்று ஆரம்பித்தாள் கௌரி.

ஆனுல், கனகரத் தினம்விடவில்லை, "எந்தச் சுசீலா?" என்று இடைமறித்தான்.

"என்ன, சுசீலாவைத் தெரியாதா?" என்று ஆச்சரியப்பட்டாள் கௌரி.

கனகரத்தினத்துக்குச் சிரிப்பாக வந்தது. கௌரி சொல்பவை அவ்வளவு முக்கியமற்றவை என்று காட்டிக் கொள்வதில் அவனுக்கு ஒரு சந்தோசம். "என்ன பெரிய சரித்திரப் பிரசித்தி பெற்றவர்களைப் பற்றிச் சொல்லியிற்று ஆச்சரியப்படுறவள் போல ஆச்சரியப்படுகிருயே? சுசீலா எண்டால் என்ன, லெனின் ஸ்டாலின் எண்ட எண்ணமா?"

கௌரி அதைப் பொருட்படுத்தவில்லை. "நம்மோடு வாசிற்றியில் இருந்துதே அது" என்ருள் அவள்.

கனகரத்தினம் கொஞ்சமும் அதைப் பற்றி நினைக்க விரும்பாதவன்போல், "சரி அந்த சுசீலாவுக்கு என்னவாம்?" என்ருன் அசிரத்தையாக.

"அதுக்குப் பிறந்த முதல் குழந்தை, செத்துப் பிறந்திருக்காம்! முகம், கண், மூக்கெல்லாம் அசிங்கமாக இருந்திச்சாம்! என்னவோ வியாதியெண்டு இப்ப கோமளா சொல்லியிற்றுப் போகுது."

"அவளுக்கு வீ. டி. யாக்கும்!" என்ருன் கனகரத்தினம்.

"யாருக்கு?"

"பிள்ளையைப் பெத்த சுசீலாவுக்கோ கிசீலாவுக்கோ?"

"சும்மா பைத்தியம் கதைக்காதீங்க" என்று பதைபதைத்துச் சொன்ஞள் கௌரி. "உங்கட நாக்கல்ல அழுகிப்போகும் அப்படி சொன்ஞ. அவள் எவ்வளவோ நல்லவள். அவள் ஒரு றிலிஜியஸ் கேஸ்."

"அப்ப, அவளின்ர புருஷனுக்காக்கும்!" என்ருன் கனகரத்தினம், எந்தளவிலும் தன் காரணம் பிழைக்காதது போல்.

கௌரிக்கு, கனகரத்தினம் இன்னும் கூடுதலான ஒரு பாவத்தைச் செய்துவிட்டதுபோல் பட்டிருக்க வேண்டும். அவளின் பதைபதைப்பு இன்னும் கூடிற்று. "மற்றவையெல்லாம் தன்னைப் போல எண்ட எண்ணமாக்கும். ஏனிப்படி வீணுப் பாவத்தைத் தேடிக் கொள்றேங்க? அது ஒரு சாமிப் போக்கு. சுசீலாவைவிட நல்லம். என்னுடைய பற்ச்மேற்ஸைப் (Batchmates) பற்றி எனக்குத் தெரியாதா? மூண்டு வருசத்துக்கு முந்தியிருந்த உங்களுக்கென்ன தெரியும்? நீங்கதான் முந்தி அங்கையும் இஞ்சேயும் திரிஞ்சீங்களெண்டு இப்பேயும் கதைக்கீனம்."

"சரி, அதுக்கு இப்பவேன் ஒரு 'சண்டே ஸ்பெசல்' கும்பிடு போட்டனி? சுசீலாவின்ர குழந்தை உயிர்த்தெழ வேண்டுமெண்டா?" கனகரத்தினம் கதையை மாற்றினன், தன்னைப் பற்றிய புதைபொருள் ஆராய்ச்சி தோல்வியைத் தான் கொண்டுவரும் என்று அவனுக்குத் தெரியும்.

"இல்லை, உங்கட பிள்ளை தான் சுகமாகப் பிறக்க வேண்டுமெண்டு. மூண்டு வருஷத்துக்குப் பின், அருமை பெருமையாகக் கிடைச்சிருக்கெண்டு அக்கறை இருக்கா, உங்களுக்கு?"

கனகரத்தினம் 'ஓ' வென்று சிரித்தான். சிரித்துக் கொண்டே சொன்னன்: "அதுக்குத்தானு நீ இப்ப ஸ்பெசல் கும்பிடு போட்டாய்? பைத்தியம்! நீ எரிக்கிற கற்பூரமும் ஊதுபத்தியும் நம் நாட்டுப் பணத்தை ஜப்பானுக்கும் இந்தியாவுக்கும் அனுப்புமேயொழிய, கடவுளட்ட ஒண்டும் சொல்லாது! இந்த விசயங்களுக்கெல்லாம் கடவுளட்டக் கேட்கிறதும், காசி கதிர்காமம் போறதுவும் இந்தக் காலத்தில் செய்யிறதில்ல; அது அந்தக்காலம். இது அணுக் குண்டுக்காலம் கௌரி, இது அணுக்குண்டுக் காலம்! விஞ்ஞானம் எதையும் செய்யும். கடவுளட்டக் கேட்கிறத விட்டிற்று டொக்டரட்டப் போகோணும்."

"சரி சரி, உங்கட லெக்சர் போதும்" என்று சொல்லிக் கொண்டே, அவன் அதை முடிக்கு முன்பே கௌரி தன் பாட்டில் குசினிப்பக்கம் போய்விட்டாள். கனகரத்தினம் தொடர்ந்து சிரித்தான்; அது ஒரு வெற்றிச் சிரிப்பு.

கனகரத்தினம் ஒரு பொதுவுடைமைவாதி. பல்கலைக் கழகத்தில் படிக்கும் போதே அவன் அப்படி. இப்போ கொழும்பில் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருக்கிறன். அதே சமயம், ஒரு முக்கிய தொழிற் சங்கத்தின் செயலாளனுங்கூட. கட்சி விவகாரந்தான் அவனது முக்கிய வேலை; உத்தியோகம் இரண்டாந்தர யந்திரத் தொழில்! தனிப்பட்ட முன்னேற்றத்தில் அவனுக்கு நம்பிக்கை இல்லை! மனித

குலத்தின் பொது முன்னேற்றத்தில் தான் அவனுக்கு நம்பிக்கை. அதற்குத் தடையாய் உள்ள பிற்போக்குச் சக்திகளை அகற்றும் விசயத்தில் அவனது கட்சிச் சகாக்களை விட அவன் மிகவும் தீவிரமானவனுங்கூட. அகிம்சை, பொறுமை என்பவற்றை அவன் அடியோடு வெறுத்தான். அவற்றின் மூலம் பிற்போக்குச் சக்திகளைக் களைந்தெறிய முடியாது என்பது அவனது அசையாத நம்பிக்கை. புரட்சியும், சர்வாதிகாரமுந்தான் அவனுக்குப் பிடித்த வழி. கட்சி மாருகச் சொன்னுலுங்கூட, 'பலத்தைப் பலம்தான் அழிக்க வேண்டும்' என்பதுதான் அவனது தனிப்பட்ட கொள்கை.

திபெத்தைச் சீனு கைப்பற்றியபோது, இந்தியாவில் அது ஆக்கிரமிப்பு நடத்தியபோது, அவனுக்கு அவை 'தவிர்க்க முடியாத உலகப் புரட்சியின் சில கட்டங்களாக'த்தான் பட்டன. பரீட்சார்த்தமாக வெடிக்கப்பட்ட அதிக மெகடன் அணுக் குண்டுகள், அவனைப் பொறுத்த வரையில், அதே செய்தியைத்தான் கொடுத்தன. வழி எப்படியாய் இருப்பினும், தன் நோக்கம்தான் தலை சிறந்தது என்பது அவனது நம்பிக்கை. அதைக் கௌரியும் உள்ளுக்குள் உணர்ந்திருந்தாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆனுல், கௌரி, வழியைப் பற்றிக் கவலைப்பட்டாள். கனகரத்தினத்துக்கு அந்தக் கவலை இருக்கவில்லை. மாருக, அது ஒரு பழைய பரம்பரைப் பிற்போக்குச் சுபாவம் என்று சிரித்தான். அடுத்த இரண்டு மாதங்களாக கௌரி கவலைப் படும் போதெல்லாம், கனகரத்தினம் அப்படித்தான் சிரித்தான்; அப்படித்தான் பகிடி பண்ணினுன். ஆனுல், அடுத்த இரண்டு மாதம் வரைக்குந்தான். அதற்குப் பின்?

கௌரி கண் திறந்து ஐந்தாறு நிமிடங்களாகின்றன. கஷ்டப் பட்டுப் பிரசவித்த பின், கௌரி இப்போதுதான் கண் திறந்திருக்கிருள். நிதானமாக, அறிவு வந்த பின், அங்குமிங்கும் அவள் கண்கள் தேடுகின்றன.

கனகரத்தினத்தின் முகத்தில் அப்படி எழுதி ஒட்டி விட்டிருக்கிறதா?

"பிள்ளை எங்க?" என்று பயத்தோடு அவள் கேட்கிருள்.

பிள்ளை கிடக்கும் பக்கத்தைக் கனகரத்தினம் காட்டுகிருன். போர்வையை அகற்றிக் காட்டும்படி அவள் வேண்டுகிருள். பேசாமல் நிற்கிருன் கனகரத்தினம். அவளால் பொறுக்க முடியவில்லை. கஷ்டத்தோடு தானே முயல்கிருள். அதைப் பொறுக்க முடியாமல் கனகரத்தினமும் உதவுகிருன். போர்வை அகற்றப்பட்டு உருவம் தெரிகிறது. அடுத்த கணம் கௌரி கீச்சிட்டுக்கொண்டே முகத்தைத் திருப்பிவிடுகிருள்.

கனகரத்தினத்துக்கு எப்படித் தேற்றுவதென்று தெரியவில்லை. ஐந்து நிமிடங்களுக்குப் பின், கனகரத்தினத்தின் பக்கம் அவள் பார்வை திரும்புகிறது. அதில் நிற்கும் அந்தக் கேள்வி :

"அப்போ, உங்களுக்கும் வீ. டி. தானு? உங்களுக்கும் அதுதானு?"

"இல்லை, கௌரி, இல்லை! இது என்ன வியாதியெண்டு தெரியவில்லையாம்! அணுக் குண்டுகளின் றேடியோ அக்டிவ் தூசுகளினுல் வந்திருக்கலாம் எண்டு டொக்டர் ஸ்மார் சொல்லினம்" என்று கனகரத்தினம் சொல்லும்போது, அவனுக்குக் கண்ணீர் வடிகிறது.

கௌரியின் கண்கள் விரிகின்றன. பின்பு, ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள்போல் மறுபக்கம் தலையைச் சாய்த்துக் கொள்கிருள். முன்பு இருந்த விம்மல் குலுங்கல் ஒன்றும் இல்லை. ஆனுல், கண்களில் நீர் ஆருகப் பெருகி ஓடுகிறது. கனகரத்தினத்தின் நெஞ்சை அந்தக் காட்சி நெருடுகிறது. என்னத்தை நினைத்து அவள் அழுகிருள்?

கடைசியில், 'உங்கள் விஞ்ஞானம், உங்கள் அறிவு, நோக்கமும் முடிவுந்தான் முக்கியம் — வழியல்லஎன்ற கொள்கை, எல்லாம் இதைத்தானு செய்தன!' என்று நினைக்கிருள்?

"அழாதே கௌரி, அழாதே! எல்லாம் கடவுளின் செயல்!" என்று, என்ன சொல்கிறேம் என்றே தெரியாமல் உளறினுன் கனகரத்தினம்.

"இல்லை!" என்ருள் கௌரி. முனகினுலும் நிதான மாகக் குரல் வந்தது: "இல்லை, இது கடவுளின் செயலல்ல! உங்கள் முன்னேற்றம் எங்கட கடவுளையே கொண்டு போட்டுது!"

"அம்பி" | ## கூண்டுக் கிளி

ஒருநாள் எனது நண்பருடன்
ஓர் மாங்கிளையில் அமர்கையிலே,
அருகே வயலில் தினை கண்டேன்,
அதனைக் கொய்ய மனங் கொண்டேன்.

தாவிப் பறந்தேன், தினை கொய்தேன்,
தரையில் வலையிற் சிக்குண்டேன்.
காவிச் சென்றூர் கூண்டினிலே
காவற்காரன் சிறை வைத்தான்.

சுற்றம் பிரிந்தே ஏக்கத்தில்
துயரில் வாடும் வேளையிலே;
'பெற்றம்மா' எனப் பெயரென்றூர்;
பேணிப் பார்க்கப் பலர் வந்தார்.

பட்டப் பெயரைத் தந்தென்ன,
பாலும் பழமுந் தந்தென்ன?
இட்டம் போலே வாழ்கின்ற
இன்பம் ஒன்றே பெரிதன்றே?

பஞ்சவர்ண அழகும் போய்ப்
பவளச் செவ்வாய் ஒளியும் போய்க்
கொஞ்சும் மொழியின் குளிர்வும் போய்க்
கொடுமைக் கூண்டில் மடிகின்றேன்.

வாடித் துவளும் நிலைமாற்றி
வாழ்வைத் தருவோர் வாரீரோ?
ஓடித் தப்ப வழிகாட்டி
உலகில் உரிமை தாரீரோ?

எம். ஏ. ரஹ்மான்

# தாய்மை

குயில் அழகாகப் பாடிக்கொண்டிருந்தது.

அந்தக் கோலக் குரலில் ஓர் இளங் காகம் தன்னுடைய மனத்தினைப் பறிகொடுத்தது. கீதத்தின் ரஸனை—வேலையை மறந்தது; சுயத்தை மறந்தது.

"என்ன, இப்படி ஒரேயடியாக உட்கார்ந்து விட்டாய்? கூடு கட்டுவதற்கு அழகான சுள்ளிகள் கிடைக்கின்றன. குடும்பச் சுமையைத் தாங்குவதற்கு உழைப்பு. வா, வா..." அதனை அதன் சுற்றமாங் காகங்கள் அழைத்தன.

அவற்றின் அழைப்பு அதற்குச் சினத்தை மூட்டியது.

"உங்களுடைய உழைப்பும், வாழ்க்கையும் ...... நான் காகமாகப் பிறந்ததற்காக ஏங்கி ஏங்கிச் சாகின்றேன் .... அதோ, பாருங்கள். அந்தக் குயிலும் நானும் ஒரே நிறந் தான். நான் கரைகின்றேன்; அது கூவுகின்றது. அதன் குரலைப் பிரதி பண்ணிப் பாட மனிதன் ஆண்டாண்டு கால மாகப் பாடுபட்டு வருகின்றான்..."

"அதற்குக் குடும்பமா? ... பொறுப்பா? ... தனக்காக மட்டுமே வாழுஞ் சுயநலச் சிறுக்கி!"

"உங்களுடைய விளக்கம் எனக்குத் தேவையில்லை. நான் அந்தக் குயிலிடஞ் சங்கீதங் கற்று வரப்போகின்றேன். கரைந்து, எத்தித்திரியும் நமது இனத்திற்கு ஏற்பட்டுள்ள கறையை எனது இசைவெள்ளத்தாற் போக்குவேன்."

"பைத்தியக்காரத்தனம்!"

சுற்றத்தவரின் ஆலோசனைகளுக்குச் செவி சாய்க்காது அஃது எங்கேயோ பறந்து சென்றது.

* * *

எவ்வளவோ முயன்றும், காகத்திற்குச் சங்கீதம் வரவில்லை.

அதைக் கண்டவுடனேயே குயில்கள் தமது குரல் இனிமையின் இரகசியத்தைச் சொல்லாது பறந்து சென்றன.

ஏகலைவன் பாணியில் வித்தை கற்றும் பயனில்லை.

'முயற்சி திருவினையாக்கும்' என்கிற நம்பிக்கை பாழாகியது.

தனது சொந்த ஊருக்கே திரும்பி வந்தது.

வழியில், ஒரு வேப்பமரத்தின் கீழ் ஒரு குயிற் குஞ்சு குற்றுயிராக இருப்பதைக் கண்டது.

அதற்குச் சமீபமாகச் சென்றது.

"உன்னைக் கும்பிட்டேன். என்னை ஒன்றுஞ் செய்யாதே. என் தாய் செய்த குற்றத்திற்காக என்னைப் பழி வாங்கவேண்டாம்" என்று அழாக்குறையாகச் சொல்லிற்று.

"நீ ஏன் அழவேண்டும்; என்னைக் கும்பிடவேண்டும்? நான் ஒரு தீங்குஞ் செய்யமாட்டேன் ... நாங்களிருவருஞ் சகோதரர்களாக வாழ்வோம். நீ அழகாகப் பாடுவாயே ... அந்தக் கலையை எனக்குங் கற்றுத்தா" என வினயமுடன் கேட்டது.

"நாங்கள் பாடுகின்றோமா? நாங்கள் பாடுகின்றோம் என்பது சிலருடைய வீண் கற்பனை."

"நீ குஞ்சாக இருப்பதனால் விஷயந்தெரியாது சொல்லுகின்றாய்போலும் ... நீ சங்கீதங் கற்பதற்கு யாரிடஞ் சிட்சை பெறுவதாக இருக்கின்றாய்?"

"குஞ்சாக இருப்பதனாலேதான் உண்மையைச் சொல்லுகின்றேன் ... நான் ஏன் குயிலாகப் பிறந்தேன்

என்று வாழ்நாளெல்லாம் அழுதுகொண்டே இருப்பேன் ... எங்கள் வர்க்கத்தாருக்குக் கூடுகட்டத் தெரியாது. திருட்டுத்தனமாக உங்கள் வர்க்கத்தாருடைய கூடுகளில் முட்டையிடுகின்றனர். ஆகையினுல், குயிற் குஞ்சுகளில் பல செத்து, ஒருசிலவே தப்புகின்றன. தப்புங் குஞ்சுகளும் என்னைப்போல கொத்துவாங்கி, என்னைப்போல குற்றுயிராகவே பிழைக்கின்றன. இந் நிகழ்ச்சியினுல் ஏற்படுந் தாழ்வுச் சிக்கலிலிருந்து நாங்கள் என்றுமே மீளுவதில்லை ... இதனை நினைந்து நினைந்து, வாழ்நாள் பூராகவும் அழுது கொண்டே இருக்கின்ருேம் ... தனிமையின் அழுகுரலைச் சங்கீதம் — இனிமை — என்று மற்றவர்கள் நினைத்துவிடுகின்ருர்கள் ... உண்மையைச் சொன்னுல், உங்கள் வர்க்கத்தாரைப்போன்று இனம் பெருக்கி வாழத்தெரியாத பாவி நான் ... ”

வேதனைப் பொருமல்.

இதனைச் சொல்லிக் கொண்டிருப்பதற்கிடையில், ஒரு காகம் பறந்துவந்து, அந்தக் குயிலைக் கொத்தத் தொடங்கிற்று.

“ அது குஞ்சு. அதன் உயிரை ஏன் பறிக்கின்ருய் ? ... தாய் செய்த குற்றத்திற்கு இதற்கா தண்டனை ? ”

“ ஓகோ, நீதான் சங்கீதப் பயித்தியங் கொண்டலையுங் காகமா ? எனது கூட்டில் வாழ்ந்து, என் கணப்பினை இது சுகித்துள்ளது. நான் அரும்பாடுபட்டு என் குஞ்சுகளுக்காகச் சேகரித்த உணவுகளை இது பகிர்ந்துள்ளது. இஃது உயிர்வாழ்வதால், என் சந்ததியின் வருங்காலத் தாய்மார்கள் ஏமாறுவார்கள் ; மேலும், வருங்காலக் குஞ்சுகளின் உணவும் வஞ்சிக்கப்படும் ... ” என்று ஆவேசமாகக் கூறி, ஆத்திரம் தீரும்வரை அக் குயிற்குஞ்சைக் கொத்திச் சென்றது.

தூரத்தில், ஒரு குயில் அழகாகப் பாடிக்கொண்டிருந்தது.

"அதோ, அதுகூட எனது அம்மாவாக இருக்கலாம். பெற்ற தாயையே அறியாது வாழும் அனுதைகள் நாங்கள்!" என்று ஈனக்குரலில், உயிர் பிரிந்தும் பிரியாத நிலையிற் குஞ்சு சொல்லிற்று.

"நீ இங்கே உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கின்ருய்...உன் அம்மா, எங்கேயோ இருந்து பாடிக்கொண்டிருக்கின்ருளா? ... என் வர்க்கம் எவ்வளவோ மேல்..."

"கா...கா...கா!" என்று கரைந்தபடி தனது சுற்றத்தைத் தேடி அந்தக் காகம் பறந்தது.

சி. வைத்திய லிங்கம்

# உள்ளப் பெருக்கு

பல மாசங்களாய் அனலைக் கக்கிக்கொண்டிருந்த அந்தப் பிராந்தியத்திற் சென்ற சில நாட்களாய் மழை பெய்துகொண்டிருந்தது. மணலை அள்ளி எறிந்து விளையாடிய காற்றுத் தணிந்து, பருவகாலப் பெண்போல் அடங்கி அமைதியுடன் வீசத் தொடங்கியிருந்தது.

பள்ளசேரியிலுள்ள குடிசைகள் எல்லாம் அன்று ஓய்ந்து கிடந்தன. பள்ளரும் பள்ளிகளும் வயலில் வேலை தேடிப் போய்விட்டார்கள். ஆடுகள் தாழ்வாரத்தில் ஆற அமர இரை யெடுத்துக் கொண்டு கிடந்தன. வாசற்புறத்தில் நாய்கள் வாலைச் சுருட்டிக் கொண்டு படுத்துத் தூங்கின. சேரிக்கு முன்னால் தேங்கி நின்ற வெள்ளத்திலே பள்ளச் சிறுவர் அரை நிர்வாணத்துடன் விளையாடிக்கொண்டு நின்றனர். மேலே வானம் கறுத்து மழைத் தூற்றல் ஆரம்பித்திருந்தது. அப்பொழுது குடிசைப் பக்கத்தில் பாய்ந்துவந்த பசு ஒன்றைத் துரத்திக்கொண்டு, கையிற் கோலுடன் ஒரு இளம்பெண் ஓடிவந்தாள். "உன்னை விட்டேனா பார், அட சனியனே! நாசமாய்ப் போ" என்று திட்டிக்கொண்டு கையிலிருந்த கோலால் ஓங்கிப் பசுவின்மேல் ஓர் அடி அடித்து விட்டு, துரத்திக்கொண்டே ஓடினாள். அவள் ஓடி ஒரு மூலையில் திரும்பும்போது, "ஏ! தெய்வி! மாட்டை ஏன் இப்படி அடிக்கிறாய்? அது உன்னை என்ன செய்துவிட்டது?" என்று கேட்டுக்கொண்டு எதிர்ப்புறத்திலிருந்து வந்தான் ஒரு வாலிபன். அவனைக் கண்டதும் இவள் சற்று நின்று

நிதானமாய் அவனை நிமிர்ந்து நோக்கி, "முருகா! இது உன் வீட்டு மாடா? எனக்குத் தெரியாமல் போய்விட்டதே. தெரிந்திருந்தால்..." என்று நிறுத்திக் கொண்டாள்.

"தெரிந்திருந்தால், அதன் காலையும் முறித்திருப்பாயாக்கும்! அதைத்தானே சொல்ல வந்தாய்?" என்று சொல்லிய வண்ணம் மெல்லச் சிரித்தான்.

"சேச்சே, உன் மாட்டைப் பிடித்து வைத்துக் கொஞ்சி விளையாடியிருப்பேன். மாடு வைத்து வளர்க்கத் தெரியாதவனுக்கு, மாடு என்ன வேண்டிக் கிடக்கிறது? எப்படி மதமதவென்று வளர்ந்திருந்தது; என் கீரைப் பாத்தியை வந்து பார். பயித்தங்கொடி ஒரு சதத்துக்கு உதவுமா? வந்து பார்" என்று கத்தினாள்.

"சரிதான் தெய்வி, கோவிக்காதே. வாயில்லாப் பிராணி தெரிந்தா செய்கிறது. அதற்கு மாட்டை இப்படி அடித்தால்?"

"எல்லாம் என் பிழை முருகா; மாட்டுக்கு வைத்த இந்த அடியை, நான் வைக்கிற இடத்தில் வைத்திருக்க வேணும்!" என்று ஆக்ரோஷத்துடன் கூறிவிட்டு, விறு விறென்று திரும்பித் தன் குடிசையை நோக்கிப் போனாள். அள்ளிச் செருகிய கூந்தலுடன் ஒய்யாரமாய் அவள் நடந்து போவதை முருகன் பார்த்துக் கொண்டு நின்றான். பொங்கிப் பூரித்து நிற்கும் அவள் அவயவங்களிலிருந்து உதிர்ந்துகொண்டிருந்த பருவகால எழிலிலே மயங்கிப் போனான்.

மேற்புறத்திலுள்ள தன் வீட்டு வாசலில் நின்று, இவர்களைக் கவனித்துக் கொண்டிருந்த முத்துப் பரியாரியார், தெய்வி கடைசியாகச் சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும் விறைத்துப்போனார். விபூதியை எடுத்து நெற்றி நிறையப் பூசிக்கொண்டார். ஒரு துண்டை எடுத்துத் தலையில் முண்டாசாகக் கட்டினார். ஒரு சால்வையை எடுத்து அரையிலே வரிந்து கட்டிக் கொண்டார். ஒரு துவாயை எடுத்து

ஒற்றைத்தோளில் போட்டுக் கொண்டு வெளியில் வந்தார். மருந்துப் பெட்டியைத் திறந்து ஒருமுறை பார்த்துவிட்டு, அதை மூடித் தம் கக்கத்துக்குள் வைத்துக்கொண்டு, தினமும் தாம் பார்க்கவேண்டிய நோயாளிகளைக் கவனிக்க ஊர் வலம் கிளம்பிவிட்டார். நேரே அவர் தெய்வியின் குடிசைக்குச் சென்றபொழுது, ஏதோ தாய்க்கும் மகளுக்குமிடையில் வாக்குவாதம் நடந்துகொண்டிருந்தது.

தெய்வியின் தாய் நோயின் கொடுமையால் உருக்குலைந்து பாயிற் படுத்துக் கிடந்தாள். அவள் கையைப் பிடித்து நாடி பார்த்து, ஒரு மருந்தைக் கொடுத்துவிட்டு வெளியில் வந்தார். தெய்வி ஆட்டுக்குட்டிகளுக்குக் குழை கொடுத்துக்கொண்டு நின்றாள். பரியாரியார் அவளை யணுகி, "தெய்வி, நானும் சற்றுமுன் எல்லாம் பார்த்துக்கொண்டு தான் நின்றேன். எப்படியிருந்தாலும் நீ பெண்பிள்ளை; அப்படிப் பேசியிருக்கவே கூடாது" என்றார்.

அவள் கண்களிலே ஆத்திரத்துடன்கூடிய ஒரு ஒளி வீசியது. "எப்பொழுது பார்த்தாலும் இவர்கள் என்னை நையாண்டி பண்ணுகிறார்கள். நான் வயலுக்கு வேலைதேடிப் போகவில்லையாம். மற்ற இளம் பெண்களைப்போல் வம்பு பேசிச் சிரிக்கவில்லையாம். 'ருங்கிக்காரி' என்று கதை கட்டித் திரிகிறார்கள்" என்றாள்.

"ஆனால், நீ அடக்கமாய், இனிமையாய்ப் பேசக் கூடாதா? எப்பவோ ஒரு நாள் ஆண்பிள்ளை ஒருவனுக்குப் பணிந்துதானே நீ ஆகவேணும்? ஏன், உன்னை அவன் வீரனுக்குத்தானே கொடுப்பதாக ஒரு பேச்சிருந்தது?"

அவள் ஒன்றுமே பேசாது மௌனமாயிருந்தாள்.

"ஏன், அவனை உனக்குப் பிடிக்கவில்லையா? நல்ல உழைப்பாளி; தேகக்கட்டுடன் கூடிய நல்ல ஆம்பிள்ளை; உன்னையும் உன் தாயையும் ஒரு குறையும் வராமற் பார்த்துக்கொள்வான்."

"நாங்களோ ஒன்றுக்கும் வழியில்லாத ஏழைகள், நயினைதை. என் ஆத்தையும் படுத்த படுக்கையாய் இன்னும் எத்தனை வருஷங்களுக்கோ? இந்தப் பாரத்தையெல்லாம் ஏன் பிறர் தலையிற் கட்டவேணும்?" என்று உணர்ச்சிப் பெருக்குடன் சொன்னாள்.

"அப்படியானால் வேறு எவரையாவது மனதில் வைத்திருக்கிறாயா? உன்னையே சுற்றிக் கொண்டு திரிகிறானே முருகன்; அவன்மேல் ..."

"எனக்கு ஒருவனுமே வேண்டாம்; என்றுமே நான் எவரையுமே கட்டிக்கொள்ளப் போவதில்லை" என்று முணு முணுத்தாள்.

"உன்னையும் ருங்கிக்காரி என்று அவன்கள் சொல்வதிற் குற்றமில்லை, தெய்வி. இந்தப் பரந்த உலகத்திலே நீ ஒரு தனிமரம் என்பதை எப்பொழுதாவது யோசித்திருக்கிறாயா? ஏன் இப்படிப் பிடிவாதம் செய்கிறாய்?"

அவள் ஒன்றுமே பேசாது தன் காலால் நிலத்தைக் கீறிக்கொண்டு நின்றாள்.

"என்னைப் பார், தெய்வி, எனக்கோ வயசு அறுபதை அடுத்துவிட்டது. 25 வருஷங்களுக்கு முன் நான் இங்கே குடியேறியபொழுது உன் அப்பன்தான் எனக்கு ஒத்தாசையாக இருந்தான். நீ இன்னும் குழந்தை என்பதை மறந்துவிடாதே. உலகத்தைப்பற்றி உனக்கு ஒன்றுமே தெரியாது. நீ சொல்லும் காரணத்தில் நியாயமிருந்தால் நானே உனக்கு உதவியாய் இருப்பேன் என்பதை மனதில் வைத்துக் கொள்" என்றார்.

"அது தெரியாதா, நயிந்தை. நீங்கள்தானே எங்களுக்குக் கண்கண்ட தெய்வம். உங்கள் அன்பு இல்லாவிட்டால் என் ஆத்தை செத்து ..." அவளால் பேசமுடியவில்லை. அழுகை கலந்த குரலில் "ஆனால் உங்களைக் கும்பிடுகிறேன், காரணம் கேட்கவேண்டாம். நான் அதைச் சொல்ல விரும்பவில்லை" என்றாள்.

முத்துப் பரியாரியார், "தெய்வி, உன் போக்கே எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. உனக்கு மனசுக்கு வருத்தமானல் சொல்லவேண்டாம். எல்லாம் காலம் வந்ததும் உன்னைக் கேட்டுக்கொண்டுதான் வரப்போகிறதா?" என்று கூறிய வண்ணம் அடி எடுத்துவைத்தார்.

'என்ன விசித்திரமான பெண்! பள்ளர் வகுப்பிலே பிறந்துவளர்ந்த இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு மனேதிடமும் வைராக்கிய சுபாவமும் எப்படி வந்தது' என்று யோசித்தவண்ணம் ஒழுங்கைவழியே போய்க்கொண்டிருந்தார். வழியிலே நின்ற வெள்ளத்தைக் கண்டதும், எல்லாவற்றையும் மறந்து குழந்தைபோல் தண்ணீரைக் கலக்கிக் கொண்டு நடக்கலானர்.

தூற்றலாய்ப் பெய்துகொண்டிருந்த மழை, ஏதோ வஞ்சம் தீர்ப்பது போல், பாட்டம் பாட்டமாய்ப் பெய்து, அடைமழையாய்ப் பொழிந்து தள்ளிவிட்டு, விறுக்கென்று போய்விட்டது. வானிலே கார் ஓட்டம் குறைந்து, சூரிய ஒளிவெள்ளம் பரவிக்கொண்டிருந்தது. வயல்களிலும் பனங்கூடல்களிலும் தேங்கி நின்ற வெள்ளம் வடிந்து புல் பூண்டுகள் முளைவிட்டுக்கொண்டிருந்தன. பரட்டைவற்றிப் போய்க் கிடந்த கடுகுநாவலும், காட்டு முல்லையும் இலை விடத் தொடங்கியிருந்தன. கொடிகள் காய்ந்து செத்துப் போன அடி வேரிலிருந்து தும்பங்கொடி அரும்புகள் வெளி வந்துகொண்டிருந்தன. கோடைகாலத்திலே மறைந்து போன கார்த்திகைச் செடிகள் புஷ்பிக்கத் தொடங்கி விட்டன. தெய்வியின் காய்கறித் தோட்டத்தில் பாவலும், கத்தரியும், தக்காளியும் பூத்துக் காய்த்து நின்றன. முளைக் கீரை, கொய்து சமைக்க வேண்டிய பருவத்தை அடைந்திருந்தது.

அன்று நாலு மைல் தூரத்தில் இருந்த சந்தைக்குத் தெய்வி காய்கறி கீரை வகைகளை ஒரு கடகத்திற் சுமந்து கொண்டு போயிருந்தாள். அவைகளை விற்று முடித்ததுந்

தான் மாலை ஏழு மணியாகப்போகிற தென்பதைக் கவனித்தாள். வியாபாரமே அன்று அவ்வளவு விறுவிறுப்பாக இல்லை. அவளுடன் பேச வேண்டுமென்று ஆசையினுற் பலர் வந்து காய்கறி விலை கேட்டார்களே யொழிய, வியாபாரம் சரிவர நடக்கவில்லை. அவசரமாய்த் தாய்க்கு வேண்டிய சில மருந்துகளையும், சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்களையும் வாங்கிக்கொண்டு அவள் புறப்படும் பொழுது, முருகன் ஒரு கடையில் நிற்பதைக் கவனித்தாள். அவன் தன்னைப் பார்க்குமுன் அவ்விடத்திலிருந்து போய் விட வேண்டுமென்ற எண்ணத்துடன் துரிதமாய் நடக்கத் தொடங்கினுள்.

முன்நிலாக் காலமாதலால் இன்னும் இருள் சூழவில்லை. மேலே கிளம்பிக்கொண்டிருந்த இளமதி, சரத்கால மேக மண்டலத்திலிருந்து ஒளியைக் கக்க முடியாமல் தத்தளித்துக்கொண்டிருந்தது. வீதிவழியாக வந்துகொண்டிருந்த தெய்வி பனங்கூடல் ஊடாகப் போகும் ஒழுங்கையில் இறங்கிப் போய்க்கொண்டிருந்தாள்.

அப்பொழுது பின்னுல் யாரோ ஓடிவருவது போன்ற ஓர் உணர்வு அவளுக்கு ஏற்பட்டது. சற்று நின்று திரும்பிப் பார்த்தாள். ஒன்றுமே தோன்றவில்லை. நல்லாய் ஊன்றி உற்று நோக்கினுள். எவரும் கண்ணுக்குப் புலப்படவில்லை. அவள் திரும்பி விரைவாய் நடந்து போய்க்கொண்டிருக்கையில், "தெய்வி!" என்று யாரோ கூப்பிடுவது கேட்டது. அவள் திகைத்துப்போய், "யார் அது?" என்று கேட்டுக் கொண்டே கூர்ந்து கவனித்தாள். முருகன் இளைக்க இளைக்க ஓடி வந்துகொண்டிருந்தான்.

"தெய்வி, இந்த நேரத்தில் தனிவழி போய்க்கொண்டிருக்கிருய்; உனக்குப் பயமாக இல்லையா?" என்று கேட்டான்.

அவள் திரும்பியும் பாராமல், "யாருக்குப் பயப்பட வேண்டும்? உன்னைப் பார்க்கத்தான் பயமாயிருக்கிறது!" என்றாள்.

"நான் என்ன பேயா, பிசாசா, அப்படி நீ பயப்பட? இல்லை, நீ இளம்பெண், தனிமையில் போகிறாயே?" என்று கேட்டான்.

"என்னைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். உன் வழியைப் பார்த்துக்கொண்டு நீ போ!" என்றாள்.

"பேச்சுத் துணையாக இருக்குமே என்று நினைத்தேன். இந்தா தெய்வி, நாக்கு வரண்டு போய் இருக்கும். இந்த 'பீடா' வெத்திலையைச் சாப்பிட்டுப் பார்" என்று சொல்லி எடுத்து நீட்டினான்.

"நீதான் சாப்பிடு, எனக்கு அது தின்று பழக்கமில்லை. வரும்பொழுது, காய்ப்பாக்குடன் நாட்டு வெத்திலையும் போட்டுக் கொண்டுதான் வந்தேன்" என்றாள்.

"சரி, அப்படியானால் வேண்டாம்."

இருவரும் ஒன்றுமே பேசாமல் நடந்து கொண்டிருந்தனர்.

"அதெல்லாம் இருக்கட்டும், தெய்வி, இன்று நான் உன்னிடம் ஒரு வார்த்தை கேட்க வேண்டுமென்றுதான் ஓடோடியும் வந்தேன். உன்னை வீரனுக்குக் கொடுக்க எல்லா ஏற்பாடும் நடந்துவருவதாகச் சேரியிலே பேச்சு நடக்கிறது. இது உண்மைதானா?" என்றான்.

"நீ யார் அதைக் கேட்க?" என்று சீறினாள்.

"எனக்கும் இதிற் பல நாட்களாய் ஒரு கண் இருப்பதால்தான் கேட்கிறேன்; நீயே என் மன நிலையை அறிந்திருந்தும் இப்படிப் பேசுகிறாய்."

"நான் சொல்ல என்ன இருக்கு? நீயும் மனசில் ஏதோ வைத்துக்கொண்டு அலைவதாகச் சேரியிலே பேச்சு நடக்கிறது. எலும்பில்லாத நாக்கினால் எதையும் பேசுவார்கள்.

என்னைப் பொறுத்த அளவில்......" மேலும் சொல்ல முடியாதவள் போல் நிறுத்திக்கொண்டாள். பின்னர், "உன்னை என் புருஷனாக நான் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை. உன்னை மாத்திரமென்ன, எவரையுமே ஏற்றுக் கொள்ள மாட்டேன்" என்றாள்.

"இப்ப அப்படித்தான் சொல்லுவாய். ஒரு நாளில்லா விட்டால் இன்னொரு நாள் நீ தனியள் என்பதை உணராமல் இருக்கப் போவதில்லை. அப்போ எவனையாவது ஒருவனைக் கட்டித்தானே ஆகவேண்டும்?"

"அப்படித்தான் என் மனசு மாறினால், உனக்கென்ன?"

"எனக்கென்னவா? எனக்கென்னவென்று கேட்கிறாய்?" என்று அவன் உரத்துக் கேட்கும்பொழுது, அவனிடத்திலிருந்து கள் நாற்றம் அடித்தது.

அவளை நெருங்கி, "நான் உயிருடன் இருக்கும் வரையில் உன்னைத் தொடுகிறவனை நானும் பார்க்கத்தான் போகிறேன்" என்று கறுவினான், அவளை உறுத்துப்பார்த்து.

"என்னைத் தொட, உனக்கு என்ன உரிமை இருக்கிறது?" என்று கேட்டாள்.

"என்ன உரிமையா?" என்று வெறிகொண்டவன் போல் ஆவேசத்துடன் கத்திக்கொண்டு பாய்ந்து, அவள் கையைப் பிடித்தான். திடீரென்று எதிர்ப்புறத்திலிருந்து, "யாரடா அவன்?" என்று கூவிக்கொண்டு யாரோ ஓடி வந்து, அவன் கைகளைப் பற்றி இழுக்கவே, முருகன் திரும்பிப் பார்த்தான். வீரன் அனல் கக்கும் கொடூரப் பார்வையுடன் முறைத்து நோக்கிக்கொண்டு நின்றான்.

"ஓகோ! நீயா?" என்று சொல்லிக் கொண்டே "எட்ரா கையை!" என்று கூச்சலுடன், ஓங்கி வீரனின் கன்னத்தில் ஓர் அறை வைத்துவிட்டான். குண்டுபட்ட புலிபோல் வீரன் அவன் மேற் பாய்ந்து, பிடரியின்மேல் குத்தினான். பதிலுக்கு முருகன் எதிரியின் முகவாய்க்கட்டிலே

பலங்கொண்டமட்டும் ஒரு குத்துக் கொடுத்தான். வீரன் சமாளித்துக்கொண்டு எதிரியின் பின்புறமாக வந்து, அவன் கால்களுக்கிடையிலே தன் காலைக் கொடுத்து, அவனைக் குப்புற வீழ்த்தினான். இருவரும் ஒருவரை யொருவர் அமுக்கிக்கொண்டு புரண்டார்கள்.

எதிர்பாராமல் மின்வேகத்துடன் வந்து தாக்கிய இந்த அதிர்ச்சியால் தெய்வி ஒடுங்கிப் போனாள். வாய் அடைத்து அவர்களையே நடுக்கத்துடன் பார்த்துக்கொண்டு நின்றாள்.

முருகன் தன் பலங்கொண்ட மட்டும் வீரன் கழுத்தில் கையை வைத்து நெரித்துக்கொண்டு, தலையைப் பூமியுடன் சேர்த்து மோதினான். அவன் திமிறிக்கொண்டு சாதுர்யமாய் முருகனைக் கீழே வீழ்த்தி அவன்மேல் ஏறியிருந்துகொண்டு, கையை ஓங்கி விசையுடன் மூக்கிலும் நெஞ்சிலும் குத்து விட்டான். முருகன் அப்படியே சாய்ந்துபோனான். அவன் மூக்கிலிருந்து இரத்தம் பெருக்கெடுத்தோடியது.

"சனியனே, தொலைந்துபோ!" என்று சொல்லிக் கொண்டு வீரன் எழுந்துவந்து பார்த்தான். தூரத்தில் வழிப் போக்கர் யாரோ வருவதுபோல் இருந்தது. "தெய்வி, இங்கே நாம் இனியும் நிற்பது புத்தியில்லை. கொஞ்சம் எட்டிநட" என்று சொல்லிய வண்ணம் முன்னே நடந்தான். தெய்வி சூத்திரப்பாவை போல் இயங்கத் தொடங்கினாள்.

அப்பொழுது, நிலா, தன் அற்பகால வாழ்வு முடிந்து, மேற்கு வாயிலில் வீழ்ந்து கொண்டிருந்தது. பனிப்படலம் வந்து கவிந்து காரிருள் சூழ்ந்துகொண்டு வந்தது. பழகிய பாதைவழியாற் கஷ்டமில்லாமல் இருவரும் போய்க்கொண்டிருந்தார்கள். ஒரு வார்த்தை தானும் அவர்கள் பேசவில்லை.

அவர்கள் சேரியை அடைந்தபொழுது ஒழுங்கைகளில் மக்கள் நடமாட்டமே இல்லை. பள்ள சேரியே நேரத்துடன் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டது. நாய்கள் ஒன்றன் பின்

ஒன்ருய் ஓலமிட்டவண்ணமிருந்தன. தூரத்திலே, எவனே குடிவெறியிலே குரல் எடுத்துப் பாடிக்கொண்டு தனிவழி போய்க்கொண்டிருந்தான் ......

பிரியும்பொழுது, "சரி, நேரமாகிறது தெய்வி, போய்த் தூங்கு; நான் நாளை வருவதாக ஆத்தையிடம் சொல்லு" என்று கூறிவிட்டு வீரன் போனுன். தெய்வி தன் குடிசையை அடைந்ததும் அவள் தாய், "பார்த்துப் பார்த்துக் கண்ணும் பூத்துப்போச்சு, குமர்ப்பிள்ளை, இத்தனை நேரம் இருட்டிலே தன்னந்தனியா வாறதென்ருல் ......... ஏன் தெய்வி, எங்க வீரனிடம் சொல்லி அனுப்பினேன். அவனைக் கண்டியா ?" என்று படுக்கையிற் கிடந்தபடி கேட்டாள்.

"வந்தான் ஆத்தா; நீ சாப்பிட்டியா ? எனக்கு ஒரே தலைவலியாய் இருக்கு. நீ தூங்கு, எனக்கு ஒன்றுமே வேண்டாம், நான் படுக்கப் போறேன்" என்று சொல்லிய வண்ணம் கடகத்தை ஒரு மூலையில் வைத்துவிட்டுப் படுக்கையை எடுத்து விரித்தாள்.

"என்னவோ, அந்த அண்ணமார்தான் கண் திறக்க வேணும். வீரனும் உன்மேல் உசிராயிருக்கிருன்."

"சரி ஆத்தை, நீ பேசாமல் தூங்கு. எல்லாம் காலையில் பேசிக்கொள்ளலாம்" என்று படுக்கையில் வீழ்ந்து விட்டாள்.

எவ்வளவுக்கு உடல் அயர்ச்சியும் மனச்சோர்வும் தூக்கத்தை எதிர்பார்த்திருந்த போதிலும், அவள் மனசு ஒடுங்க மறுத்துவிட்டது. அன்று நடந்த சம்பவங்கள் மீண்டும் மீண்டும் அவள் மனசில் தோன்றிப் பலவித உணர்ச்சிகள் பெருகத் தொடங்கின. "வீரன் இன்று வந்திரா விட்டால் என்ன நேர்ந்திருக்கும் ...... எப்படியிருந்தாலும், நான் முருகனுடன் அப்படிப் பேசியிருக்க வேண்டாம் ...... வீரன் ஏன் அந்தச் சமயத்தில் வந்தான் ... அப்படி ! என்ன குரூரமான சண்டை ! ......

பலமணி நேரமாய் இந்தச் சிந்தனைச் சங்கிலியிற் சிக்கி நித்திரையே வராமற் புரண்டு கொண்டிருந்தாள். விழிப்பும் அயர்வும் கலந்த நிலையில் எத்தனையோ பயங்கரமான எண்ணங்கள் அவளை வந்து நடுங்கச் செய்தன. "முருகன் குடிசைக்கு வந்தானோ? ......... அல்லது வரவில்லையோ? அவனைக் கிடந்த இடத்தில் விட்டுவிட்டு வந்தோமே? ...... சீ! என்ன கொடுமை! ...... ஒருவேளை ...... ஒருவேளை......" என்று ஒரு எண்ண அலை வந்து மோதியதோ இல்லையோ, அவள் உடல் எல்லாம் பயத்தினுற் குளிரத் தொடங்கியது; மேனி நடுக்கம் எடுத்தது. மனம் நிலைகொள்ளாமல் தத்தளித்தது. யாருக்காவது சொல்லி அழவேண்டும்போல் இருந்தது. உடனே படுக்கையை விட்டு வெளியே வந்து, முத்துப் பரியாரியார் குடிசையை நோக்கி ஓடினுள். அவள் கூப்பிடுவதைக் கேட்டுக் கண் விழித்துக்கொண்ட பரியாரி யார் பரபரப்புடன், "ஏன் தெய்வி, உன் ஆத்தைக்கு ஏதாவது? ..." என்று தொடங்கினுர்.

"இல்லை நயிந்தை, அதல்ல ......"

"அப்படியானுல், இந்நேரத்தில் எங்கே கிளம்பினுய்?"

"உங்களைத்தான் காண வந்தேன்" என்று சொல்லி, அன்றிரவு நடந்தவைகள் முழுவதையும் ஒன்றும் ஒளிக் காமல் அவரிடம் சொன்னுள்.

"இப்போ, என்னை என்ன செய்யச் சொல்கிருய்?"

"ஒருக்கா, என்னுடன் அவன் குடிசைக்கு வந்து, பார்த்து வரவேணும், நயிந்தை."

முத்துப் பரியாரியார் விபூதியை எடுத்து நெற்றி நிறை யப் பூசிக்கொண்டார். ஒரு துண்டை எடுத்துத் தலையில் முண்டாசாகக் கட்டினுர். ஒரு சால்வையை எடுத்து அரை யில் வரிந்து கட்டிக்கொண்டார். ஒரு துவாயை எடுத்து ஒற்றைத் தோளிற் போட்டுக்கொண்டு வெளியில் வந்தார்.

மருந்துப் பெட்டியைத் திறந்து ஒருமுறை பார்த்துவிட்டு, அதை மூடித் தம் கக்கத்துக்குள் வைத்துக்கொண்டு, தெய்வி பின்தொடரக் கிளம்பிவிட்டார்.

படலைத் திறந்துகொண்டு இருவரும் குடிசையுள் நுழைந்து பார்த்தனர். ஒரு கைவிளக்கு மினுங்கிக்கொண்டிருந்தது. படுக்கையில் எவரையும் காணவில்லை. தெய்வியின் நெஞ்சு நின்று விடும்போல அடித்துக்கொண்டது. பரியாரியார் கட்டிலுக்கப்பால் ஒரு ஒதுக்கை எட்டிப் பார்த்தார். அனுங்கிக்கொண்டு படுக்கையிற் புரண்டு கொண்டிருந்தான் முருகன். அரவங் கேட்டுத் தன் கண்களை விழித்துப் பார்த்தான். முன்னுற் பரியாரியாரும் தெய்வியும் நின்ருர்கள். அவன் தன் கண்களை நம்பாமல், மீண்டும் துடைத்துப் பார்த்துக்கொண்டான். ஆச்சரியமாயிருந்தது!

முத்துப் பரியாரியார் அவனுடைய காயங்களைப் பார்த்து முதலில் ஒரு தைலத்தை எடுத்துத் தடவிவிட்டு, ஏதோ மருந்துகளை வைத்துக் கட்டினுர். தெய்வி கொஞ்சம் தைரியத்துடன், "இப்ப நோ எப்படி இருக்கு? குறைந்திருக்கிறதா?" என்று கேட்டாள். முருகன் அவளை மிகவும் வாஞ்சையுடன் பார்த்துக்கொண்டே, "பனைமரம் ஏறி ஏறி வைரம் பாய்ந்திருக்கும் இந்த உடம்பில் வலி ஏது தெய்வி? மனந்தான் நொந்துபோய்க் கிடக்கிறது. இச்சை வெறியிலே மிருகம்போல் நடந்துகொண்டேன், மனசுக்கு எடுக்காதே" என்ருன்.

"ஆனுல், நானும் அப்படியெல்லாம் துடுக்காய்ப் பேசியிருக்கவே கூடாது, முருகா."

முருகன் சற்று வியப்புடன், "நானும் அப்படிப் பேசி, உன்னைத் தூண்டியிருக்கவே கூடாது."

"அச்சமயத்தில் வீரனும் வந்து ..."

உடனே முருகன் இடைமறித்து, "அவன் வந்தது நல்லதாய்ப்போச்சு. அடி வீழ்ந்ததும்தான் வெறி முறிந்து, என் மனசும் தெளிவு பெற்றது."

" அதற்கு இப்படியும் அடிப்பார்களா? அடித்த அடியில் ஏதாவது எக்கச்சக்கமாய் நடந்துபோனுல் ......"

" நான் இறந்துதான் போனுல் யாருக்கென்ன தெய்வி? நான் ஒரு தனிமரம்" என்று கையை விரித்தபொழுது அவன் குரல் தழதழத்தது. " நீ, போ தெய்வி, பரியாரி ஐயா வாசலிற் காத்துக்கொண்டு நிற்கிருர். விடியப் போகிறது" என்ருன்.

தெய்வி வாசலை நோக்கிப் போய்த் தயங்கினுள். திடீ ரென்று திரும்பி ஓடிவந்து, அவன் கால்களைக் கட்டிக் கொண்டு, " என்னுற் பொறுக்க முடியவில்லை, முருகு, நீ இப்படிப் பேசுவதை என்னுல் தாங்கமுடியவில்லை" என்று கதறினுள்.

முருகன் ஆச்சரியத்தினுற் கல்லாய்ச் சமைந்துபோனுன். அவனுடைய கண்களிலே பேருணர்ச்சியுடன் கூடிய உஷ்ணக் கண்ணீர் நிறைந்துகொண்டிருந்தது.

" நான் சொல்வதைக் கொஞ்சம் கேள். என் ஆத்தை வாழ்க்கையிற் கண்டது அடியும் உதையும்தான். என் அப்பன் தினமும் குடித்துவிட்டு இரவு சாமங்கழித்து வந்து என் தாயை அடித்து உதைத்த நாட்கள் இன்னும் என நினைவில் இருக்கின்றன. அவள் எதிர்த்து ஒரு சொல் பேச மாட்டாள், எவருக்கும் சொல்லமாட்டாள், எதையும் சகித்துவந்தாள். அப்போ பிடித்த நோய் அவளை இன்றும் தான் அரித்துத் தின்றுகொண்டு வருகிறது. என் இள நெஞ்சிலே பட்ட இந்தச் சூடு ஆறவில்லை. அந்தப் பயங்கர மான இரவுகளை நினைத்து நடுங்குவேன். ஆண்களையே வெறுக்கத் தொடங்கினேன்."

முருகன் ஒன்றுமே விளங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவனையும் அறியாமல் அவன் கரம் அவள் தலையைத் தடவிக் கொண்டிருந்தது.

" இதனால்தான் நான் எவரையும் கட்டிக்கொள்வதில்லை யென்று மனசிற் சபதஞ் செய்துகொண்டேன். ஆனால், என்னையும் மீறி உன்மேல் என் நெஞ்சம் சுரந்துகொண் டிருந்தது. அது பெருக்கெடுக்காமல் அணைபோடவே நான் உன்னை அலட்சியமாய், துடுக்காய், எறிந்து பேசிவந்தேன். இனி, எல்லை மீறிவிட்டது; என் இருதயம் தாங்காது, முருகு" என்று விம்மிப் பொருமினாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு நின்ற முத்துப் பரியாரியார் இளம் உள்ளங்களின் விசித்திரமான மனப்போக்கை அறியமுடியாது திகைத்துப் போனார்.

அருள்
செல்வநாயகம்

# அம்மன் அருள்

மாரிகாலம்; மார்கழி மாதம்; வழமைபோல் அடை மழை. ஆனால், மழை சோனாவாரியாகக் கொட்டிக் கொண்டே இருந்தது. கிழக்கு ஈழமே மாரிகாலத்தில் வழமைபோலக் காணாத பெருமழை. அமைதியாக உறங்கிக் கொண்டிருந்த மட்டக்களப்பு வாயிலிலே ஒரு பரபரப்பு. முப்பது கல் தொலைவு நீண்டு பரந்த மட்டக்களப்பு வாவி யிலே பயங்கரமான கொந்தளிப்பு. மட்டக்களப்பு வாவியின் நீர் மட்டம் படிப்படியாக உயர்ந்துகொண்டே யிருந்தது. அதன்பயனாக மட்டக்களப்பு வாவியிலே சுரந்த மழை வெள்ள நீர் தடம்புரண்டு ஓடலாயிற்று.

மட்டக்களப்பு வாவிக்கரையிலே இருந்த மாரி அம்மன் கோயிலைத் தொட்டாற்போல் வெள்ள நீர் ஓடலாயிற்று. மக்கள் துயர்தீர்க்கும் மாரி அம்மன், மண்டூர்க் கோட்டை முனைக் கிராமத்துக் கரையிலே தடம்புரண்டோடும் வெள் ளத்தைப் பார்த்தவாறு அமைதியாகவே கொலு வீற் றிருந்தாள்.

வெள்ளம் மாரி அம்மன் கோயிலினுள் புகுந்துவிடுமோ என்ற அச்சம் அர்ச்சகருக்கு. ஆகவே, அவசரம் அவசர மாகப் பூசையை முடித்துக்கொண்டு பிரசாதத் தட்டுடன் வெளி மண்டபத்தினுக்கு வந்தார்.

மழை சோனாமாரியாகப் பெய்துகொண்டிருந்தது. மட்டக்களப்பு வாவியிலே வெள்ளம் பெருக்கெடுத்துப் பரவு கிறது. எங்கும் வெள்ள நீர் புகுந்துகொண்டிருக்கிறது.

இந்த நிலையில் யார்தான் இப்பொழுது கோயிலுக்கு வரப் போகிறார்களென்ற நினைப்பு அர்ச்சகருக்கு. இருந்தாலும், முதியவரான நாகலிங்கம் மட்டும் கண்ணீர் சொரியத் தன்னை மறந்து வழிபட்டுக்கொண்டு நின்றார்.

அர்ச்சகர் வழமையாகத் தினமும் காணும் காட்சிதான் அது. எத்தனையோ ஆண்டுகளாக முதியவர் நாகலிங் கத்தை நாள் தவறாமல் மாரி அம்மன் சன்னதியில் பார்த்து வருகிறார். அர்ச்சகர் வழக்கம்போல் அவருக்குப் பக்கத் திலே பிரசாதத்தை வைத்துவிட்டு உட்கோயில் கதவைப் பூட்டிக்கொண்டு வெளியேறினார். மாரி அம்மன் கோயில் அர்ச்சகருக்கு அவர் வேதனை! பெரியவரான நாகலிங்கத்துக்கு அவர் வேதனை! எல்லார்க்கும் அவரவர் வேதனை! இந்தப் பரந்த உலகில் வேதனையே இல்லாத மனிதன்தான் யார்?

பஞ்சடைந்த கோலம்! தலைமுழுதும் வெண்மயிர். நீண்டு வளர்ந்த வெண்ணிறத் தாடி. இடையிலே இரண் டாக மடித்துக்கட்டிய ஓர் எட்டுமுழ வேட்டி. தோளினுக் குரிய துண்டு இடுப்பிலே. இரண்டு தலைமுறைகளைப் பார்த்துவிட்ட முதுமைக் கோலமானாலும், கைத்தடியின்றி நடக்கும் தெம்பு. இருந்தாலும், தளர்ந்துபோன முதுமைக் கோலம்.

இவ்வாறு தோன்றும் நாகலிங்கம் ஏழையல்ல! பரம் பரைப் பணக்காரக் குடும்பத்திலேதான் நாகலிங்கம் பிறந் தார். அதிலும் பெற்றவர்களுக்கு ஒரேயொரு மகனாகப் பிறந்ததனால் திரண்ட சொத்தினுக்கு ஏகவாரிசானார் நாக லிங்கம்.

இளமைப் பருவத்திலே மனைவியை இழந்த நாகலிங்கம் மறுமணம் செய்துகொள்ளவேயில்லை. ஒரே பேறான தனது செல்வமகளை வளர்ப்பதிலே காலமனைத்தையும் செல

விட்டார். அதன்பயனுகப் பொல்லாத மதுவிடம் தஞ்சம் புகுந்தார். நாகலிங்கத்தின் இளமைக்காலம் அனைத்தையும் மது ஆக்கிரமித்துக்கொண்டது.

நாகலிங்கம் மதுவுக்கே அடிமையாகிச் சதா குடித்தே அழிப்பதாக இருந்தாலும், அவரது சொத்துக்கள் கரைந்து விடாது. பல தலைமுறைகளுக்குப் போதுமானதாக அவரது சொத்துக்கள் பரவிக்கிடந்தன.

மானத்தைச் சதா பழித்துக் கொண்டிருக்கும் மாருத வடுவுக்கு மருந்தாகத்தான் நாகலிங்கம் மதுக்குடிக்கத் தொடங்கினுர். கிராமத்திலே தலைகாட்ட முடியாத அவமானம். வெளியிலே நடமாடமுடியாத வெட்கக்கேடு; ஆதலினுல் குடியோடு ஐக்கியப்பட்டுச் சதா வீட்டிலே முடங்கிக்கிடந்தார் நாகலிங்கம். அதிற்ருன் நாகலிங்கம் ஓரளவு அமைதி கண்டார். ஆறுதல் அடைந்தார்.

கால நீரோட்டத்தின் தாமதியாத விரைவின் பயனுகத் தான் நாகலிங்கம் சமூகத்தைப் புரிந்துகொண்டார். முதுமைக் காலத்திற்ருன் உலகத்தை அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. ஆகவே நாகலிங்கம் குடியை மறந்தார்.

பருவத்தின் எழிற்கோலத்திலே மணம் பரப்பிநின்ருள் பேத்தி மரகதம். ஒரேபேருன மகளின் புதல்வியான மரகதத்தினுக்கு வாழ்வு அளிக்கமுடியாது போயிற்றே என்று வருந்தினுர் நாகலிங்கம். அதன் பயனுகத்தான் மண்டூர்க் கோட்டைமுனையில் அருளோடு குடிகொண்டிருக்கும் மாரி அம்மனைமட்டும் நம்பித் தினமும் வழிபட்டுக்கொண்டு வந்தார்.

நாள் தவறினுலும் முதியவரான நாகலிங்கம் மாரி அம்மன் கோயிலினுக்குச் சென்று வழிபடத் தவறவே மாட்டார். சமூகமே ஒதுக்கிவைத்துத் தந்த பழியை மாரி அம்மனுற்ருன் இனித் தீர்க்கமுடியு மென்பது நாகலிங்கத்தின் அசையாத நம்பிக்கை. தள்ளாடித் தளர்ந்த

முதுமைக் கோலத்திலும் மாரி அம்மனை வழிபட்டுத் தன் குறையை வாய்விட்டே கூறி, அழுது கண்ணீர் சொரிவார் நாகலிங்கம்.

"குறை இரந்து வேண்டுபவர்களுடைய குறையை யெல்லாம் தீர்க்கும் மாரி அம்மனே! என்குறை யைத் தீர்க்கமாட்டாயா? என் பேத்திக்கு வாழ் வளிக்க உலகமாதாவாகிய உன்னுற்றுன் முடியும். இந்த ஏழைக்கு இரங்கு தாயே! இரங்கு மாரி அம்மனே!"

என்று மாரி அம்மன் சன்னதியில் நின்று கண்ணீர் சோர வாய்விட்டே சொல்லி அழுவார் நாகலிங்கம்.

பருவத்தில் வண்ணப் பூச்சிலே எழிலாக நிற்கும் மரகதத் தினுக்குத் திருமணம் செய்ய முனைந்து மண்டூர்க் கோட்டை முனைக்கிராமத்திலே தோல்விகண்டார் நாகலிங்கம். அயல் கிராமங்களிலும் ஒருவருக்குப்பின் ஒருவர் என்ற வகையிலே எத்தனையோ வரன்களைப் பார்த்தார். முடிவிலே அனைத்தும் கைக்கெட்டியும் வாய்க்கெட்டாததாகவே போயிற்று. திரண்ட தனது பணத்தினுற்கூட மரகதத்தினுக்குத் திரும ணம் செய்துவைக்க முடியாது போயிற்று நாகலிங்கத்தால். இயன்றளவும் முயன்று வரன் தேடுவதில் தோல்வி கண்ட நாகலிங்கம், பாரத்தை மாரி அம்மன்மீது போட்டார். அடிய வர்களுக்கு அருள் சுரக்கும் மாரி அம்மனது அருளினை நாடினுர் நாகலிங்கம். மாரி அம்மன்மீது அளவிடமுடியாத நம்பிக்கை வைத்ததனுற்றுன், நாள்தவருது அம்மனை வழி பட்டுக் குறையைத் தீர்த்து வைக்கும்படி வேண்டுவார். கருணையே உருவான மாரி அம்மன் எத்தனையோ பேர் களுக்கு அருள் சுரக்கும்போது, இன்னும் அவள் நாகலிங் கத்தினுக்கு அருளைச் சுரக்கவேயில்லை.

தனது மனக்குறையை மாரி அம்மனிடம் கண்ணீர் சொரிய நாகலிங்கம் முறையிட்டுக் கொண்டிருக்கும் போது கோயிலினுள் நுழைந்த துறவியான அவர் கேட்டார்.

ஒருதடவையல்ல! பலதடவைகள் நாகலிங்கம் வாய் விட்டு அம்மனிடம் அழுத அவலக்குரலைக் கேட்ட துறவி தன்னையறியாமலே கண்ணீர் சிந்தினார்.

தன்னுடைய ஏக்கக் குரலினுக்கு இன்னொரு மனிதக் குரல் கண்ணீர்விட்டுக் கொண்டிருப்பதை வெளியே வந்த நாகலிங்கம் பார்த்தார். காவி ஆடைபுனைந்து சடாமுடி தரித்திருந்த துறவியை நாகலிங்கம் உற்றுப் பார்த்தார். எங்கோ பார்த்த முகமாக இருக்கிறதேயென்று நன்றாக உற்றுப்பார்த்தார். முற்றுத் துறந்தவராயிற்றே என்றதனால் கைஎடுத்து வணங்கிவிட்டு, தனது வீட்டினை நோக்கி நடந்தார்.

நாகலிங்கம் தள்ளாடியவாறு செல்லும் கோலத்தைப் பார்த்த துறவியின் உடம்பு நடுங்கியது. அப்படியே கோயில் மண்டபத்திலே சாய்ந்துவிட்டார். அவரது கண்களிலிருந்து கண்ணீர் பெருகி ஓடலாயிற்று.

கிழக்கு ஈழத்தின் தலைநகர் மட்டக்களப்பு. தலைநகரான மட்டக்களப்பினைச் சுற்றி வாவி பரந்து கிடப்பதனால், நகரப் பெயருடன் வாவி என்னும் பெயர் இணைந்து மட்டக்களப்பு வாவி என்று வழக்காகிவிட்டது.

மட்டக்களப்பு வாவியின் மேற்குக் கரையில் அமைந்த அழகிய ஊர் மண்டூர்க் கோட்டைமுனை. திரும்பிய பக்க மெல்லாம் பச்சைப் பசேலென்ற பசுமையான வயல்வெளி கள். உழுதுண்டு வாழ்வதிலே பரம்பரையாக இன்பம் கண்டவர்கள் மண்டூர்க் கோட்டை முனைக் கிராமத்து மக்கள்.

பல்லாயிரக்கணக்கான மக்கள் வாழும் மண்டூர்ப்பகுதி யின் கேந்திரஸ்தானமாக மண்டூர்க் கோட்டைமுனை துலங் கியது. ஆகவே மண்டூர்க்கோட்டைமுனையில் ஒரு கல்லூரி நிறுவப்பட வேண்டுமென்று மக்கள் அரசாங்கத்தைக் கோரி னார்கள். அக்கோரிக்கையின் பயனாக மண்டூர்க் கோட்டை

முனையில் ஒரு கல்லூரி திறக்கக் கல்வி இலாகா தீர்மானித்தது. அதன் பயனாகக் கிழக்குப் பிராந்தியக் கல்வி அதிகாரி கல்லூரி அமைப்பதற்கான காணியினைப் பார்வையிட வந்தார்.

மண்டூர்க் கோட்டையிலுள்ள பகிரங்க வீதியிலே உள்ள பல காணிகளைக் கல்வி அதிகாரி பார்வையிட்டார். அவைகள் அவருக்கு ஏற்புடையதாக இருக்கவில்லை. இறுதியாக நாகலிங்கத்தின் வீட்டினுக்கு அருகாக இருந்த காணி கல்லூரி அமைப்பதற்கு ஏற்றதாகக் கல்வி அதிகாரிக்குத் தோன்றியது.

பற்றைக் காடுகள் மண்டிக்கிடந்த அந்தப்பெரும் நிலப் பரப்புக் காணியைத் தந்துதவும்படி கல்வி அதிகாரி நாகலிங்கத்தைக்கண்டு நேரடியாகவே கேட்டார்.

வழமையான விலையைக் காட்டிலும், அதிகமான விலையென்றாலும், கொடுத்துக் காணியைக் குழந்தைகளின் நன்மைக்காக வாங்கிக் கல்லூரி நிறுவப் போவதாகத் தெரிவித்தார், கல்வி அதிகாரி.

பெரும் தனவந்தரான நாகலிங்கம், கிராமத்துக் குழந்தைகளின் உயர்கல்வியினை முன்னிட்டுக் கல்வி அதிகாரி கேட்ட காணியினைக் கொடுத்தார். பணம் பெறுமல் நன்கொடையாகவே நாகலிங்கம் காணியினைக் கையளித்தார். நாகலிங்கத்தின் வள்ளல் தன்மையை வெகுவாகப் பாராட்டி மகிழ்ந்தார் கல்வி அதிகாரி.

நிலம் கிடைத்த கையுடனே கல்வி அதிகாரி நடவடிக்கைகளைத் துரிதமாகவே மேற்கொண்டார். கல்லூரிக்கான கட்டிடங்கள் அமைக்கும் ஒப்பந்தம் கான்ட்ராக்டருடன் தயாராகியது.

கல்லூரிக் கட்டிடங்கள் அமைப்பதை மேற்பார்வை செய்யும் ஓவர்சியராக மாணிக்கத்தைக் கல்வி அதிகாரி நியமித்தார்.

கட்டிளங்காளையான மாணிக்கம் கல்வி இலாகாவின் கட்டிட ஓவர்சியராகப் பதவியேற்றவுடன் கையேற்ற முதலாவது வேலைத்திட்டம், மண்டூர்க் கோட்டை முனைக் கல்லூரிக் கட்டிட வேலையாகும்.

ஓவர்சியர் மாணிக்கம் உல்லாசப் பேர்வழி. சதா மடிப் புக்கலையாத ஆடைகள். வாலிபத்தின் முறுக்கல்லவா? அதற்கான அரும்பு மீசை. களைசொட்டும் அவனது சிவந்த முகத்தினுக்குக் கருமையான அரும்புமீசை தனியோர் வசீகரத்தைக் கொடுத்தது.

செக்கச் சிவந்த மாணிக்கத்தின் மேனிக்கு அலை அலையாகச் சுருண்ட கிராப்பு தனியோர் கவர்ச்சியைக் கொடுத்தது. கடமையைக் கையேற்கவந்த மாணிக்கத்தை நாகலிங்கம் அன்புடன் வரவேற்றார். அவனுக்காகத் தன் வீட்டின் முன் அறைகளிலொன்றை ஒழித்துக் கொடுத்தார். தங்குவதற்கு இடம் கொடுத்த நாகலிங்கம் வேளைக்கு உணவு கொடுக்காது விடுவாரா?

நாகலிங்கத்தின் வீட்டிலே விருந்துச்சாப்பாட்டைத் தினமும் சுவைத்துக் கொண்டு கடமை பார்த்து வந்த மாணிக்கத்தினுக்கு வீட்டிலே வளைய வந்து கொண்டிருந்த சுந்தரி பெரும் விருந்தானாள்.

சுந்தரி என்ற பெயருக் கேற்பவே சௌந்தரவதியாக விளங்கினாள் சுந்தரி. சுகபோக வாழ்வும், செல்வச்சிறப்பும் குற்றமே காணமுடியாத சுந்தரியின் அழகினுக்கு மெருகு கூட்டியது.

நாகலிங்கத்தின் திரண்ட சொத்துக்காகவல்ல; சுந்தரியின் சௌந்தர அழகினுக்காக அவளை அடைய எத்தனையோ வாலிபர்கள் துடித்துக் கொண்டு நின்றார்கள்.

எந்தச் சீதனமும் வேண்டாம். சுந்தரியை மட்டும் தந்தாற் போதுமென்று பலர் ஒற்றைக்காலில் நிற்கவும் செய்தார்கள்.

மனைவி மறைந்தவுடன், மகளை வளர்ப்பதிலே தன் வாழ்க்கையைச் செலவிட்ட நாகலிங்கம், சுந்தரி கண் கலங்கப் பொறுக்க மாட்டார். அத்தனை அன்பாகச் சுந்தரியைத் தாலாட்டி வளர்த்தார் நாகலிங்கம். சுந்தரியைப் பற்றிப் பலமான திட்டங்களும் தீட்டியிருந்தார் நாகலிங்கம்.

தனது திட்டங்களைச் செயலாக்க நாகலிங்கம் தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார். நாகலிங்கம் தேர்ந்தெடுத்திருந்த மாப்பிள்ளை இலங்கைப் பல்கலைக் கழகத்தில் வைத்தியப் படிப்பை முடித்துக்கொண்டு விசேஷ பட்டம் பெறுவதற்காக இங்கிலாந்து சென்றிருந்தான். இங்கிலாந்திலே கல்வியை முடித்துக்கொண்டு ஊர் திரும்ப இன்னும் ஒரே வருடம் மட்டும் இருந்தது.

இங்கில்ராந்தில் மாப்பிள்ளை படிக்கும் அத்தனை செலவையும் நாகலிங்கமே ஏற்றுக் கொண்டிருந்தார். இன்னும் ஒரு வருடந்தான். பின்னர், மாப்பிள்ளை வந்துவிடுவான். மண்டூர்க் கோட்டைமுனைக் கிராமமே வியக்கத்தக்கதாகத் திருமண விழாவை நடத்தவும் நாகலிங்கம் திட்டம் தீட்டியிருந்தார்.

நாகலிங்கம் நினைத்துத் தீட்டிய திட்டமொன்று; நடந்த திட்டமோ வேறொன்று.

சுந்தரியின் மோகன எழில் மாணிக்கத்தைக் காந்தம் போல் கவர்ந்து இழுத்தது. அதேபோல் மாணிக்கத்தின் வசீகரமான தோற்றம் சுந்தரியைக் கவர்ந்து இழுத்தது. இருவரும் காதல் வயப்பட்டார்கள்.

பருவத்தின் பண்பிலே, வாலிப மயக்கத்திலே, காதல் என்னும் சக்தியிலே மாணிக்கமும் சுந்தரியும் இணைந்தார்கள். உள்ளத்தால் மட்டுமல்ல; உடலாலும் இணைந்தார்கள். இன்பமயமான அந்த இணைப்பு விபரீதத்தில் முடிந்தது. சுந்தரி இன்னோர் உயிரைச் சுமக்கலானாள்.

நிலைமையை நாகலிங்கம் அறிந்தபோது வெகுண்டெழுந்தார். நாகலிங்கத்தின் செல்வப் பெருக்கையும், செல்வாக்கையும் அறிந்திருந்த மாணிக்கம், தன்னை உயிருடனே சமாதி வைத்து விடுவாரென்ற பயத்தினால் இரவோடிரவாக ஊரைத் துறந்து ஓடினான். உத்தியோகத்தையும் உதறித் தள்ளிவிட்டு பிறந்த ஊரையும் துறந்து மாணிக்கம் ஓடினான்.

மகளின் நிலைமையினை அறிந்த நாகலிங்கம் கலங்கினார். குடும்ப கௌரவத்தினுக்கே களங்கத்தைத் தேடிவிட்டாளென்று அவர் சீறிச் சினக்கவில்லை. அரவணைத்தே உண்மையினைக் கேட்டறிந்தார்.

நடந்தது நடந்துவிட்டது. கறந்த பால் முலையில் ஒரு போதும் ஏருதே! ஆகவே, கலங்கித்தான் ஆகப்போவது எதுவுமில்லையெனக் கண்ட நாகலிங்கம், குடும்ப கௌரவத்தைக் காக்க மாணிக்கத்தையே மருமகனாக்கிக் கொள்ளத் தீர்மானித்தார்.

மாணிக்கத்தைத் தேடினார், தேடினார், ஈழமெங்குமே தேடினார்! மாணிக்கம் கிடைக்கவேயில்லை.

ஊர்வாயை உலைவாயால் மூடமுடியுமா? சுந்தரியைப் பற்றிய வதந்தி காட்டுத் தீபோல் ஊரெங்கும் பரந்தது. மண்டூர்க் கோட்டைமுனையைக் கடந்தும் பரவியது. குடும்பப் பழிக்கு அஞ்சி நாகலிங்கம் நடைப்பிணமானார். எங்கும் வெளியே செல்லாமல், வீட்டிலே அடைபட்டுக் கிடந்தார்.

தந்தையின் நிலையினைக் கண்ட சுந்தரி கலங்கினாள். கண்ணீர் விட்டுக் கதறினாள். எத்தனையோ தடவைகள் உயிரைப் போக்கிக் கொள்ளவும் முனைந்தாள். அதனால் இன்னும் பழி தந்தையை வாட்டுமெனக் கருதித் தற்கொலை செய்யும் எண்ணத்தைக் கைவிட்டாள். தன் வயிற்றிலே வளர்ந்துகொண்டு வரும் சிசுவுக்காக உயிரைக் கையில்

பிடித்துக் கொண்டு நடைப்பிணமாக உலாவினுள். சதா கண்ணீர் சிந்துவதும், எண்ணி எண்ணி ஏங்குவதுமாக இருந்தாள் சுந்தரி. அந்த ஏக்கத்திலே காலமும் விரைய லாயிற்று.

காலம் விரைந்தது. சுந்தரி சுமந்த தாய்மைப் பேற்றி னுக்குப் பயன் கிடைக்கும் நாளும் நெருங்கியது. ஏக்கமே உருவாகிக் கருகிமெலிந்த உடம்பாதலினுல் பிரசவ வேதனை யைத் தாங்க முடியாது சுந்தரி தவித்தாள். கைதேர்ந்த வைத்தியரை நாகலிங்கம் வரவழைத்தார். அவரது அரும் பெரும் முயற்சியின் பயனுக, தங்க விக்கிரகம் போன்ற ஒரு பெண் மகவைச் சுந்தரி பெற்றெடுத்தாள்.

பெற்ற மகவை ஆசைதீரப் பார்த்து அன்பு முத்தமிட் டாள் சுந்தரி. அவ்வளவுதான், பிரசவ அறையிலேயே கண்களை மூடிவிட்டாள் சுந்தரி!

வைத்தியரால் சுந்தரியின் வயிற்றில் இருந்த குழந்தை யைத்தான் காப்பாற்ற முடிந்தது. ஆனுல், சுந்தரியைக் காப்பாற்ற அவரால் முடியாது போயிற்று.

அருமை பெருமையாக வளர்த்த மகள் இறந்த அதிர்ச் சியை நாகலிங்கத்தால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. குடும்பத்துக்குப் பழி தேடிவிட்டாள் சுந்தரி என்று அவர் என்றுமே அவளைக் கண்டித்ததில்லை.

சுந்தரியின் திருமணத்தினுக்காக ஏலவே பல திட்டங் கள் அவர் தீட்டியிருந்தபோதிலும், சுந்தரி மாணிக்கத்தைத் தான் மணக்கப் போகிறேன் என்று ஒரு வார்த்தை கூறி யிருப்பாளேயாகில், மறு பேச்சின்றித் திருமணத்தை நடத்தி வைத்திருப்பார். சுந்தரி கண் கலங்கப் பொறுக்காதவ ராயிற்றே நாகலிங்கம்.

சுந்தரியின் மறைவு குடும்பப்பழியை ஓரளவு துடைத்த தென்றுலும், அவள் விட்டுச்சென்ற குழந்தை அந்தப் பழியை இரட்டிப்பாக்கவே செய்தது. குடும்பப் பழியின்

மங்காத சின்னமாகவே சுந்தரியின் குழந்தை இருந்தது. அந்த வேதனை நாகலிங்கத்தை அணு அணுவாக வதைக்கலாயிற்று. அதிலிருந்து விடுபட நாகலிங்கம் மதுவிடம் தஞ்சம் புகுந்தார்.

நாகலிங்கத்தின் மனக்கவலையைப் போக்க மது அரக்கன் உற்றதுணைவனாகக் கைகொடுத்து உதவினான். மதுவுக்கு நாகலிங்கம் அடிமையாகிக் கொண்டு போனது போலவே, அவரது பேத்தியான மரகதமும் வளரலானாள்.

மரகதத்தை மிகவும் கண்காணிப்புடனே, பெருமையாகப் பாராட்டி வளர்த்தார் நாகலிங்கம். தாயைப் போல் பிள்ளை என்று இராமல், மரகதம் வைராக்கியம் கொண்டவளாகவே வளர்ந்தாள். நாகலிங்கத்தை விட்டு விலகாமல், அவரது உயிர்போல் இயங்கிக்கொண்டு வந்தாள் மரகதம்.

காலம் நாகலிங்கத்துக்குத் தள்ளாத முதுமையையும், மரகதத்தினுக்குக் கன்னித்தன்மையையும் கொடுத்தது.

நாகலிங்கம் பேத்தி மரகதத்தினுக்கு வரன் தேடலானார். அப்பொழுதுதான் 'தகப்பன் பெயர் தெரியாதவள்' என்ற பழி அவரை மிகவும் வலுவாகத் தாக்கியது. திரும்பிய பக்கமெல்லாம், 'மரகதம் தகப்பன் பெயர் தெரியாதவள்' என்னும் வசை நாகலிங்கத்தை மோதியது. பொல்லாத அந்த வசையான பழியினை அவரது திரண்ட செல்வத்தாற் கூடத் துடைக்க முடியாது போயிற்று. அப்பொழுதுதான் நாகலிங்கம் தன்னை உணர்ந்தார். தன் சமூகத்தை உணர்ந்தார். இந்த உலகத்தையே உணர்ந்தார்.

தன் பணத்தின் சக்தியில்லாத தன்மையை உணர்ந்த நாகலிங்கம் குடியைத் துறந்தார்; மதுவை மறந்தார்.

பேத்தி மரகதத்தினுக்கு இனி மனித சமூகத்தினுல் வாழ்வளிக்க முடியாது. மனித சமூகத்தை நம்புவதில் எந்தவிதமான பயனுமேயில்லையெனக் கண்ட நாகலிங்கம், எல்லாவற்றிலும் வல்லவளும், உலக மாதாவுமான மாரி

அம்மனை நம்பத் தொடங்கினர். மனிதனுல் ஆகாத முயற்சி தெய்வத்தாற்ருனே கைகூடுமென நம்பினர் நாகலிங்கம். மகத்தான அந்த நம்பிக்கையின் பயனுக மண்டூர்க் கோட்டைமுனை மக்களின் குலதெய்வமான மாரி அம்மனை நாள்தவருது வழிபடலானர். மாரி அம்மன் சந்நிதிக்குச் சென்று தன் குறையை மாரி அம்மன் முன்வைத்து, அருள் சுரக்கும்படி நாள்தோறும் வழிபட்டுக்கொண்டு வந்தார்.

மண்டூர்க் கோட்டைமுனை மாரி அம்மன் கோயில் மண்டபத்திலே சாய்ந்த, துறவிவேடம் கொண்ட மாணிக்கம் வெள்ளத்தின் தாலாட்டுதலினுல் கண்களைத் திறந்தார்.

துறவி மாணிக்கத்தின் கால்களை வெள்ளம் தழுவிக் கொண்டிருந்தது. இன்னும் சிறிது நேரத்தில் மண்டபத்தினுள் வெள்ளம் புகுந்துவிடுமெனக் கண்டதனுல், துறவி மாணிக்கம் எழுந்து உள்மண்டபத்தினுட் சென்ருர். மண்டபத்தினுள் வரிசையாக இருந்த தூண்களில் ஒன்றில் சாய்ந்த துறவி மாணிக்கத்தின் சிந்தனை விரிந்துகொண்டேயிருந்தது.

நாகலிங்கத்தினுக்குப் பயந்து ஓடிய மாணிக்கம் கடல் கடந்து கோடிக்கரையில் இறங்கினர். வாழ்க்கையிலே விரக்தியுற்ற மாணிக்கம் தமிழகத்துக் கோயில்களையெல்லாம் கால்நடையாகவே சென்று தரிசிக்கலானர். உணவு கிடைத்த இடத்தில் உண்டும், படுக்க நிழல் கிடைத்த இடத்தில் துயின்றும், தென்னுட்டுத் திருக்கோயில்களையெல்லாம் தரிசித்துக்கொண்டே சென்ருர்.

ஓர் ஆண்டா! இரண்டு ஆண்டா! இருபது ஆண்டுகளைத் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களைத் தரிசிப்பதிலே செலவிட்டார். நினைத்துப் பார்த்த மாணிக்கம் அதிர்ச்சியடைந்தார். அந்த அதிர்ச்சியின் இறுதிப் பயன் அவர் சடைமுடி தரித்த துறவி!

பற்றற்ற நிலையிலே துறவியாக வாழ்ந்த மாணிக்கத்தி னுக்குப் பின்னர்தான் சுந்தரியின் நினைவு எழுந்தது. அந்த நினைவும் கோயிலில் சுந்தரியைப் போன்ற மங்கைநல்லாள் ஒருத்தியைக் கண்ட தனுற்ருன் தோன்றியது.

ஒரு தடவை சுந்தரியைக் கண்களினுல் காணவேண்டு மென்ற ஆசை துறவி மாணிக்கத்தினுக்கு எழுந்தது. ஆசைக்கு அணைபோட முடியாது அடிபணிந்த அவர் திரும் பவும் மண்டூர்க் கோட்டைமுனைக்கு வந்தார்.

மண்டூர்க் கோட்டைமுனைக் கிராமத்தினுள் கால் வைத்த துறவி மாணிக்கத்தை முதலில் வரவேற்றது வெள்ளந்தான். ஆகவே மாரி அம்மன் கோயிலினுள் நுழைந்தார். நாகலிங் கத்தின் உருக்கமான வேண்டுகோ ளினையும் கேட்டார்.

கோயிலினுள் புகுந்து நிற்கும் வெள்ளத்தைக் காண வந்தபலர், துறவி மாணிக்கத்தையும் கண்டு அளவளாவி ஞர்கள். அதன் பயனுக நாகலிங்கத்தின் நிலைமையை விசாரித்து அறிந்தார்.

உண்மையை அறிந்த துறவி மாணிக்கம், தம் மகளி னுக்கு வாழ்வு அளிப்பதா? இல்லையா? என்று சிந்திக்க லானுர்.

"பற்றைத் துறந்து துறவியாக நிற்கும் எனக்கு இன்னும் எதற்குப் பற்று?" என்றது மாணிக்கத்தின் மனம்.

"சுந்தரியைக் கெடுத்துக் குலப்பழியை உண்டாக் கினுய். அந்தப் பழி அவளது மகளையும் பிடித்துக் கொண்டது. அதனுல் வாழ்வே கிடைக்காமல் பரிதவிக் கிருள். பேத்தியின் வாழ்வைப் பொறுத்த ஏக்கத்தினுல் நாகலிங்கம் சாவின் முனையில் நிற்கிருர். கடைசி காலத்தில் அவரை நிம்மதியாகச் சாகவிடவாவது உன் மகளை ஏற்றுக் கொள். தந்தை தம் மகளை ஏற்றுக்கொள்வதில் தயக்கம் எதற்கு?" என்றது மாணிக்கத்தின் மனச்சாட்சி.

மனத்துக்கும் மனச்சாட்சிக்கும் ஏற்பட்ட போராட்டத்திலே, துறவி மாணிக்கம் தத்தளித்துத் தடுமாறலானார். அந்தத் தடுமாற்றமும் பல நாட்கள் நீடித்தது. அவர் இன்னும் முடிவினுக்கே வரவில்லை.

தினமும் மாரிஅம்மன் கோயிலுக்கு வந்து கொண்டிருந்த நாகலிங்கம், வெள்ளம் கோயிலினுள் புகுந்தபின்னர், கோயிலினுக்கு வரவேயில்லை.

"பாவம், நாகலிங்கம்! சாகக் கிடக்கிறார்" என்று அனுதாபப்பட்ட அர்ச்சகரின் குரல் பலநாள் மனப்போராட்டத்தில் உழன்று கொண்டிருந்த துறவி மாணிக்கத்தை விழிக்கச் செய்தது.

மனச்சாட்சியினுக்கு வளைந்து கொடுத்த மாணிக்கம் தீர்க்கமான ஒரு முடிவினுக்கு வந்தவராக எழுந்து நடந்தார். அவரது கால்கள் நாகலிங்கத்தின் வீட்டினுக்கு அழைத்துச் சென்றன.

நாகலிங்கம் கண்களை மூடியவாறு படுக்கையிலே கிடந்தார். பக்கத்தே மரகதம் கண்ணீர் சொரிய நின்று கொண்டிருந்தாள்.

மரகதத்தைப் பார்த்தார் மாணிக்கம். உற்று நோக்கினார். சுந்தரியே நிற்பது போலிருந்தது மாணிக்கத்தினுக்கு. தாயை உரித்து வைத்ததுபோல் மரகதம் நின்று கொண்டிருந்தாள்.

நாகலிங்கத்தை உற்று நோக்கிய மாணிக்கத்தின் கண்கள் கண்ணீரைச் சொரிய, வாய் "மாமா!" என்று குழைந்தது.

பழக்கப்பட்ட குரலைக் கேட்டது போல் உணர்ந்த நாகலிங்கம் மெதுவாகக் கண்களைத் திறந்தார்.

"நான் ...... நான் ......!" என்று தடுமாறிக் கண்ணீர் சிந்தினார் மாணிக்கம்.

காவி ஆடை புனைந்து, சடாமுடி தரித்துக் கண்ணீர் சிந்தும் மாணிக்கத்தை நாகலிங்கம் உற்று நோக்கினார்.

" நான்தான் மாணிக்கம். உங்களுக்கும் சுந்தரிக்கும் கொடிய துரோகமிழைத்த மகாபாவி. உங்கள் குடும்பத் துக்குப் பழியைத் தேடித்தந்த என்னை, உங்களது கடைசி காலத்திலாதல் மன்னித்து விடுங்கள் " என்று கண்ணீர் சொரியச் சொரியக் கூறினார் மாணிக்கம்.

" மாணிக்கம் ..." என்று முணுமுணுத்தார் நாகலிங்கம்.

" மாணிக்கந்தான், மாமா ......"

" மாணிக்கந்தான் ! ...... என் மரகதத்தின் தந்தை மாணிக்கந்தான் !......"

" மரகதத்தின் தந்தையான கொடிய பாவி மாணிக்கம் நான்தான், மாமா!"

" தகப்பன் பெயர் தெரியாதவள் மரகதம் !...... தகப்பன் பெயர் தெரியாத மரகதத்தினுக்குத் தகப்பன் வந்துவிட் டான் ! என் மரகதத்தினுக்கு வாழ்வு கிடைத்து விட்டது ; மாரி அம்மன் அருள் சுரந்தே விட்டாள்!"

" மாரி அம்மனது அருளே தான் ! " என்று மாணிக் கத்தின் வாய் மெதுவாகக் கூறியது.

" மரகதம் ! ...... உன் தகப்பன், அம்மா ! ......"

" அப்பா ! " என்று கதறினாள் மரகதம்.

மாணிக்கம் சிலையாக நின்று கண்ணீர் வடித்தார்.

சோ. சிவபாத
சுந்தரம்

# இலங்கை தமிழ் இலக்கிய மரபு

தமிழ் இலக்கிய வளர்ச்சியைப்பற்றி ஆராயும் போது இலங்கைத் தமிழ் அறிஞர்களின் சேவையைப் புறக் கணித்து, இன்றைய "தமிழகத்"தைமாத்திரம் வைத்துக் கொண்டு ஆராய்வது பொருந்தாது. பல நூற்றுண்டுக ளாகவே ஈழநாடு தமிழ் இலக்கியத்துக்கும் புலமைக்கும் மிகப் பெரிய பங்கு சேவை செய்து வந்திருக்கிறது. சங்க காலத்திலேயே ஈழத்து பூதந்தேவனுர் முதலிய புலவர் கள் பெயர்களை நாம் கேட்டிருக்கிருேம். இடைக்காலத்தில், யாழ்ப்பாணத்திலே தனி அரசர்கள் ஆட்சிசெலுத்தியபோது தமிழ் இலக்கியப் படைப்புக்கள் வளர்க்கப்பட்டன. முக்கிய மாக, வடமொழி நூல்கள் பல தமிழில் சிறந்த முறையில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அரசகேசரியின் "இரகு வம்சம்" கம்பனின் இராமாயணத்துக்கு இணையான தமிழ்க் காவியம்.

பிற்காலத்திலே, பாண்டித்துரைத் தேவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நடத்திவந்தபோது அதில் பங்கு கொண்ட புலவர்களில் யாழ்ப்பாணத்துப் புலவர்களும் வித்வான்களும் மிகப் பலர். கடந்த பதினெட்டு, பத்தொன் பதாம் நூற்றுண்டுகளில் ஈழத்திலே, வடக்கே யாழ்ப்பா ணத்திலும் கிழக்கே மட்டக்களப்பிலும், தமிழ் இலக்கிய வளர்ச்சி பல்கிப் பெருகியிருந்தது. ஆறுமுகநாவலர் போன்ற பேரறிஞர்களின் விடாமுயற்சியினுல் இலங்கையின்

தமிழ்க் கல்வித்திட்டத்தில் இலக்கண - இலக்கியத்தகுதி முக்கிய இடம் பெற்றிருந்தது. இன்றுவரையும் அந்த வழி முறை காக்கப்பட்டுவருகிறது.

தமிழகத்திலே, இன்றைய புதுத் தமிழ் இலக்கிய விமர்சகர்கள், எழுத்தாளர்களைப்பற்றி ஆராயும்போதெல்லாம் "பண்டிதர்கள்", "வித்வான்கள்", "தமிழ் ஆசிரியர்கள்" என்ற இனங்களைச் சேர்ந்தவர்கள், நாவல், சிறுகதை முதலிய கற்பனை இலக்கியத் துறையினருக்கு விரோதமானவர்கள் என்ற ஒரு அபிப்பிராயத்துடன் இருப்பதைக் காணலாம். இலங்கையைப் பொறுத்தவரையில், நல்லவேளையாக, இந்த ஜாதி வித்தியாசம் கிடையாது. ஏற்கெனவே நாம் குறிப்பிட்டதுபோல், பண்டைய இலக்கண - இலக்கிய சம்பிரதாயத்திலேயே அவர்கள் வளர்ந்தவர்களாதலால், அவர்களுக்குத் தமிழ்நாட்டுப் பிரிவினைகள் ஆச்சரியத்தைத் தரலாம். "ஆனந்த விகடன்" பத்திரிகை ஆரம்பித்தகாலத்தில்—1930, 31 ஆம் ஆண்டுகளில்—யாழ்ப்பாணத்து ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர்களுக்கு, சிறுகதைகளையும் மற்றும் புதுமைக் கட்டுரைகளையும் தினசரி 'இலக்கிய ஆராய்ச்சி'ப் பாடமாக நடத்தியவர்—மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதர், ஆங்கிலம் படிக்காத பழைய பரம்பரை ஆசிரியர், பண்டிதமணி கணபதிப் பிள்ளை. மட்டக்களப்பிலே புதுமைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஆரம்பித்த சமயத்தில், அதன் தலைவராகத் தேர்வு செய்யப்பெற்றிருந்தவர் இலக்கண வித்வான் பெரியதம்பிப் புலவர். இன்று இலங்கையில் எழுதிவரும் தமிழ் எழுத்தாளர்களில் பெரும்பான்மையோர் தமிழ் ஆசிரியர்கள். இலங்கைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையில் பட்டம்பெற்றவர்களும், தமிழ் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பட்டம்பெற்ற தமிழ் ஆசிரியர்களும், பண்டிதர்களும், வித்வான்களுமே புதுத் தமிழ் இலக்கியப் படைப்பில் முன் நிற்பவர்கள். இந்த அடிப்

படையில் ஆராயும்போது, இலங்கைத் தமிழ் எழுத்தாளர் பங்குக்குத் தற்காலத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஒரு முக்கிய இடமுண்டு.

இலங்கையிலே யாழ்ப்பாணமும் மட்டக்களப்பும் (இரு பெயரும் தமிழ் மாநிலங்கள்) வெவ்வேறு வகையான பேச்சுத் தமிழை வழக்கில் கொண்டவை. இதன் காரணமாக, தமிழ் நாட்டு வாசகர்களுக்கு இலங்கை எழுத்தாளர் சிலரின் கதைகளில் வரும் சொற்கள் புரியாமலிருக்கலாம். போர்த்துக்கேசியரும் டச்சுக்காரரும் ஆட்சி செய்த காலத்தில் குடிகொண்ட சில அன்னியச் சொற்களும் (கதிரை= நாற்காலி), நாஞ்சில் நாட்டவர் குடியேறிய காலத்தில் வந்து சேர்ந்த மலேயாளச் சொற்களும் (என்ரை=என்னுடைய), ஆங்கிலச் சொற்கள் சில தமிழ் வடிவத்தில் வரும்போது யாழ்ப்பாணத்தவர்கள் தமது உச்சரிப்பு முறைக் கேற்பக் கையாளும் எழுத்து முறையும் (Rita=தமிழ் நாட்டில் ரீட்டா; யாழ்ப்பாணத்தில் றீற்ரு, அல்லது ரீற்ரு. இடையின 'ர'கரம் பெரும்பாலும் வல்லினமாகவே அவர்கள் உச்சரிப்பதால், மொழிக்கு முதலில் வரும் T என்ற ஆங்கில எழுத்துக்குத் தமிழிலே 'ர'கரம் போட்டே எழுதுவார்கள்— Taxi=ராக்ஸி), சிங்கள மொழியிலுள்ள சில வார்த்தைகள் தமிழில் பரவிய காரணத்தால் வழக்கில் வந்த சில சொற்களும் (சிங்களத்தில் பிஸ்ஸா=யாழ்ப்பாணத் தமிழில் விசர்=பைத்தியம்)— இத்தகைய பிராந்திய வழக்குத் தமிழ் நாட்டு வாசகர்களுக்கு மலைப்பைத் தரும். இவற்றைத் தவிர, யாழ்ப்பாணத்திலுள்ள பல்வேறு பகுதிகளில் பேச்சுத் தமிழிலுள்ள கொச்சை வெவ்வேறு வடிவங்களாயிருக்கும். தீவுப்பகுதியில் (யாழ்ப்பாண நகரை அடுத்து ஏழு சிறு தீவுகளிருக்கின்றன) பேசப்படும் கொச்சைத் தமிழுக்கும், வடக்கே பருத்தித்துறை, கிழக்கே சாவகச்சேரி, இன்னும் தெற்கே வன்னிப் பகுதி — இவற்றில் வழங்கும் கொச்சைத் தமிழுக்கும் வித்தியாசம் காணலாம். மட்டக்களப்புப்

பகுதியில் ஒரு 'கா' ஓசை சேர்ப்பார்கள். (சொல்லு—சொல்லுகா!). இத்தகைய பேதங்களையும் புரிந்து கொண்டால், இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களின் நாவல்களையும் சிறுகதைகளையும் படிக்கும்போது ஓட்டம் தடைப்படாது.

இன்னுமொரு செய்தி: யாழ்ப்பாணத்திலும் மட்டக்களப்பிலும் மக்கள் வாழ்க்கை முறையில் தமிழ் நாட்டவர்களுக்குச் சிறிது மாறுபட்ட முறை இருக்கக் காணலாம். 'சோளகம்' என்ற சிறுகதையில் "பச்சையரிசிக் கஞ்சியைச் சொட்டும் சிந்தாமல் குடிக்குமளவிற்கு வறுமை" என்ற சொற்றொடர் வருகிறது. யாழ்ப்பாணத்தில் பெரும்பாலும் புழுங்கல் அரிசியே சாப்பாட்டுக்கு உபயோகப்படுத்துவார்கள். பச்சரிசி 'நொய்' அரிசிபோல, கொஞ்சம் அந்தஸ்தில் குறைவு; வறுமைக்கு எடுத்துக்காட்டு!

இந்த நூலிலுள்ள சிறு கதைகளில் பெரும்பாலானவையும் இலங்கையில் யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, இந்திய வம்சாவழியினர் வாழும் தேயிலைத் தோட்டப் பகுதி — இவற்றில் காணும் வாழ்க்கை முறைகளைப் படம் பிடித்துக் காட்டும் தன்மையில் அமைந்துள்ளன. அன்றியும், மேல்நாட்டிலும் தமிழகத்திலும் பரவி வரும் இலக்கிய மதம் இன்றைய இலங்கைத் தமிழ் இலக்கியத்திலும் செறிந்திருப்பதைக் காணலாம். கவிதையைப் பொறுத்தவரையில் 'தரிசனம்', 'இல்லையான காவியம்' இந்த இரண்டும் இலங்கை எழுத்தாளரிடம் காணப்படும் கவிதை மரபை அப்படியே காண்பிக்கின்றன.

இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சில தமிழகப் பத்திரிகைகளில் இலங்கை எழுத்தாளர்களின் சிறுகதைகளும் கவிதைகளும் வெளிவந்திருக்கின்றன. சென்னையிலுள்ள இரண்டொரு பதிப்பகங்கள் இலங்கை ஆசிரியர்களின் சில நாவல்களையும், சிறுகதைத் தொகுதிகளையும் வெளியிட்டிருக்கின்றன. பெரும்பாலும் இந்த வெளியீடுகள் அந்தந்த

ஆசிரியர்களின் சொந்த முயற்சியால் வெளியிடப்பட்டவை. "அக்கரை இலக்கியம்" என்ற இந்த நூல் இலங்கை எழுத்தாளர்களின் படைப்புக்களை ஒரு தனிப்பட்ட இலக்கியக் காட்சியாக அமைத்துத் தமிழ் நாட்டு வாசகர்களுக்கு அளிப்பதில் ஒரு பெருமையுண்டு; இது ஒரு சிறந்த சேவை.

எஸ். துரைராஜ
சிங்கம்

# மலாயாவுக்கு இந்தியாவின் கலாசார உதவி

மலாயாவைத் தவிர வேறு எந்த நாட்டின் கலாசாரப் பின்னணியிலும் இத்தனை வகையான நாகரிகங்கள் ஒன்று கலந்திருக்கவில்லை என்று கூறிவிடலாம். மலாக்கா ஜலசந்தியை ஒட்டியிருக்கிறது இந்நாடு. மிகப்புராதன காலத்திலிருந்தே உலகத்தின் முக்கியமான வியாபார மார்க்கங்கள் சந்திக்கும் இடமாக விளங்கிவந்தது மலாக்கா. வர்த்தகம் செய்யவும், குடியேறவும் வந்த மக்களெல்லோரும் இத்தீப கற்பத்திற்குத் தத்தம் கலாசாரங்களைக் கொண்டு வந்தனர். அவற்றின் நிரந்தர அடையாளங்கள் இந் நாட்டில் பதிந்துள்ளன. ஆசிய பூமியின் முனையிலிருக்கும் இந்நாட்டில், சீனர், இந்தியர், ஜப்பானியர், அராபியர், பர்மியர், யூதர், ஸயாமியர், ஜாவனியர், மற்றும் பல இந்தோனேஷிய ஜாதியார் ஆகியவர்கள், வேறு எங்கும் காணமுடியாத ஒரு ஆசிய நாகரிகக் கலப்பை உண்டுபண்ணி யிருக்கிறார்கள். இக்கலப்பின் பின்னணியில் தூரதேசங்களின் வாழ்க்கை, கலாசாரம் ஆகியவற்றின் பிதுரார்ஜிதம் உள்ளது. அது ஓவியம், இசை, இலக்கியம், சிந்தனை, மதம், சமூக அமைப்பு முறைகள், அரசாங்கம், வாழ்க்கை அமைப்பு ஆகியவற்றிலெல்லாம் மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளது.

மலாயாவின் நாகரிகக் கலப்பில் மிக முக்கியமான ஒரு அம்சம் என்னவென்றால், இந்நாட்டின் வரலாற்றை உருவாக்கியதில் புராதன காலத்திலிருந்தே பெரும் பங்கெடுத்

துக்கொண்ட ஒரு நாடு இந்தியாதான். அமரத்துவம் அடைந்த டாக்டர் ஆனந்தா கே. குமாரசாமி கூறியது போல, "ஆசியாவில், சகல மார்க்கங்களும் இந்தியாவை நோக்கியே செல்லுகின்றன." மலாயாத் தீவுக்கூட்டத்துக்கு இஸ்லாம் வருவதற்குமுன், 1000 வருஷ காலமாக, மலாய் தீபகற்பத்தில் ஹிந்து–பௌத்த நாகரிகம் பரவியிருந்தது. இஸ்லாம் வந்தும்கூட மலாய் வாழ்க்கையின் உள் இயல்பை, இந்தியத் தன்மையை, மாற்றிவிடவில்லை. இந்தியப் பிதுரார்ஜிதத்தை அராபியச் செல்வாக்கு மெல்லிய துகில்மாதிரி மூடிக்கொண்டிருக்கிறது; அவ்வளவுதான்.

இந்து மகாசமுத்திரத்தின் ஒவ்வொரு கரையிலுமே இந்தியக் கலாசாரம் பரவத்தொடங்கி, அங்கெல்லாம் நிரந்தரமான அடையாளங்களைப் பதித்திருக்கிறது. அப்படிப் பரவியதன் காரணமாக, முதல் முதலில் மாறுதல் நிகழ்ந்தது மலாய்த் தீபகற்பத்திலும், தீவுக் கூட்டங்களிலும்தான் என்று கருதலாம். இங்கு கலாசாரச் செல்வாக்குப் பரவியதுடன் மட்டுமின்றி, இனத்தோடு இனம் இணைந்து ரத்தக் கலப்பே ஏற்பட்டது. சரித்திர காலத்துக்குமுன்பு ஏற்பட்ட இன உறவைக் காட்டும் அடையாளங்களை இந்தியாவிலும் மலாயாவிலும், தென்கிழக்கு ஆசியத் தீவுகளிலும் (இந்தோனேஷியா, மலேஷியா என்றெல்லாம் கூறப்படும் இடங்களில்) காணலாம்.

தென் இந்தியத் தமிழர்கள் கிறிஸ்தவ சகாப்தத்தின் தொடக்கத்திலும், அதற்கு முன்பும் தலைசிறந்த மாலுமிகளாக விளங்கியவர்கள். வியாபார நிமித்தமாக அந்த மாலுமிகள் தங்கள் தாயகத்திலிருந்து கடல் தாண்டி வந்தார்கள். நாளாரம்பத்தில், மலாய்த் தீபகற்பம் அவர்களுக்குப் பாலமாகிவிட்டது. இந்தியாவிலிருந்து ஆசியத் தீவுக் கூட்டங்களுக்கு இப்பாலத்தின் வழியாகவே சென்றார்கள்.

இவ்வாறு முதல் முதலாகக் குடியேறத் தொடங்கியது, கி. மு. 1000-ல் என்று சில ஆராய்ச்சி நிபுணர்கள்

வரையறுத்துக் கூறுகிறார்கள். அவர்கள் புதியதொரு நாகரி கத்தை, புதியதொரு வாழ்க்கை முறையை இந்நாடுகளுக் குக் கொண்டுவந்தார்கள். அவை இங்கு நிலவிய நாகரிகத் தையும், வாழ்க்கை முறையையும்விட மிக மிகச் சிறந்த அமைப்பும், பண்பும் உடையனவாக இருந்தன. ஓவியம், இலக்கியம், மணிச்சிற்பம், சிற்பம், நடனம் முதலியன இந் தியக் குடியேற்றக்காரர்களால் கொண்டுவரப் பட்டவையே. மலாயாவில் வடக்கே லங்கா சுகமும், மேற்கே கங்கா நகர மும், கிழக்கே இந்திரபுரமும், சுமாத்ராவில் ஸ்ரீவிஜயமும், ஜாவாவில் தர்மநகரமும், இந்தோ-சீனாவில் பூனன், சென் —லா, சம்பா ஆகியவையும் புராதன காலத்தில் இந்தியர் களால் ஸ்தாபிக்கப்பட்ட ராஜ்யங்களே. 8-ஆம் நூற்றாண்டு வாக்கில், மலேஷியா முழுவதிலும், கடலிலும் தரையிலும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் ஆதிக்கம் பெற்று விளங்கியது. அதன் ஆதிக்கம் உச்ச நிலையடைந்திருந்தபோது, மலாயா, இலங்கை, சுமாத்ரா ஆகிய நாடுகளும், ஜாவா, போர் னியோ, செலிபிஸ் ஆகியவற்றின் பகுதிகளும் அந்த சாம் ராஜ்யத்தில் அடங்கியிருந்தன.

கி. பி. முதல் நூற்றாண்டில், சோழமண்டலக் கரையி லிருந்து இந்திய வர்த்தகர்கள் மலாய்த் தீபகற்பத்துக்கு வரத்தொடங்கினார்கள். அவர்களில் பலர் தொழில் திறமை மிக்கவர்கள்; மணிச் சிற்பிகளாகவும், நெசவாளர்களாகவும், உலோக வேலைக்காரர்களாகவும், மற்றும் பல தொழில் வல்லுநர்களாகவும் வந்து, இங்கேயே தங்கினார்கள். அவர் கள் இந்தியப் பழக்க வழக்கங்களை அறிமுகப்படுத்தினார்கள். மலாயாவில் இருந்துவந்த பழங்கால முறைகளான தந்தை வழி, தாய் வழி ஆட்சி உரிமை முறைகள் மாறி, ராஜாக்கள் இருந்து ஆட்சி செய்யும் முறை ஏற்படுவதற்கும் அவர்கள் வழி, செய்தார்கள். தென் இந்திய ஹீனயான பௌத்த மதத்தையும் வட இந்திய மஹாயான பௌத்தமதத்தையும் ஒருங்கே பரப்பினார்கள். இங்கு கிறிஸ்தவ சகாப்தத்தின்

ஆரம்பத்திலிருந்து 15-ஆம் நூற்ருண்டு வரை இந்தியப் பொருளாதார, கலாசார ஆதிக்கமே நிலவியது. 15-ஆம் நூற்ருண்டில் வந்த இஸ்லாம், அவ்வாதிக்கத்தை முதலில் பலஹீனப்படுத்தி, பின்பு அழித்து விட்டது. மலாயாவில் இந்தியச் செல்வாக்கு குறைந்து கொண்டு வந்த சமயத்திலும், மலாக்காவில் இந்தியர்கள் பெரும் அளவில் வியாபாரம் செய்துகொண்டு, செல்வமும் செல்வாக்கும் படைத்தவர்களாகவே விளங்கிஞர்கள். மேற்கே யிருந்து புதிய சக்திகள் — மத்தியக் கிழக்கிலிருந்து இஸ்லாமும், மேற்கத்திய நாடுகளிலிருந்து வர்த்தக உறவும் — வந்துசேர்ந்த பின், சரித்திரத்தின் போக்கையே அவை மாற்றிவிட்டன.

"விரிவான அர்த்தத்தில், மலாய்க்காரர்கள் நம்முடைய தூரபந்துக்களாக இருக்கிருர்கள்" என்று ஜவாஹர்லால் நேரு கூறியது சரியான வாசகமாகும். ஏனென்ருல், இஸ்லாம் மதத்தைத் தழுவிய பின்னரும், தொட்டிலிலிருந்து சுடுகாடு வரை மலாய்க்காரர்களின் வாழ்க்கையில் ஹிந்துக் கலாசாரம், ஹிந்து இலக்கியம், ஹிந்து நடனம், ஹிந்து சங்கீதம், ஹிந்து நாடோடி மரபுகள் முதலியவையே சூழ்ந்திருக்கின்றன. மலாயா முழுவதிலும், மலாயாத் தீவுக் கூட்டத்திலும் நாடோடி இலக்கியத்தில் காணும் தேவதைக் கூட்டங்கள் ஹிந்து தேவதைகளின் இயல்பையே கொண்டிருக்கின்றன. அவற்றுள் பெரிய தேவதைகள் ஹிந்துவாகவும், சிறு தெய்வங்கள் மலாய்த் தெய்வங்களாகவும் இருக்கின்றன. இன்னும் மலாயாவின் கிராமப்புறங்களில் நடக்கும் பாவைக் கூத்தில் இடம் பெறுபவை இந்தியப் புராணக் கதைகளே. "செரிதா ஸ்ரீ ராமா" எனப்படும் ராமன் கதை, மகா பாரதக் கதையான "பாண்டவ வீமா" (பஞ்ச பாண்டவர்) ஆகிய இரண்டும் பாவைக் கூத்தின் பிரதானக் கதைகளாகும். இக் கதைகள் மலாய்க்காரர்களின் வாழ்க்கை, கற்பனை, கலைகள், தொழில்கள் முதலியவற்றிலெல்லாம் பிரதிபலிக்கின்றன.

மலாய் மொழியில் இந்திய மொழி வார்த்தைகள் பல கலந்திருப்பது வெளிப்படையாகத் தெரிந்த விஷயம். தமிழ், ஹிந்துஸ்தானி, சமஸ்கிருதம் ஆகியவற்றின் வார்த்தைகளோடு, அரபு வார்த்தைகளையும் மலாய் மொழியில் காணலாம்.

ராஸ் (கடிவாளம்), ரொட்டி, டான் (லாயம்), ஜோரி (சிறு வண்டி) முதலியன ஹிந்துஸ்தானி வார்த்தைகள். கப்பல், மாளிகை, கட்டில், கடை, திரை, கோலம் (குளம்), மெம்பிலே (மாப்பிள்ளை), தண்டல், கூலி, கறி, மாலே, மெம்பலம் (மாம்பழம்) முதலியன மலாய் மொழியில் வழங்கும் தமிழ் வார்த்தைகள்.

சமயம், வான சாஸ்திரம், விவசாயம், சட்டம், ராணுவம், நீதிமன்றம், உலோகங்கள், உறுப்புக்கள், உறவு முறைகள் முதலியவை சம்பந்தமாக ஏராளமான சமஸ்கிருத சொற்கள் மலாய் மொழியில் எடுத்தாளப்படுகின்றன. ரூபா (உருவம்), பாதா (பாதம்), இஸ்திரி (ஸ்திரீ), பங்ஸா (வம்சா), குலவர்க்கா, ஆங்ஸா (ஹம்சா), சிங்கா, கஜா முதலியவை சில உதாரணங்களாகும்.

ஹிந்து புராணங்களில் வரும் பல பறவைகளும், பல ஊர்வனவும் மலாய் நாடோடி இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. ஓர் உதாரணமாகக் கருடனைச் சொல்லலாம். திடீரென்று சூரியனை மேகங்கள் மூடிவிட்டால், பேராவில் வசிக்கும் மலாய்க்காரர், "கெர்டா தன் சிறகுகளை உலர்த்துவதற்காக விரிக்கிறது" என்று கூறுவார். மத சம்பந்தமான பல மலாய் வார்த்தைகளும் சமஸ்கிருத வார்த்தைகளே. உதாரணம்: குரு, தபா (தவம்), சுவர்க்கா, நரகா, பூஜா, பக்தி, மந்த்ரா, பிக்கு (பிக்ஷு), பிஸ்னு (விஷ்ணு), சாஸ்தரா (சாஸ்திரம்) முதலியன.

பெயர்களிலும் பட்டங்களிலும் சமஸ்கிருதப் பதங்கள் வழங்கி வருவதையும் காணலாம். மலாய்த் தலைவர்களின் பட்டங்களுக்கு முன் "ஸ்ரீ" சேர்க்கப்படுகிறது. பேரா

சமஸ்தான ராஜகுடும்பத்தைச் சேர்ந்த ஒருவருக்கு ராஜா சூலன் என்று பெயர். ஜாவா ராஜ்யமாகிய மஜாபஹித், மலாயா சமஸ்தானங்கள் பலவற்றின்மீது படையெடுத்து வென்ற காலத்தில், மலாக்காவை ஆண்ட ஹிந்து மன்னன் "ஸ்ரீ பரமேஸ்வரா" என்னும் பட்டத்தை உடையவன்.

மலாய் இலக்கியத்திலும் பழங் கதைகளிலும் இந்திய அம்சமே மேலோங்கி யிருக்கிறது. பாண்டவர்கள், ராமன், சீதை, ஹனுமான் ஆகியோருடைய கதைகள் மலாய்க் குழந்தைகளுக்கும் தெரியும். மாட் ஜனின், சி லுஞ்சாய், பா பெலலாங், மூஸாங் பெர்ஜங்குட் ஆகிய நாடோடிக் கதைகளைக் கவனித்துப் படித்தால், அவற்றிற்கும், ஹிதோப தேச, பஞ்ச தந்திரக் கதைகளுக்கும் உள்ள ஒற்றுமைகளைக் காணலாம்.

மலாய்க்காரர்கள் இன்னும் நடராஜ வடிவில் சிவனுக்கு மரியாதை செய்துவருவது சுவாரஸ்யமான விஷயமாகும். ஆனால், இன்று அவர்களுக்கு அக் கடவுளின் பெயரும், தன்மையும் அவ்வளவாகத் தெரியாது!

பழைய மலாய் இலக்கியத்தில் சிவனைப் பற்றிய பல குறிப்புக்கள் காணப்படுகின்றன. அதில், சிவன் பெரிய குருவாக (பெதாரா குரு) கருதப்படுகிறான். காளிதேவதை இப்போது காட்டுப் பேயாகக் கருதப்படுகிறது. அறுவடைத் திருநாட்களில் "ஸ்ரீ" உச்சாடனம் செய்யப்படுகிறது. மலாய்க் கதைகளின் பிரகாரம், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மும்மூர்த்திகளும், காலனும், ஸ்ரீயும் சேர்ந்து காலத்தின் ஐந்து பகுதிகளுக்குத் தலைமை தாங்குவதாகக் கருதப்படுகிறது.

இவ்வாறு மலாய்க்காரர்களின் வாழ்வில் பல துறைகளிலும் இந்தியக் கலாசாரம் படிந்திருக்கிறது. இந் நாட்டில் பூமிக்கு அடியிலிருந்து அகப்பட்ட சிலைகளும், கல்வெட்டுக்களும் பழங்காலத்தில் இந்தியக் கலாசாரம் பரவியிருந்ததை நமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

கிட்டாவில் ஸ்ரீமதி குவாரிட்ச் வேல்ஸ் தோண்டி எடுத்த 8½ அங்குல வெண்கலப் புத்தர் சிலைதான் மலாயாவில் கிடைத்த மிகப் பழைய புத்தர் சிலையாகும். அந்த அம்மையார், பிராவின்ஸ் வெல்லெஸ்லியில் மூடா நதியின் பழைய படுகையில் எடுத்த, 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஸ்தூபியின் சிதைவும் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கது. அதே இடத்தில்தான் ஒரு நூற்றாண்டுக்கு முன் புத்த குப்த மஹாநவிகா சாஸனம் கண்டெடுக்கப்பட்டதாகக் கருதப் படுகிறது. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அந்தச் சாஸனம் இப்போது கல்கத்தா மியூஸியத்தில் இருக்கிறது.

ஈப்போவுக்கு அருகில் 1931-ல் கிடைத்த வெண்கலச் சிலை ஒன்றை, "மத்தியகாலக் கீழை நாட்டுக் கலையின் ரத்தினமாகும்" என்று டச்சு புதைபொருள் ஆராய்ச்சியாளரான டாக்டர் வான் ஸ்டீன் காலன்பெல்ஸ் கூறினர். வடக்கு மலாயாவில் ஸ்ரீவிஜயாவின் சைலேந்திர மன்னன் ஒருவன், தன் செல்வாக்கைப் பரப்பியிருந்த காலத்தை (சுமார் கி. பி. 740)ச் சேர்ந்த சிலை என்று அதை டாக்டர் காலன்பெல்ஸ் கருதினர். இரண்டாவது உலக யுத்தத்தின் போது, மலாயாவில் போராட்டம் நடந்து வருகையில் அந்தப் புத்தர் சிலையைக் கொள்ளையடித்துச் சென்று விட்டனர். அப்புறம் அச் சிலையின் கீழ்ப்பாதிதான் அகப் பட்டது.

ஈப்போவுக்கு அருகே பெங்காலனில் வெண்கலத்தால் செய்யப்பட்ட தாமரை ஆசனம் ஒன்று அகப்பட்டது. அதன் மீது, பாதிச் சாய்வாகப் படுத்துக் கொண்டிருக்கும் சிலையொன்று இருந்திருக்க வேண்டும்.

பீடோரில் ஈயச் சுரங்கம் ஒன்றில், ஈயக் கப்பலால் வெளியே கொண்டு வரப்பட்ட சிலை ஒன்று 31 அங்குல உயரம் உடையது. அதற்கு 8 கைகள். பரிசோதித்துப் பார்க்கும்போது, அது அநேகமாக சுத்தமான செம்பில் செய்யப்பட்ட சிலை என்று தெரிய வந்தது. அதை

மஹாயான மார்க்கத்தைச் சேர்ந்த அவலோகிதேஸ்வரர் சிலை என்று ஸ்ரீமதி குவாரிட்ச் வேல்ஸ் கருதுகிறார். தோற்றத்தைக் கொண்டு பார்க்கும்போது, அது சந்தேகத்துக்கிடமின்றி தென்இந்தியர் சிற்ப வகையைச் சேர்ந்ததாகவே இருக்கிறது. தைப்பிங்கிலுள்ள பேரா மியூஸியத்திலிருந்து அச்சிலை கொள்ளையடிக்கப்பட்டுவிட்டது. ஆனால், சுரங்கக் குழி ஒன்றில் அது முழுசாகத் திரும்பவும் கிடைத்துவிட்டது. ஜப்பானியர் ஆட்சிக் காலத்துக்குப் பின், அதை நான் கடைசியாகத் தைப்பிங்கில் பார்த்தேன். இந்த புத்த சிற்பங்கள், பழங்காலத்திய இந்தியர் குடியேற்றத்தைத் தெரிவிக்கின்றன.

"மலாய்த் தீபகற்பத்தை முதல் முதலில் சரித்திர முக்கியத்துவம் கொண்டவாறு நாகரிகப்படுத்தியது இந்தியாவே" என்று ஸர். ரோலண்டு பிராடல் தமது "சிங்கப்பூர் விளக்குகள்" என்ற நூலில் கூறுகிறார். ஆகவே, இந்தியா–மலாயா உறவுகள் கலாசார ரீதியில் இவ்வளவு ஆழமாக வேரூன்றி யிருப்பதில் ஆச்சரியம் எதுவுமில்லை.

இர. சா.
இளமுருகு

# வயது பதினாறு

அடுத்த ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதியிலிருந்து காஷியர் கண்ணுயிரம் ஆஜர் புத்தகத்தில் கையெழுத்திட வேண்டிய அவசியமில்லை. அவர் வேலை செய்யும் கம்பெனியின் நிர்வாகி — ஜேம்ஸ் வாரன், இந்த உத்தரவை அவருக்குத் தெரிவித்திருந்தார். ஐம்பத்தைந்து வயதை எட்டிப் பிடிக்கப்போகும் கண்ணுயிரம், மிகுந்த வருத்தத்துடன் அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு அதைப் பார்த்தபடியே இலேசாகச் சிரித்தார். மகிழ்ச்சிக்காக மட்டுமல்லாமல் சுமக்கமுடியாத துயரத்தின்போதும் மனிதன் சிரிக்க முயல்கிருன் என்பதற்காக கண்ணுயிரம் அப்படிச் சிரித்தார்.

"எல்லா மனிதர்களும் வரப்போகும் இளைஞர்களுக்காகத் தங்கள் இடத்தைக் காலி செய்யவேண்டும்; இது எனது முறை, அடுத்ததாக ...... யாராகிலும் இந்த நிலைமைக்கு ஆளாகலாம் ...... பரவாயில்லை; யாரும் எப்பொழுதும் எல்லா இடத்திலும் நிலைத்து நிற்க முடியாது."

தனக்குத்தானே இப்படி பேசிக்கொண்ட கண்ணுயிரம் அமைதியாக தம் ஃபைல்களைப் புரட்ட ஆரம்பித்தார். அன்றைக்கு யாரிடமும் அவர் பேசவில்லை. தனிமையில் எங்காகிலும் உட்கார்ந்து அழவேண்டும் என்று அவர் இடம் பார்த்துக்கொண்டிருந்ததால், பேசுவதுபற்றி அவர் நினைக்கவேயில்லை.

தன்னை இன்னும் கொஞ்ச காலத்துக்கு வேலையில் அனுமதிக்கவேண்டும் என்று அழாக்குறையாகக் கெஞ்சிக் கேட்டுக்கொண்ட வீணான முயற்சிகளெல்லாம் ஆபீஸ் குமாஸ்தாக்களுக்கெல்லாம் தெரிந்துவிட்டது. நிர்வாகி கண்ணுயிரத்தை வேலையினின்றும் நீக்குவதில் மிக உறுதியாக இருந்தார்.

* * *

கண்ணுயிரத்துக்கு கிடைத்த வேலை நீக்க அறிவிப்பிலிருந்து, லாய் இயோக் இயோங் — ஐம்பத்தைந்து வயதையடைய இன்னும் ஏழு மாதமே உள்ள இந்தச் சீன மாது — தனது இரவுத் தூக்கத்தை முற்றிலும் இழந்துவிட்டாள். இன்னும் கல்யாணமாகாத ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் செய்துவைப்பதும், "மாரா" கல்லூரியில் உபகாரச் சம்பளம் மூலம் கப்பெனி நிர்வாகம்பற்றி படிக்கும் தனது மகனுக்கு படிப்பு முடியும்வரை மேலும் உதவி செய்வதும் அவளுக்கு பெரிய இலட்சியமாக விளங்கின.

கார் விபத்தில் ஒரு காலை இழந்துவிட்டு நொண்டியாகி, வீட்டோடு வீடாக கிடக்கும் தன் 'இருமல்' கணவனிடம் இதைச் சொன்னபோது, அவன் முகம் கவலைகளால் சுருங்கிப் போய்விட்டது. "இந்த நிலைமையில், நீ வேலையிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டால், இந்தக் குடும்பத்தை நடத்திச்செல்வது எப்படி? ஓய்வு நாளில் உனக்கு என்ன சம்பளம் கிடைக்கப்போகிறது? போன வருஷம் உன் பெரிய மகள் கல்யாணத்திற்குக் குறைந்தது இரண்டாயிரம் வெள்ளியாவது செலவழித்திருப்போம்" என்றான் அவன்.

"நம்முடைய கஷ்டங்கள் எனக்குத் தெரியாமலா இருக்கிறது?"

"தெரிந்தும், ஏன் பேசாமல் இருக்கிறாய்?"

"நான் என்ன செய்யவேண்டும்?"

"நம்முடைய பழைய முதலாளியைப் பார்த்து நிலைமைகளைச் சொல்லி, இன்னும் கொஞ்சகாலத்துக்கு வேலையில் வைத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டால், ஏதாகிலும் உதவி செய்வாரே."

"இந்த முதலாளியுடைய அப்பாதானே அவர்; அவர் மட்டும் நமக்கு என்ன சாதகமாகவா செய்துவிடப் போகிறார்."

"அவர் இளகிய மனசு படைத்தவர், ஏழைகளுக்காகக் கொஞ்சம் கருணை காட்டுபவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எதற்கும் நாளைக்கு ஆபீஸ் முடிந்தவுடன் நேரே அவர் வீட்டுக்குப் போய் கொஞ்சம் பேசிவிட்டு வாயேன்."

தன் கணவன் சொல்வது அவளுக்குச் சரியென்றே பட்டது. மறுநாள் ஆபீஸ் முடிந்து, லாய் நேரே பழைய முதலாளியின் வீட்டை நோக்கிப் புறப்பட்டாள்; ஒரு வேலையாள் அவளை மாடிக்கு அழைத்துச் சென்றான். அங்கே வயது சென்ற அந்த முதலாளி கூனிக் குறுகி, படுக்கையில் படுக்கையாய் சுருண்டு கிடந்தார். பக்கவாத நோயினால் பீடிக்கப்பட்டிருந்த அவர், தெளிவில்லாமல் எதையோ முனகிக்கொண்டிருந்தார். லாயைக் கண்டவுடன் சக்தியற்ற தனது கையை மெதுவாகத் தூக்கி, நாற்காலியில் உட்காருமாறு சைகை காட்டினார். லாய் அருகே இருந்த நாற்காலியை முதலாளிக்கு மிக அருகில் இழுத்துப்போட்டு உட்கார்ந்தாள். குறைந்தது அரை மணி நேரமாக அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வெளி வரவில்லை. மௌனம் சாதிப்பதைத் தவிர அந்த சூழ் நிலையில் அவளால் வேறொன்றும் செய்யத் தோன்றவில்லை.

"முதலாளியிடம் என்ன பேசினாய்?" என்று அவள் கணவன் கேட்டபோது, என்ன சொல்வது என்பதே தெரியாமல், அவள் தடுமாறினாள். உயிருக்காகப் போராடிக் கொண்டிருக்கும் அந்த முது கிழவரிடம் தன்

னுடைய வாழ்க்கைப் பிரச்னையைப்பற்றிப் பேசும் அளவுக்கு அவள் என்ன இதயமற்றவளா? லாயின் மௌனத்தைக் கண்டு அவள் கணவனின் முகம் சோகத்தால் கருவடைந்தது.

மூன்று நாட்களுக்குப் பிறகு, இரவு நேரம், ஆ பெங்-லாயின் கணவன் இருமிக்கொண்டே படுத்திருந்தான். லாய் அவன் நெஞ்சைத் தடவிக்கொண்டே சிறிய மகள் கல்யாணத்தைப்பற்றியும், படித்துக்கொண்டிருக்கும் தன் மகன் தொடர்ந்து இன்னும் ஓராண்டுக்குப் படிக்கவேண்டியதற்கு ஆகவேண்டிய செலவைப்பற்றியும் பேசினுள்.

"நீ இன்னும் இரண்டு வருடங்களுக்குத் தொடர்ந்து வேலையில் இருந்துவிட்டால் நம்முடைய கஷ்டங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். உண்மையில், நீ என் கண்களுக்கு அப்படி ஒன்றும் வயதானவளாகத் தெரியவில்லை. இனி, நீ முதலாளியிடம் பேசும் போதும், அவர் முன்னே நடக்கும் போதும், உற்சாகத்துடனும் தெளிவாகவும் நடந்துகொள். இந்த மாற்றம், உன்னை வேலையிலிருந்து நீக்குவது பற்றி முதலாளியைக் கொஞ்சம் சிந்திக்கத் தூண்டும்" என்ருன்.

"இது நல்லது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? நான் இப்படிச் செய்வதால் என்னுடைய உண்மையான வயது குறைந்துவிடவாபோகிறது?"

"ஏன் முடியாது? மலாயன் பேங்கிலே வேலை செய்கிருளே நம்முடைய பக்கத்துவீட்டு அம்மாள், அவளுக்கு உன்னைவிட குறைந்த வயது என்ரு நினைத்துக்கொண்டிருக்கிருய்? பார்க்கப்போனுல் உன்னைவிட இரண்டொரு வயது அதிகமாகத்தான் இருக்கும். ஒரு நரைமயிரைக் கூடக் காணேமே! இது எப்படி அவளுக்கு முடிந்தது?"

"அவள் வசதியான குடும்பத்திலிருந்து வந்தவள். அதோடு மூன்றே குழந்தைகளைத்தான் பெற்றிருக்கிருள்.

ஆபீஸ் போய் வருவதைத்தவிர வேறு எந்த வேலையையும் செய்ய அவள் புருஷன் விடுவதில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா? ... எல்லாம் வேலைக்காரியே பார்த்துக்கொள் கிருள்."

"இதுவெல்லாம் ஒரு பெண்ணுடைய அழகையும் சுறு சுறுப்பையும் குறைத்துவிடும் என்று நீ நினைக்கிருயா?"

"என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?"

"உன் சின்ன மகளுக்குக் கல்யாணம் நடக்கவேண்டி யிருக்கிறது. பையனுடைய படிப்புக்கு வேறு பணம் வேண்டும். அவன் படித்துவந்துவிட்டால், நம்முடைய கஷ்டமெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். உன்னுடைய பெரிய மகள் வேறு தன் மூன்ருவது பிள்ளைப் பேற்றுக்கு இங்கு வரப்போகிருள். அவள் இங்கு வந்து மூனு நாலு மாதம்போல் தங்குவாள்; அவளுக்கு வேண்டிய தெல்லாம் செய்யவேண்டும்."

லாயிக்கு, துயரப் பெருமூச்சு ஒன்றை விடுவதைத் தவிர வேருென்றும் செய்யத் தோன்றவில்லை.

* * *

அடுத்த திங்கட்கிழமை, லாய், ஒன்றிரண்டு முளைத் திருந்த தன் நரைமயிரை கறுப்புச்சாயத்தால் மறைத்துக் கொண்டாள். இருபது வயது குமரியைப்போல குதியுயர்ந்த காலணி அவள் கால்களை அலங்காரம் செய்தன. அவ ளுடைய புதிய தோற்றம், சக வேலையாட்கள் சினமூட்டும் ஏளனச் சொற்களைப் பேசும்படிச் செய்தது. "நாள் நெருங்க நெருங்க, லாய் குமரியாகிக் கொண்டே வரு கிருள்!" என்று யாரோ சொன்னது அவளை நாணிக் குனியும்படிச் செய்துவிட்டது. எனினும் இவைகளை அவள் லட்சியம் செய்யவில்லை. குமரிகளிடையே ஊடியாடி, அவர்களுடைய பழக்கவழக்கங்களை திரும்பவும் பின்பற்றத் தொடங்கினுள்.

தான் புதிதாக வாங்கிய காலணியை லாய் அடிக்கடி கவனிக்கத் தொடங்கினாள். குறிப்பாக, மாடியிலிருந்து கீழே இறங்கும்போது அப்படிக் கவனித்துக்கொள்வது அவளுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. ஒருநாள் மாடியிலிருந்து கீழே இறங்கி வரும்பொழுது, முதலாளி ஜேம்ஸ் வாரன் கீழே இருந்து மாடிக்கு வர முகப்பில் வந்து நின்றார். முதலாளியைக் கண்டவுடன், கடைசி மூன்று படிகளையும் தாண்டிவிடவேண்டும் என்ற முயற்சியில், லாய் அவசரமாக காலெடுத்து வைத்தாள். குதியுயர்ந்த அந்தச் சப்பாத்து சிமிண்டு தரையில் பதியாமல் வழுக்கிவிட்டது. லாய் கீழே விழுந்துவிடும் சமயம் முதலாளி ஜேம்ஸ் வாரன் தாங்கிப் பிடித்து உதவி செய்துவிட்டு, "இந்த வயதில் மாடிப்படிகளில் ஏறும்போதும் இறங்கும்போதும் கவனமாக இருக்கவேணடும்; தெரிகிறதா" என்றார் அனுதாபத்துடன்.

எதிர்பாராத இந்த நிகழ்ச்சியால் லாயின் உற்சாகம் வெகுவாகப் பாதிக்கப் பட்டுவிட்டது. 'இந்த வயதில்' என்றாரே, அது என்ன அர்த்தம்? நாளுக்கு நாள் வயதாகி பலகீனமாகிக்கொண்டுவருகிறாள் என்பதை இடித்துக் காட்டுகிறாரோ? 'இந்த வயதில்' என்பது ஐம்பத்தைந்து வயது என்று, அர்த்தமா?

இந்தச் சம்பவத்தை வீட்டிலே தன் கணவனிடம் சொன்னபோது, தனது திட்டங்கள் குலைந்து போவதை அவனால் சகித்துக்கொள்ள முடியவில்லை, "சந்தேகமே இல்லை, அவர் உன் வயதைத்தான் குறிப்பிட்டிருக்கிறார். இதை மனதிலேயே வைத்துக்கொண்டு, மேலும் இரண்டு வருஷத்துக்கு உன்னை வேலையில் வைத்துக்கொள்வதற்கு கருணை காட்டமாட்டார்" என்றான். "அது சரி, அந்தப் படியை தாண்டிக்குதிப்பதற்கு உனக்கு என்ன வந்தது?"

"அந்த நேரத்தில்தான் முதலாளியும் எதிரே வந்துகொண்டிருந்தார்; நான் என்ன செய்ய?"

"சரி, கொஞ்ச நாளைக்கு முதலாளியின் கண்களுக்குத் தென்படாமல் இரு, இதை அவர் மறந்துவிடும்வரை நீ மறைந்தே இரு" என்றான்.

முன்போல முதலாளியுடன் தொடர்புகொள்வதுபோல எவ்வித அசம்பாவிதமும் நடந்துவிடக்கூடாது என்பதில் லாய் மிகவும் எச்சரிக்கையாய் இருந்தாள். ஆனால், அவளது துரதிர்ஷ்டம் அவளைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்தது!

அது காப்பி சாப்பிடும் நேரம்; அக்கவுண்டனிடம் எதையோ பேசுவதற்காக முதலாளி அவசரமாக அந்த அறையினுள் நுழைந்ததை லாய் கவனிக்கவில்லை. அந் நேரத்தில் அவள் ரொட்டியுடன் காப்பி அருந்திக்கொண்டிருந்தாள். மானேஜர் தன் அருகாமையிலே நின்றுகொண்டு அக்கவுண்டனிடம் எதையோ வாங்கி, அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக்கொண்டிருந்ததை எதிர்பாராமல் கண்டவுடன் அவளுக்கு திகில் என்றாகிவிட்டது. வாயில் மென்று கொண்டிருந்த ரொட்டியை ஒரே தடவையில் விழுங்கிவிட வேண்டும் என்று முயன்றாள். ஆனால், அது அவள் தொண்டையில் சிக்கிக்கொண்டு பெரிய இருமலை உண்டாக்கியது. இதுதான் சமயமென்று எல்லோரும் தங்கள் பேனாவை கீழே போட்டுவிட்டு அவளையே உற்றுப்பார்க்கத் தொடங்கினார்கள்! மானேஜர் வினயமாகக் கேட்டார்: "கொடுமையான இருமலாக இருக்கிறதே ... ஏன், நம்முடைய ஆபீஸ் டாக்டரை பார்த்துவிட்டு வரக்கூடாது?"

லாய், இதை தன் கணவனிடம் சொல்லிக் கொள்ளவில்லை. மானேஜரின் அந்த வார்த்தைகள் அவளது வெம்பிப்போன மனதை அரித்து வேதனையை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

"கொடுமையான இருமல் என்றால், என்ன அர்த்தம்? எனக்கு வந்த இருமல் காசநோயுள்ளவள் இருமுவதுபோல் இருந்ததா? மானேஜர் அதற்குத்தான் அப்படிச் சொன்னார்

என்ருல் இன்னும் இரண்டு வருடங்களாவது வேலையிலிருக்க வேண்டும் என்ற நம்பிக்கைக்கு ஒரு கும்பிடு போட்டுவிட வேண்டியதுதான்" — லாய் நம்பிக்கையை இழந்து பிதற்றினுள்.

* * *

சில நாட்களுக்குப் பின்னர், அந்த ஆபீஸ் மகிழ்ச்சியால் ஆரவாரமாகிக் கொண்டிருந்தது. கம்பெனியின் ஐம்பதாண்டின் நிறைவை கொண்டாடுவதற்காக, அதன் சரித்திரத்திலேயே சிறப்பாகக் குறிப்பிடும் அளவுக்கு ஒரு போட்டிப் பந்தயத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

"முதியவர்களுக்கான நடைப்போட்டியில் நீங்களும் கலந்துகொண்டால் நல்லதாச்சே" — ஒரு குமரிப்பெண் லாயிடம் இப்படிக் கூறினுள். தொடர்ந்து, "ஒரு வேளை நீங்கள் முதலாவதாக வந்துவிட்டீர்கள் என்ருல், முதலாளி உங்களைப் பார்ப்பார். நீங்கள் நல்ல உடல் நலத்துடன் இருக்கிறீர்கள் என்பதற்கு உங்கள் வெற்றியே பெரிய சாட்சியாக இருக்குமே!" லாயிக்கு இந்த குமரியின் யோசனை சரியென்றே பட்டது. அவள் கணவனும் இதற்கு உற்சாகத்துடன் ஆமோதித்தான்.

"நீ எவ்வளவு தூரத்துக்கு நடக்கவேண்டும்?"

"அரை மைல்."

"உன்னுல் நடக்க முடியும் என்று நினைக்கிருயா?"

"நடந்தே ஆகவேண்டும். இல்லையென்ருல், இதில் பங்கெடுத்துக் கொள்வதில் அர்த்தமேயில்லை." தன் குடும்பச் சூழ்நிலையைப் புரிந்து, பந்தயம் சிரமமாக இருக்கும் என்று தெரிந்தும் லாய் அப்படிப் பேசினுள்.

மறுநாள் காலையிலிருந்து லாய் தனது நடைப்போட்டிக்கான பயிற்சியை ஆரம்பித்தாள். இரவு இரவாகவே இருந்து — எங்கும் பனிபெய்து கொண்டிருக்கும் அத்தனைக் காலையிலேயே — லாய் நடந்தாள்; இப்படிப் பல நாட்கள்!

தன் குடும்பம் மானத்துடன் வாழவேண்டும் என்பதில் அந்தத் தாய்க்கு இருந்த அக்கரை, மெய்சிலிர்க்க வைத்தது!

ஒரு நாள் அதிகாலை; லாயின் இருமல் கணவன் அவளை எழுப்பிவிட்டு, எவ்வளவு தூரத்துக்கு தன் நடைப் போட்டிக்கு தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருக்கிருள் என்பதைக் காண, ஒரு தொப்பியை எடுத்துத் தலையில் மாட்டிக்கொண்டு அவள் கூடவே சென்ருன். அவன் நடந்த பொழுது "டொக் டொக்" என்ற சப்தம் எங்கும் எதிரொலித்து, "அலாரம்" வைத்துத் தூங்கிக்கொண்டிருந்தவர்களைக் குறிப்பிட்ட நேரத்துக்கு முன்பே எழுப்பிவிட்டுவிட்டது. திடலுக்கருகே ஒரு சிறிய மரத்துக்கடியில் போடப்பட்டிருந்த நீண்ட விசிப்பலகையில் உட்கார்ந்தபடி தன் மனைவியின் நடைப்பயிற்சியை நோட்டம் விட்டுக் கொண்டிருந்தான். அவள் ஒரு வட்டம் சுற்றி அவனருகே வரும்பொழுது அவள் நடையைப் பார்த்து வியப்படைந்து போனுன்.

"லாய், நீ என்ன நடை நடக்கிருய்? இப்படி நடந்தால் உனக்குப் பரிசு கிடைக்குமென்று நினைக்கிருயா?"

அவள் கணவன் இப்படிச் சொன்னவுடன் தன் நடையை வேகமாக்கினுள், லாய். ஒன்று, இரண்டு என்று மூன்று வட்டங்கள் சுற்றியபின்னர், அவளால் முடியவில்லை. மூச்சுத் திணறலுடன் தன் கணவன் அருகே வந்து உட்கார்ந்தாள்.

"நீ இன்னும் அரை மைல் கூட நடக்கவில்லையே, லாய்?"

"இனிமேல் என்னுல் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது."

"வெட்கம்! ஞாபகமிருக்கட்டும், பையன் படிப்புக்குப் பணம் வேண்டும். உன் சிறிய மகளுக்கு கல்யாணம் ஆக

வேண்டியிருக்கு. பெரிய மகள் பிரசவிப்பதற்காக இங்கு வந்து தங்கப் போகிருள். கஷ்டப்பட்டு இன்னும் கொஞ்ச தூரம் நட. போட்டிக்கு இன்னும் இரண்டு நாட்கள் தான் இருக்கு."

லாய் தன் வாய் மூலமாக சுவாசித்துக்கொண்டே சிரமப்பட்டு மேலும் மூன்று சுற்றுச் சுற்றிஞள். இனிமேல் ஓர் அடி எடுத்து வைத்தால்கூட கீழே விழுந்துவிடுவோம் என்று தெரிந்தவுடன், தடுமாறியபடி தன் கணவன் அருகே வந்து உட்கார்ந்து, "ஐயோ ஆண்டவா, இனிமேல் என்னுல் முடியாது — நான் ஒரு குமரி ஆகவே முடியாது!" என்று அரற்றிஞள்.

அவனுல் ஒன்றுமே சொல்ல முடியவில்லை. அவளேயே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். லாய் தன் தலையை கீழே தொங்கப் போட்டுக்கொண்டு, தன் இரு கைகளேயும் தன் கால் முட்டிகளில் அழுத்தியபடியே, "நான் வயதாகி விட்டேன் என்பதில் சந்தேகமேயில்லை" என்ருள். அவள் குரலில் துயரம் பொங்கியது.

* * *

பந்தய நாளன்று லாய் தன் கணவனுடன் திடலுக்குச் சென்ருள். திடலேச்சுற்றி ஒதுக்குப்புறமாக பந்தல் ஒன்று போடப்பட்டிருந்தது. ஒலிபெருக்கி வழியாக இசைகள் ஒலித்துக் கொண்டிருந்தன. கணவனும் மனேவியும் தங்களுக்கு இரண்டு நாற்காலிகளேத் தேடிப் பிடித்து உட்கார்ந்தனர்.

நடைப்போட்டியில் பரிசு பெறவேண்டும் என்ற ஆவலில் சரியாகக்கூட சாப்பிடாமல் இருந்த லாய் "சுரீர்" என்று அடித்த வெயிலில் நாவரண்டு தவித்தாள். இனிப்பு நீர் வழங்கும் இடத்துக்குத் தன்னேயறியாமலேயே நடந்து சென்ற லாயை அவள் கணவன் பின்தொடர்ந்து சென்று, "ரொம்பவும் குடித்துவிடாதே" என்று சொல்லிவிட்டுத் திரும்பிஞன்.

ஒரு முழு போத்தல் ஆரஞ்சுத் தண்ணீர் அவள் தாகத்தை ஒருவாறு தணிக்க உதவியது. சூரிய ஒளி இப்போது மிதமாக இருந்ததுடன் இலேசான காற்றும் வீசத் தொடங்கியது. லாய் மெல்ல எழுந்து அங்குமிங்கும் நடந்தாள். ஈப்போ நகரசபைத் திடலுக்கும், செயின்ட் மைக்கல் பள்ளிக்கும் இடையே செல்லும் சாலையில் கார்கள் ஒன்றையொன்று துரத்திக் கொண்டிருந்தன. அதையடுத்து திடல் நெடுகலும் ஓங்கி வளர்ந்திருந்த சவுக்கு மரத்தின் "உஸ்" என்ற சப்தம் காற்றின் வேகத்தை அளவெடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது.

சாலையிலே சாரை சாரையாக ஓடிக்கொண்டிருந்த கார்களில் பெரிய கார் ஒன்று திடலுக்குள் நுழைந்ததும், அங்குமிங்கும் திரிந்து கொண்டிருந்த கூட்டம் திடீரென்று அந்தப் பெரிய காரை மொய்த்துக் கொண்டது. வயது சென்ற ஓர் உருவம் காரை விட்டிறங்கியதும் லாய் தன்னை யறியாமலேயே கூட்டத்திலொருத்தியாகி முதலாளியிடம் நெருங்கிவிட்டாள்.

"நமது தேர்ச்சிபெற்ற போட்டியாளர்களில் இவளும் ஒருத்தி" என்று யாரோ ஒருவர், நன்றியுணர்வுள்ள அந்தப் பழைய முதலாளிக்கு லாயை அறிமுகப்படுத்தினர்கள். அது வேறு யாருமல்ல; தற்போதைய முதலாளிதான் — அதாவது அந்தப் பழைய முதலாளியின் மகன்.

"ஓ, அப்படியா! லாய், இந்தப் போட்டியில் நீ முதலாவதாக வந்துவிட்டால், உனக்குச் சிறப்புப் பரிசு ஒன்று — அதாவது நீ கேட்கும் பரிசு ஒன்று தரப்போகிறேன்" என்ருர் முதலாளி. லாய்க்கு மகிழ்ச்சி தாளவில்லை. அவருக்குக் கைகுலுக்கி நன்றி தெரிவித்துவிட்டு, தன் இருப்பிடத்துக்கு வந்தாள்.

"முதலாளி என்ன சொன்னர், லாய்?" என்று கேட்டான் அவள் கணவன் மிகுந்த ஆவலுடன்.

"போட்டியில் நான் முதலாவதாக வந்தால் நான் கேட்கும் பரிசு ஒன்றை தரப்போவதாகச் சொன்னார்" என்றாள். அவள் குரலில் அவ்வளவு உற்சாகம் தொனிக்க வில்லை.

"நீ கண்டிப்பாக வெற்றிபெற்றே ஆகணும். கடவுளே, என் மனைவி எப்படியாவது முதலாவதாக வந்து, முதலாளி என்ன பரிசு வேண்டும் என்று கேட்கும்போது, இன்னும் இரண்டு வருஷங்கள் வேலையில் இருக்கவேண்டும் என்று என் மனைவி கேட்க வேண்டும். ஆண்டவா, இந்த ஒரு முறை மட்டும் கருணை காட்டு."

"ஆண்டவனுக்குத் தெரியும் நம் கஷ்டம். நீங்கள் ஏன் இப்படி அரற்றிக் கொள்கிறீர்கள்?" என்றாள் லாய். அவள் கண்கள் இரண்டு சிறிய 'குள'ங்களாகக் காட்சி யளித்தன. தன் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டே "ஆண்டவன் நம்மை ஏமாற்றமாட்டார்" என்றாள்.

கடைசியாக, முதியவர்களுக்கான நடைப்போட்டியும் வந்தது. திடலை இரண்டு முறை சுற்றினால் ஒரு மைல் என்பது கணக்கு. இந்த வேடிக்கையைத் தவறவிட்டு விடக்கூடாது என்று, திடலைச் சுற்றியும் பந்தலிலும் கூடி யிருந்த அந்தப் பெருங்கூட்டம் ஒன்று திரண்டு, திடலில் "வேலி" போட ஆரம்பித்தது.

நடப்பதற்கான துப்பாக்கிச் சப்தம் வெடித்தது. கூட்டம் கூச்சலிட ஆரம்பித்ததுடன், போட்டியாளர்களைப் போல் நடந்து காட்டி, அவர்களுக்கு உற்சாக மூட்டியது. முதலாவது சுற்றின் கால்வாசி தூரம் வரை லாய் எல்லா ரையும் முந்திக்கொண்டு நடந்து வந்தாள். எனினும் படிப் படியாக மற்றவர்கள் அவளை முந்திவிடும் நிலைமைக்கு வந்து விட்டனர். முதலாவது சுற்று முடியும் தருவாயில் லாய் எல்லாருக்கும் பின்னால் தங்கிவிட்டாள்.

நம்பிக்கை இழந்த நிலையில் லாயின் கண்கள் தன் கணவனைத் தேடின; அவனைக் காணோம். தன் கணவனைக்

காணுவதற்குப் பதிலாக, முந்திக்கொண்டு சென்றவர்களைப் பார்த்து பழைய முதலாளி ஆர்வமுடன் கை தட்டுவதைத் தான் அவளால் பார்க்க முடிந்தது. அந்தக் காட்சி கொஞ்சநஞ்சமிருந்த நம்பிக்கையையும் அவளிடமிருந்து விரட்டியடித்தது. மேலும், அவளுடைய காலியான வயிறு பசியால் கிள்ள ஆரம்பித்தது ; எனினும் அவள் நடந்தாள். அவளது இரண்டு கைகளும், நீண்ட ஒரு மரத்தில் இரண்டு கிளைகள் ஒடிந்து தொங்குவது போல செயலற்றுப் போயின. அவளுக்கு முன்னால் போய்க் கொண்டிருந்தவர்களுக் கிடையே இருந்த தூரம் வரவர நீண்டுகொண்டே போனது. இதற்கிடையில், தன் கணவன் சோர்ந்துபோய் அனுதை யாக நின்றுகொண்டிருந்ததையும் அவளால் பார்க்க முடிந்தது.

"நீ நம்முடைய கனவுகளையெல்லாம் அழிக்கிறாய்" என்றான். அவன் குரல் கடுமையாக இருந்தது. "நட, வேகமாக நட!" என்று முணுமுணுத்தான்.

லாய் ஒரு நீண்ட மூச்சை இழுத்துக்கொண்டாள். தன் கழுத்தை உயர்த்தி வேகமாக நடக்க முயன்றாள். அச்சாணி கழன்றுபோகிற நிலையில் ஒரு பழைய வண்டியின் இரண்டு சக்கரங்கள் நிலைகுலைந்து ஆடுவதுபோல, இரண்டு தோள்களுக்கிடையே அவளது கழுத்தும் தலையும் ஆடின!

அவள் கணவனுக்கு இப்போது சிறிது நம்பிக்கை வந்தது. "ஆ, அப்படித்தான்! தொடர்ந்து நட, நட!" — மூச்சுத் திணறலுடன் கூக்குரலிட்டான். "அங்கே பார், எல்லாரும் உன்னைக் கவனிக்கிறார்கள். உனக்கு வயதாகி விட்டது என்று துணிச்சலுடன் சொன்ன முதலாளிகூட உன்னையே பார்க்கிறார்" என்றான் லாயின் கணவன் பரபரப்புடன். "உம், சீக்கிரம்! உன்னை முந்தப் பார்க் கிறார்கள் ... சீக்கிரம் ... சீக்கிரம்!" என்று கத்தினான் அவன்.

தூண்டில் போடும்போது பெரிய மீன் அதைக் கவ்வும் சமயம் ஒருவித அதிர்ச்சி ஏற்படுமே அதுபோன்ற அதிர்ச்சி அவள் நெஞ்சை அடைத்தது. எங்கிருந்தோ ஒரு வெறி ; அது நடைப்போட்டி என்பதையும் மறந்துவிட்டு ஓடத் தொடங்கினாள் லாய்.

மூச்சுவிடவும் மறந்து முடிவை எதிர்பார்த்துக் காத்திருந்த அந்தப் பெரிய கூட்டம், இப்போது விசில் அடித்து, கைதட்டி ஆரவாரம் செய்தது. லாய் கயிற்றைத் தொட்டு விட்டு தலைநிமிர்ந்து, தன்னை "வயதானவள்" என்று சொன்ன முதலாளியை பெருமையுடன் பார்த்தாள். வெற்றி பெற்றுவிட்டோம் என்ற பூரிப்பு அவளுக்கு. ஆனால், இறுதியில் அவளுக்குப் பரிசு கிடைக்காமல் போனபோது தான், தான் தோற்றுப் போய்விட்டதை உணர்ந்தாள் லாய்.

திடலிலிருந்து வீட்டுக்குத் திரும்பும்போது, "நம்மை ஆண்டவன் ஏமாற்றிவிட்டார் ; நமக்குத் துரோகம் செய்து விட்டார்" என்று அழுதாள். அவள் நொண்டிக் கணவன் ஒன்றுமே பேசவில்லை; இடி விழுந்தவன் போல அசைவற்று இருந்தான்.

* * *

ராஜினுமாக் கடிதத்துடன் மறுநாள் காலை லாய் வேலைக்குச் சென்றபோது, அவளுக்குப் பெரிய "அதிர்ச்சி" ஒன்று காத்திருந்தது.

முதலாளியின் அறைக்குப் போகுமுன் தனது ராஜினுமாக் கடிதத்தை பத்திரமாக தன் பையில் எடுத்து வைத்துக்கொண்டு, முதலாளி தன்னைப் பார்க்க விரும்புவது ஏன் என்ற சிந்தனையுடன் அறையினுள் நுழைந்தாள்.

"நம்முடைய கம்பெனியின் கிளை ஒன்றை ஈப்போவை அடுத்துள்ள தாசேக் தொழிற்பேட்டையில் நிறுவ இருக்கிறோம். அந்தக் கிளை ஆபீசுக்குத் துணை மானேஜர் ஒருவர் தேவைப்படுவதால், நாங்கள் தொழிலாளர் இலாகா விடம், கம்பெனி நிர்வாகம் பற்றிப் படித்த அல்லது படித்துக்

கொண்டிருக்கிற ஒருவர் தேவை என்று கேட்டிருந்தோம். "மாரா" கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிற மூன்று பேர்களுடைய பெயர்களை எங்களுக்கு அறிவித்திருந் தார்கள். அந்த மூன்று பெயர்களில் ஒரு பெயர் உங்கள் மகனாக இருந்ததைப் பார்த்தவுடன், அந்தப் பதவியை உங்கள் மகனுக்கே தரும்படி அப்பா என்னிடம் சொன்னார். இதைச் சொல்லத்தான் உன்னைக் கூப்பிட்டேன்" என்றார், மூச்சு விடாமல் கம்பெனி மானேஜர் ஜேம்ஸ் வாரன்.

தன்னுடைய ஆனந்தத்தை எப்படி விவரிப்பது என்றே லாய்க்குத் தெரியவில்லை. அன்றைக்கு வேலைகூட செய்ய வில்லை. லீவு கேட்டுக்கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டாள்.

வழக்கத்துக்கு மாறாக சீக்கிரம் வந்துவிட்ட தன் மனைவியை, லாயின் கணவன், துயரத்தின் உச்சியில் நின்று கொண்டு காரணம் கேட்டான்.

"என் வயதை என்னால் மறைக்க முடியாததால் ஆண்டவன் நம்மை ஏமாற்றிவிட்டதாக நினைத்தேன். ஆனால், நம்மை அவர் ஏமாற்றவில்லை ... நம் கஷ்டங்களை அவர் மறக்கவில்லை. தித்திப்பான ஒரு செய்தியைச் சொல்லி என் வயதைக் குறைத்து விட்டார். அந்தச் சந்தோஷத் தால் நான் பதினாறு வயதுக் குமரியாகிவிட்டேன்" என்றாள். அந்த நொண்டிக்கிழவனுக்கு அதைப் புரிந்துகொள்ள நீண்டநேரம் பிடித்தது.

லாய் தனது ஐம்பத்தைந்து வயது ஓய்வு நாளை மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

பிணங்கு —
'முல்லை'

# தவிப்பு

காலைப்பொழுது !

ஊர் சுறுசுறுப்பாக இருந்தது.

தவழத் தொடங்கி இருக்கும் சிசு மெல்ல மெல்ல முன்னேறி வருவதைப் போன்று, கிழக்கு மலை முகட்டிலிருந்து வெளிப்பட்ட இளங்கதிரோன் கொஞ்சம் கொஞ்சமாக நடு வானை நோக்கி நடைபயின்று கொண்டிருந்தான்.

அவனது இளஞ்சூடு தெருவில் நடமாடுவோரை லேசாக தகித்துக் கொண்டிருந்தது.

கூடத்தில் அரிசியில் நெல் பொறுக்கிக் கொண்டிருந்தாள் சரசுவதியம்மாள். வாழ்க்கையில் ரொம்ப தோய்ந்து போனவளைப் போன்று அவள் முகத்தில் அங்கங்கே கவலை ரேகைகள் கோடுவிட்டிருந்தன.

தன்முன் நிழல் படிவதைக்கண்டு அவள் தலை நிமிர்ந்து பார்த்தாள். ஏறிட்டு நோக்கிய அவள் விழிகள் ஆச்சரியத்தால் விரிந்து மலர்ந்தன.

அங்கே... !

தங்கம், கையில் மகள் சாந்தியோடு நின்றுகொண்டிருந்தாள். வீடுதேடி வந்திருக்கும் மகளை 'வா'வென்று அழைக்கக்கூட அவள் மனம் முந்தவில்லை. வாசலை ஆவலோடு திரும்பிப் பார்த்தாள்.

வாசல்... ?

வெறிச்சோடி கிடந்தது !

"என்னம்மா தங்கம், உன் புருசன் வரலையா?" என்று சரசுவதியம்மாள் கேட்கும்போதே அவள் குரல் நனைந்து ஈர மாகிவிட்டது.

தங்கம், தாயை எரிச்சலோடு நோக்கினாள்.

"என்னம்மா, நான் கேக்கறேன்..."

"வரலே!" தங்கத்தின் வார்த்தையில் சூடு பறந்தது.

"அப்ப, நீ தனியாவா வந்தே?"

"ஏன், வரக்கூடாதோ...!"

சரசுவதியம்மாள் வாயடைத்துப் போய்விட்டாள். ஏதுக்கு எது பதில் சொல்றது என்று உணராமல் எடுத்தெ துக்கெல்லாம் எரிந்துவிழும் தன் மகளிடம் வார்த்தையை அவள் வளர்த்த விரும்பவில்லை.

தங்கம் அறைக்குள் போய்விட்டாள். குழந்தை சாந்தி, "பாத்தி...பாத்தி!" என்று சரசுவதியம்மாளைப் பிடித்து இழுத்தது. சாந்தியைத் தூக்கிக் கொண்டு அவள் தங்கத் திடம் வந்தாள்.

தங்கம், படுக்கையில் விழுந்து கேவிக் கேவி அழுது கொண்டிருந்தாள். அந்தக் காட்சியைப் பார்த்ததும் சரசு வதியம்மாளின் பெத்த வயிறு துடித்தது.

"என்னம்மா தங்கம், என்ன நடந்தது?" ஏங்கிட்ட சொல்றதுக்கு என்னம்மா?" அவள் தங்கத்தின் கூந்தலை கோதியவாறு அன்பொழுகக் கேட்டாள்.

தாயை கட்டிப்பிடித்துக்கொண்டு தங்கம், 'கோ' வென்று கதற ஆரம்பித்துவிட்டாள். சரசுவதியம்மாளுக்கு பெரும் வேதனையாக இருந்தது. அவள் உள்ளத்தில் பய மென்னும் இருள் சிறிது சிறிதாக முற்றுகை இட்டது. அதே வேளையில் அவள் நெஞ்சில், 'என்ன நடந்துச்சோ, ஏது நடந்துச்சோ' என்ற தவிப்பு அவளை அரிக்கத் தொடங் கியது.

“என்னம்மா, நான் கேக்கறேன்...?” அந்தத் தாயால் மனத்தை கட்டிப்போட முடியவில்லை. “தங்கம்...!”

“அம்மா, என்னை ஒண்ணும் கேக்காதேம்மா...ஒண்ணும் கேக்காதே!”அவள் அழுகைக்கிடையே சொன்னாள்.

“தங்கம்...!”

“அம்மா!” நெருப்பு குண்டத்திலிருந்து வெளிப்பட்ட இரும்புத்துண்டு போன்றிருந்தது அந்தச் சொல். “என்னை கொஞ்ச நேரம் அழவிடம்மா ... அழவிடம்மா!” அவள் அழுகை பெரும் ஓலமாகக் கேட்டது.

“நல்ல பொண்ணுடியம்மா நீ!” சரசுவதியம்மாள் ஆத்திரத்தோடு வந்துவிட்டாள்.

மத்தியானம். அந்த இருவரும் சாப்பிடவில்லை. ஆளுக்கொரு மூலையில், கன்னத்தில் கைவைத்தபடி அமர்ந்திருந்தனர்.

சாந்தி, விளையாடிக்கொண்டிருந்தாள்.

கூரையைப் பார்த்தபடி அமர்ந்திருந்த அந்த இருவரது சிந்தனை வளையங்கள், ஒன்றன்பின் ஒன்றைக் கோர்க்கத் தொடங்கின.

தங்கம் — பெயரில்தான் தங்கமாக இருந்தாள். குணத்தில் தகரமாக அவள் விளங்கினாள். பிடிவாதமும், முன் கோபமும் அவள் கூடவே பிறந்திருந்தன.

வாய்க்கு வாய் பதில் சொல்லாவிட்டால் அவளுக்குத் தூக்கமே பிடிக்காது.

பெண்ணுக்குரிய அம்சங்களில் அடக்கமும் ஒன்று; வாய் அடக்கம் இல்லாத பெண்ணை எந்த ரகத்தில் சேர்ப்பது. தங்கத்துக்கு வாய் வேண்டியமட்டும் நீண்டிருந்தது.

மலர், மலர்ந்தவுடன் கெட்டுவிடுகிறது; மனித இனமும் அப்படித்தான் — வாயைத் திறந்தாலே கெட்டுக் குட்டிச் சுவராகி விடுகிறது. இது ஏன் அந்தப் பெண் தங்கத்துக்கு விளங்கவில்லை!

ஆணுக இருந்தால், அடித்து ஒடுக்கிவிடலாம். பெண்ணை கைநீட்டி அடிக்க முடியுமா? 'ஆணை அடித்து வள. பெண்ணை அடக்கி வள' என்றுதானே மொழி வழக்கில் இருந்து வருகிறது.

எல்லாம் போகப் போகச் சரியாகிவிடும் என்றுதான் சரசுவதியம்மாள் காலத்தை ஓட்டிக்கொண்டிருந்தாள்.

தங்கம், பருவம் அடைந்த பிறகும், அவள் குணங்கள் அப்படியே மாருமல் இருந்தன. சரசுவதியம்மாள் ரொம்பவும் நொந்து போய்விட்டாள். 'இந்தப் பெண்ணை எப்படி ஒருவன் கையில் துணிஞ்சு பிடிச்சுக் கொடுக்கமுடியும்?' என்ற தவிப்பு அவள் உள்ளத்தில் புழுப்போல நௌியத் தொடங்கியது. தங்கம், மற்றெல்லா வகையிலும் அடக்கமாகத்தான் இருந்தாள். அவள் கோபம், அந்த வாய், அப்பப்பா! அதை நினைத்துப் பார்க்கவே சரசுவதியம்மாளின் உடல் நடுங்கும்.

மகளைக் கண்டிக்கவேண்டுமென்று ரொம்பத் துணிச்லோடுதான் தங்கத்திடம் போவாள். தங்கத்தின் ஒரு பார்வைக்கு அவளால் பதில் சொல்லமுடியாது. பேசாமல் அடங்கிப் போய்விடுவாள். 'என்ன பண்றது; கண்டித்து அடக்கி வளர்க்கவேண்டிய வயசை விட்டுட்டு, இப்ப அடக்கி ஆளப்பார்க்கிறது என் தப்புத்தானே!' என்று தன்மீதே அவள் குற்ற இதழ் வாசித்துக்கொள்வாள்.

தங்கம் அம்மாவின் செல்லம். அந்தச் செல்லத்தால் தான் அவள் தன் போக்கில் மனத்தை வளர்த்து, அவளும் வளர்ந்து வந்தாள் என்று சொல்லலாம். ஒருநாள்கூட தங்கத்தைச் சரசுவதியம்மாள் கை நீட்டி அடித்ததும் இல்லை. கடுமையாகப் பேசியதும் கிடையாது. அந்த அளவுக்குத் தங்கத்திடம் அவள் பாசமும் அன்பும் வைத்திருந்தாள். அதுக்குக் காரணம் இருக்கத்தான் செய்தது.

சரசுவதியம்மாளுக்குக் கல்யாணம் நடந்து, எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு பிறந்தவள் தங்கம். தங்கத்துக்குப்

பிறகு அவளுக்கு வேறு குழந்தைகளே பிறக்கவில்லை. ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு ! அது செல்லக் குழந்தையாக வளர்ந்ததில் வியப்பில்லையே !

தங்கத்தின் குணத்தையும், முன் கோபத்தையும் அறிந்திருந்த அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அவளைப் பெண்கேட்கவே முன்வரவில்லை. அப்படி தப்பித்தவறி வந்தாலும், பெண் பார்த்துச் சென்றதோடு சரி; அதன் பிறகு அந்த வீட்டை எட்டிப்பார்க்கவே இல்லை.

சரசுவதியம்மாள் இடிந்து போய்விட்டாள் !

என்ன செய்வது ? நம்மவர்கள் கண்ணைவிட காதைத் தானே நம்புகிறார்கள்.

'முருகா ! நீதான் என் பெண்ணுக்கு ஒருவழி காட்டணும்' என்று அவள் வேண்டாத நேரமில்லை.

பாவம்! பெண்ணைப் பெத்தவளுக்குத்தான் எத்தனை விதமான தவிப்பு: சின்னவயதில் அதை அடக்கி ஒடுக்கி வளர்க்க வேண்டுமென்ற தவிப்பு; பருவம் அடைந்த பிறகு, அவளை ஒருத்தன் கையில் பிடித்துக் கொடுக்கிற வரையிலும் ஊரார் சொல்லுக்கு ஆளாகிவிடக்கூடாதே என்ற தவிப்பு; கல்யாணம் முடிந்து, போகிற இடத்தில் நல்லபேரு எடுக்கணும், கணவனோடு மகிழ்ச்சியா குடும்பம் நடத்தணும் என்ற தவிப்பு ! ...

அப்பப்பா ! பெண்ணைப் பெத்தெடுத்திருக்கும் தாயின் தவிப்பை எழுத்திலோ, பேச்சிலோ காட்ட முடியாது தான் !

காலமென்னும் மரத்திலிருந்து நாட்களென்னும் இலைகள் உதிர்ந்து கொண்டிருந்தன ! தங்கம் பிறந்த வீட்டிலேயே இருந்தாள். பெண் பிறந்தவுடன், அது நமக்குச் சொந்தமில்லை என்ற முடிவுக்கு வருவது யாவரும் அறிந்த உண்மை. ஆனால், தங்கத்தைச் சொந்தம் கொண்டாட ஒருவரும் முன்வரவில்லை !

'ஆண்டவனே! எங்களைச் சோதிக்க நினைக்காதே. நாங்கள் தாங்கமாட்டோம்' என்று ஆண்டவனிடம் பொறுப்பை விட்டுவிட்டாள் சரசுவதியம்மாள்.

ஆண்டவன் அவளை ஏமாற்றவில்லை. அவள் வழிபாட்டுக்குப் பலன் கிடைத்தது.

பக்கத்து பத்து மைல் தூரத்திலிருந்த சந்தர், தங்கத்தைப் பெண்கேட்டு வந்தான். எங்கே தொலை தூரத்தில் மாப்பிள்ளை அமைந்துவிடப் போகிறதோ என்று சரசுவதியம்மாள் தவித்துக்கொண்டிருந்தாள். அப்படி விழைந்தாலும் முடித்துவிடும் எண்ணத்தோடுதான் இருந்தாள். பையன் பக்கத்தில் என்றறிந்ததும் அவள் மகிழ்ச்சியை அளவிடவே முடியவில்லை!

இந்த வரன் எந்த ஒரு தடங்கலும் இல்லாமல் முடிய வேண்டுமென்று அவள் நிமிடத்துக்கு ஒருமுறை தெய்வத்தை வழிபட்டு வந்தாள்.

கல்யாணம் நல்லமுறையில் நடந்து முடிந்தது!

தங்கம் சந்தரோடு அவன் வீட்டுக்குப் போய்விட்டாள். அந்த மட்டோடு சரசுவதியம்மாளின் கடமை முடிந்துவிட்டதா என்ன...? 'எடுத்தெதுக் கெல்லாம் கோபப்பட்டு, பொறுமையாகப் பேசத் தெரியாது படபடன்னு பொறிந்து கொட்டும் இந்தப் பெண்ணு அங்கு என்னமா குடும்பம் நடத்தப் போவுதோ!' என்ற தவிப்பைச் சரசுவதியம்மாளின் நெஞ்சில் விட்டு விட்டுத்தான் தங்கம் போயிருந்தாள்.

தங்கத்தின் குணங்களை மூன்று மாதத்திற்குள் நன்ருக புரிந்துகொண்டான் சந்தர். அதற்காக அவளை அவன் வெறுக்கவில்லை, அவள் முன்கோபத்தைத்தான் வெறுத்தான்.

அதோடு அவள் எரிந்து எரிந்து விழுவது ஒன்றுதான் அவனுக்கு அறவே பிடிக்கவில்லை. 'இந்தப் பெண்ணுக்கு

அடக்கமாக பேசத் தெரியலேயே' என்று அவன் மனம் சலித்துக் கொண்டது.

புதுசுதானே! போகப் போகச் சரியாகிவிடும் என்று ஆறுதல் கொண்டான்.

தங்கம், நாவை அடக்கிக் கொள்ள முயன்றதாகத் தெரியவில்லை. பிறந்த வீட்டில் எப்படி இருந்தாளோ, அப்படியேதான் புகுந்த வீட்டிலும் தன் கைவரிசையை காட்டிக் கொண்டிருந்தாள்.

நிலத்திற்கேற்ப மழை நீரும் மாறிவிடுகிறது; அப்படித் தானே பெண்ணும், பிறந்த வீட்டில் எப்படியிருந்தாலும், புகுந்த வீட்டில் தன் போக்கையும் பழக்க வழக்கங்களையும் மாற்றிக் கொள்ள வேண்டும். இது ஏன் தங்கத்துக்குப் புரியமாட்டேங்குது! சரசுவதியம்மாளும் எவ்வளவோ புத்திமதிகள் சொல்லித்தான் அனுப்பிவைத்தாள். அதை இந்தக் காதில் வாங்கி, அந்தக் காதில் விட்டுவிட்டாளே தங்கம்!

அன்று — என்னதான் நடந்தது!

காலையில், சந்தர் அலுவலகம் புறப்படும்போது தங்கம் அவன் முன்னே வந்து நின்றாள். "என்ன தங்கம்!" என்றான்.

"இன்னிக்கி படத்துக்குப் போவோமே!... நல்ல படமாம். பார்த்தவங்கள்ளாம் சொல்றாங்க!" என்றாள்.

"வேண்டாம் தங்கம். திங்கட்கிழமை ... ஆபீஸில் நிறைய வேலை இருக்கும். நாளைக்குப் போகலாம். இன்னிக்கி நான் நேரங் கழிச்சுதான் வருவேன்" என்றான்.

"அப்படின்னா, பக்கத்து வீட்டு பார்வதியோடு நான் மட்டும் போய்ட்டு வந்திடுறேங்க. அவங்க போறாங்களாம் ..." அவள் முடிக்கவில்லை.

"தங்கம்!" அவன் போட்ட அதட்டலில் வீடே 'கிடுகிடு' என்று நடுங்கியது. தங்கம் பயந்ததாகத் தெரியவில்லை.

" அந்தப் பார்வதியோடு சினேகம் வெச்சுக்காதே, வெளியில்போக நினைக்காதேன்னு உனக்கு எத்தனை தரம் சொல்லி இருக்கேன் ? "

" ஏங்க, அவங்க நல்லவங்கதானே ... ! "

" அது உன் வரையில் இருக்கலாம். நான் உன் கணவன். நான் சொல்றதை நீ கேக்கத்தான் வேணும். அந்தப் பார்வதியோடு நீ உறவு வெச்சுக்க நினைச்சேன்னு, அது நம்ம உறவைப் பிரிச்சுடும்ங்கிறதை உனக்குக் கடைசியா எச்சரிக்கிறேன். " அவன் ஆத்திரத்தோடு வெளியேறி விட்டான்.

பார்வதிமேல் சந்தருக்கு நல்ல எண்ணம் கிடையாது. அவளும் அப்படிப்பட்ட பெண்தான் ! அதனால்தான் அவள் உறவு தங்கத்துக்கு வேண்டாமென்று ஆரம்பத்திலிருந்து இன்றுவரை எச்சரித்து வந்திருக்கிறான். தங்கம் கேட்டால் தானே. கணவன் அந்தாண்ட போனதும், அவள் பார்வதியைத் தேடிக்கொண்டு போய்விட்டாள்.

மாலையில் தலைவலி என்று சந்தர், நேரத்தோடு வீட்டுக்கு வந்துவிட்டான். வீடு பூட்டிக் கிடந்தது. குழந்தை சாந்தியை அந்த வீட்டில் குடியிருந்த பாட்டி ஒருத்தியிடம் விட்டுவிட்டு தங்கம் பார்வதியோடு படத்துக்குப் போயிருந்தாள். விசயத்தை அறிந்து சந்தர், எரிமலையாக குமுறிக் கொண்டிருந்தான்.

சந்தரை அவ்வளவு விரைவாக தங்கம் எதிர்பார்க்கவில்லைதான் ! அவனை வீட்டில் பார்த்ததும் அவள் உடம்பு வியர்த்துக் கொட்டியது. குளிரில் நடுங்குவதுபோல ஒதறத் தொடங்கியது அவளுக்கு.

" எங்கே போயிருந்தே ? " சந்தரின் குரல் கொடூரமாக இருந்தது.

" பட ... த் ... து ... க்கு ... "

" யாருடன் ? "

"பா ... ர் ... வ ... தி ..." அவள் முடிக்கவில்லை.

நாலு அறை பளீர் பளீர் என்று மாறி மாறி அவள் கன்னத்தில் விழுந்தது. மின்னல் தெறித்தது போன்றிருந்தது தங்கத்துக்கு. "காலையில் அவ்வளவு சொல்லியிருந்தும், நீ எவ்வளவு தூரம் துணிஞ்சிருந்தா, குழந்தையைத் தனியா விட்டுட்டு, அந்தப் பார்வதியோடு படத்துக்குப் போயிருப்பே!" அவன் திரும்பவும் கையை ஓங்கினான். அதுக்குள் அந்தப் பாட்டி வந்து, அவன் கையைப் பிடித்துக் கொண்டாள்.

"இனி, உனக்கு இங்கு வேலையில்லை. நீ எங்கே வேணுமானாலும் போய்க்கலாம்." அவன் தெருவில் இறங்கி, இருளில் மறைந்துவிட்டான்.

"என்னமோம்மா. புருசனுக்குப் பிடிக்காததையும், வேண்டாததையும் விட்டுறதுதான் நல்ல குடும்பப் பெண்ணுக்கு லட்சணம்" என்ற வண்ணம் பாட்டியும் போய்விட்டாள்.

அதன் விளைவுதான், மறுநாள் தங்கம், சாந்தியோடு தாய்வீடு வந்து சேர்ந்தது. தடால் என்று சத்தம் கேட்டது. சாந்தி அங்கு கிடந்த நாற்காலியை தள்ளிவிட்டுவிட்டாள். அந்த இருவரது சிந்தனைத் தொடரும் பட்டென்று அறுந்தது.

இருள் மெல்ல மெல்லப் பரவிக்கொண்டிருந்தது.

"என்னயிருந்தாலும், கணவன் அடிச்சாலும் ஒதைச்சாலும் நீ வீட்டைவிட்டே வந்திருக்கக் கூடாது" என்றாள் சரசுவதியம்மாள் தங்கத்தைப் பார்த்து.

"வந்ததனால் என்ன கெட்டுப்போச்சு ...!" தங்கம் ஆங்காரத்தோடு கேட்டாள்.

"நல்லவனா இருந்தால் போச்சு. கெட்டவனா இருந்துவிட்டால், உன் வாழ்வு என்னவாகும். அத நீ நினைச்சுப் பார்த்தியா ...?"

"கெட்டு தொலையட்டும்!" தங்கம் திமிரோடு பேசினள். சரசுவதியம்மாள் ஆத்திரத்தோடு எழுந்து போய்விட்டாள். அவள் பயந்தது போலவே நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. சந்தர் வந்து எட்டியே பார்க்கவில்லை. அந்தத் தாய் உள்ளம் படும் தவிப்பிற்குக் காலம்தான் பதில் சொல்லணும்!

அ. கதிர்செல்வன்

# வெங்காயம்

அன்று ஞாயிற்றுக்கிழமை. வழக்கம்போல் நண்பகல் உணவிற்குப்பின் கண்ணயர்ந்தவன், வானெலியின் இரைச்சல் கேட்டு விழித்துக் கொண்டேன். வானெலி இந்திப் பாடல் ஒன்றை ஒலித்துக் கொண்டிருந்தது.

எழுந்து குளியலறைக்குச் சென்று முகத்தைக் கழுவிக் கொண்டபின், முன்புற அறையில் வந்து அமர்ந்தேன். என் மனைவி கோப்பியைக் கொண்டு வந்து எனக்குமுன் வைத்தாள்.

சிறிது கோப்பிதான் அருந்தியிருப்பேன். அதற்குள் வாசலில் ஏதோ கார் நிற்கும் சத்தம் கேட்டது.

"யாரது? ஓ! மணியமா? வா, தம்பி, வா! சுகந்தானு?" என்று ஒலித்தது அப்பாவின் குரல்.

"சுகந்தானுங்க. வீட்டிலேயும் எல்லோரும் சுகந்தானே?" என்ற எதிர்க்குரல் என்னைத் திடுக்கிட வைத்தது. எழுந்து வாசலுக்கு விரைந்தேன்.

பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குமுன் சொல்லிக் கொள்ளாமல் எங்கோ போய்விட்ட என் நெருங்கிய நண்பன் சுப்பிரமணியம் அங்கே நின்று கொண்டிருந்தான். எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. "டேய், மணி!" என்று உரக்கக் கூவி விட்டேன். அவனும் "டேய், சுந்தரம்!" என்று அதே நேரத்தில் கூவினன். இருவருடைய ஒலிகளும் ஒன்றறக் கலந்ததுபோலவே இரு

வரும் மறுவிநாடி ஒருவரையொருவர் தழுவிக்கொண்டோம். இருவரின் கண்களிலிருந்தும் கண்ணீர்மணிகள் உருண் டோடின.

என் அப்பாவுக்கும், என் மனைவிக்கும் எங்கள் செய்கை வியப்பைத் தந்திருக்காது. எங்கள் நட்பைப்பற்றி அவர் களுக்கு மிக நன்ருகத் தெரியும். என் இளைய மகள் ராணி மட்டும் எங்களை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள். மற்ற பிள்ளைகள் என் அம்மாவுடன் பொருட்காட்சி பார்க்கச் சென்றிருந்தார்கள்.

'பிரிந்தவர் கூடினுல் பேசவும் வேண்டுமோ' என்ற ரீதியில், நாங்கள் இருவரும் ஒருவர் கையை ஒருவர் பிடித் துக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்தோம். என் அப்பா பிறகு பேசிக்கொள்ளலாம் என்று இருந்து விட்டார். என் மனைவி இன்னெரு மங்கு கோப்பியைக் கொண்டு வந்து நண்ப னுக்குத் தந்தாள்.

ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக் கொண்டோம். முன்புக்கு இப்போது இருவரிடமும் எத்தனை மாற்றங்கள்!

இருவருக்கும் இலேசாக நரை தோன்றியிருந்தது. அவன் தலையில் அதிகமாகவும், எனக்கு ஓரளவும் வழுக்கை விழுந்திருந்தது. என்னைவிட அவன் சற்று இளைத்திருந் தான். சிறுவயதில் அவனைவிட நான்தான் இளைத்திருந் தேன்.

நாங்கள் இருவரும் பள்ளியில் சேர்ந்தது முதல் வேலை யில் சேர்ந்ததுவரை ஒன்ருகவே இருந்தோம். அப்பப்பா! அந்த நாட்களை நினைத்துப் பார்த்தால் எவ்வளவு இன்பமாக இருக்கின்றது!

முன்பெல்லாம் அவனை 'வெங்காயம்' என்று கூப்பிடு வேன். என் அப்பாதான் அவனுக்கு அந்தப் பெயரை வைத்தார். அவர் ஒரு தத்துவ ஆராய்ச்சியாளர். தமிழ் நாட்டுப் பெரியார் ஒருவர் பொதுக்கூட்டங்களில் அடிக்கடி

'வெங்காயம்' என்று கூறுவதையறிந்து, வெங்காய ஆராய்ச்சியில் இறங்கினர். அதன் பலன் மணி 'வெங் காயம்' ஆனன்!

வெங்காயம் வெளித்தோற்றத்தில் கவர்ச்சியானது. புதிதாக அதைக் கடித்தால் வாய் எரியும்; கத்தியால் அரிந் தால் கண் எரியும்; எனினும், அதிகமாக உண்டால் உடல் நலம் பெருகும்.

நண்பன் மணியமும் வாலிபத்தில் கவர்ச்சியாக அலங் கரித்துக்கொண்டே வெளியில் புறப்படுவான். அவனிடம் புதிதாகப் பழகுவோர்கள், அவனை முரடனகக் கருதும்படி கண்டிப்பான சில கொள்கைகள் அவனிடம் இருந்தன. நெருக்கமாகப் பழகியவர்களுக்காக அவன் எதையும் செய்யத் தயங்கியதே இல்லை; ஆகவே, அப்பா அவனுக்கு "வெங்காயம்" என்ற பட்டத்தை விழா ஏற்பாடு இன்றியே தந்து விட்டார்!

தனக்கென்று ஒன்றும் வைத்துக் கொள்ளாமல் பிறருக் காக வாழ நினைக்கும் அவனை வெங்காயம் என்று அழைப் பதில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி.

பழைய ஆசை மீண்டும் கிளர்ந்தது! "என்னடா வெங்காயம்! இவ்வளவு காலமாக எங்கே போயிருந்தாய்? சொல்லிக் கொள்ளாமல்கூடப் போய்விட்டாயே!" என்று கேட்டேன்.

"என்னை அதற்காக மன்னித்துக் கொள்ளப்பா. விவர மாகச் சொல்லாமலா போகப் போகிறேன். ஆமாம்; அம்மா எங்கே? மற்ற குழந்தைகளை எங்கே காணேம்?" என்று என்னைக் கேட்டான்.

"எல்லோரும் 'ஸ்டேடியம் நெகரா'வுக்குப் பொருட் காட்சி பார்க்கச் சென்றுள்ளார்கள். இன்னும் சற்று நேரத்தில் வந்துவிடுவார்கள்" என்று பதில் கூறினேன்.

வாசலில் கார் வந்து நின்றது. நானும் அவனும் எழுந்து வந்தோம். என் அம்மா, மூத்தமகன் அமுதன், மூத்தமகள் மங்கை, இளையவன் வெற்றிவேலன் ஆகியோர் காரிலிருந்து இறங்கி வந்தார்கள். அம்மா அவனை அடையாளம் கண்டு கொண்டு நலம் விசாரித்தார். மங்கையும் வெற்றிவேலனும் அவனுக்கு வணக்கம் கூறிவிட்டுச் சென்றுவிட்டார்கள். அமுதன் மட்டும் அங்கேயே நின்றான்.

இரவு உணவுக்குப்பின் முன்புற அறையில் நான், மணி, அப்பா, அம்மா ஆகியோர் பேசிக்கொண்டிருந்தோம். மனைவி சமையலறை வேலைகளை முடித்துவிட்டு என் அம்மா வுக்கருகே வந்து நின்றாள்.

"எனக்கு ஒரு மருமகள் இருக்கிறாள். அவளும் நம்ம அமுதனும் பல்கலைக்கழகத்தில் ஒன்றாகப் படிப்பவர்கள். அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் நேசிக்கிறார்கள். அவர்கள் படிப்பும் இந்த ஆண்டோடு முடிவடைவதால், அவர்களுக்குத் திருமணம் செய்வதற்கு வேண்டிய ஏற் பாட்டைக் கவனிக்கவே நான் இப்போது இங்கு வந்துள் ளேன். உங்களனைவருடைய கருத்தையும் எனக்குத் தெரிவிக்கும்படி பணிவுடன் கேட்டுக் கொள்கின்றேன்!"

எல்லோரும் ஏக காலத்தில் வியப்புக்குள்ளானேம். உள்பக்கம், அமுதன் வந்து சுவரில் சாய்ந்துகொண்டு நின்றான்.

"எங்களுக்குத் தெரியாமல் உனக்கு எங்கிருந்து மரு மகள் வந்தாள்? ஊர், பெயர், குலம், கோத்திரம் ஒன்றும் தெரியாமல், 'நாங்கள் சம்மதிப்போம்'னு எப்படிடாப்பா நீ நம்பிக்கிட்டு வந்தே?" என்றார், அம்மா. மற்றவர்கள் பேசாமல் இருந்தோம்.

"நீங்கள் இப்படிக் கேட்பீர்கள் என்று எனக்குத் தெரியும். கிள்ளான் ரோடு பெரியண்ணன் மாமா இருந் தாரே, அவரின் ஒரேமகள் உமாசுந்தரியின் பெண்தான்

அவள்! மற்ற விவரங்கள் போகப் போகத் தெரிந்து கொள்ளாமலா இருக்கப் போகிறீர்கள்?" என்றான், அவன்.

உமாசுந்தரி!

நாங்கள் அனைவரும் அதிர்ச்சிக்குள்ளானதுபோல் ஏக காலத்தில் அவன் முகத்தை நோக்கினோம். அவன் முகத்தில் சிறிதேனும் மாற்றமில்லை. தன்னலம் கருதாது பிறருக்காக உழைக்கும் மனப் பக்குவம் அடைந்தாலன்றி, அவனைப்போன்ற நிலையை யாராலும் கைவரப்பெற இயலாது. சமுதாய ஊழியனான அவனிடம் சாத்திரம், கோத்திரம் பற்றி கேள்வி கேட்பதே தவறு என்று தோன்றியது.

"மணி! யாருக்குமே தீங்கு செய்யாதவன் நீ. அப்படியிருக்க எங்களுக்கு ஒத்துவராததை நீ செய்ய மாட்டாய் என்பது எங்களுக்குத் தெரியும். நீ முன்னின்று செய்யும் காரியத்தை நாங்கள் யாரும் தடுக்கப் போவதில்லை. உன் எண்ணம்போல் திருமணம் நடைபெறட்டும்" எனக் குரல் தழுதழுக்கக் கூறினேன். நண்பனின் முகத்தில் மலர்ச்சி தோன்றியது.

எல்லோரும் படுக்கச் சென்றோம். எனக்குத் தூக்கம் வர மறுத்தது. நண்பனைச் சுற்றியே என் சிந்தனை வளையமிட்டுக்கொண்டிருந்தது.

எத்தகைய மாமனிதன் அவன். வாழ்க்கையின் இனிப்பான நாட்கள் என்று உலகத்தினரால் கருதப்படும் காலத்தை, பத்திய நாட்களாகக் கருதிக் கழித்து விட்டதன்றி, தன் குலம் தழைக்க வழியின்றிப் போகக் காரணமாயிருந்தவரின் குலம் செழிக்க, மன நிறைவுடன் கடமையாற்றும் செயல் சாதாரணமானதா?

இருபத்திமூன்று ஆண்டுகளுக்கு முன் நாங்கள் இருவரும் இருபது வயதுக் காளைகள். அறுபது வெள்ளிகள் மாதச் சம்பளம் என்ற அடிப்படையில் இருவருக்கும் மெர்கன்டைல் வங்கியில் எழுத்தர் வேலை கிடைத்தது.

அப்போதிருந்தே அவன் தன் அலங்காரத்திற்கும், மற்றவர்களுக்கும் அதிகமாகச் செலவழிக்கலானுன். அவன் பெற்ருேர்களுக்கு ஒரே மகன் ஆனதாலும், வறுமை தெரியாத குடும்பமானதாலும், அவனிடம் சேமிப்பைப்பற்றி யாரும் அறிவுரை கூறவில்லை.

எங்களுக்குத் திருமண ஏற்பாடுகள் நடைபெற்றன. நான் என்னுடன் அலுவலகத்தில் பணிபுரிந்துவந்த மீனுட்சி என்னும் பெண்ணைக் காதலித்து, என் பெற்ருேரை வற்புறுத்தி அவள் பெற்ருேரை அணுகச் செய்து, ஒப்புதல் பெற்றுவிட்டேன். மணியத்தின் தாய்வழி உறவுள்ள பெரியண்ணன் என்பவரின் மகள் உமாசுந்தரியை அவன் விரும்பியதால், அவன் பெற்ருேர் பெரியண்ணன் தம்பதிகளைக் கேட்டு சம்மதம் பெற்றனர். இருவர் திருமணங்களும் கோலாலம்பூர் மாரியம்மன் கோவிலில் நடைபெற எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுவிட்டன.

திருமணத்திற்கு முதல் நாளன்று உமாசுந்தரி, தான் வேருெருவரைக் காதலிப்பதாகவும் அவரைத் திருமணம் செய்வதற்கு உதவி புரியுமாறும் அவனுக்குக் கடிதம் எழுதியிருந்தாள்.

இன்று நினைத்தாலும் விந்தையாக இருக்கின்றது. மணியம் அன்று என்னைக் கூப்பிட்டு "உன் காதலியை எனக்குத் திருமணம் செய்வதாகப் பெரியோர்கள் சம்மதித்து ஏற்பாடுகள் செய்கிருர்கள்! அவள், உன்னைத் திருமணம் செய்வதற்கு உதவி செய்யுமாறு எனக்குக் கடிதம் எழுதுகிருள்! நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான். அந்தக் கணம் நான் எல்லாவற்றையும் மறந்துவிட்டேன். ஒருவிதமான வெறி என்னைச் சூழ்ந்து கொண்டது. ஆத்திர உணர்வு குரல்வளையை நெறித்தது.

"நீ படித்தவன்; நேர்மையும் இரக்கமும் கொண்டு பிறருக்கு உழைக்கும் பண்பாளன். மனிதத் தன்மையுடன் செய்ய வேண்டியது எது என்று உனக்குத் தோன்று

கிறதோ அதைச் செய்!" என்று சற்று உரக்கவே கூறி னேன். அவன் அமைதியாகச் சிரித்துவிட்டு, "நீ சொல்வது தான் சரி, சுந்தரம். நாளைக்கு உனக்கும் மீனுட்சிக்கும் திருமணம் நடக்கும்போது, உமாவுக்கும் அவள் காதலன் பரமசிவத்துக்கும் திருமணம் நடக்க வேண்டும், நீயும் என் பக்கமிருப்பாயல்லவா ?" என்று கேட்டான்.

என் கண்களில் நீர் ஊற்று 'சர்'ரென்று கிளம்பியது. அவன் என் கண்களைத் துடைத்தான்.

மறுநாள் இரண்டு திருமணங்களும் எப்படியோ குழப்ப மின்றி நடந்தேறின.

அதற்குப் பின் எவ்வளவோ வற்புறுத்தியும் அவன் திருமணம் செய்துகொள்ள மறுத்துவிட்டான்.

"எனக்குத் திருமணம் நடைபெற்று, நான் 'மனையிலி' யாகிவிட்டேன். மறுமணம் செய்துகொள்ளும் எண்ணம் எனக்குக் கிடையாது" என்று அவன் காரணம் கூறினுன்.

அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ என்று எல் லோரும் ஐயப்படலானேம்.

"இயற்கையின் ஒவ்வொரு அணுவும் அறிவு விளக்கத் துணுக்குகள். ஏட்டுக் கல்வி இல்லாதவரும் சிந்தனைத் திறத்தால் இயற்கையைப் படிக்கலாம்.

"உலகம் ஒரு பழமரம் போன்றது. உலகிலுள்ள உயி ரினங்கள் ஒவ்வொன்றும் அதன் கிளைகள். ஒவ்வொரு கிளையிலும் பூ, பிஞ்சு, காய், கனி என்ற நிலைகள் உள்ளன. ஒரு மரத்தில் பூக்கும் மலர்கள் அத்தனையும் அப்படியே கனிகளாகி விடுவதில்லை. சில மொட்டிலே கருகிவிடும்; சில பூவிலேயே உதிர்ந்துவிடும்; சில பிஞ்சில் விழுந்து விடும்; சில காயில் வெம்பிவிடும்; கனிந்தவற்றிற் சில பூச்சிக் கனிகளாகிவிடும்; வெகு சிலவே தரமான கனிக ளாகும் பேறு பெறுவன.

"மனித வாழ்க்கையும் அப்படித்தான். சிலர் வாழ்வு மொட்டு நிலையில்; சிலர் வாழ்வு பூ நிலையில்; சிலர் வாழ்வு

பிஞ்சு நிலையில்; சிலர் வாழ்வு காய் நிலையில்; சிலர் வாழ்வு கனிநிலையடைந்தாலும் தொல்லைகளென்னும் பூச்சிகளிடமிருந்து தப்பியிருக்காது. மிக சிலரே கனி வாழ்வு பெற்றுக் களிப்படைவர்.

"என் வாழ்வு மொட்டு நிலையைச் சார்ந்தது. உமாவை நினைத்த நிலையிலேயே அது நெஞ்சோடு உறைந்து விட்டது. அவளை நானே வேறொருவருக்கு மணமுடித்துத் தந்துவிட்டேன். எனவே, நான் எதையும் இழக்கவில்லை. எனக்கு விதித்த வாழ்வு அத்தகையது என்ற நிறைவு என்னுள் ஏற்பட்டு விட்டது!" என்று தத்துவம் பேசி, எல்லோரையும் அடங்கியிருக்கச் செய்துவிட்டான்.

காலமெனும் மரத்திலிருந்து ஆண்டெனும் இரு கிளைகள் முறிந்தன.

இரண்டாவது உலகப் பெரும்போர் மூண்டது. கோலாலம்பூரில் ஜப்பானிய விமானங்கள் வீசிய குண்டுகள், பல குடும்பங்களை அழித்தன; பலரை அங்கயீனர்களாகவும் அநாதைகளாகவும் ஆக்கின. மணியத்தின் பெற்றோர்களும் அந்தக் குண்டு வீச்சுக்குப் பலியானார்கள்.

சில ஆண்டுகளில் மலாயாவில் கம்யூனிசவாதிகளின் உள்நாட்டுப் போர், நாட்டு மக்களையும் அரசினரையும் தொல்லைகளுக்காளாக்கியது. நாடெங்கும் பயங்கர விளைவுகள் ஏற்பட்டு, அமைதியான வாழ்வு பறிபோய், கட்டுப்பாட்டின்கீழ் வாழவேண்டிய கட்டாயம் உண்டானது. வேலைக்குச் சென்றவர் வீடு திரும்பும்வரை அவரைப் பற்றியே வீட்டிலிருந்தவர்களுக்குக் கவலை; வேலைக்குச் சென்றவர்க்கு தன்னைப்பற்றிய கவலையோடு வீட்டில் குடும்பத்திற்கு ஏதும் இன்னல்கள் விளைந்தனவோ என்ற கவலையும் ஏற்படும்.

இந்த நிலையில் மணியம், "தவிர்க்க முடியாத பொறுப் பொன்றை நிறைவேற்ற வேண்டிய கட்டாயத்தால்

வேறிடம் செல்லுகின்றேன். நேரில் சொல்ல இயலாமைக்கு வருந்துகின்றேன்; மன்னிப்புக் கோருகின்றேன்" என்று அலுவலகத்துச் சிறுவன்மூலம் சீட்டு ஒன்றைக் கொடுத்து அனுப்பியிருந்தான்.

மறுநாள் அங்கு சென்று விசாரிக்கையில் அவன் வேலையிலிருந்து விலகிச் சென்றுவிட்டதாகத் தெரிந்தது. அதற்குப் பிறகு அவன் சென்ற இடம் தெரியாததால் அவனுடன் தொடர்பு கொள்ள முடியாமல் போய்விட்டது.

இன்று அவன், அதே உமாசுந்தரியின் மகளுக்கும் மண முடித்து வைக்கும் பணியை மேற்கொண்டு இங்கு வந்துள்ளான் என்பதை எண்ணும்போது, என் இதயம் அவனுக்காக — அவன் செயல்முறைக்காக, அன்பினுல் உருகுகின்றது; பெருமிதத்தால் நிறைகின்றது!

அமுதனுக்கும் மலர்விழிக்கும் திருமணம் நடைபெறுமுன், முறைப்படி பெண் பார்க்கும் படலம் நிகழ்ந்தது. அப்போது உமாசுந்தரி என்னிடம் சொன்னதாவது:

"என் முன்னேர்கள் மிகவும் புண்ணியம் செய்திருக்க வேண்டும், அண்ணு. எவரை ஊரறிய அவமானத்திற்குள்ளாக்கி அவரின் குலம் தழைக்காமல் போனதற்குக் காரணமாக இருந்தேனே, அவரே — அந்த உத்தமப் பெருமகனுரே — அன்பும் அக்கறையும் கொண்டு ஆதரிக்கும் உடன்பிறவாத அண்ணுவாக இந்தப் பாவிக்குக் கிடைத்திருக்கிருரென்ருல், அதற்கு என் முன்னேர்கள் செய்த புண்ணியம்தான் காரணமாக இருக்க வேண்டும்.

"அன்று இவருக்கும் எனக்கும் திருமண ஏற்பாடுகள் நடைபெற்ற சமயத்தில், நான் வேருெருவருக்கு இதயத்தில் இடமளித்து விட்டேன் என்று தெரிவித்தேன். வேறு ஒருவராயிருந்திருந்தால் வேறு விதமாகவே நடந்திருக்கும். ஆனுல், அருளாளரான இவர், என் விருப்பப்படி, நான்

விரும்பியவருக்கே உடனிருந்து மணமுடித்து வைத்தார். அன்று முதல் இவர் என் உடன்பிறவா அண்ணுவாக என் இதயத்தில் இடம் பெற்றுவிட்டார்.

"என் கணவருக்கு பெற்ருேர்களோ சுற்றத்தார்களோ கிடையாது. எனவே, என் பெற்ருேர்களுடனேயே சிறிது காலம் இருந்தோம். இரண்டாவது உலகப்போர் வந்ததும் அவர்கள் அதற்குப் பலியாஞர்கள்.

"ஆங்கிலேயர் ஆட்சி திரும்பியதும் என் கணவருக்கு ரயில்வேயில் வேலை கிடைத்தது. கோலக்குராவ் நிலைய அதிகாரியாக அவர் பணி புரிந்தார். இரண்டு பெண் குழந்தைகளும் ஒரு ஆண் குழந்தையும் எங்கள் வாழ்வை மலர வைத்தன.

"திடீரென்று ஒரு நாள் இரவு கம்யூனிச பயங்கர வாதிகள் என் கணவரைச் சுட்டுக் கொன்றுவிட்டதோடு, ரயில் நிலையத்தையும் நெருப்பு வைத்துக் கொளுத்தி விட்டார்கள். நானும் மூன்று குழந்தைகளும் அநாதைக ளாகத் தவித்தோம். திடீரென்று அண்ணுவின் ஞாபகம் வந்தது. அவர் வேலை செய்யும் அலுவலகத்திற்கு நிலை மையை விளக்கித் தந்தி ஒன்று அனுப்பினேன்.

"மறுநாள் எங்களிடம் வந்து சேர்ந்து விட்டார். அன்றிலிருந்து இன்றுவரை எல்லாவற்றிற்கும் அண்ணு தான்.

"ஏழேழு பிறவிகள் ஒவ்வொருவருக்கும் உண்டென்று சொல்லுகிருர்களே அது உண்மையாஞல், அத்தனை பிறவி களிலும் அவருக்குத் தங்கையாகப் பிறக்கும் பாக்கியம் மட்டும் எனக்குக் கிடைக்க வேண்டும்.

"நான் செல்லும் கோயில்களில் வேண்டிக்கொள்ளும் பிரார்த்தனை இதுதான்!"

கரு. சொக்கன்

# குறை

" இந்த நிறம் எனக்குப் பிடிக்கவில்லை."

குறை! ஏதாவது ஒரு குறை கண்டுபிடிக்காவிட்டால் அவளுக்குத் தூக்கமே வராதோ? எது வாங்கி வந்தாலும் சரி; அதில் ஏதாவது ஒரு குறை அவள் கண்டு பிடித்து விடுகிறாளே! அவளுக்கென்று ஆண்டவன் ஏன் இந்தப் புத்தியைக் கொடுத்தான்?

துணி வாங்கி வந்தால், நிறம் சரியில்லை. பழங்கள் வாங்கி வந்தால், பூச்சி. காய்கள் வாங்கி வந்தால், அழுகல். சீ! என்ன ஜன்மம் அவள்! மனிதன் அவைகளை வாங்கிக்கொண்டு வர படும் சிரமம் தெரியாமல், குறை கண்டு மனதைப் புண்படுத்துவது!

" இனி உனக்கு கடவுளே தான் போய் எதுவேண்டும் என்றாலும் வாங்கி வர வேண்டும்" என்றேன், அலுப்புடன். எனக்கு ஆத்திர உணர்ச்சி மேலோங்கி நின்றது. ஆனால், கட்டுப்படுத்திக் கொண்டேன்.

" ஏன், நீங்கள் என்னைக் கூட்டிப் போயிருந்தால் இப்படி யிருக்குமா? எனக்குப் பிடித்ததை நானே யல்லவா எடுத்து வந்திருப்பேன்" என்றாள்.

"ஆமாம், தவறு என்னுடையதுதான்" என்று தலையில் அடித்துக் கொண்டேன். அவளுடன் என்ன செய்ய முடியும்? நிறை மாதக் கர்ப்பிணி. "சரி! சரி! வேண்டும் என்றால் எடுத்துக்கொள், இல்லையென்றால் கொடு, திருப்பிக் கொடுத்து விடுகிறேன். உன் குணம் தெரிந்துதானே

வாங்கும்போதே கடைக்காரரிடம் துணி பிடிக்காவிட்டால் திருப்பித் தந்துவிடுவதாகச் சொல்லி வாங்கி வந்தேன்" என்றேன்.

அவள் துணியை எடுத்து, அப்படியும் இப்படியும் பார்த்தாள். பிறகு, "சரி உங்கள் மனசைத்தான் ஏன் கெடுப்பானேன்; எடுத்துக் கொள்கிறேன்" என்ருள்.

எனக்குத் தெரிந்ததுதானே!

நான் நாற்காலியில் சாய்ந்தேன் — அசதி. வேலே முடிந்ததும் கடைக்குப் போய் வந்ததினுலா? அல்லது உள்ளம் எப்பொழுதும் மனைவியின் குறையைக் கேட்டு சலித்துப் போனதினுலா? எனக்குத் தெரியவில்லை. எனது இரண்டு குழந்தைகளும் வெளியே இருந்து ஓடிவந்தன.

"பாருப்பா, இவனை! அப்பா — அம்மா விளையாட்டு விளையாடும்போது என்னை அறையருன்" என்ருள் இளையவள். பெரியவனைப் பார்த்தேன்.

"ஏண்டா, சும்மா விளையாடக் கூடாதா? எப்பொழுதும் சண்டைதாஞ?" என்றேன்.

எனது குரலில் இருந்த ஆத்திரத்தைக் கண்டு அவன் சிறிது தயங்கினுன். பிறகு, "நீ அன்னைக்கு அம்மாவை அடிச்சல்லேப்பா! அதான் இன்னைக்கு நான் அடிச்சேன்" என்ருன்.

என் இதயத்தை யாரோ கூரிய நகங்கள் கொண்டு கிழிப்பதுபோல் இருந்தது. அதில் இரத்தம் கசிந்தது. எவ்வளவு பெரிய தவறு. குழந்தைகள் முன் பெரியவர்கள் சண்டை போட்டுக்கொள்வதை அப்படியே குழந்தைகளும் செய்கின்றன. இதில் ஆச்சர்யப்பட என்ன இருக்கிறது? பெற்ருேர்களின் பிரதிபலிப்புதானே குழந்தைகள்!

"போடா, கழுதை! பெரியவங்க செய்தா, நீயும் அது மாதிரி செய்யறதா? இனிமேல் நீ அவளைத் தொட்டால் தொலேத்தேன்" என்று பயமுறுத்தி அவனை அனுப்பினேன்; கூடவே இளையவளும் சென்ருள்.

'இனி குழந்தைகளின் முன் எந்தச் செயலும் செய்யக் கூடாது' என்று நினைத்துக்கொண்டேன். அவளை அறைந்து எத்தனை மாதங்கள் இருக்கும்; சிறுவன் இன்னும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறனே! நான் சோர் வாகச் சாய்ந்தேன். உள்ளம் அப்பொழுதுதான் அமைதி யுடன் அந்த நிகழ்ச்சிக்குத் தாவியது.

சரியான வேலை; நெட்டி எடுத்துவிட்டது; அதுவு மின்றி காரியாலயத்தில் நிர்வாகியுடன் சிறிது மனஸ்தாப மும் ஏற்பட்டுவிட்டது. என்ன மனிதர் அவர்! மனிதனின் எண்ண உணர்ச்சிகளை அறியாதவர். நான் டைப் அடித் திருந்ததில் ஏதோ ஒரு தவரும். சிறு தவறுதான். ஓர் எழுத்துப் பிழை. அதற்காகவா இப்படி நாய் மாதிரிக் கத்துவது. "என்னையா! எத்தனை வருட அனுபவம்! ஒரு வார்த்தை சரியாக அடிக்கத் தெரியவில்லையே! உம்மை யெல்லாம் வேலைக்கு வைத்திருக்கிறேன் பார், என்னைச் சொல்லணும்!" என்ருர்.

எனக்கு மட்டும் உணர்ச்சி இல்லையா என்ன? நானும் மனிதன் தானே! "என்ன சார் செய்வது? சம்பளம் கொஞ்சமாகத் தந்து உயிரை எடுக்கிறீர்களே! அதில் ஒரு சிறு தவறு நேர்ந்துவிட்டால்தான் என்ன? திருத்தச் சொன்னல் திருத்தி விடுகிறேன். அதற்காக வரம்பின்றி பேச வேண்டாம்" என்றேன். அதனுல் அவருக்கு மன வருத்தம். இருக்கட்டுமே! யாருக்கென்ன?

காரியாலய வேலை முடிந்ததும், மெதுவாக நடந்தேன். எனது உள்ளம் அமைதியின்றித் துடித்தது. எண்ணங்கள் அலைமோதிக் கொண்டிருந்தன. அமைதியை நாடி மெது வாக கடற்கரையை நோக்கி நடந்தேன்.

ஒன்ருேடொன்று மோதிச் சிதறும் கடல் அலைகள்; காலைத் தழுவி முத்தமிட்டுச் செல்லும் அலைகள்; கடலைத் தொடும் வானம்; எனது மனதுக்கு வேடிக்கையாக இருந் தன. அலைகளும் எண்ணங்களும் ஒன்ரு?

சிதறும் எண்ணங்கள், சிதறும் அலைகள், ஒன்ருே டொன்று ஒன்று சேரா அலைகள்! எண்ணங்களும் அப்படித் தானே? காலை முத்தமிட்டு, காலின் அடியில் இருக்கும் மணலைப் பறித்து, கீழே வீழ்த்தும் அலைகள். எண்ணங்கள் மட்டும் என்ன அதற்குத் தாழ்ந்தவையா? மனிதனை உயர்ந்த இடத்தில் வைத்திருக்கும் எண்ணங்கள்தானே, சில சமயம் அவனை கேவலமான இடத்தில் தள்ளி யிருக்கின்றன!

நான் எனக்குள் சிரித்துக்கொண்டேன்.

இப்பொழுது எனது மனம் சிறிது அமைதியுடன் இருந்தது.

"பூ வேணுமா, ஐயா!" என்ற குரல் கேட்டுத் திரும்பி னேன். கிழவி நின்று கொண்டிருந்தாள். வழக்கமாகச் சந்திக்கும் கிழவிதான். "ஒரு முழம் கொடு, கிழவி" என் றேன். அவள் ஒரு முழம் கொடுத்துவிட்டு, காசைப் பெற்றுக்கொண்டு சென்ருள்.

நான் வீடு வந்தேன். மனைவி எனக்காகக் காத்திருந் தாள். பூவைக் கொடுத்தேன். "காசைத்தான் கொடுத் தீர்களே, நல்ல பூவாக வாங்கி வரக்கூடாதா?" என்ருள். எனக்கு ஆத்திரம் வந்தது. எது வாங்கி வந்தாலும் குறை தாஞ!

"இதற்கு என்ன குறை?" என்றேன்.

"நல்ல பூ தான்" என்ருள் ஏளனத்துடன். "பாருங் கள், வாடிப் போய்விட்டது. இன்னும் சிறிது நேரத்தில் இதழ்கள் உதிர்ந்துவிடும். மொட்டாக வாங்கி வந்திருந் தால் என்ன?" என்ருள்.

எனக்கு ஆத்திரம் வந்தது. இதைப் பெரிய அவமதிப் பாகக் கருதினேன். காரியாலயத்தில் நடந்த நிகழ்ச்சியும் எனது உள்ளத்தில் நிழலாடத் தொடங்கியது. நானும் யோசிக்கவில்லை; அவளும் எதிர்பார்க்கவில்லை. அவள் கன்னத்தில் 'பளீர்' என்று அறைந்தேன்.

"அப்பா! அப்பா!" என்ற மகனின் குரல் கேட்டு மனம் விழித்துக் கொண்டது. "என்னடா, மறுபடியும் சண்டையா?" என்றேன்.

"அம்மாவுக்கு வயித்த வலிக்குதாம்பா!" என்ருன்.

நான் அவசரமாகச் சென்று பார்த்தேன். அவள் வயிற்று வலியால் துடித்துக் கொண்டிருந்தாள். உடனே ஓடிப்போய் காரைக் கொண்டுவந்து, அவளைப் பெரிய மருத்துவ மனையில் சேர்த்தேன். அன்று முழுவதும் அவள் வேதனையால் துடித்துக் கொண்டிருந்தாள். மறுநாள் நான் வேலைக்குச் செல்லவில்லை. விடுமுறை எடுத்துக் கொண்டேன். மாலைதான் குழந்தை பிறந்தது. அதற்குள் அவள் பட்ட வேதனை! அப்பப்பா!

நர்ஸ் வெளியே வந்து, "ஆண் குழந்தை" என்ருள். "நான் பார்க்க முடியுமா?" என்றேன்.

"சில மணி நேரம் பொறுங்கள், போய்ப் பார்க்கலாம்" என்ருள்.

நான் உள்ளே அனுமதிக்கப்பட்டு குழந்தையைப் பார்த்தபோது, அதில் ஏதோ ஒரு மாறுதல் — ஒரு குறை எனக்குத் தென்பட்டது. எப்பொழுதும் குறையைக் கேட்டுக் கேட்டு எழுந்த எண்ண உணர்ச்சியா அது? இல்லை. ஏதோ ஒரு குறை குழந்தையிடம் இருப்பதாக என் உள்ளத்தில் எழுந்தது. நான் சிசுவை மெதுவாகப் பார்த்தேன். அவசரப் படாமல் பார்த்தேன். இப்பொழுது குறை தெரிந்தது. அதன் ஒரு கால் மற்றதைவிட சிறுத்துக் காணப்பட்டது. கடவுளே, இது என்ன சோதனை? எப்பொழுது பார்த்தாலும் குறையிட்டுக் கொள்ளும் அவளைப் பழி தீர்ப்பதற்காகவே இந்தச் சிசுவைப் படைத்தாயோ?

என் மனமே துன்பப்படும்போது, அவள் எவ்வளவு வேதனைப் படுவாள்? பத்து மாதங்கள் சுமந்தவள் அல்லவா?

அவள் பெயர் நீக்கப்பட்டு, வீட்டிற்கு அழைத்துவந்து ஒரு வாரம் ஆகிவிட்டது. வேலை முடிந்து வீட்டிற்கு வரும் போது அவளுக்காக மாம்பழம் வாங்கிப் போனேன்.

அவள் அதை ஆசையுடன் கத்தியால் வெட்டினாள்; உள்ளே பூச்சி!

நான் கவலையுடன் அவளைப் பார்த்தேன். அவள், "பரவாயில்லை. உள்ளே பூச்சி இருப்பது உங்களுக்கு எப்படித் தெரியும். பழக்காரனுக்குக்கூடத் தெரியாதே!" என்று சொல்லிவிட்டு அடுத்த பழத்தை எடுத்தாள்.

இப்பொழுது அவள் ஏதும் குறை சொல்லவில்லை! காரணம் எது? குழந்தையா? ஒரு குறையை நிறை செய்வதற்காக வேண்டித்தான், அது குறையாகப் பிறந்ததோ?

எம். குமாரன்

# சீனக் கிழவன்

நீண்டு வளைந்து, மேடும் பள்ளமும் நிறைந்த செம்மண் சாலையினூடே அசைந்து கொண்டிருந்தான் அந்தச் சீனக் கிழவன் லிம். அறுபது வயதுக்கு மேலாகியும் ஏதோ ஓர் இலட்சிய வேட்கையுடன் உழைத்துக்கொண்டிருக்கிருன். எல்லாருக்கும் அவன் ஓர் அஞதை. அவனைப் பொறுத்த வரை அது உண்மையல்ல; உறவு சொல்ல ஒரு ஜீவன் உண்டு. ஆனல், அந்த ஜீவனுடன் உறவு கொண்டாட இன்று அவனுக்கு உரிமையில்லை. உரிமையை வலியுறுத்த வும் அவன் விரும்பவில்லை; உரிமையைக் கைவிடவும் மனம் இடந்தரவில்லை.

மனத்தில், காலத்தால் விழுந்த வடுவுடனும், கூனிக் குறுகிய உடலுடனும் அந்தச் செம்மண் சாலைக்குரிய குழுண் டிங் தோட்டத்தை நோக்கி நடந்துகொண்டிருந்தான். அவ னுடைய தோளில் ஒரு சாக்குப் பை. அதில், தான் வாங்கும் பொருட்களைச் சேர்த்துத் தூக்கிக்கொண்டு 'மெயின் ரோட்' டில் நிறுத்தி வைத்துள்ள 'சைக்கிளு'க்குக் கொண்டு போவான். பின்னர், மெல்ல மெல்ல சைக்கிளை மிதித்து, ஐந்து மைல் தொலைவிலுள்ள நகரத்துக்குக் கொண்டுபோய் விற்பான். லிம்மின் வியாபாரம் இதுதான்: போத்தல்கள், தாள்கள், இரும்பு வகையருக்கள், இன்னும் பல பழைய சாமான்கள். மாதக் கடைசியில் வரும் ஒவ்வொரு சனிக் கிழமையும் லிம் சொல்லிவைத்தாற்போல் குறிப்பிட்ட நேரத்

துக்குப் போய்விடுவான். தோட்ட வேலை முடிந்து எல்லா ரும் வீடு திரும்பும் நேரத்தில்தான் லிம் அந்தத் தோட்டத் துக்குப் போவான்.

அந்தச் சீனக்கிழவனிடம், குடித்துத் தீர்த்த காலிப் புட்டிகளையும், நசுங்கிப்போன அலுமினியப் பாத்திரங்களை யும் விற்று, எத்தனை பெண்கள் கொண்டை ஊசியும், 'ரோல்ட்கோல்ட்' செயினும் வாங்கியிருக்கிறார்கள்? அவர் களெல்லாம் அந்தச் சீனக்கிழவனைச் சில்லரைக் காசுக்காக எதிர்பார்த்திருக்கும்போது, ஒரே ஓர் உயிர் மட்டும் அன்புக் காகக் காத்திருக்கும். பரிவுடன் அவன் பார்க்கும் பாசப் பார்வைக்காகக் காத்திருக்கும் — அந்த உயிருக்குரியவர்...

தொலைதூரத்திலிருந்து குமுண்டிங் தோட்டத்துக்கு வந்து பழைய சாமான்கள் வாங்குவது மட்டுமல்ல, அவனு டைய தொழில்; தனக்காகக் காத்திருக்கும் அந்த ஜீவனுக் காகவே அவன் அங்கு வருவான்.

லிம் ஸ்டோரைக் கடந்து சென்றுகொண்டிருந்தான். ஸ்டோரிலிருந்து எல்லாப் பால்வெட்டுத் தொழிலாளிகளும் திரும்பியிருந்தனர். தன்னுடைய வருகை தாமதமாகிவிட் டதோ என்ற ஐயத்துடன் நிமிர்ந்து நோக்கி நடந்தான். தொலைவில் தன் அன்புக்கும் பாசத்துக்கும் உரிய உருவம் காண்டாக் கம்பும் வாளியுமாக நின்றுகொண்டிருந்தது. கிழவன் புதுத்தெம்புடன் வேகமாக நடந்தான்.

லிம், தன் பாசத்துக்குரிய லட்சுமியின் அருகில் நெருங்கிவிட்டான். மிக அருகில் நெருங்க முடியாமல் பத் தடி தொலைவில் நின்று, லட்சுமியை ஏறிட்டுப் பார்த்தான். கண்களில் பாசத்தின் பிரதிபலிப்பாக நீர் துளிக்கிறது. தனக் காகத்தானே அவள் இங்கு கால் கடுக்க காண்டாக் கம்பும் வாளியுமாக நின்று கொண்டிருக்கிறாள்? கிழவனுக்கு நெஞ்சமெல்லாம் பூரிப்பு; ஒரு நிறைவு. லட்சுமி இருக்கும் வரை லிம் எப்படி அனாதையாவான்? தன்னுடைய எல்லா மாக அந்தப் பெண் தெய்வம் இருக்கிறதே!

லட்சுமியைக் காண ஆவலுடன் வந்தவன், அவளைக் கண்டதும் எதுவும் பேச முடியாமல் நின்றான். அவளும் பேசவில்லை. உழைத்து உழைத்துத் துரும்பாக — இருபத்து மூன்றாவது வயதிலும் நாற்பது வயதுக் கிழவிபோல் — ஓடாக நிற்கும் அந்தக் காட்சி அவனுடைய உழைப்புக்கே சவால் விடுவதுபோல் தோன்றியது. அவள் இன்னமும் தன் மகளாக இருந்திருந்தால், இப்படித் துன்பப்பட விட்டிருப்பானா? அவள் இப்படியெல்லாம் சமூகத்துடனும் வாழ்வுடனும் போராடி உயிர் வாழவேண்டிய நிலைமையை உண்டுபண்ணியதே அவன்தானே?

யாரோ தொலைவில் வருவது தெரியவே லட்சுமி புன்னகையுடன் அகன்றாள். கண்ணில் ஊறிய தண்ணீர் வற்றாமலும் உதிராமலும் இமைக்குள் தொக்கி நின்றது. லிம், அவள் போவதையே நோக்கிக் கொண்டிருந்தான். லட்சுமியும் அடிக்கொருதரம் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்று மறைந்தாள். இப்படி இன்று மட்டுமல்ல, கடந்த ஓராண்டுக் காலமாக மாதந்தோறும் — இதே நிலைதான். ஒரு தடவை பேசியிருக்கிறான். பின்னர் பேசினதில்லை. பேசவேண்டாமென்று கேட்டுக்கொண்டவளே லட்சுமிதான். காலத்தால் அழிக்கப்பட்ட உறவைப் புதுப்பிக்க வேண்டாம். அது நடக்கக்கூடாத ஒன்று. அதைச் சமூகமும் ஏற்காது. அதற்கு அஞ்சியே இருவரும் சூழ்நிலைக்கு ஏற்ப நடக்க வேண்டியுள்ளது. அந்த நிலைமையை ஏற்படுத்தியவன் இதே லிம் தானே?

ஏறத்தாழ இருபத்திமூன்று ஆண்டுகளுக்குமுன் லிம்மின் ஆறாவது குழந்தையாகப் பிறந்தவள் இந்த லட்சுமி. இன்று தமிழ்ப் பெண்ணாக வளர்ந்துவிட்டாள்! அன்று வறுமையின் பிடியிலிருந்தபோது, தான் பணிபுரிந்த தானாராத்தா தோட்டத்திலேயே குப்பம்மாள் என்ற விதவைக்கு விற்றுவிட்டான் லிம். இரண்டாவது உலகப்போர் ஓய்ந்து கொண்டிருந்த அந்த நாளில் வயிற்றுக் கஞ்சிக்காக

விற்ருன். ஜப்பான்காரன் ஆட்சி அஸ்தமித்தபின், லிம்மின் மனைவி இன்னொருவனுடன் சகவாசங்கொண்டு, ஐந்து குழந்தைகளுடன் ஓடிவிட்டாள். எல்லாவற்றையும் இழந்த லிம் தாஞராத்தா தோட்டத்தைவிட்டுச் சென்று, பைத்தியக் காரனைப்போல் அலைந்தான்.

ஐந்து ஆண்டுகள் அலைந்து திரிந்தும் தன் மனைவி மக்களைக் காணக்கிடைக்காமல், விற்றுவிட்ட தன் செல்வத்தைக் காண தாஞராத்தா தோட்டத்துக்கே வந்தான். குப்பம்மாளிடம் ஒரு தமிழ்ச் சிறுமியாக — லட்சுமியாக — வளரும், தான் பெற்ற — விற்ற குழந்தையைக் கண்ணாரக் கண்டான். தன் நெஞ்சத்துள் திளைத்தெழும் பாசத்தை அந்தக் குழந்தையிடம் பொழியத் துடித்தான். சில நேரங்களில் ‘குழந்தையை ஏன் விற்ருேம்’ என்ற நினைவு வரும் போது, யாருக்கும் தெரியாமல் மனச்சுமை குறையுமட்டும் அழுவான். தன்னுடையது என்று நினைத்திருந்ததெல்லாம் இழந்தபின், இன்னொருவருக்குக் கொடுத்ததில் ஆசை வைக்கலாமா? தான் பெற்ற குழந்தையாக இருந்தென்ன செய்வது? பிச்சை போட்ட காசு தன் காசாக இருந்தாலும், பிச்சைக்காரனிடமிருந்து திரும்பப்பெற, போட்டவனுக்கு என்ன உரிமை இருக்கிறது?

ஒன்று மட்டுமே அவனுல் செய்ய முடிந்தது. குழந்தைக்குத் தேவையான எல்லாப் பொருட்களும் வாங்கிக் கொடுத்தான். அதுவும் எத்தனை நாளைக்கு? ஒருநாள் குப்பம்மாள் மனந்திறந்து சொல்லிவிட்டாள். பாசத்தின் பிரதிபலிப்பைக் குப்பம்மாளால் உணர முடிந்திருந்தாலும், தன் குலக்கொழுந்தாக, தன்னுடைய வாரிசாக வளரும் குழந்தையிடம் அவன் பாசங்காட்டி மனத்தைக் கெடுப்பதற்கு இடங்கொடுக்க முடியுமா? அவன் வீட்டுக்கு வந்து பார்ப்பதையும், செல்லங் காட்டுவதையும் எப்படிப் பொறுத்துக்கொள்ள முடியும்?

லிம் எதுவும் பேச உரிமையற்றவனுக விலகி இருந்தான். லட்சுமி ஓடி விளையாடுவதையும், வளர்ப்புத் தாயுடன் போவதையும் வருவதையும், பார்த்துப் பார்த்து ஏக்கப் பெருமூச்சு விடுவான். அந்த அழகான குழந்தையாவது தன்னிடம் இருந்திருக்கக் கூடாதா? லிம்முக்கு நாளாக நாளாக மனத்தில் இதே வேதனை அதிகரித்தது. ஆருவது குழந்தையை விற்றதால்தான் தொடர்ந்து துன்பத்தைக் கொடுக்கிருரோ ஆண்டவன்? ஐந்து குழந்தைகள் பாரமானதால்தானே ஆருவது குழந்தையை விற்க மனந்துணிந்தது. இன்னும் பெற்றுத் தரவேண்டியவளும், பாரமாக இருந்த அந்த ஐந்து குழந்தைகளும் இப்போது எங்கே?...

லட்சுமியைப் பார்த்துக் கொண்டிருந்தால் நெஞ்சில் பல வேதனைகளும் விரக்தியும் தோன்றும் என்பதால், அந்தத் தோட்டத்தையேவிட்டு வேறு தோட்டத்துக்குப் போய் விட்டான். போனபின்னும் தன் இரத்தத்தில் பிறந்த மகளைக் காண இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒருமுறை அந்தத் தோட்டத்துக்குச் சென்று, பக்கத்து வீட்டிலிருந்துகொண்டு லட்சுமியைப் பார்ப்பான். அப்படிப் பார்ப்பதிலேயே தன் வாழ்நாளின் ஒரு பகுதியைக் கழித்தான்.

லட்சுமி வளர்ந்தாள். வளர்ந்து சுய அறிவு வந்ததும், பக்கத்து வீட்டிலுள்ளவர்கள், இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வரும் அந்தச் சீனன்தான் ‘அப்பா’ என்பதைச் சொல்லிவிட்டார்கள். லட்சுமி அதைப் பெரிது படுத்தாவிட்டாலும், பருவமெய்தியபின், தன்னை விற்றபின்னும், பாசத்தால் உந்தப்பட்டுப் பார்க்கவரும் அந்தச் சீனனிடம் லட்சுமிக்கு அனுதாபம் துளிர்விடத்தான் செய்தது. வெறும் அனுதாபம் மட்டும்!

லட்சுமி அனுதாபத்துடன் பார்க்கும் பார்வை அவனை மெய்சிலிர்க்கச் செய்யும். தன்னை இனங் கண்டு கொண்டாளே தன் மகள்! விற்ருலும்—தமிழ்ப் பெண்ணுக வளர்ந்

தாலும் — எல்லா உயிர்க்குமுள்ள இரத்த பாசம் இருக்கத் தான் செய்யும் !

லட்சுமிக்குப் பதினறு வயதிருக்கும். அப்போது லிம் காசநோயால் பீடிக்கப்பட்டு லேடி டெம்ப்ளர் மருத்துவமனையில் இருக்க நேரிட்டது. நோய் குணமாக மூன்று திங்கள் அங்கிருந்துவிட்டு, தானுராத்தா தோட்டத்துக்கு லட்சுமியைக் காண வந்தபோது, பெரும் அதிர்ச்சி தரும் செய்தி அவனுக்காகக் காத்திருந்தது —

லட்சுமியின் வளர்ப்புத் தாய் குப்பம்மாள் அம்மை நோயால் பாதிக்கப்பட்டு இறந்துவிட்டாளாம். அதன்பின் லட்சுமியைத் தோட்டத்திலுள்ளவர்களெல்லாம் சேர்ந்து, முடவன் முனியாண்டிக்குக் கல்யாணம் செய்து வைத்துவிட்டதும், அவன் எங்கோ அழைத்துச் சென்றுவிட்டான் என்பதையும் அறிந்து மிகவும் வேதனைப்பட்டான். தன் அன்பின் சின்னமாக இருந்த ஒரே ஒருத்தி — அந்த மகளைக் கண்டு மனத்தில் எழும் பாச வெறியைத் தணித்ததெல்லாம் இனியேது? இனி யாரிடம் அன்பு காட்டுவது?

பக்கத்திலுள்ள தோட்டங்களுக்கெல்லாம் சென்று விசாரித்தான். அன்பிற்குரிய அந்த ஜீவனைக் காணமுடியவில்லை. அவள் எங்கு போனுளோ, என்ன துன்பத்தில் இருக்கிருளோ? அவள் எங்கிருந்தாலும் நலமாக வாழ வேண்டும். அதுதான் லிம்மின் ஆசை. லட்சுமியை ஒவ்வொரு நாளும் நினைத்து மனமுருகினுன். லட்சுமியிடம் இடைக்காலத்தில் வளர்ந்த பாசம், மனைவியையும் ஐந்து பிள்ளைகளையும் மறக்கச் செய்துவிட்டது. இனி ஒரே ஒருத்தி — அவளை இறப்பதற்குள் காணக்கொடுத்துவைத்து விட்டால்...

வயதானபின் லிம், பழைய சாமான்கள் வாங்கி விற்கும் தொழிலில் ஈடுபட்டான். அதில் கிடைக்கும் வருவாயைக் கொண்டு ஐயாயிரத்துக்கு ‘இன்ஷூரன்ஸ் பாலிஸி’

எடுத்தான் — ஏதோ ஒரு நம்பிக்கையில்; மாதந் தவருமல் பணம் செலுத்திவந்தான்.

பழைய சாமான்கள் விற்கும் தொழிலில் ஈடுபட்டபின் ஒருநாள் குமுண்டிங் எஸ்டேட்டுக்குச் சென்றபோது லட்சுமியைக் கண்டுவிட்டான்! எதிர்பாராமல் தன் மகளைப் பார்த்ததும் அழுதுவிட்டான். நான்கு ஆண்டுகள் தேடியும் கிடைக்காத செல்வம் கண்ணெதிரே உருக்குலைந்து நிற்பதைக் கண்டு மனமுருகி அழுதான். லட்சுமியிடம் அவன் சொன்ன வார்த்தை: 'நான் வாழ்வது உனக்காகவே'. அதைக் கேட்டபோது லட்சுமி கண்கலங்கிப்போனுள்.

தனக்காக அந்தச் சீனக்கிழவன் வாழ்கிருனு? நான்கு ஆண்டுகளுக்குமுன் வெறும் அனுதாபத்துடன் பார்த்தவள் அன்று உண்மைப் பாசம் மிளிரப் பார்த்தாள்; மிகுந்த பாசத்துடன்!

லிம் அந்தத் தோட்டத்தில் விசாரித்த வரைக்கும் லட்சுமியைப் பற்றிக் கிடைத்த செய்திகள்: மூன்று குழந்தைகள் இருக்கின்றனவாம். லட்சுமி பால்மரம் வெட்டித்தான் முடவனை கணவனைக் காப்பாற்ற வேண்டுமாம். அவன், மனைவி சம்பாதிப்பதைக் குடித்துத் தீர்ப்பானும். அவனிடம் சொல்லாமல் வெளியே போனல் நையப் புடைப்பானும். இதெல்லாம் அறிந்து, தான் விற்ற மகளின் துயர வாழ்க்கைக்காக இரங்கினுன்; வேதனைப்பட்டான். வேறு என்ன செய்யமுடியும்? எந்த வகையில் லட்சுமிக்கு உதவுவது? பணம் கொடுத்தால் சந்தேகப்படுவார்களே?

லட்சுமிக்கு எதுவும் உதவமுடியாவிட்டாலும் அவளைக் காண விரும்பியே மாதமொருமுறை அந்தத் தோட்டத்துக்குப் போவான். அதை அவளும் எதிர்பார்ப்பாள். சந்தித்தால் இருவரும் எதுவும் பேசிக்கொள்வதில்லை. கண்களால் தம் மனவுணர்ச்சிகளைப் பரிமாறிக் கொண்டு, விடைபெறு

வார்கள். லட்சுமியைப் போயும் போயும் ஒரு முடவனுக்குக் கட்டிவைத்து விட்டார்களே என்று நினைத்து வருந்துவான் லிம்.

ஒருநாள் லட்சுமியைப் பார்த்தபின், வியாபாரத்துக்குப் போன வீட்டில் எதிர்பாராமல் முனியாண்டி லிம்மை அடையாளங் கண்டுகொண்டு ஏதேதோ சொல்லியிருக்கிருன். முனியாண்டி தாஞுராத்தா தோட்டத்திலிருந்தபோது லிம் வந்து போவதை அறிந்திருந்தான். அதனுல் முடியுமட்டும் இந்தத் தோட்டத்துக்கு வரக்கூடாது என்று லிம்மிடம் சொன்ஞன்.

லிம் சரியென்று ஒப்புக்கொண்டாலும், அதை அவனுல் நிறைவேற்ற முடியவில்லை. லட்சுமியும் லிம்மும் சேர்ந்து பேசுவதோ, பழகுவதோ, அந்தத் தோட்டத்திலுள்ளவர் அறிந்தால் சந்தேகப்படக்கூடும் என்பது முனியாண்டியின் எண்ணம். அவனுடைய எண்ணத்தையும் மீறி பாசம் வெற்றிநடை போட்டது. மாதா மாதம் தன் மகளைக் காணவே லிம் வருவான். குறிப்பிட்ட இடத்தில் லட்சுமி நின்றிருப்பாள். இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வார்கள்.

* * *

இன்றும் அவர்கள் சந்தித்துப் பிரிந்தார்கள். அடுத்த மாதமும் சந்திப்பார்கள்.

மாதம் ஒன்று கடந்தபின், லிம் சாக்குப்பையுடன் அதே செம்மண் சாலையினூடே நடந்துகொண்டிருந்தான். மன விதானத்தில் மகிழ்ச்சி உணர்வு. உடலில் ஒருவித தெம்பு. தன் மகளைக் காண ஆவலுடன் நடந்தான். குறிப்பிட்ட இடத்தை நெருங்கிவிட்டான். அவளிடம் இன்று மகிழ்ச்சியான ஒரு செய்தி — நீண்ட நாள் மனத்தில் தேக்கிவைத்த செய்தி — சொல்லவேண்டும். அதைக் கேட்டதும் லட்சுமி மகிழ்வாள். மனம்விட்டு மகிழ்வாளா? இல்லை, சொல்ல முடியாது; ஒருக்கால் அதிர்ச்சியையும் தரலாம்.

குறிப்பிட்ட இடத்தில் வழக்கமாக நிற்கும் லட்சுமியை அன்று காணோம்! லிம் துணுக்குற்றான். மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் சுழல ஆரம்பித்தன. லட்சுமியைக் காணோமே, ஏன்? உடல் நலம் பாதிக்கப்பட்டிருக்குமா? அப்படி இருந்தாலும் எப்படிப் போய்ச் சந்திப்பது? முனியாண்டி முரடனாயிற்றே?

சோர்ந்துபோன உள்ளத்துடனும் தளர்ந்த உடலுடனும் 'லய'த்தை நோக்கி நடந்தான். இனி என்றைக்குமே தனக்கு முகத்தைக் காட்டாமல் இருந்துவிடுவாளா? சமூகத்துக்கு அஞ்சி அப்படியொரு முடிவுக்கு வந்துவிட்டாளா?

லயத்திலே ஒரு வாடிக்கை வீட்டின்முன் உலகத்தையே பறிகொடுத்தவன்போல் நின்றான். சில்லறைக் காசுக்காக அந்த வீட்டுக்காரி நாலைந்து புட்டிகள் கொண்டுவந்தாள்.

சீனக்கிழவன் அதைப் பரிதாபத்துடன் பார்த்து, 'வேண்டாம்; குடிக்கக் கொஞ்சம் தண்ணீர்' என்று செய்கையிலே காட்டிவிட்டு, வாசலுக்கு முன்னுள்ள தூணில் சாய்ந்தான். ஒரு சில வினாடிகள்தான் கடந்திருக்கும், வீட்டுக்காரி தண்ணீர் கொண்டு வந்தபோது —

அந்தச் சீனக்கிழவன் விழிசெருகிக் கீழே சாய்ந்திருந்தான். வீட்டுக்காரி அலறிவிட்டாள். கூட்டம் கூட ஆரம்பித்துவிட்டது.

லட்சுமிக்கும் செய்தி எட்டியது, 'ஐயோ, பாவம் அந்த போத்தல்கார சீனக்கிழவன் செத்துப்புட்டானுண்டி' என்று பக்கத்துவீட்டு மாரியாயி 'வேடிக்கை' பார்க்கப் போகுமுன் சொல்லிவிட்டுச் சென்றாள்.

லட்சுமி உள்ளத்துக்குள் அழுதாள். முனியாண்டி அவளையே பார்த்திருந்தான். பொங்கிவரும் துயரத்தை அவளால் நிறுத்த முடியவில்லை.

"நான் போய்ப் பார்த்துட்டு வரட்டுங்களா?"

“போயேண்டி போ, உன் அப்பன்கிறதை ஊருக்கெல் லாம் சொல்லிவிட்டு வா. மானங்கெட்டவளே, தூ! ...”

லட்சுமி ஒன்றும் பேசவில்லை. மனத்துள் கேவிக் கேவி அழுதாள்.

மாரடைப்பால் இறந்துபோன சீனக்கிழவனின் சடலத் தைப் போலீஸ் வந்து எடுக்கும்போது மாலை இருட்டிக் கொண்டிருந்தது. பாவம், அவன் தன்னை அனுதையல்ல என்று நினைத்து ஏமாந்துவிட்டானே! விற்றுவிட்ட பொருளை மீண்டும் பெறத் துடிப்பதுபோல், அவன் பைத்தி யக்காரத்தனமாக லட்சுமியிடம் பாசங்காட்டி வந்தானே! உரிமை இல்லையென்று அறிந்த பின்னும் அவன் பாசங்காட் டினுன். வாழ்க்கையில் எல்லாவற்றையும் இழந்தபின், கண் ணெதிரே காணும் லட்சுமியிடம் அவன் மௌனமான பாசங் காட்டினுன். யாரிடமும் லட்சுமியைத் தான் விற்ற மகள் என்று சொல்லவில்லை. அதற்கான உரிமையைச் சமுதாயம் அங்கீகரிக்கா விட்டாலும், இயற்கை அதை மீறிச்சென்று விட்டது. இன்று லட்சுமியின் வாழ்க்கை வளம்பெற அவன் தன் இரத்தத்தை நீராக்கி ‘இன்ஷூரன்ஸ்’ கட்டினுன். அந்தப் பணம் லட்சுமிக்குச் சேரவேண்டுமென்று எழுதி யிருக்கிருனே — உலகம் உறவு முறையில் ஏற்காவிட்டாலும் அன்பளிப்பென அதை ஏற்காதா?

அப்பாவியாக — தூய மனத்தினுக லட்சுமியிடம் பாசங்கொண்டு வலம்வந்த அவனின் முகத்தை இறுதி யாகக் காண லட்சுமிக்குக் கொடுத்து வைக்கவில்லை. அவள் கணவனுல் தடுக்கப்பட்டு விட்டாள். ஆனுல் ...

லட்சுமியின் பேரில் ‘இன்ஷூரன்ஸ்’ பணம் வரும் போது அதை அவளுடைய கணவன் தடுப்பானு?

வி. இக்குவனம் | # பொங்கும் கடல்

வானப் பெருவெளியை ஒளிக்கரத்தால்
மாரு தரசோச்சும் ஆதவனின்
மோன நிலையகற்றி அலைக்கரத்தால்
வாவென்றே முகமலர வரவேற்ற
ஆனபெருங் கடற்கன்னி அன்பழைப்பில்
அவனிசைந்து நெருங்கியவ ளிடையணைத்து
ஊனுருகக் கூடிவிட்ட உவப்பினிலே
ஓயிலாக மேகமெனும் சேய் பிறந்தாள்.

பிறந்திட்ட பெண்சேயும் தாயைவிட்டுப்
பிரிந்தேகித் தந்தையினைக் காணுதற்கே
அறியாத பாதைபற்றி மேலெழுந்து
அளவில்லாத் தொலைவினையே கண்டுநொந்து
அறியாமை யெண்ணிமிக மனமுடைந்தே
அந்தரத்தில் நின்றுருகி ஏக்கமுற்றுப்
பிரியாமை யினிவேண்டு மென்றிறைஞ்சிப்
பித்தாகிப் பரவெளியில் மிதந்துநின்ருள்.

வான்வெளியில் தனித்திருந்த முகிலணங்கை
வளியென்னும் ஆண்மகனும் கண்டு(உ)வந்து
தேனொத்த தையலவள் இடையருகே
தென்றலெனும் கரமணைத்து அருகிழுக்க

மானிகர்த்தே துள்ளியவள் மயக்கமுற்று
மறுமொழியே பேசாது நின்றிருக்கக்
கானகத்துப் பகுதியெலாம் சென்றதன்பின்
காதல்மொழி பலபேசிக் கலந்துவிட்டான்.

காற்ருேடு கலந்துவிட்ட மேகநங்கை
கானகத்தும் மலையிடத்து முறங்கியபின்
மாற்றமது உடலினிலே கண்டதாலே
மயக்களிக்கும் கருமைநிறச் சூலடைந்து
மாற்றறியா மின்னலெனும் ஒளிவிடுத்து
மண்ணகத்தோர் நடுங்கஇடி நகைவிடுத்தே
பார்செழித்து வளம்சுரக்க மழையென்னும்
பாங்கான சேயொன்றைக் கீழ்விடுத்தாள்.

நீரென்னும் பெருஞ்சேயும் மலைகளோடு
நெடுந்தரை மற்றெங்கும் பரவியோடி
ஆருகி அணைக்கட்டில் அமைதியொடு
அரியதுயில் கொண்டேபின் னதனைவிட்டு
ஏருரும் கழனியொல் பார்வையிட்டு
எழிலூட்டும் பலவாவி குளம்நிறைத்தே
பூரித்துப் புன்னகைத்து அலையெழுப்பும்
பொங்குகடல் பேரடியில் சேர்ந்ததம்மா.

சி. வேலுஸ்வாமி

# மீனாட்சி

எங்கள் வீட்டுக்குச் சற்றுத்தூரம் தள்ளி முருகப்பா என்பவர் வசித்துவந்தார். அவர் வீட்டுக்கு நேர் எதிர்ப்புறமாகக் காளியப்பக் கவுண்டர் வீடு இருந்தது. என் தகப்பனாருக்கு இவர்கள் இருவருடனும் நெருங்கிய பழக்கமும் தொடர்பும் இருந்து வந்தது.

என் தகப்பனார் நோய்வாய்ப்பட்டுப் படுகிடையாய்க் கிடந்த சமயம், அவர்கள் இருவருந்தாம் அடிக்கடி வந்து விசாரித்துவிட்டுப் போவார்கள். பலவிதக் காரணங்களால் முருகப்பாமீது ஒரு தனிப்பற்று என் தகப்பனாருக்கு. நோய் அதிகமாகி, உயிர் விடுந்தருணம்; நானும் என் தாயாரும் அருகில் நின்றுகொண்டிருந்தோம். திடீரென்று, "முருகப்பா மாமாவையும், காளியப்பக் கவுண்டரையும் போய்க்கூட்டிக் கொண்டு வா, ஓடு ஓடு!" என்று அவர் என்னிடம் கூறியது இன்னும் என் நினைவில் பதிந்திருக்கிறது.

முருகப்பா மிகவும் நல்லவர். அவர் யாருடைய ஜோலிக்கும் போகமாட்டார். தானுண்டு தன் வேலையுண்டு என்றிருப்பவர் அவர். வேலைக்குப் போய்வந்தபின், வீட்டில் ஏதாவது வேலை செய்வதோ அல்லது படிப்பதோதான் அவரது மற்ற வேலை. மாலை ஐந்து மணிக்குமேல் பாரதம், இராமாயணம் போன்ற நூல்களை வைத்துக்கொண்டு அவற்றிலுள்ள பாடல்களைப் பாடி, விளக்கம் சொல்லுவதுதான் அவருடைய அன்றாடப் பொழுதுபோக்கு.

இருபத்தெட்டே வயதுடைய முருகப்பா தமிழில் ஓரளவு பயிற்சியுள்ளவர். சாயங்காலம் மணி ஐந்துக்கெல்லாம் புத்தகமும் கையுமாகத் திண்ணையில் உட்கார்ந்து வாயைத் திறந்தாரோ இல்லையோ, காளியப்பக் கவுண்டரும் என் தகப்பனாரும் என்ன வேலையிலிருந்தாலும் போட்டுவிட்டு ஓடிவிடுவார்கள்.

முருகப்பா இராகம் போட்டுப் பாடலைப் படிக்கவும் காளியப்பக் கவுண்டர் தலையையாட்டிக் கொண்டு இடையிடையே, 'பலே, சபாஷ்' என்று சொல்லவும், என் தகப்பனார் சற்றைக்கொருதரம் ஏதாவது கேள்விகள் கேட்கவும் ஆரம்பித்து விட்டால், அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் எல்லாம் வந்து கூடிவிடுவார்கள். நேரம் போவதே தெரியாது. 'சரி, நாளைக்குப் பார்த்துக்கொள்வோம்' என்று இவர்களே உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு எழுந்தால் தான் மற்றவர்களும் வீடு திரும்புவார்கள்.

ஒருநாள் "மூத்தவற்குரித் தரசெனும் முறைமையின் உலகம்" என்ற கம்பராமாயணப் பாடலுக்குப் பொருள் சொல்லிக் கொண்டிருந்தார் முருகப்பா. நானும் அங்கு சென்றிருந்தேன். என்னைக் கண்டதும் அவர், "வாப்பா, வா, உட்கார். எங்கே இந்தப் பாடலைப் படி, பார்ப்போம்" என்று புத்தகத்தை என்னிடம் நீட்டினார்.

எனக்கு அப்போது வயது பன்னிரண்டு. நான்காம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன். அவர் புத்தகத்தை என் கையில் கொடுத்ததும், மடமடவென்று பாடலைப் படித்தேன். பிழையின்றிப் படித்ததைக் கண்ட அவர் மிகவும் சந்தோஷப்பட்டார்.

"அட, நீ நல்லா படிக்கிறாயே!" என்று என் முதுகில் தட்டிக்கொடுத்தார் அவர். இதெல்லாம் ஜப்பானியர் இந் நாட்டுக்கு வரச் சிறிது காலத்துக்குமுன் நடந்தவையாகும்.

1942ஆம் ஆண்டின் பிற்பகுதி — சயாம் இரயில் பாதை போடுவதற்குத் தோட்டந் தோட்டமாய் ஆள் திரட்டிக் கொண்டிருந்த சமயம். எஸ்டேட் தொழிலாளர்கள் லோரி லோரியாய்ச் சயாமுக்கு அனுப்பப்பட்டனர்.

பிள்ளை குட்டிகள் இல்லாத முருகப்பாவும் சயாமுக்குச் செல்ல வேண்டியதாகிவிட்டது. அந்தத் தவணை போக வேண்டிய இரண்டாவது கோஷ்டியின் பட்டியலில் அவர் பெயர் சேர்க்கப்பட்டுவிட்டது. கடைசி நேரத்தில்தான் இவ்விஷயம் அவருக்குத் தெரியவந்தது; மிகவும் பதறிப் போனார் அவர்.

தம்மைச் சயாமுக்கு அனுப்பமாட்டார்கள் என்றே அவர் நினைத்திருந்தார். அதற்குக் காரணமும் இல்லாம லில்லை. தோட்டத்து அதிகாரிகள் தங்களுக்குப் பிடிக்காத ஆட்களையே அதிகமாகச் சயாமுக்கு அனுப்பிவந்தார்கள். நல்ல மனிதனை தனக்கும் இந்தக் கதி வரும் என்று எப்படி அவர் எதிர்பார்த்திருக்க முடியும்?

எப்படியோ அவர் பெயர் பட்டியலில் விழுந்துவிட்டது. இனி என்ன செய்வது? அங்கோடினார், இங்கோடினார்; அதிகாரிகளிடம் போய் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். காலைப் பிடிக்காத குறையாகக் கெஞ்சினார். ஆனால் ...

"போ, எழுதிவிட்ட பிறகு நான் ஒன்றும் செய்யமுடியாது முருகப்பா. நீ போகத்தான் வேண்டியிருக்கு. இல்லாவிட்டால் எனக்குக் கஷ்டம். ஜப்பான்காரனே இங்கு வந்துவிடுவான். அவனுக்கு யார் பதில் சொல்லுவது?" என்று ஒரேயடியாகச் சாதித்துவிட்டார் தோட்டத்து அதிகாரி.

மறுநாள் புறப்பட வேண்டிய தினம். "பதினொரு மணிக்கு லோரி வரும். எல்லோரும் தயாராயிருக்க வேண்டும். எங்கும் போகக்கூடாது" என்று முன்கூட்டியே உத்தரவு போட்டுவிட்டார் பெரிய அதிகாரி. அவரவரும் போவ

தற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்து கொண்டிருந்த னர். நான் முருகப்பா வீடு சென்று, அவருடைய பயணத் துக்கு வேண்டிய வேலைகளைச் செய்வதில் உதவி செய்தேன்.

அன்றிரவு நாங்கள் தூங்கவேயில்லை. முருகப்பாவின் மைத்துனர்மார் இருவருங்கூட வந்திருந்தனர். எல்லோரும் சயாம் போகும் விஷயமாகவே பேசிக்கொண்டிருந்தோம். எப்போது திரும்பி வருவது? வருவதற்குள் என்னென்ன நேருமோ, யார் கண்டது? என்று பலவாறு எங்கள் பேச்சு சென்றுகொண்டிருந்தது. காலை நேரத்தில் எப்படியோ கண்ணயர்ந்து விட்டோம்.

மறுநாள் குறிப்பிட்ட நேரத்துக்குச் சற்று முன்னதாகவே லோரி வந்துவிட்டது. யம கிங்கரர்களைப் போலிருந்த நாலு ஜப்பானியரும் லோரியைவிட்டு இறங்கினர். அவர்களும் அதிகாரிகளும் வீடுவீடாகச் சென்று சீக்கிரமாகப் புறப்படும்படி ஆட்களுக்கு உத்தரவிட்டுக் கொண்டும், அவசரப் படுத்திக்கொண்டும் இருந்தனர்.

ஆட்கள் ஒவ்வொருவராகப் பெட்டி படுக்கைகளுடன் வந்து, இரண்டு லோரிகளிலும் ஏறிக்கொண்டிருந்தனர். முருகப்பாவும் தமது சாமான்களுடன் மனைவி பின்தொடர வந்துகொண்டிருந்தார். அவர் முகத்தில் ஈயாடவில்லை. அவர் லோரியில் ஏறக் கால்வைத்ததுதான்; அவர் மனைவி அவருடைய கைகளைப் பிடித்துக்கொண்டு கதற ஆரம்பித்துவிட்டாள். அவள் அழுகையானது அங்குக் கூடியிருந்தோரையெல்லாம் அழ வைத்துவிட்டது.

லோரியைச் சுற்றிப் பெரிய கூட்டம். புருஷனை வழியனுப்ப வந்தவர்களும், தமையன், தம்பி, கொழுந்தன் முதலியவர்களை வழியனுப்ப வந்தவர்களுமாக எல்லோரும் சேர்ந்து குய்யோ முறையோ என்று கத்த ஆரம்பித்துவிட்டார்கள். எங்கு பார்த்தாலும் ஒரே அழுகைக் குரல்தான்; விக்கலும் விம்மலும் சொல்லி முடியாது.

நாம் இங்கு நின்றுகொண்டிருப்பதால்தானே இவர்களும் இங்கேயே நின்று அழுதுகொண்டிருக்கின்றூர்கள் என்று நினைத்துத்தானே என்னவோ, நின்றுகொண்டிருந்த இரு லோரிகளும் 'விர்' என்று அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுக் கனவேகத்தில் சென்று மறைந்தன. அதுவரை அங்கு நின்றுகொண்டிருந்த அத்தனைபேரும் கண்களினின்று பெருக்கெடுத்தோடிய நீரைத் துடைத்துக் கொண்டே தத்தம் வீடு திரும்பினர்.

முருகப்பாவுக்கும் அவருடைய மைத்துனர்மார் இருவருக்கும் ஏதோ மனஸ்தாபம் என்பது எனக்குத் தெரியும். இருந்தும் முருகப்பாவை வழியனுப்புவதற்காக அவர்கள் வந்திருந்தார்கள். அத்துடன் சரி. தங்கள் தங்கையிடம் யாதேனும் சொல்லவோ, அல்லது அவளைத் தங்களுடன் வந்து இருக்கும்படி கேட்டுக்கொள்ளவோ இல்லை. போதாததற்குக் காலமும் ஜப்பானியர் காலம். சொல்லவேண்டுமா? 'தாயும் பிள்ளையும் என்றாலும், வாயும் வயிறும் வேறுதான்' என்னும் பழமொழியின் முழு அர்த்தத்தையும் ஜப்பானியர் காலத்தில்தான் நன்கு உணரமுடிந்தது.

மீனாட்சி — இதுதான் முருகப்பாவின் மனைவி பெயர். வேலைக்குச் செல்லும் நேரம் தவிர மற்ற நேரங்களில் சொந்த வீட்டிலோ, அல்லது எங்கள் வீட்டிலோதான் அவளைக் காணமுடியும். அனாவசியமாய் யார் வீட்டுக்கும் போக மாட்டாள். அடிக்கடி எங்கள் வீட்டுக்கு மட்டும் வருவாள். சில சமயங்களில் சாப்பாட்டை எங்கள் வீட்டிலேயே வைத்துக்கொள்வாள். அடிக்கொரு தரம் அவளுக்கு முருகப்பாவின் நினைவு வந்துவிடும்; அவரை நினைத்து நினைத்துக் கண்ணீர் விடுவாள். அப்போதெல்லாம் என் தாயார் ஆறுதல் சொல்லுவாள்.

முருகப்பா மலாயாவிலிருந்து ஊருக்கு வந்தது, பல இடங்களில் பெண் பார்த்தது, பிறகு தன்னைக் கல்யாணம் செய்துகொண்டு வந்தது, அண்ணன்மார் இருவரும்

தன்னைக் கவனியாமல் இருப்பது — எல்லாவற்றையும் ஒரு மூச்சுச் சொல்லியழுதால்தான் அவள் மனப் பாரம் குறையும்.

சில நாட்களில் பழைய கதைகளை நினைத்துக்கொண்டு விசித்து விசித்து அழுதுவிட்டுச் சாப்பிடாமலே படுத்துக் கொள்ளுவாள்.

" முருகப்பா சீக்கிரம் வந்திடுவான் மீனுட்சி. நீ சும்மா கவலைப் படாதே. பட்டினியாக் கிடந்தா உடம்பு என்னத் துக்காகும் ? " என்று மல்லுக்கட்டி, அவளைச் சாப்பிட வைப்பாள் என் தாயார்.

கவலை காரணமாக மீனுட்சியின் உடம்பு இளைக்கத் தொடங்கிற்று. போதாததற்கு மலேரியாக் காய்ச்சல் வேறு. ஆகையால், ஆஸ்பத்திரிக்குச் சென்றுள். அவள் ஆஸ்பத்திரியில் ஒரு வாரத்துக்குமேல் இருக்க நேர்ந்தது. அச்சமயத்தில்கூட அவளுடைய சகோதரர்கள் வந்து பார்க்கவில்லை. சொல்லி வைத்ததுபோல் இருவருமே பார்க்க வராமலிருந்தது எனக்கு வியப்பையூட்டியது.

நானும் என் தாயாரும் மட்டும் அடிக்கடி ஆஸ்பத்தி ரிக்குச் சென்று, வேண்டியதை வாங்கிக்கொடுத்துவிட்டு வருவோம். நாளடைவில் நோய் குணமடைந்து அவள் வீடு திரும்பினுள்.

முருகப்பா எஸ்டேட்டை விட்டுச் சென்ற இரண்டு மாதங்களுக்குப் பிறகு அவரிடமிருந்து ஒரு கடிதம் வந்திருந் தது. மாதா மாதம் பணம் அனுப்புவதாகவும், கவலைப் படாமல் இருக்கும்படியும் அதில் எழுதியிருந்தார். கடிதத் தைக் கண்டபிறகுதான் மீனுட்சிக்குக் கொஞ்சம் தெம்பு பிறந்தது.

தன்னுடைய சம்பளப் பணத்தையும், முருகப்பா அனுப்பும் பதினைந்து வெள்ளியையும் போஸ்ட் ஆபீஸில் போட்டு வைத்தாள். எப்பொழுது முருகப்பா வருவார் என்பதே அவளுடைய தினசரிக் கேள்வியாயிருந்தது.

ஆரம்பத்தில் சயாமுக்குச் சென்ற இரண்டொருவர் அங்கிருந்து திரும்பி வந்திருந்தனர். அவர்களிடம் முருகப் பாவைப்பற்றிக் கேட்டபோது நன்றுயிருப்பதாகச் சொன்னார்கள்.

சயாமில் ஜப்பானியருடைய கொடூர நடவடிக்கைகளைப் பற்றிக் கதை கதையாகத் தெரிந்துகொள்ள முடிந்தது, அவர்களிடமிருந்து. மரத்தின்மேல் ஆட்களை ஏறவிட்டுப் பின்னர் மரத்தை வெட்டிச் சாய்ப்பதும், கீழே தள்ளிச் சப்பாத்துக்காலால் நெஞ்சில் மாறிமாறி உதைப்பதும், சௌக்காரத் தண்ணீரைக் குடிக்க வைப்பதும், அவர்களுடைய கொடூரச் செயல்களுள் பிரசித்தி பெற்றவை. 'அவற்றை யெல்லாம் நேரில் பார்த்தவர்கள் தாம் உணர முடியும்' என்று வந்தவர்கள் சொன்னார்கள்.

ஜப்பானியர்களின் கொடூரமான நடவடிக்கைகளே, ஜனங்கள் ஆயிரக்கணக்கில் மரணமடைந்ததற்குக் காரணம் என்ற செய்தி எல்லோருடைய காதுக்கும் எட்டியது. சயாம் போனவர்களில் இன்னின்னர் இறந்துவிட்டனர் என்ற செய்தி சொந்தக்காரர்களுக்கு வந்துகொண்டிருந்தது. இதைக்கேட்ட மீனுட்சி முருகப்பாவுக்கு என்ன நேரிட்டதோ, ஏது நேரிட்டதோ என்று பெரிதும் கவலைப் பட்டாள்.

அவள் கவலைப்பட்டதற்கு தகுந்தாற்போல 'முருகப்பா மரம் விழுந்து அடிபட்டு இறந்துபோனுர்' என்று யாரோ மீனுட்சியிடம் சொல்லிவிட்டனர். அவ்வளவுதான், மீனுட்சி விழுந்தாள்; புரண்டாள்; தலையைத் தூண்களில் மோதினுள்; "இன்னும் என் உயிர் ஏன் போகாமலிருக்கிறது?" என்று கத்திக்கொண்டே அண்டையிலிருந்த கிணற்றை நோக்கி ஓடினுள்.

என் தாயார்பாடு கஷ்டமாகிவிட்டது. இருபது வயதுள்ள ஒருத்தியை — அதுவும் நிலையின்றிக் குதிப்பவளை — கிழவியான என் தாயார் பிடித்து நிறுத்துவதென்பது

சுலபமா? நானும் சேர்ந்து பிடித்து நிறுத்தி, ஒருவாறு எங்கள் வீட்டுக்குள் கொண்டுவந்து சேர்த்தோம். பெருங் கூட்டம் கூடிவிட்டது.

"அடி, பைத்தியக்காரி! யாரோ சொன்னதைக் கேட்டுட்டு கெணத்திலே விழப்போறியே, இது சரியா?" என்று வந்திருந்தவர்களுள் இரண்டொருவர் அவளுக்குப் புத்திமதி சொன்னார்கள். என்ன சொல்லியும் அவள் மனம் நிம்மதி அடையவில்லை.

ஜப்பானியர் ஆட்சிக்காலம் மறக்க முடியாத ஒன்று. தோட்டங்களில் வேலையில்லை. பத்துநாள் பன்னிரண்டு நாள் தான் வேலை. போதிய அரிசி கிடைக்காது. 1943, 1944-ஆம் ஆண்டுகள் மிகமிக நெருக்கடியான சமயம். உணவின்றி, உடையின்றி மக்கள் தினம் தினம் மடிந்து கொண்டிருந்தனர். இந் நிலையில் வேலை நிமித்தம் நானும் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட வேண்டியவனானேன். மீனாட்சியின் நிலை எங்களை வாட்டியது. என் தாயார், "நீயும் எங்களுடன் வந்துவிடு, மீனாட்சி" என்று எவ்வளவோ வற்புறுத்தினாள். ஏனோ மீனாட்சி சம்மதிக்கவில்லை. கடைசியில், மிக்க துயரத்துடன், அவளைத் தனியேவிட்டுப் பிரிந்து சென்றோம்.

"இதுவரை நீங்களாவது ஆதரவாயிருந்தீர்கள். இப்போது நீங்களும் போகிறீர்கள். என் கதி எப்படியாகுமோ?" என்று அவள் புலம்பினாள்.

நாங்கள் போனதைத் தொடர்ந்து பலர் அந்த இடத்தைவிட்டுக் கிளம்பினார்கள். 'சோறு கிடைக்கும் இடமே சொர்க்க லோகமா'யிருந்தது ஜனங்களுக்கு.

ஆறு மாதங்கள் ஓடிவிட்டன. நாங்கள் 'மெந்தக்காப்பு'க்குப் போனபின், போக்கு வரவு வசதியில்லாததாலும், வரச் சௌகரியமில்லாமையாலும் மீனாட்சியின்

நிலைபற்றி அறிய முடியவில்லை. 'மீனாட்சி என்ன ஆனாளோ? எப்படியிருக்கிறாளோ' என்று என் தாயார் துடியாய்த் துடித்துக்கொண்டிருந்தாள்.

மலாய் நாட்டைப் பிடித்திருந்த சனியன் ஒழிந்தது என்பதற்கு அறிகுறியாக, ஜப்பானியர் ஆட்சி ஆட்டங் கண்டது. அவர்கள் சரணாகதி யடைந்தனர். பிரிட்டிஷார் பழையபடி மலாய் நாட்டில் கால் வைத்தனர்; பஞ்சமும் ஒழிந்தது. பிழைப்பை நாடிப் பல இடங்களுக்குச் சென்ற மக்கள் பழைய இடத்துக்குத் திரும்பிக்கொண்டிருந் தனர். நாங்களும் மெந்தக்காப்பைவிட்டுத் திரும்பினோம்.

பழைய இடம் — அடே அப்பா! எவ்வளவு மாறுதல்! எங்கு பார்த்தாலும் புது முகங்கள். பழைய மனிதர்கள் பலர் மண்ணுக்கு இரையாகியிருந்தனர். சிலர் பழைய இடத்தை விரும்பாமல் புது இடத்திலேயே தங்கிவிட்டனர். நான் வந்ததும் வராததுமாய் மீனாட்சியைத்தான் தேடினேன். விசாரித்தபோது, அவள் நாங்கள் சென்ற கொஞ்ச காலத்துக்குப் பின் எங்கோ சென்றுவிட்டதாகத் தெரிய வந்தது.

அடுத்தடுத்த இடங்களில் சென்று விசாரித்தபோது, கிளந்தானுக்குச் சென்றவர்களுடன் அவள் போனதாகவும், பின் என்னவானாள் என்று தெரியாதெனவும் செய்தி கிடைத்தது. நானும் விடாது அங்கங்கு தெரிந்தவர்களிட மெல்லாம் விசாரித்த வண்ணமாகவே இருந்தேன். தகவல் இல்லை.

பிரிட்டிஷார் வந்து மூன்று மாதங்களுக்குப் பிறகு, திடீரென்று ஒருநாள் மீனாட்சி எங்களைத் தேடி வந்தாள்; நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். "வந்துவிட்டாயா, மீனாட்சி!" என்று என் தாயார் அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

மீனாட்சி இப்போது பழைய மீனாட்சியல்ல. மூன்று வருடங்களுக்கு முன்பு நான் பார்த்த மீனாட்சிக்கும், இப்

போது என் முன் நின்றுகொண்டிருக்கும் மீனுட்சிக்கும், மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமையிருந்தது. ஜப்பானியர் ஆட்சியின் நினைவுச் சின்னங்கள் நிரந்தரமாக அவளிடம் குடிகொண்டிருந்தன.

மீனுட்சி வந்திருப்பதைப்பற்றி அவளுடைய அண்ணனுக்குச் செய்தி அனுப்பினேன். அவன் வந்து மீனுட்சியைப் பார்த்து, "நான் நாளை வருகிறேன்" என்று சொல்லிப்போனவன் எட்டிப் பார்க்கவேயில்லை. இரண்டு நாட்கள் கழிந்தன.

இரவுச் சாப்பாடு முடிந்தபின், படுக்கைக்குச் சென்ற என் தாயாரும் மீனுட்சியும் தூங்கவில்லை. அவரவர் பட்ட கஷ்டங்களைப்பற்றி யெல்லாம் பேசிக்கொண்டிருந்தார்கள். மீனுட்சி இடையில் நீண்டதொரு பெருமூச்சுடன், மெதுவான குரலில் ஏதோ சொன்னுள். நான் கவனமாகக் கேட்டும் எல்லா விஷயங்களும் சரிவரக் காதில் விழவில்லை. கடைசியாகச் சொன்ன செய்தி எனக்குத் தெளிவாகக் கேட்டது. அவ்வளவுதான், என் மனம் வருந்தியது. "ஐயோ பாவம், கடைசியில் இப்படியா நேரவேண்டும்?" என்று கண்ணீர் விட்டேன். அன்று மீனுட்சி என் தாயாரிடம் சொன்னதை இன்று நினைத்தால்கூட என் கண் கலங்குகிறது. இவ்வளவுக்கும் காரணம்......?

மறுநாள் காலையில் மீனுட்சி புறப்பட்டுவிட்டாள். என் தாயார் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தாள். மீனுட்சி கேட்கவில்லை.

"கூடப்பிறந்த அண்ணனே என்னை வெறுத்துவிட்ட போது, நான் யாருக்காக இந்த உலகத்திலே வாழணும்? என்னமோ உங்களைப் பார்க்கணும்னு இருந்துச்சு, பார்த்திட்டேன். இனிமேல் எனக்கு என்ன இருக்கு? ஒரு சாண் கயித்துக்குக் கூடவா எனக்கு விதியில்லாமப் போச்சு?" என்று சொல்லிய வண்ணம் தலையில் முக்காடிட்டுக்

கொண்டு வேகமாக நடந்தாள் அவள். நான் அவள் போவதையே கண் இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தேன்.

அவள் எங்கு சென்ருள்? என்ன ஆனுள்? என்று தெரியவில்லை. அவள் சென்றதற்குப் பிறகு ஒருநாள் நான் கடைத்தெருவுக்குச் சென்றிருந்தேன். கோவிலுக்குப் பக்கத்தில் இருந்த சாப்பாட்டுக் கடையில் முருகப்பாவின் தோற்றமுடைய ஒருவர் உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தார். எனக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அவசர அவசரமாய் அவரருகில் சென்றேன். சற்று எட்டி நின்று உற்றுப் பார்த்தேன். ஆம், அசல் முருகப்பா போலவே அவர் இருந்தார். அவர் எதற்காகவோ முகத்தை என் பக்கம் திருப்பினுர்.

என்ன ஆச்சரியம்! முருகப்பாவே தான். உடல் மெலிந்து கன்னமெல்லாம் குழி விழுந்து, பார்க்கப் பரிதாபகரமான நிலையில் இருந்தாலும், முகத்திலிருந்து அவரை அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது. என்னைப் பார்த்து அவர் விழித்தார். அவர் பார்வையிலிருந்து என்னைத் தெரிந்துகொள்ளவில்லை என்பதை உணர்ந்துகொண்டேன்.

அருகில் சென்று, தட்டுத் தடுமாறியபடியே, "எப்ப வந்தீங்க?" என்றேன். என் குரலிலிருந்துதான் நான் இன்னுரெனக் கண்டுகொண்டார் போலும்.

"தம்பி, தம்பி ... நீயா? ..." அவர் குரல் தழுதழுத்தது. பேச முடியவில்லை அவரால். என் கைகளைப் பிடித்துக்கொண்டார். கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்துகொண்டிருந்தது. நான் மௌனியானேன். அவர் கண்களினின்று பெருகிய நீர் என் கைகளை நனைத்துக்கொண்டிருந்தது.

பக்கத்தில் இருந்தவர்களெல்லாம் கூடிவிட்டனர். என் முகத்தைப் பார்க்கப் பார்க்க அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது அவருக்கு. அதுவரை அடக்கிவைத்திருந்த நானும் பொறுக்க முடியாது அழுதுவிட்டேன்.

"சரி, வீட்டுக்குப் போவோம்" என்று சொல்லி அவரை அழைத்துக்கொண்டு வீடு நோக்கி நடந்தேன். என் தாயாருக்கு அதற்குள் முருகப்பா வந்திருப்பது தெரிந்து விட்டபடியால், எங்களைப் பார்க்க எதிரே வந்து கொண்டிருந்தார்.

வீடு போய்ச் சேர்ந்த பிறகு, இரண்டொருவர் அவரிடம் வந்து பேசிக்கொண்டிருந்தனர். ஒருவரிடமும் அவர் மனம் திறந்து பேசவில்லை. ஏதோ கேட்டதற்காக இரண்டொரு வார்த்தை மட்டும் பேசிவிட்டு மற்றதற்கெல்லாம் தலையசைத்துவந்தார். அவர் உள்ளத்தில் இருந்த வேதனை தான் இதற்குக் காரணம் என்பதை நான் அறிந்துகொண்டேன்.

வந்து இரண்டு நாட்களாகியுங்கூட நானோ என் தாயாரோ அவரிடம் ஏதும் விசாரிக்கவில்லை. மீனாட்சி வந்து போனதைப்பற்றியும் சொல்லவில்லை. அவரும் வெளியிற் செல்லாது வீட்டிலேயே இருந்தபடியால் அறிந்து கொள்ள முடியாமலிருந்தது.

அவராகவே ஏதும் சொல்லமாட்டார் என்று தெரிந்ததும், நானே வலியக் கேட்டுத் தெரிந்துகொள்ள எண்ணினேன். அப்படிக் கேட்டபோது அவர் சொன்னதாவது:

"தம்பி, நான் இறந்துபோய்விட்டதாக யாரோ மீனாட்சியிடம் சொல்லியிருக்கிறார்கள். மரம் என்மேல் விழுந்து காலிலும் மண்டையிலும் பலமான அடிபட்டது வாஸ்தவம். என்னை ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிட்டார்கள். அங்குள்ள ஆஸ்பத்திரிக்குப் போனவர்கள் சாகாமல் பிழைத்து வெளியே வருவது அபூர்வம். நான் மிகக் கஷ்டப்பட்டுப் பிழைத்தேன். நான் ஆஸ்பத்திரிக்குப் போன பின்தான் யாரோ இந்தத் தகவலை இங்கே எழுதியிருக்கிறார்கள்போலிருக்கிறது.

" நான் ஆஸ்பத்திரிக்குப் போனபின் பணம் அனுப்பவும், கடிதம் எழுதவும் முடியாமல் போய்விட்டது. பணமும் கடிதமும் வராதபடியால் மீனாட்சி நான் இறந்ததை நிச்சயப்படுத்திக்கொண்டாள்.

" மூன்று வருடம் முடிந்தவர்கள் வீட்டுக்குத் திரும்பிச் செல்லலாம் என்பது சட்டம். ஆனால், சட்டத்தை அநுசரித்து அங்கிருந்து ஆட்களைத் திருப்பியனுப்ப எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

" நான் ஆஸ்பத்திரியிலிருந்து வந்ததும், எப்படியாவது தப்பித்துப் போய்விடுவது என்று தீர்மானித்துக் கால் நடையாகவே நடந்து பாதித்தூரம் வந்தேன். வழியில் நான் பட்ட கஷ்டங்கள் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லி முடியாது.

" கடைசியில் ஒரு லோரி டிரைவரின் உதவியால் தப்பிப் பிழைத்துக் கிளந்தான் வந்து சேர்ந்தேன். அங்கு அரிசிப் பஞ்சம் கொஞ்சம் குறைவு. நான் அங்கு வந்து சேர்ந்த போது உடல் நிலை சரியில்லை. எனவே, அங்கு ஒருவர் வீட்டில் தங்கி வேலை செய்துவந்தேன். நம் ஆட்களில் சிலர் அங்கிருந்தனர். அவர்கள் மூலம் மீனாட்சியைப் பற்றிக் கொஞ்சம் அறிய முடிந்தது.

" ' யார் யாரோ செத்தார்கள். யாருக்கு ஞாபகமிருக்கு. மீனாட்சி சீக்காகத்தான் கிடந்தா. அநேகமாகச் செத்துத் தானிருக்கணும்' என்று அவர்கள் சப்புக்கொட்டினார்கள்.

" புருஷனை இழந்தவர்களும், பெண்சாதியை இழந்தவர்களுமாக எனக்குத் தெரிந்த சிலர் அங்கே வேலை செய்துகொண்டிருந்தனர். அவர்களில் பலருக்கு என்னைத் தெரியவில்லை. எனக்கும் அநேகரைத் தெரியவில்லை. தெரிந்தவர்களிடமும் நான் என்னைக் காட்டிக்கொள்ளவில்லை.

" ஆமா, மரமேறி கோவிந்தனை உனக்குத் தெரியுமல்லவா ? "

"ஆமாம்" என்றேன் நான்.

"மீனுட்சி கிளந்தானுக்கு மூன்று மைல் தூரத்தில் இருப்பதாகவும், கடை முதலாளி ஒருவன் அவளை மனைவி யாக்கிக் கொண்டதாயும் என்னிடம் சொன்னுன் அவன்."

இதையெல்லாம் கேட்டபோது என் மனம் திடுக் கிட்டது. "ம்... அப்புறம்" என்றேன் நான்.

"ஐயோ, தம்பி! என் மனம் என்ன பாடுபட்டது தெரியுமா?

"என் மனைவி இன்னெருவருடன் இருக்கிருள் என்று கேட்டவுடனே என் ரத்தம் கொதித்தது. கோபத்தைத் தாங்கிக்கொள்ளக்கூடிய சக்தி என் உடம்பில் இல்லை. எனினும், பல்லைக் கடித்துக்கொண்டிருந்தேன். எப்படி யாவது ஒரு முறை அவளைக் கண்ணுல் பார்த்துவிட வேண்டு மென்ற ஆசை தலை தூக்கி நின்றது.

"அலைந்து அலைந்து கோவிந்தன் சொன்ன அந்தக் கடையைக் கண்டுபிடித்தேன். நான் அங்கு சென்றபோது அவள் கடையில் ஏதோ வேலை செய்துகொண்டிருந்தாள். நான் நின்றபடியே அவளைக் கூர்ந்து கவனித்தேன். 'மீனுட்சி' என்று கூப்பிடலாமாவென்று என் வாய் துடித்தது. சிரமப்பட்டு அந்த ஆசையை அடக்கிக் கொண்டேன்.

"கடை முதலாளி அவளிடம், 'அவருக்கு என்ன வேணும்னு கேளு' என்ருர். அவள் என்னை நோக்கி வந்தாள். என் நெஞ்சு படபடத்தது; கைகால்கள் உதற லெடுத்தன. அவள் என்னைப் பார்த்ததும் சற்று நின்று, உற்று நோக்கினுள். நான் 'விறுக்'கென்று வெளியே புறப் பட்டுவிட்டேன்; திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

"கோவிந்தனைத் தேடிப்பிடித்து, மறுபடி விசாரித்த போது மேலும் பல விவரங்கள் தெரியவந்தன. மீனுட்சி கிளந்தானுக்கு வந்தபோது சாகப் பிழைக்கக் கிடந்தாளாம்.

கடைசியில், அந்தக் கடைக்காரர் தாம் அழைத்துக் கொண்டுபோய்க் கவனித்தாராம். அவரில்லாவிட்டால் மீனாட்சி எப்பொழுதோ செத்துப்போயிருப்பாளாம். உடல் குணமடைந்த பின்பு அங்கேயே வேலை செய்து வந்திருக்கிறாள். கடைசியில், அவரிடமே இருக்க வேண்டியதாகி விட்டது.''

"நீங்கள் ஏன் உண்மையைக் கூறி, மீனாட்சியை அழைத்து வந்திருக்கக்கூடாது?'' என்றேன் நான்.

"நான் அப்படி நினைத்துத்தான் அவளைத் தேடிச் சென்றேன். ஆனால், அப்பொழுது அவள் கர்ப்பிணியாயிருந்தாள். அப்படிப்பட்டவளை நான் கூட்டிக்கொண்டு வந்தால் மற்றவர்கள் என்ன சொல்லமாட்டார்கள்? அதனால்தான் இதுவரை இங்குகூட வராமலிருந்தேன். பழகின தோஷமும், பழைய இடத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையும் என்னை விடவில்லை; இங்கு வந்தேன்'' என்று முடித்தார் அவர்.

மீனாட்சி இங்கு வந்தபோது என் தாயாரிடம் கூறியதும் இதுதான். ஒருவேளை முருகப்பா பழைய இடத்துக்கும் போயிருக்கலாம் என்றுதான் அவள் பார்க்க வந்திருக்கிறாள். ஆனால், முருகப்பா இப்போதுதானே வந்திருக்கிறார்?

மீனாட்சி வந்ததை இவரிடம் சொல்லலாமா வேண்டாமாவென்று தறுகித்தறுகிக் கடைசியில் சொல்லிவிடுவதென்றே தீர்மானித்தேன்.

"இரண்டு வாரங்களுக்கு முன்பு மீனாட்சி இங்கு வந்திருந்தது'' என்றேன்.

"ம்... என்ன, மீனாட்சியா? இங்கு வந்திருந்தாளா! ஏன் தம்பி நீ இதுவரை அதுபற்றி என்னிடம் கூறவில்லை?'' என்று பதறினார் அவர்.

"உங்கள் வாய்மொழியைக் கேட்டபிறகுதான் அதைச் சொல்ல வேண்டுமென்ற எண்ணம் வந்தது. நீங்கள்

சொன்னமாதிரிதான் மீனுட்சியும் அம்மாவிடம் சொன்னது. ஆமாம் இனி நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

"என்ன செய்வது? என்னவோ என் தலையெழுத்து இப்படியும், அவள் தலையெழுத்து அப்படியும் ஆகிவிட்டது. இனிமேல் அவளைத் தேடிக் கண்டுபிடித்துக் கூட்டி வர முடியுமா? அப்படியே தான் நான் கூட்டிக்கொண்டு வந்தாலும், சாதிக்காரர்கள் எங்களைச் சும்மாவிடுவார்களா? சாதியிலேயே சேர்க்கமாட்டார்களே. வேண்டாம் தம்பி, அவள் எங்காவது சுகமாக இருந்துவிட்டுப் போகட்டும்'' என்ருர்.

அவரிடமிருந்து வெளிக்கிளம்பிய நீண்ட பெருமூச்சு, அவருடைய நெஞ்சிலிருந்த துயரத்தை எடுத்துக் காட்டிற்று.

அன்று மத்தியானச் சாப்பாட்டுக்குப் பின்னர், அவர் எங்களிடம் போகப் போவதாகச் சொன்ஞர். எங்கு செல்லவிருக்கிருர் என்று அவரும் சொல்லவில்லை; நானும் கேட்கவில்லை.

இரவு முழுவதும் எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. முருகப்பாவும், மீனுட்சியும் மாறி மாறி என் நெஞ்சத்துள் புகுந்து தங்களுடைய சோகக் கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தனர். விடியற்காலை மணி நாலிருக்கும்.

"ஐயோ! ஐயோ! மீனுட்சி! டே, தம்பி! ஓடு ஓடு ரயிலு!...'' என்ற சத்தம் அடுத்த அறையிலிருந்து கேட்டது.

திடுக்கிட்டெழுந்த நான் என் தாயாரிருந்த அறைக்கு ஓடினேன். என்னைக் கண்டதும் அவர்கள் விழித்தார்கள். அவர்கள் முகம் பேயறைந்ததுபோல் காணப்பட்டது. சத்தமிட்டது அவர்கள்தாம்!

"என்னம்மா, ஏன் சத்தம் போட்டீர்கள்?'' என்றேன்.

"கூடாத கனுக் கண்டண்டா, தம்பி; அதுதான் சத்தம் போட்டிருக்கேன் போலிருக்கு. நினைச்சாக்கூட ரோமமெல்லாம் சிலுக்குது. விடியக்காலம் காணற கனு தப்பாமப் பலிக்கும்னு சொல்லுவாங்க ... ம் ... முருகன் இருக்கருன், வா" என்று படுக்கையைச் சுருட்டிய வண்ணம் வெளியே வந்தார்கள்.

ஒன்பது மணிக்குத் திண்ணையில் உட்கார்ந்து, அப்போதுதான் தபால்காரர் கொடுத்துவிட்டுப்போன பத்திரிகையைப் பிரித்துப் பார்த்துக்கொண்டிருந்தேன். ஒரு மூலையில் கொட்டை எழுத்தில் போடப்பட்டிருந்த செய்தி என்னைத் திடுக்கிடச் செய்தது. வாய் பதறியது. என் கைகள் வெடவெடத்தன.

"அம்மா ! அம்மா ! சீக்கிரம் வாங்க !" என்று கத்திக்கொண்டே செய்தியை அவர்களுக்கு வாசித்துக் காட்டினேன் :

"நேற்றுக் கிளந்தானுக்குப் போகும் வழியில் கிமாசுக்குப் பக்கத்தில் இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க மீனாட்சி என்ற ஒருபெண் ரயிலிலிருந்து கீழே விழுந்து தற்கொலை செய்துகொண்டாள். அவள் ரயிலிலிருந்து கீழே விழுந்ததைப் பார்த்த ஒருவர் அபாயச் சங்கிலியை இழுத்தார். எனினும், அதற்குள் அவளுடைய உயிர் போய்விட்டது."

இதைக் கேட்டதுதான் :

"ஹா, மீனாட்சி ! ஐயோ, போய்ட்டியா ? பார்த்தாயாடா, தம்பி. நான் கண்ட கனு பலிச்சே போச்சே ?" என்று துணியை முகத்தில் புதைத்துக்கொண்டு, 'கோ' வெனக் கதறினார்கள் அவர்கள். எனக்கோ துக்கம் தாங்கவில்லை. பேப்பரை முகத்தில் வைத்துக்கொண்டு விக்கி விக்கி அழுதேன் நான்.

மீனாட்சியும் முருகப்பாவும் என் மனக்கண்முன் வந்து நின்றனர். அவர்களின் பழைய கால வாழ்க்கை என் மனக் கண்ணுக்குத் தென்பட்டது.

மீனாட்சி முருகப்பா போன்ற எத்தனையெத்தனை இளந் தம்பதிகள் ஜப்பானியரின் கோர ஆட்சியில் இப்படிப்பட்ட நிலைக்கு ஆளானார்களோ என்ற ஒரே எண்ணந்தான் என் சிந்தனையில் எஞ்சி நின்றது.

அ. சந்திரசேகரன்

# பிளவு

பேரழகின் இலக்கணமாய் பக்கத்தில் நின்று கொண்டிருந்த உமாவையே சில நிமிடங்கள் பார்த்துக் கொண்டிருந்த அருளப்பரின் நெஞ்சத்தின் அடித்தளத்திலிருந்து பெருமூச்சு ஒன்று கிளம்பி வெளியில் வந்து, வெப்பத்தைக் கக்கியது! அந்தப் பெருமூச்சில் என்னென்ன பொருள்கள் புதைந்து கிடந்தன என்பது அருளப்பருக்குத்தான் தெரியும்; அவருடைய இதயத்துக்குத்தான் புரியும்! அருளப்பரையும் உமாவையும் ஒன்ருக நிற்கவைத்துப் பார்த்தால், தந்தையும் மகளும் நிற்கிருர்கள் என்றுதான் பலர் கூறுவார்களே தவிர, இருவரையும் கணவன்-மனைவி என்று இணைத்துக்கூற மாட்டார்கள். காரணம், இருவருக்குமிடையே வயதிலும் தோற்றத்திலும் அவ்வளவு பெரிய இடைவெளி இருந்தது!

உமாவுக்குத் தான் மாலையிடுவோம் என்று அருளப்பர் துளியும் எதிர்பார்த்ததில்லை! இராணுவத்தில் பெரிய உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றிருந்த அவர், தம் இளமை நாட்களை எப்படித் தனிமையில் கழித்தாரோ, அதேபோல் பச்சைப் பிரம்மச்சாரியாகவே இருந்து, தம் வாழ்க்கைச் சரிதையை முடிக்கத்தான் அவர் மிகவும் விரும்பினர். ஆனல், அவருடைய விருப்பத்திற்கு மாருக நிகழ்ச்சிகள் நடைபெற்றதென்ருல், அதற்கு அவர் முழுப் பொறுப்பாளி அல்ல......! அவருடைய நலத்திலும் நன்மையிலும், பெரிதும் அக்கறையும் பற்றும் கொண்டுள்ள

அவருடைய மிக நெருங்கிய நண்பர்களின் இடையருத தூண்டுதலும் வேண்டுகோளும்தான் அவருடைய மன மாற்றத்திற்கு அடிப்படைக் காரணங்கள்; அவரை இல் வாழ்க்கை என்னும் அழகிய மாளிகையினுள் செல்லத் தூண்டிய வழிகாட்டிகள்!

'ஏறத்தாழ ஐம்பது வயதுதானே ஆகிறது அருளப்ப ருக்கு? நிறையச் சொத்தும் பாங்கியில் இருப்பும், பிரபல இராணுவ ஆபீசர் என்ற பேரும் இருக்கும்போது ஏன் அவர் தனிக் கட்டையாக இருந்து வாழ்வை வீணுக்கிக் கொள்ளவேண்டும்?' — இப்படியெல்லாம் அருளப்பரின் நண்பர்கள் எண்ணியதில் தவறில்லைதான்!

"மிஸ்டர் அருளப்பன்! ஏழைக் குடும்பத்தில் பிறந்த பெண்ணுக இருந்தாலும், ரொம்ப லட்சணமாக இருக்கிருள் உமா! நல்ல குணங்களும் அம்சங்களும் உமாவிடம் இருப்பதால்தான் அவளை உங்களுக்கு வாழ்க்கைத் துணைவி யாகத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்! காலங்களில் வசந்தம் எவ்வளவு முக்கியமும் சிறப்பும் பெற்றிருக்கிறதோ, அதே போல் மனிதவாழ்க்கை என்னும் பெருங்கதையில் இனிமை யும் பெருமையும் நிறைந்த அத்தியாயம் திருமணம்! இனிமேல்தான் உங்களுடைய உண்மையான வாழ்க்கையே ஆரம்பமாகவிருக்கிறது!" — அருளப்பரை சூழ்ந்து கொண்ட அவருடைய நண்பர்கள் கூறிய வார்த்தைகள் இவை! நல்லதொரு நாளில் அருளப்பருக்கும் உமாவுக்கும் திருமணம் வெகு சிறப்புடன் நடந்தேறியது!

தமிழ்ப் பெண்மையின் மொத்த உருவாக விளங்கிய உமாவின் ஒப்பற்ற அழகும் பண்பும் அருளப்பரின் உள்ளத் தைப் பெரிதும் கவர்ந்துவிட்டன! அவள் தனக்குப் புரிந்த அன்புப் பணிவிடைகளில் தன்னையே மறந்து நின்றுர் அருளப்பர். வரண்ட நிலமாக இருந்த அவருடைய வாழ்க்கை நிலத்தில் அழகு நதியை ஓடவிட்டுக் கொண் டிருந்தாள் உமா. அவருடைய இதயம் என்ற வானத்தில்

வண்ண நிலவாக உதயமாகி இருந்தாள் உமா! நண்பர்கள் கூறியதுபோல் இதுவரை இடம் பெற்றிராத புதிய இனிய அத்தியாயங்கள் அவருடைய வாழ்க்கைச் சரிதையில் வந்து படிவதை உணர்ந்தார் அருளப்பர்.

அன்பும் அறமும் வளர்த்துப் புனிதநிலை அடைவதில் மட்டும் இல்வாழ்க்கை முழுமை பெற்று விடுவதில்லை. மென்மையும் அழகும் பொருந்திய மலர்கட்கு நறுமணமும் ஓரளவு அத்தியாவசியமாக இருப்பதுபோல், இல்வாழ்க்கையின் முழுமைத் தன்மைக்கு தாம்பத்ய உறவும் ஒரு காரணமாக இருக்கிறது!

இதைப் பற்றித் திருமணத்துக்கு முன்னர் அருளப்பர் சிந்தித்ததில்லை. சிந்திக்க அவருக்கு நேரமும் கிடைத்ததில்லை. ஆனால், இப்போது வருத்தத்தோடு சிந்தித்தார்! 'இத்தனை காலத்திற்குப்பின் ஏன் திருமணம் செய்து கொண்டோம்' என்று கவலைப்பட்டார். உமாவின் இளமைத் தாபங்களை யெல்லாம் முற்றாகத் தணிக்கும் ஆற்றல் தன்னிடம் இல்லை என்பதைக் கண்டபோது, அவருடைய இதயம் வேதனையால் துடித்தது! அவருடைய வயது ஒருபுறமிருக்க, பத்து ஆண்டுகளுக்குமுன் கார் விபத்து ஒன்றில் சிக்கி, தன்னுடைய ஆண்மைத் தன்மையைப் பெரிதும் இழந்துவிட்டிருந்தார் அருளப்பர்!

தன் உயிருக்கு உயிராக தன்னை உமா நேசிக்கிறாள், தன்மேல் அன்பு செலுத்துகிறாள் என்பது அருளப்பருக்கு நன்கு தெரியும். உமாவும் அவரும் மணவாழ்வில் ஈடுபட்டு இரண்டு ஆண்டுகள் ஆகின்றன. இந்த இரண்டு ஆண்டுகளில் ஒரு முறையாவது அவர்மீது வெறுப்போ முகச் சுளிப்போ உமா காட்டியதில்லையே! காலையில் எழுந்ததும் அவருடைய பாதங்களில் பயபக்தியோடு பணிந்து வணங்கி, நாள் முழுவதும் அருளப்பரின் நலத்தைக் கவனிப்பதையே தன் வாழ்வின் மூச்சாகக் கொண்டிருக்கிறாளே உமா!

தினமும் இறைவழிபாடு செய்யும்போது உமா எதைத் தன் மனதிற்குள் வேண்டிக் கொள்கிருள் என்பதும் அருளப்பருக்குத் தெரியாதது அல்ல! 'ஒரு குழந்தைச் செல்வம் தங்கள் வீட்டில் தவழ்ந்து விளையாட வேண்டும்; மழலை மொழி தங்கள் இல்லத்தில் ஒலிக்கவேண்டும்' என்பது உமாவின் தணியாத, தவிர்க்க முடியாத ஆசை.

அருளப்பரிடமே ஒருமுறை நாணத்துடன், "ஏங்க, நமக்கு ஒரு குழந்தை பிறந்தால் எவ்வளவோ நன்ருக இருக்கும், இல்லையா?" என்ருள் உமா!

அப்போது அருளப்பரின் நெஞ்சம் என்ன செய்தது தெரியுமா? செய்வதறியாது தவித்தது; துடித்தது; அழுதது! அவருக்'கு மட்டும் அந்த ஆசையும் வேட்கையும் இல்லையா என்ன?

* * *

அன்று—ஒரு கடிதம் வந்திருந்தது. கோலாலம்பூரில் இருந்த அவருடைய மிக நெருங்கிய நண்பர் மேகநாதன் அருளப்பரின் நலம் பற்றியும் அக்கறையோடு அந்தக் கடிதத்தில் விசாரித்திருந்தார். அத்துடன் தகவல் இலாகாவில் பணிபுரியும் அவருடைய மூத்தமகன் ரவி அருளப்பரின் ஊரான தெலுக்கான்சனுக்கு வேலை மாற்றலாகி வருவதாகவும், அவனைக் கவனித்துக்கொள்ளும்படியும் மிக வேண்டிக் கேட்டுக்கொண்டிருந்தார் மேகநாதன்!

மேகநாதனும் அருளப்பரும் இளமை நண்பர்கள். இருவரும் ராணுவத்தில் பணிபுரிந்தவர்கள். அருளப்பர் மணம் புரிந்துகொள்ளக் காரணமாக இருந்தவர்களில் மேகநாதனும் ஒருவராயிற்றே! ரவிக்கு எவ்வளவோ உதவிகள் செய்யக் கடமைப்பட்டிருந்தார் அருளப்பர்.

தெலுக்கான்சனுக்கு வந்த ரவிக்கு, பெரிய பங்களா போன்ற தன்னுடைய வீட்டிலேயே தங்குவதற்கு ஏற்பாடுகள் செய்து கொடுத்தார் அருளப்பர்.

கூடிப்போனால், ரவிக்கு இருபத்தைந்து வயதுதான் இருக்கும். கட்டான உடலும், வட்டவடிவமான களையான முகமும், மலர்ந்த விழிகளும், அரும்பு மீசையும் கொண்டு சிறந்த ஆணழகனாய் விளங்கினான் ரவி. இன்னும் மண மாகவில்லை அவனுக்கு.

அருளப்பரும், உமாவும் ரவியிடம் காட்டிய அன்பும் பரிவும் அவனை மெய்மறக்கச் செய்துவிட்டன! தன்னு டைய சொந்த வீட்டில், தன்னுடைய அன்புப் பெற்றோரின் பராமரிப்பில் இருந்து வருவது போன்ற உணர்வுதான் அவனுடைய உள்ளத்தில் மேலோங்கி நின்றதே தவிர, தன்னுடைய தந்தையின் நண்பரான அருளப்பரின் வீட்டில் தான் இருக்கிறோம் என்ற நினைவு அவனுக்குச் சிறிதும் ஏற்பட்டதில்லை!

* * *

வானத்தில் நிலவோ, நட்சத்திரங்களோ இல்லாத தால் இருள் பயங்கரமாக கவிந்திருந்தது! இடியும் மின்னலும் பளிச்சிட்டு முழங்கின ... இலேசாக வீசிய வாடைக் காற்றைத் தொடர்ந்து, மழை சோவெனக் கொட்ட ஆரம்பித்தது!

இரவு மணி பன்னிரண்டு. அப்போது. இந்த உலகத்தின் கவலைகள், ஆசாபாசங்கள் அனைத்தையும் மறந்த நிலையில் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார் அருளப்பர்! உமா... ? தூக்கம் பிடிக்காமல் மெத்தையில் இப்படியும் அப்படியும் புரண்டு, நெளிந்து கொண்டிருந்தாள்! இரவின் அமைதி யின்மையும் வெளியில் வீசிக்கொண்டிருந்த குளிர்காற்றும் சேர்ந்து, உமாவின் இதயத்தில் ஒருவித அச்சத்தைப் பரப்பிக்கொண்டிருந்தன. புனித ஒளி பரவி நின்ற இடத்தில் திடீரென்று இருள் பரவ ஆரம்பிக்கிறதே! இதயம் என்ற ஆலயத்தில் ஒரு சிறு பிளவும் வெடிப்பும் ஏற்படுகின் றனவே! புரியாத ஒரு சபலம்... இதய தாபம் ... உந்தல்... உணர்ச்சிகளின் ஆர்ப்பரிப்பு ... !

படுக்கையிலிருந்து மெல்ல எழுந்து கொள்கிருள் உமா...அருளப்பரின் உடம்பைத் தழுவியிருக்கும் போர்வை சிறிது நழுவி வெளியில் கிடக்கிறது. அதை எடுத்து வாடை படாமல் அவருடைய மேனியை நன்கு போர்த்து கிருள் ... உமாவின் உள்ளத்தில் ஒருவித பயம், பதற்றம்! பூப்போன்ற அவளுடைய உடலில் வியர்வைத் துளிகள் அரும்பிவிடுகின்றன! அவளுடைய கால்கள் மெல்ல மெல்ல அடி எடுத்து வைக்கின்றன. ஆம், உமா! அந்த அறையை நோக்கி நடக்கிருள் ... அந்த அறைக் கதவு திறந்துதான் இருக்கிறது. அந்த அறையினுள் ஓர் அழகிய படுக்கையில் ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருந்தான், ரவி! ஒவ்வொரு இரவும் காற்றுக்காக அறைக் கதவையும் ஜன்னல் கதவு களையும் திறந்து வைத்துவிட்டுப் படுப்பது ரவியின் வழக்கம். அதனுல்தான் இன்றும் அவனுடைய அறைக்கதவு திறந் திருந்தது!

கால்களில் ஒருவித நடுக்கம் இழைய, ரவியின் அறை உள்ளே நுழைந்தாள் உமா ... ரவியின் மிக அருகில் சென்ருள். அவளுடைய கைகள் — ஆம், உமாவின் கைகள்தான் — ரவியின் கன்னங்களை அப்படியே ஆசை யோடு — உணர்ச்சிக் கொந்தளிப்போடு பற்றின ...... சில விஞடிகள்தான்! தீயை மிதித்தவள் போல் திடுக்கிட்டு விலகித் தன் கைகளை எடுத்துக்கொண்டாள். இவ்வளவு நேரமாக அவளுக்கே விளங்காத ஒரு மயக்கத்தில் ஆழ்ந் திருந்த — அவள் இத்தனை நாட்களாகப் பெருமையோடு கட்டிக் காத்துவந்த பெண்மை விழித்துக்கொண்டது! நல்ல வேளை ... ரவி விழிக்கவில்லை — தூங்கிக்கொண்டிருந்தான்!

விர்ரென்று அந்த அறையைவிட்டு ஓடி வந்து விட்டாள் உமா! அவளுடைய இதயத்தில் சூழ்ந்திருந்த இருளெல்லாம் படீரென்று விலகி, மீண்டும் அங்கே புனித ஒளி நிரம்பிக்கொண்டிருந்தது!

'சிறிது நேரத்தில் எவ்வளவு பெரிய தவறைச் செய்ய இருந்தேன்! கடவுளே என்னை மன்னித்துவிடு!' உள்ளுக்குள் அழுது புலம்பியது உமாவின் உள்ளம்! ஓடிச்சென்று அருளப்பரின் பாதங்களைத் தொட்டு வணங்கினுள். எதையோ நினைத்துக்கொண்டு பக்கத்திலிருந்த வழிபாட்டு அறைக்குள் ஓடினுள் உமா. அங்கிருந்த முருகனின் படத்துக்கு முன் இருந்த அகல் விளக்கு சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தது. உமாவின் கண்கள் நீரில் மிதந்துகொண்டிருந்தன. அவளுடைய கைகளை — ரவியின் கன்னங்களைப் பற்றிய அதே கைகளை — அந்த அகல் விளக்கின் சுடரில் வைத்துக் கொண்டு அங்கேயே நின்று கொண்டிருந்தாள் உமா! பூப்போன்ற அவளுடைய கைகள் இரண்டும் விளக்கின் சுடரில்!... கண்களில் தேங்கி நின்ற நீர் பொல பொலவெனத் தரையில் கொட்டிக் கொண்டிருந்தது! செய்ய நினைத்த குற்றத்துக்குத் தக்க தண்டனை இதுதான் என்ற நினைவு மட்டும் உள்ளத்தில் மேலோங்கி நின்றது! கைகளில் ஏற்பட்ட வலி பொறுக்க முடியாமல் மயங்கிப் பொத்தென்று கீழே விழுந்துவிட்டாள் உமா!

* * *

காலை புலர்ந்தது! வழிபாட்டு அறைக்குள் நுழைந்த அருளப்பருக்குத் தூக்கிவாரிப் போட்டது!

"உமா...! கைகளில் என்ன?" என்று அலறித் துடித்து அவளை அப்படியே அள்ளிக்கொண்டார் அருளப்பர்!

"என்ன நடந்தது உமா?" சோகத்தால் அருளப்பரின் குரல் கரகரத்தது. அவருடைய கண்களில் நீர் மல்கி விட்டது!

"ஒன்னும் இல்லீங்க! பிளாஸ்கிலே சுடு தண்ணீர் நிரப்புவதற்காகக் 'கேஸ்' அடுப்பைத் திறக்கும்போது இலேசாக நெருப்புப் பட்டுவிட்டது" என்ருள் உமா, வேதனை கலந்த புன்னகையுடன்.

"அப்பவே என்கிட்டே சொல்லியிருக்கலாமே உமா?" என்று கவலையோடு கூறிவிட்டு, பாய்ந்து சென்று, டாக்டருக்குப் போன் செய்தார் அருளப்பர்.

அவர்களின் உரையாடலைக் கேட்டுவிட்டு அங்கு வந்த ரவி, உமாவைப் பார்த்து மிக வருந்தி, "இனிமே அந்தக் 'கேஸ்' அடுப்புப் பக்கம் போகாதீங்க! சமைக்க ஆள் இருக்கும்போது நீங்க ஏன் இதையெல்லாம் செய்யணும்?" என்றான்.

சில நிமிடங்களில் டாக்டர் வந்து உமாவின் கைகளுக்குச் சிகிச்சை அளித்தார்.

உமாவின் கைகளின் பழைய அழகும் மென்மையும் திரும்பிவர ஒரு மாதம் பிடித்தது! ஆனால், அந்த வடு மட்டும் அங்கேயே இருந்தது — புடம்போட்ட பொன் உமா என்பதைப் பறை சாற்றுவதற்காக!

* * *

"சார்! என்னை ஈப்போவிற்கு மாற்றியிருக்கிறார்கள்! இதோ பாருங்கள்! இன்று காலையில்தான் இந்தக் கடிதம் என் கைக்குக் கிடைத்தது!" என்று அருளப்பரிடம் தன் வேலை மாற்றம்சம் பந்தமாக வந்திருந்த கடிதத்தைக் காட்டினான் ரவி.

அருளப்பரும் உமாவும் மிகவும் வருந்தினார்கள். தங்கள் குடும்பத்தில் ஒருவனைப் பண்போடும் பாசத்தோடும் பழகிய ரவியைப் பிரிய அவர்களுக்கு மனமே இல்லைதான்; என்ன செய்வது? அவனுடைய உத்தியோகம் அப்படி.

"நீங்களும் உங்கள் துணைவியாரும் எனக்குச் செய்த உதவிகளுக்கு எப்படி நன்றியைத் தெரிவிப்பது என்று

புரியவில்லை!" என்று பணிவோடு கூறிய ரவியைப் பாசப் பெருக்கோடு அணைத்துக்கொண்டார் அருளப்பர்!

உமாவும் அருளப்பரும் தெலுக்கான்சன் ரயில் நிலையத்திற்குச் சென்று ரவியை வழியனுப்பி வைத்தனர்! ரவியை ஏற்றிக்கொண்ட ரயில் ஈப்போவை நோக்கிச் சென்று கொண்டிருந்தது...

ஸை. பீர்முகம்மது

# சிவப்பு விளக்கு

கோலாலம்பூர் 'ரயில்வே ஸ்டேசனி'லிருந்த கூச்சல், சுறுசுறுப்பு, வெளிச்சம் ஆகிய அனைத்தையும் வாரிப் போட்டுக்கொண்டு அந்தக் கடைசி வண்டி போய்விட்ட பிறகு, பிச்சைக்காரன் சாப்பிட்டுவிட்டுப் போட்ட எச்சில் இலையைப்போல், 'ஸ்டேசன்' ஹோவென்று இருந்தது. தூரத்தே 'கேபினு'க்குப் பக்கத்தில் நின்ற கைகாட்டியின் சிவப்பு விளக்கு மாத்திரம் அந்த இரவு நேரத்தில் யாருக் காகவோ காத்திருப்பது போல் 'கொட்டக் கொட்ட' விழித்துக் கொண்டிருந்தது.

அந்தச் சிவப்பு விளக்கிலிருந்து தனது பார்வையை எடுக்காமல், கடைசியாகப் பீடித்துண்டை நன்றாக உறிஞ்சி இழுத்துப் புகையை வெளியே விடாமல் 'தம்' பிடித்தவாறே பீடித் துண்டைத் தூக்கிச் சாலையில் வீசினான் காளிமுத்து. வீசப்பட்ட வேகத்தில் பீடித் துண்டில் இருந்த நெருப்பு பொறிகளாகி அழகுகாட்டி, பின் அவ்வழியே சென்ற ஒரு காரில் அடிபட்டு தன் கடைசி மூச்சை விட்டது. காளிமுத்து 'தம்' பிடித்து அடக்கி வைத்திருந்த புகையை இலேசாக வெளியே விட்டான்.

வலப்புறத்தில் மடித்து வைத்திருந்த காகிதக் கட்டை அவிழ்த்து, அதிலிருந்த இரண்டு முரட்டுக் காகிதங்களை ஒன்றாக இணைத்துத் தரையில் விரித்தான். பின் தனது கட்டையை அதில் கிடத்தினான். கைகள் தாமாகவே தலைக்குக் கீழே தலையணையாகப் போய் பொருதிக்

கொண்டன. மனத்தில் எந்தக் கவலையும் இன்றி — எதிர் காலம் பற்றிய இலட்சியமோ — கனவோ — கொள்கையோ இன்னும் எதை எதை இங்கே சொல்லலாமோ — அவை எல்லாவற்றையுமே மறந்த நிலையில் துடைத்து வழிக்கப் பட்ட மனத்தினனாய், கால்மேல் கால் போட்டுக்கொண்டு காளிமுத்து கண்ணை இலேசாக மூடினான். ஓ...! அதுதான் எவ்வளவு சுகமான ஏகாந்த நிலை !

கோலாலம்பூர் 'ரயில்வே ஸ்டேசனு'க்குப் பக்கத்தில், இந்நாட்டின் பொருளாதாரத்தை — அதன் வளத்தை எடுத்துக் காட்டியவாறு தலைக்குமேல் கிழக்கு மேற்காக ஓடிய மேம்பாலத்தை உறுதியாகத் தாங்கி நின்ற 'சிமிண்ட்' சுவருக்கடியில்தான் காளிமுத்துவின் இரவுநேர வாழ்க்கை நடந்துகொண்டு வருகின்றது. பகலில் காளிமுத்து எங் கெங்கோ போவான்; எதை எதையோ செய்வான். அவன் அப்படிச் செய்துதான் ஆகவேண்டும். வயிறென்ற ஒன்றும் அதனோடு சேர்ந்தே அவதரித்த பசியென்ற ஒன்றும் இருக் கும்பொழுது எதையாவது செய்துதானே தீர வேண்டி யிருக்கின்றது ! ரிஷிமூலமும் நதி மூலமும் பார்க்கக் கூடா ததுபோல், காளிமுத்துவின் பகல்நேர வாழ்க்கையையும் ஆராயாமல் விட்டுவிடக்கூடியது அல்ல !

காலையில் பெரிய மார்க்கெட்டில் கையேந்திக்கொண்டு நிற்பான். மத்தியான வேளையில் ஏதாவதொரு கடையின் பின்புறமாக இருக்கும் குப்பைத்தொட்டியில் தலையை நுழைத்துக்கொண்டு எதையாவது பொறுக்கிக் கொண் டிருப்பான். எது எப்படி இருந்தாலும் மாலை நாலரை மணிக்கு, சௌக்கிட் ரோட் 'வெள்ளைமாளிகை'யில் ஒரு 'பயிண்ட்' அடிக்க வந்துவிடுவான். அங்கே ஏழரை மணி வரையில் பொழுது இனிமையாகக் கழியும். அதன் பிறகு நேரே மேம்பால மாளிகைக்குத் தூங்க வந்துவிடுவான். மீண்டும் மறுநாள் காலையில் பெரிய மார்க்கெட், குப்பைத் தொட்டி, கள்ளுக்கடை ...

காளிமுத்து கண்ணை இலேசாக மூடினன். மேம்பாலத்தினடியில் இருந்த சுற்றைச் சுற்றிக்கொண்டு ஓடிய வாகனங்கள் அவனது தூக்கத்தை எப்பொழுதுமே கெடுத்த தில்லை. ஆனல், இன்று காளிமுத்துவால் நிம்மதியாகத் தூங்கமுடியவில்லை. அதற்குக் காரணம், பக்கத்தில் தொடர்ந்து விடாமல் கேட்டுக்கொண்டிருந்த 'முனங்கல்' சத்தம்தான்.

மேம்பாலத்தின் 'சிமிண்ட்' சுவருக்கருகே காளிமுத்து மட்டுமே தூங்கவில்லை. இன்னும் சொந்தத்தில் கூரையில்லாத சிலரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். மவுண்ட் பாட்டன் ரோட்டின் வாடிக்கைக்காரன் அமீது, 'முனிசிபல் கார்-பார்க்' ஆ பெங், இன்னும் பலருக்குத் தஞ்சமளித் திருந்தது இந்த மேம்பாலம். அமீதும், ஆ பெங்கும்தான் காளிமுத்துவின் நெருங்கிய நண்பர்களாக கடந்தவாரம் வரையிலும் இருந்தார்கள். அமீதுக்கு அரசாங்க ஆதரவில் ஏதோ ஓர் இடத்தில் தஞ்சமடையும் பாக்கியம் கிடைத்து விட்டதாக நேற்றுத்தான் கள்ளுக்கடையில் அவன் கேள்விப்பட்டிருந்தான். இனி அமீது பிச்சை யெடுக்க வேண்டிய நிலை இல்லை. ஆ பெங்கிற்கும் காளிமுத்துவிற்கும் பழைய நிலைதான். என்றலும், இருவரும் கடந்த ஒருவார காலமாகப் பேசிக்கொள்வதில்லை. ஆ பெங் அத்துமீறி பெரிய மார்க்கெட் எல்லையில் புகுந்து பிச்சை எடுக்க ஆரம்பித்ததால் இருவருக்கும் தகராறு.

இரண்டு நாட்களாகவே ஆ பெங் தொழிலுக்குப் போக வில்லை. சரியான காய்ச்சல்; முக்கலும் முனங்கலுமாக புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தான்.

காளிமுத்துவால் நிம்மதியாகத் தூங்கமுடியவில்லை. நட்பு முறிந்து நின்றலும் அன்பும் நட்பும் இதயத்தில் பின்னி அவனை எழுந்து உட்கார வைத்தன. எப்படிப் போய் பேசுவது ?

அன்புக்கு வாய்மொழி ஏது? காளிமுத்து 'பொசு'க் கென்று எழுந்து, ஆ பெங்கின் அருகில் சென்று, அவனைத் தொட்டுப் பார்த்தான். கை சுரீரென்று சுட்டுவிடவே கையை எடுத்துக் கொண்டான். 'பகல் பன்னிரண்டு மணி வெயிலுபோலக் காய்ச்சல் அடிக்குது. இப்படிப் பொணம் போலக் கிடக்கிருனே, பாவி மகன்'! — காளிமுத்து விறு விறுவென்று ரயில்வே பாலத்தைத் தாண்டி பதினைந்தாம் கட்டை இறக்கத்தில் இருந்த சாப்பாட்டுக் கடையில் நுழைந்தான். திரும்பி வரும்பொழுது கையில், 'பட்டர்' தடவிய ரொட்டித்துண்டுகளும், ஒரு பால் டின் குவளையில் வறக்கோப்பியும், 'ஆஸ்ப்ரோ' மாத்திரைகளும் இருந்தன.

ஆ பெங்கை எழுப்பினுன் காளிமுத்து. அவன் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தானேயொழிய எழுவதாகக் காணும். கையிலிருந்த பொருட்களைக் கீழே வைத்து விட்டு, அவனைத் தூக்கி தனது உடலோடு சாய்த்துக் கொண்டு, மாத்திரைகளை வாயில் போட்டு கோப்பியையும் ஊற்றினுன். இரண்டு 'மொனரு' குடித்த பிறகு ஆ பெங் எழுந்து உட்கார்ந்து கொண்டான். ரொட்டித் துண்டையும் கோப்பிக் குவளையையும் அவன் கையில் கொடுத்து, தின்னும்படி சொன்னுன் காளிமுத்து.

ஆ பெங்கின் உடல் வியர்த்தது. பக்கத்தில் ரயில்வே ஸ்டேசனில் எப்பொழுதாவது கண்ணில்படும், கரிபோட்டு ஓடும் ரயில் என்ஜினின் நிறத்தில் ஒரு துணி இருந்தது. அதை எடுத்து ஆ பெங்கின் வியர்வையைத் துவட்டி எடுத்தான் காளிமுத்து.

"நாளைக்கு ஆஸ்பத்திரிக்குப் போயேன்"—காளிமுத்து அந்தத் துண்டைத் தரையில் விரித்து வைத்துவிட்டு ஆ பெங்கை நிமிர்ந்து பார்த்தான்.

"போகத்தான் வேண்டும். அந்த ஜெனரல் ஆஸ் பத்திரி மருந்துத் தண்ணியை வாங்கிக் குடிச்சாலாவது இந்தக் காய்ச்சல் குறையுமென்று நான் நினைச்சேன்.

அங்கேயும் இப்போது 'கார்டு' எடுக்க ஐம்பது காசு கொடுக்கணுமாம். நான் எங்கே போவேன். ரெண்டு நாளா தொழிலுக்கு வேறே போகலே. இந்த உடம்போட நான் தனியா எப்படிப் போறது?"— ஆ பெங் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கப் பேசி முடித்தான். அவனுடைய குரலில் ஏக்கமும், பழைய பகை மறந்த நிலையும் இருந்ததை காளிமுத்து உணர்ந்தான்.

"சரி, நாளைக்குக் காலையிலே நான் உங்கூட வர்றேன். உன்னை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் மருந்து வாங்கிக் கொடுத்துட்டு அப்புறம் நான் 'பெரிய மார்க்கெட்'டுக்குப் போறேன். ஆனல், அதுக்குள்ளாற என் காலை வரும்படி போயிடும். அதுக்கென்ன ... காசு பெருசா — உன் உடம்பு பெருசா? சரி சரி, காலையிலே எழுந்திரிச்சி, ஆகவேண்டியதைக் கவனிப்போம். நீ படுத்துக்கோ! இந்தா இது இன்னிக்கு மார்க்கெட் ஸ்திரீட் சந்தில் கிடைத்த போர்வை. இதை எடுத்து போர்த்திக்க." காளிமுத்து தனது படுக்கையில் சுருட்டி வைத்திருந்த கிழிசல் விழுந்த — குடலைப் பிடுங்கும் நாற்றமெடுத்த — அந்தப் போர்வையை எடுத்து ஆ பெங்கிடம் நீட்டினான். அவன் அதை வாங்கிக்கொண்டான். அந்தக் கிழிசலும் நாற்றமும் அவர்களுக்குள் பழகிப் போய்விட்டது. அவர்களிடையே அத்தரும் — பவுடரும் மணந்தால் அது ஆச்சரியப்படவேண்டிய நிலை. நாற்றமும்— கிழிசலும் — புண்ணும் — சிரங்கும் — சீழும் தான் அவர்களுடைய வாழ்க்கை மூலதனம்.

காளிமுத்து இருட்டில் எழுந்துபோய் சிறிது நேரம் 'நின்றுவிட்டு' வந்து படுத்துக்கொண்டான். ஆ பெங்கும் அந்தக் கிழிசல் போர்வையைப் போர்த்திக்கொண்டு கட்டையைச் சாய்த்துக் கொண்டான்.

*　　*　　*

அன்றும் அதற்கு முந்தைய இரண்டு நாட்களாகவும் ஆ பெங்கை அந்த இடத்தில் காணவேயில்லை. ஆஸ்பத்

திரிக்குப் போய்விட்டு வந்த இரண்டு நாட்களிலேயே அவன் புதிய தெம்பும் உற்சாகமும் பெற்றுவிட்டான். கடந்த மூன்று நாட்களாக அவனை மேம்பாலத்தினடியில் காணவேயில்லை. காளிமுத்து படுக்க வரும்பொழுதெல்லாம் ஆ பெங்கின் இடம் 'ஹோ'வென்று காலியாகக் கிடந்தது.

மறுநாள் காலையில் முனிசிபல் கார்பார்க் வழியாக காளிமுத்து போய்க்கொண்டிருந்தான். அங்கே கார்-பார்க்கின் நடுவில் நின்ற ஒரு பெரிய காரை ஆ பெங் கழுவிக்கொண்டிருந்தான். காளிமுத்துவிற்கு ஆச்சரியம் தாங்கவில்லை. இப்பொழுது அவன் கண்கூடாகப் பார்க்கும்வரை, ஆ பெங் ஓர் உண்மையான நொண்டி என்றுதான் அவன் நினைத்திருந்தான். அவர்களுடைய 'தொழிலில்' பல ஏமாற்று வேலைகள் உண்டுதான். ஆனால், அந்தத் 'தொழில்' ரகசியம் வெளியாட்களுக்குத்தானே யொழிய அவர்களிடையே அல்ல! ஆ பெங் இதுநாள் வரையில் தன்னையே ஏமாற்றி வந்திருக்கிறானே? காளிமுத்து மெதுவாகச் சிரித்துக் கொண்டான். தனது காலை இழுத்து இழுத்து நடந்தவாறு அவன் ஆ பெங்கின் அருகில் சென்றான்.

ஆ பெங் காளிமுத்துவின் அழைப்பைக்கேட்டு, தலை நிமிர்ந்து பார்த்தான். "அடடே, காளிமுத்து, வாவா! உன்னைத்தான் நான் நினைத்துக் கொண்டிருந்தேன். இரண்டு மூன்று நாட்களாக உன்னைப் பார்க்கமுடியவில்லை காளிமுத்து. நான் பிச்சை எடுக்கிறதை விட்டுட்டேன். இந்த காடி கழுவுற தொழில்லே நாலு அஞ்சு வரும்படி வருது. கொஞ்சம் உடலை வளைச்சு வேலை செய்யணும், அவ்வளவுதான். நான் இப்ப இங்கேதான் படுத்துக்கிறேன். நீயும் இந்தத் தொழிலுக்கு வந்துடேன்"— சிவப்பு விளக்குக்குக்கூட நிற்காமல் பறந்து செல்லும் கார்களைப்போல ஆ பெங் 'படபட'வென்று பேசினான்.

காளிமுத்து சிரித்துக் கொண்டான். "சேச்சே நமக்கு இந்தத் தொழில் ஒத்து வராது. பழைய தொழிலே பழகிப்

போச்சு. நீ நல்லா இருந்தா சரி, நான் வர்றேன்!" காளி முத்து அந்த இடத்தைவிட்டு நகர ஆரம்பித்தான்.

"காளிமுத்து, இந்தா இதை வச்சுக்கோ!" ஆ பெங் ஒரு ஐம்பது காசு நாணயத்தை எடுத்து நீட்டினான். ஆனால் காளிமுத்து அதை வாங்கிக் கொள்ளவில்லை. அவனுள் ஏதோ ஓர் உணர்வு அதை வாங்கிக்கொள்ளத் தடுத்தது.

"பரவாயில்லை நீ வச்சுக்கோ, என்கிட்ட காசு இருக்கு." காளிமுத்து காலை இழுத்து இழுத்து பெரிய மார்க்கெட்டை நோக்கி நடந்தான்.

அதன் பிறகு இரண்டு மூன்று மாதங்களாக இருவரும் சந்தித்துக்கொள்ள சந்தர்ப்பமே வாய்க்கவில்லை.

அன்று மாலை மீண்டுமொருமுறை அந்த எதிர்பாராத சந்திப்பு நிகழ்ந்தது.

காளிமுத்து கள்ளுக்கடைக்கு மணியாகிவிட்டது என்று வேகமாக 'மலாக்கா ஸ்திரீட்' பஸ் ஸ்டாண்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். அப்பொழுது அவனுக்குப் பின்னே சைக்கிள் மணி பலமாக அடிக்கும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். சைக்கிளில் 'ஆ பெங்' சிரித்துக் கொண்டு மெதுவாக அவனருகில் வந்து நின்றான்.

காளிமுத்துவால் ஆச்சரியத்தைத் தாங்க முடியவில்லை. சைக்கிளின் பின்னால் 'கேரியரில்' சேர்த்துக் கட்டப்பட்ட 'ஐஸ்கிரீம்' பெட்டியுடன் சாம்பல் நிறச் சட்டையும் கால் சட்டையுமாக, ஆளே மாறிய நிலையில், ஆ பெங் காட்சி யளித்தான்.

"என்ன காளிமுத்து அப்படிப் பார்க்கிறே, நான்தான்! இப்போ காடி கழுவும் வேலையை விட்டுவிட்டு, இந்த வியா பாரத்தை ஆரம்பிச்சு இருக்கிறேன். ஒருநாளைக்குப் பத்துப் பதினைஞ்சு வருது! நாம் எப்பவும் இப்படியே இருக்க முடியுமா? வாழ்க்கையில் முன்னேறணும் — நீ எங்கே ... கள்ளுக்கடைக்குத்தானே போறே? சரிசரி எனக்கு நேரமாகி

விட்டது — நான் ராத்திரியில் நாலு வீட்டில் காடி கழுவுகிறேன். அதையும் போய் கவனிக்க வேண்டும். இந்தா, முப்பது காசு ஐஸ்கிரீமை ஒருகை பாரு, நான் வர்றேன்."

"வந்த வேகத்திலேயே அவன் ஓர் ஐஸ்கிரீமை காளிமுத்துவின் கையில் திணித்துவிட்டு சைக்கிளில் வேகமாகச் சென்று விட்டான். அப்பொழுது 'மலாக்கா ஸ்திரீட்' பஸ் ஸ்டாண்டின் பக்கத்தில் இருந்த சாலைவிளக்கு பச்சை நிறத்தைக் காட்டிக் கொண்டிருந்தது. ஆ பெங் விருட்டென்று அந்த விளக்கைத் தாண்டிச் சென்றுவிட்டான். மீண்டும் சிவப்பு விளக்கு எரிய ஆரம்பித்தது. கார்களும் சைக்கிள்களும் பச்சை நிறம் வருவதற்காக 'கொடுக்குப் பிடித்து' நின்றன.

காளிமுத்துவின் மனம் சரியான நிலையிலில்லை. அவன் கள்ளுக்கடைக்குச் சென்று நிறையக் குடித்தான். அவன் மேம்பாலத்தடிக்குத் திரும்பும்பொழுது சிங்கப்பூர் வண்டி புறப்பட்டுக் கொண்டிருந்தது. காளிமுத்து தாட்களைக் கீழே விரித்து, அதில் 'பொத்'தென்று விழுந்தான்.

தூரத்தே சிங்கப்பூர் வண்டி ஓடி மறைந்தது. கைகாட்டி சிவப்பு வெளிச்சத்தை உமிழ்ந்துகொண்டிருந்தது. காளிமுத்து அந்த சிவப்பு விளக்கைப் பார்த்துக்கொண்டே இருந்தான். சிங்கப்பூர் வண்டியில் ஏறியிருந்த அனைவருக்கும் பச்சை விளக்கைக் காட்டிய அந்தக் கைகாட்டி அவனுக்கு மட்டும் சிவப்பு விளக்கைக் காட்டிக்கொண்டிருந்தது. காளிமுத்து பச்சை விளக்கு எரியும்பொழுது கவனப் பிசகாக இருந்துவிடுகிறான். அதனால் ஒருநாளாவது அவன் கண்ணில் அந்தப் பச்சை விளக்குத் தெரியவில்லை.

ஆண்டுகள் பல ஓடி மறைந்தன.

அன்று ஒரு பெரிய சீன சவ ஊர்வலம் அம்பாங் சாலை வழியாகச் சென்றது. பேண்ட் வாத்திய முழக்கமும் சீன இசையும் அம்பாங் சாலை முழுதும் நிறைந்திருந்தது.

போக்குவரத்து நின்றுபோய் விட்டிருந்தது. சவ ஊர்வலத்தில் கொடிகளும் கம்பங்களும் பல வர்ணத்தில் தொங்கிக் கொண்டிருந்தன. பல பட்டுத் துணிகளில் பிரபல சீன வர்த்தக நிறுவனங்கள் அனுப்பி வைத்திருந்த அனுதாபச் செய்திகள் எழுதப்பட்டிருந்தன. சவ வண்டியின் முன் புறத்தில் ஆ பெங்கின் படம் பெரிதாக மாட்டப்பட்டிருந்தது.

இந்த சவ ஊர்வலம் நடந்து சரியாக மூன்று மாதத் திற்குப் பிறகு, மேம்பாலத்தினடியிலிருந்து ஓர் அனுதைப் பிணத்தை போலீசார் அகற்றினுர்கள். அந்தப் பிணத்தின் கண்கள் தூரத்தே தெரிந்த கைகாட்டியின் சிவப்பு விளக்கின் மேலேயே நிலைகுத்தி நின்றன !

சி. வீ. குப்புசாமி

# பழங்கால இந்துக் கோவில்

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கிட்டாவில் கட்டப் பட்டுப் பாழடைந்து கிடக்கும் இந்துக் கோவில் இப்போது திரும்ப அமைக்கப்பட்டு வருகிறது. அழிந்துபோன அக் கோவிலின் சின்னங்கள், சுவர்கள், பீடங்கள் முதலிய வற்றை அடிப்படையாகக் கொண்டு இந்துக் கோவில் அமைப்பு முறையை யொட்டியே இக்கோவில் அமைக்கப் படவிருக்கிறது. மலேசிய தொல்பொருட் காட்சிச்சாலைத் துறை இந்த ஏற்பாடுகளுக்குப் பொறுப்பாய் இருந்து வருகிறது.

கிட்டாவில் மெர்போக் ஆற்றுக் கழிமுகத்தின் வட கரைப் பகுதியில் உள்ள கிட்டா மலை உச்சியின் கீழ்ச் சரிவில் (புக்கிட் பத்துப் பகாட்) இந்தக் கோவில் திருத்திக் கட்டப்படவிருக்கிறது. மலேசியாவின் மிகப் பழங்காலக் கட்டடமாகிய இந்தக் கோவில், நாட்டின் தொல்பொருட் சிறப்பை எடுத்துக்காட்டுவதாக அமையும்.

பத்தாண்டுகளுக்கு முன்பே இக்கோவிலைத் திரும்பக் கட்டும் ஆய்வுப் பணி தொடங்கியது. மலாயாவின் பழஞ் சிறப்புக்களை ஆராய்ந்த சிலர், கிட்டாவிலும் அதனை அடுத்த இடங்களிலும் பழங்கால இந்தியக் குடியேற்றப் பகுதிகள் இருந்திருக்கின்றன என்பதைக் குறிப்பிட்டிருந்ததுடன், சில தொல்பொருட்களையும் அகழ்ந்து கண்டுபிடித்திருக்கின்ற னர். அவற்றைக் கருவாகக் கொண்டு மலாயாப் பல்கலைக் கழகம் இந்தத் துறையில் அக்கறை செலுத்தத் தொடங்

கியது. பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த வரலாற்றுப் பிரிவு மாணவர்களும் தமது ஆசிரியர்களுடன் சென்று, அந்த இடத்திலுள்ள பகுதிகளை ஆராய்வதற்கு உதவி செய்தனர்.

பல ஆண்டுகளாக இந்தக் கோவில் அழிந்து கிடந்த இடம் மூடுண்டு செடி கொடிகளும் மரங்களும் அதைச் சுற்றிலும் வளர்ந்திருந்தன. அந்த இடத்தைத் துப்புரவு செய்து, அங்குள்ள புதைபொருட்களையும் சின்னங்களையும் அகழ்ந்தெடுத்து கட்டட அமைப்பைச் செப்பஞ்செய்வதில் மலாயா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் அயராது பாடுபட்டனர்.

புக்கிட் பத்துப் பகாட் என்னுமிடத்தில் இருந்த இந்தப் பழங்காலக் கோவில் கி. பி. 900-ஆம் ஆண்டிற்கு முன்னர் கட்டப்பட்டிருக்கலாமென்று கருதப்படுகிறது.

இந்தப் பழங்காலக் கோவில் பல நூற்றுண்டுகளுக்கு முன்னர் தீயினுல் அழிந்து போயிருக்கலாமெனத் தெரிகிறது. இந்தக் கோவிலில் இருந்த சிவச் சிலை கோவிலின் பாழடைந்த கட்டடத்தில் காணப்படவில்லை. ஆனுல், இந்தக் கோவிலைச் சேர்ந்த சில பொருட்கள் இப்போது கிடைத்திருக்கின்றன. கோவிலின் புதிய அமைப்பிற்கு அவை பேரளவில் பயனுடையதாய் இருக்கும்.

## முதல் நடவடிக்கை

டாக்டர் குவாரிச் வேல்ஸ் என்பவர் 1939-ஆம் ஆண்டில் இக்கட்டடத்தின் எஞ்சிய பொருட்கள் சிலவற்றைக் கண்டு பிடிப்பதில் சிறிதுகாலம் செலவிட்டார். அவருக்கு உதவியாக டாக்டர் வான் ஸ்டெய்ன் காலன்பீல்ஸ் என்பவரும் இருந்தார். ஆனுல், கோவிலைத் திரும்பக் கட்டுவதற்கு எந்த முயற்சியும் அப்பொழுது எடுத்துக் கொள்ளப்படவில்லை. 1958-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்திலிருந்துதான்

இந்தக் கோவிலைத் திரும்பக் கட்டுவதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப் பெற்றன. அச்சமயத்தில் அந்தப் பகுதியில் அவசரகால நடவடிக்கைகள் அமலில் இருந்ததால், உருவான செயல் எதிலும் இறங்கமுடியாமல் இருந்தது. ஆனால், 1959-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் மலாயாக் கூட்டரசு தொல்பொருள் காட்சிச்சாலைத்துறை, டாக்டர் அலாஸ்டேர் லேம்புடன் (அக்காலத்தில் மலாயா பல்கலைக் கழகத்தில் வரலாற்றுத்துறை விரிவுரையாளராக இருந்தவர்) கலந்து இந்தப் பகுதியை அகழ்ந்தாராயவும், பழங்காலக் கட்டடமாகிய இதை மீண்டும் புதுப்பிக்கவும் திட்டங்கள் வகுத்தது.

காம்போஜத்தைச் சேர்ந்த அங்கோரில் கோவில்களையும், அரண்மனைகளையும் திரும்பக் கட்டுவதில் பேர்போன பேராசிரியர் பெர்னுடு குரோசிலியர் அவர்களை மலாயாக் கூட்டரசின் விருந்தினராகக் கோலாலம்பூருக்கு வந்து போகுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டது. மலாயாக் கூட்டரசு தொல்பொருட் காட்சிச்சாலை இயக்குநர் துவான் மூபின் ஷெப்பர்டு இவரைப் புக்கிட் பத்துப் பகாட்டிற்கு அழைத்துச் சென்று, பழங்காலக் கோவில் இருந்த இடத்தைக் காட்டி, அவரது கருத்தையும் கேட்டார்.

பேராசிரியர் குரோசிலியர் இந்தத் திட்டத்தை வரவேற்றதுடன் அங்கோரிலிருந்து தமது ஊழியர் ஒருவரை இந்த வேலையில் உதவி செய்வதற்காகப் பிரெஞ்சு அரசாங்கத்தின் ஒப்புதலைப் பெற முயலுவதாகவும் சொன்னார்.

துவான் ஷெப்பர்டு இதற்குப் பின்னர் பாரீசுக்குச் சென்றார். அச்சமயத்தில் காண்டன்ட் என்பவரை இந்த வேலையில் உதவி செய்வதற்கு ஒப்புதல் அளிக்கப்பட்டது. அதற்கிணங்க 1959-ஆம் ஆண்டு ஜூலை மாத இறுதியில் அவர் மலேசியா வந்து சேர்ந்தார்.

புக்கிட் பத்துப் பகாட்டில் கோவில் இருந்த பகுதிகள் மிக மோசமாக அழிந்துகிடந்தன. முற்பகுதியிலிருந்த படிகள் இடிந்துபோயும், சுவர்களின் சில பகுதிகள் கீழே இறங்கியும், கற்கள் பல இடம் நழுவிப்போயும் இருந்தன. அழகிய வேலைப்பாடமைந்த தூண் பீடங்கள் யாராலோ அகற்றப்பட்டிருப்பதும் தெரியவந்தது.

இந்த நிலையில் கோவில் இருந்த பகுதியை மிகக் கவனமாகவும் முறையாகவும் அகழ்ந்தெடுக்க வேண்டியிருந்தது. கோவிலின் சுவர்களும் மேடையும் நான்கு அடி பருமன், அல்லது பத்து அடி நீளமுள்ள தனித்தனி வெட்டுக் கற்களைக் கொண்டதாக இருந்தன. தலைமையான கல் மேடை நாற்பது அடி சதுரமாயும் தரைமட்டத்திற்கு ஐந்து அடி உயரத்திலும் இருந்தது. கோவிலின் உட்பகுதிச் சுவர் அதற்குமேல் நான்கடி உயரமுடையதாய் இருந்ததுடன் சிதைந்தும் இருந்தது.

## கற்பேழைகள்

இந்த வேலை தொடங்கிய ஒரு வாரத்திற்குள் டாக்டர் லேம்பு ஐந்து கற்பேழைகளை இந்த இடத்தில் கண்டெடுத்தார். இரு வாரங்கள் கழித்து, அவற்றில் மூன்றைத் திறந்து பார்த்தபோது, அவற்றில் அழகான பொன் வெள்ளி அணிகலன்களைக் கண்டார். பேழைகள் ஒவ்வொன்றிலும் ஒரேவிதமான பொருட்களே வைக்கப்பட்டிருந்தன. மெல்லிய பொன் வட்டத் தகடு; மெல்லிய வெள்ளித் தகட்டில் பொறிக்கப்பெற்ற நந்தி; வலக்கையில் முக்கவர்ச் சூலமும், இடக் கையில் தாமரை மலரும் ஏந்திய பொன் தகட்டினாலான பெண் உருவம்; ஐந்து நட்சத்திரங்கள் பொறிக்கப்பெற்ற சதுர வடிவான வெள்ளிப் பொருள்; கத்தி அல்லது குத்துவாள் போன்ற சின்னம் பொறிக்கப் பெற்ற பொன்னாலான அரைவட்ட வடிவுடைய பொருள்; லிங்கத்தைப் போன்ற உருவமுள்ள மெல்லிய பில்லை;

செம்பினுலான ஆமை உருவமைந்த பொருள்; தாமரை மலர் உருவமுள்ள செம்பிலான ஒரு சிறிய பொருள் — ஆகியவையே இந்தக் கற்பேழைகளில் இருந்தன. தங்கத் தகடு ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் எழுத்து இருந்தது.

இந்தக் கற்பேழைகள் எஞ்சி மிஞ்சியுள்ள நினைவுச் சின்னங்களெனக் கொள்ளப்படுகின்றன. பல்வேறு திசைகளைக் காட்டும் வகையில் சரியான இடங்களில் இந்தப் பேழைகள் கோவிலின் தரை அடியில் புதைக்கப்பட்டிருந்தன. மொத்தம், எட்டுப் பேழைகள் தொடக்கத்தில் இருந்திருக்கக்கூடும் எனக் கருதப்படுகிறது. 1936-ஆம் ஆண்டில் டாக்டர் குவாரிச் வேல்ஸ் அவர்கள் ஒரு பேழையைக் கண்டெடுத்துள்ளார். அது உடைந்தும், பொருட்கள் இன்றியும் காணப்பட்டது. 1958-ல் டாக்டர் லேம்பு அவர்களே ஒரு பேழையைக் கண்டெடுத்தார். அதிலும் மேலே குறிப்பிட்டுள்ள பொருட்கள் காணப்பட்டன.

இந்தப் பேழைகளுக்குக் கீழேயுள்ள தரையில் வரிசைக்கு மும்மூன்ருக ஒன்பது பள்ளங்கள் இருந்தன. நடு வரிசையில் இரண்டாவது உள்ள பள்ளம் நீங்கலாக மற்ற பள்ளங்களில் நவரத்தினக் கற்களின் துண்டுகள் காணப்பட்டன. நடு வரிசையின் இரண்டாவது குழியில் செப்புப் பானை ஒன்று இருந்தது. அதில் பொன்வட்டத் தகடு வைக்கப்பட்டு, அதன் கீழே மற்றும் ஏழு உலோகப் பொருட்கள் பரப்பப்பட்டிருந்தன.

## இரண்டாவது பகுதி வேலைகள்

கோவில் அகழ்வாராய்வு துவங்கிய போது இருந்த உயரம் அளவிற்குக் கோவிலைத் திரும்பக் கட்டுவதென்றும், முன்புற முற்றத்தையும் திரும்பக் கட்டுவதென்றும் முதலில் எண்ணப்பட்டது. கான்டன்ட் அவர்கள் முதலில் கோவிலின் சரிபாதியை அகழ்ந்து திரும்பக் கட்டப்பட

வேண்டும் என்று சொல்லியதின்பேரில் அந்த வேலை மேற்கொள்ளப்பட்டு, இரண்டு மாதங்களில் முடிவுற்றது. கான்டன்ட் அவர்கள் 1959-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 28-ந் தேதி மலேசியாவிலிருந்து புறப்பட்டபோது இரண்டா



புதிதாக அமைக்கப்பட்டுவரும்
கோவிலின் மாதிரி வடிவம்.

வது பகுதி வேலைகள் தொடங்கின. கோவிலின் இரண்டாவது பகுதி வேலையில், முன்புற முற்றம் அமைப்பதும் அடங்கியிருந்தது. தவிர, மண் அரிப்பைத் தவிர்ப்பதற்கு வடிகால் ஏற்பாடுகளையும் செய்ய வேண்டியிருந்தது.

அகழ்வாராய்வினுல் கிடைத்த பொருட்களும், பேழைகளும், மேலும் ஆராய்ச்சிகள் நடத்துவதற்கு உறுதுணையாக இருக்கும். இந்தோனேசியா, இந்தியா, காம்போஜம் ஆகிய நாடுகளில் உள்ள குறிப்புக்களோடு இவற்றை ஒத்திட்டுப் பார்த்தால், கிட்டாவில் பழங்காலத்தில்

வாழ்ந்து வந்த மக்களைப் பற்றிய பல விவரங்களை நாம் அறிய இயலும். அத்தகைய ஆராய்ச்சியில் அறிஞர்கள் இன்று ஈடுபட்டிருக்கின்றனர்.

கிட்டாவில் இருந்த இப் பழங்கால இந்துக் கோவில் திரும்பக் கட்டப்பட்டுவிட்டால், பழங்காலத்தில் இருந்தே இந்தியர்கள் இந் நாட்டுடன் வைத்துக்கொண்டிருந்த தொடர்புக்கு இது நிலையான சின்னமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

உஷா நாயர்

# மலேசியாவின் இயற்கை எழில்

முப்புறமுங் கடல்சூழ்ந்து முகிழ்த்திட்ட
மூவுலகம் போற்றும் நாடிதுவே
எப்புறமுந் தலைசாய்ந்து நிமிர்ந்திட்டால்
எழில்கொஞ்சும் எங்களின் வீடிதுவே.

ஓங்கிவளர்ந்திட்ட தென்னைமரம் எங்கும்
உயர்ந்து விளங்கிட்ட மலைச்சிகரம்
தாங்கி வளர்ந்திட்ட தாயாவாள் என்னைத்
தழுவி துலங்கிட்ட கலைச்சிகரம்.

எங்கெங்கு காணினும் எழில் மயத்தாள்
எமையேற்றி வைக்கும்பச்சைப் பூநிறத்தாள்
அங்கங்கு வாழ்ந்திடும் ஆய கலையெலாம்
அன்னை மலேசியா ஆக்கிவைத்தாள்.

வி. சங்கர்

# சித்தி

கால்கள் போன போக்கில் போய்க்கொண்டிருந்த கண்ணன், குருவிகளின் கிறீச்சிடும் ஒலியைக் கேட்டு வானத்தை அண்ணாந்து பார்த்தான். ஆகா! எத்துணை ஆனந்தமாகவும் சுதந்திரமாகவும் அவைகள் பறந்து திரிகின்றன. எந்தக் குருவிக் கூட்டில் எந்தத் தாய்க் குருவியின் அணைப்பில் வளர்ந்தவைகளோ தெரியவில்லை. ஆனால், அவைகள் தாயை மறந்து மற்ற குருவிகளோடு பறந்து திரிகின்றன.

'நானும் இப்பொழுது சுதந்திரமானவன்தான். இருந்தாலும், அவைகளைப் போல ஆனந்தமாகவும் எந்தக் கவலையுமின்றி இருக்க முடியவில்லையே.'

'வளர்த்த பாசம், சகோதர அன்பு, இவைகளை மறக்க முடியாமல் தவிக்கிறேனே' எனக் கண்ணன் தனக்குள் நொந்துகொண்டான். கால்கள் மேலும் நடக்கமுடியாமல் அவனைக் கெஞ்சியது. நல்லகாலம், மரமொன்றின் அருகில் வந்துவிட்டான். பாரபட்சமின்றி நிழல்தரும் அம் மரத்தினடியில் அமர்ந்து, தனது கடந்தகால நினைவுகளில் மூழ்கினான்.

அப்பொழுது கண்ணனுக்கு ஆறு வயது இருக்கும். அவனின் அன்னை கடுமையான காய்ச்சலினால் உயிரோடு போராடிக் கொண்டிருந்தாள். இனி அவள் பிழைக்கமாட்டாள் எனப் பலரும் முடிவு கட்டினர். அதுபோல அவளுக்கும் தோன்றியதோ என்னவோ, தனது தங்கை கல்யா

ணியை அருகில் அழைத்தாள்; தலையில் கையை வைத்துக் கொண்டு சோகமே உருவாக அமர்ந்திருந்த தன் கணவரையும் அருகில் அழைத்தாள். துவண்டுவிழும் தனது கரத்தால் கண்ணனை அணைத்தவாறு எதையோ பேச வாயெடுத்தாள். ஆனால், அவளால் பேச முடியாமல் திணறினாள்.

“அக்கா!” இது கல்யாணியின் அலறல். “அக்கா, நீங்கள் ஒன்றுக்கும் பயப்படாதீர்கள். கண்ணன் உங்களுக்கு மட்டுமல்ல மகன்; எனக்கும்தான்” என்று கண்ணீர் மல்கக் கல்யாணி கூறினாள்.

அணையப் போகும் விளக்கில் திடீர்ப்பிரகாசம் தோன்றி மறைவதுபோல கண்ணனின் தாயார் முகத்தில் பிரகாசம் தோன்றியது. கல்யாணியின் கையையும், அவளின் கணவரின் கையையும் ஒன்றாக இணைத்துக் கண்ணனை ஒரு தடவை பார்த்தாள்.

அந்தப் பார்வையோடு இவ்வுலகைவிட்டுச் சென்று விட்டாள்.

கண்ணனின் அன்னைக்குப் பிறகு, அந்த இடத்தைப் பூர்த்தி செய்தாள் கல்யாணி. யாருமில்லாதவளை இன்னொருத்தனுக்குக் கொடுப்பதைவிட தனக்கே உரியவளாக இருப்பதில் தவறு ஒன்றுமில்லை என முடிவு செய்துகொண்டமாதவன், அவளை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டார். அவளை அவர் அடைந்ததைவிட, கண்ணனுக்கு கல்யாணியைச் சித்தியாக கிடைக்கப்பெற்றது அதிக மகிழ்வைத் தந்தது. கல்யாணியும் அவனுக்கு எந்தக் குறையும் வைக்கவில்லை.

“அம்மா” என அழைத்தவாறு கையில் எதையோ வைத்துக்கொண்டு துள்ளிக் குதித்து ஓடிவந்த கண்ணனிடம் ஓடிச்சென்றாள் கல்யாணி.

“கண்ணா, என்ன உன் கையில்? ஏதுடா இந்தக் குருவிக் குஞ்சு?”

"அம்மா, நம்பவீட்டு முன்னுலே இருக்கிற மரத்திலே குருவி கூடு கட்டியது. அதை ரொம்ப நாளாகப் பார்த்து வந்தேன். இன்னிக்குப் பார்த்தால், அதிலே குஞ்சு இருக்கு தம்மா!" மிக மகிழ்வோடு கூறினுன்.

"ஆரம்பிச்சிட்டியா உன் குறும்பை? உன் அப்பா உனக்கு பொருத்தமான பெயரைத்தான் வைச்சிருக்கிருரு. கண்ணு, இந்தமாதிரி செய்யக்கூடாது. பாவம்! தாய்க் குருவி இதைக் காணுமல் அழும். மறுபடியும் அந்தக் கூட் டிலே வைச்சிட்டு வந்துடு, போ. நீ நல்லபிள்ளையாக இருந் தால் நான் சொல்வதுபோல கேட்பாயாம். கெட்ட பிள்ளை யாக இருந்தால் கேட்கமாட்டாயாம்" என்று அவனைக் கொஞ்சினுள். அன்பான இந்தப்பேச்சைக் கேட்டு குருவிக் குஞ்சைத் தூக்கி ஓடினுன். குருவிக்குஞ்சை வைத்துவிட்டு சித்தியின் முன்வந்து, "இப்போ நான் நல்ல பிள்ளை தானேம்மா?" எனக்கேட்டான். அவனை அப்படியே இறுக அணைத்து முத்தமிட்டாள்.

குருவிக்கூட்டில் விட்டுவந்த அந்தக் குருவிக் குஞ்சின் நினைவு ஏனே கண்ணனையே சுற்றி வந்தது. எதையோ மனதில் நினைத்துக் கொண்டு, சமையல் செய்துகொண் டிருந்த கல்யாணியிடம் போனுன் கண்ணன்.

"அம்மா!"

"என்ன கண்ணு, பசிக்குதா? நில்லு, இன்னும் கொஞ்ச நேரத்திலே அப்பா வந்ததும் சாப்பிடலாம்." பசியினுல் தான் தன்னை அழைக்கிருன் என நினைத்து இப்படிச் சொன்னுள்.

"எனக்குப் பசிக்கிலம்மா."

"பின்னே என்ன வேணும்?"

"நான் எடுத்துவந்த குஞ்சுக்கு யாரம்மா சாப்பாடு போடுவாங்க?" பாவம் தொனித்தது அவனின் குரலில். கனிவு சொட்டியது அவனது மொழியில்.

கல்யாணி சிரித்தபடியே, “அதோட அம்மாதான் ; வேணுமின்னு நீயே பாரேன்.”

“அப்படியா அம்மா! அப்படின்னு இது பெரிசானல் யாரம்மா கொடுக்கும் ?”

“நல்ல பையண்டா, நீ! குருவிக் குஞ்சு பெரிசானல், அது தானகவே இறைதேடிச் சாப்பிடும். அப்புறம் அதுக்கு அம்மா கிடையாது. அதோட அம்மா வேறு குஞ்சு பொறித்து அதைப் பார்க்கும்.”

“அய்யோ பாவம்! ம்... அம்மா, அப்படின்னு அது தன் குஞ்சை மறந்திடுமா?”

“குருவிகள் எல்லாம் அப்படித்தான் கண்ணு.”

“ம்... நீயும் இன்னொரு பாப்பா பிறந்துட்டா, என்னை மறந்துடுவாயாம்மா?” இந்த எதிர்பாராத கேள்வியைக் கேட்டதும் கல்யாணி திணறிப்போனள். “டேய் கண்ணு! என்னடா கேட்கிறே? இனிமேல் இப்படி எல்லாம் கேட்கக் கூடாது, தெரியுமா” என அவனை அணைத்துக் கண்கள் கலங்கச் சொன்னள்.

சிலசமயங்களில் குழந்தைகளின் வினக்கள் நம்மை அதிர்ச்சியடைய வைத்துவிடும். அந்த நிலைதான் கல்யாணிக்கும் ஏற்பட்டது. ஏனெனில், தன் வயிற்றில் கரு ஒன்று உருவாகிக் கொண்டிருப்பதுதான். தனக்குக் குழந்தை பிறந்தபின் இவனின் மேலுள்ள அன்பு, பாசம், இவைகள் அற்றுப்போய்விடுமா? இந்த வினவுக்கு விடை காண முடியவில்லை அவளால்.

நாட்கள் பல பறந்தன.

“அப்பா, எனக்குத் தம்பி கிடைச்சுட்டான் அப்பா!” என்று மகிழ்வோடு கூறிய கண்ணனை வாரி எடுத்தார் மாதவன். தன்னைவிட தன் மகனுக்கு மகிழ்ச்சியாக இருப்பதறிந்து, அவனை இறுக அணைத்து முத்தமிட்டுக் கல்யாணியைப் பார்த்தார். அவள் தாயாகிவிட்ட மகிழ்ச்சியினல் புன்னகை செய்தாள்.

"என்னங்க, அப்படிப் பார்க்கறீங்க? ம் ... கண்ணு, அப்பா உனக்கு சாப்பாடு கொடுத்தாரா?" என்று மௌனத்தைக் கலைத்தாள் கல்யாணி.

"இன்னும் சாப்பிடவில்லை கல்யாணி, உன்னைப் பாத்திட்டுத்தான் சாப்பிடுவேன் என்று அடம்பிடித்தான். இங்கே கூட்டிக்கிட்டு வந்தேன்."

"கண்ணு, சாப்பிடாமல் இருக்காதேடா! நாளைக்கு அம்மா வந்துவிடுவேன். இன்னைக்கு அப்பாகூடப் போய்ச் சாப்பிடணும், தெரியுமா" என்று அன்பொழுகச் சொன்னாள்.

"நீ நாளைக்குக் கட்டாயமாக வந்துடுவாயா அம்மா?"

"ஆமாம். நாளைக்கு நம்ப வீட்டிலே உன் தம்பியோட விளையாடலாம். சரியா? என்னுங்க, குழந்தைக்குச்சாப்பாடு போட்டு நீங்களும் சாப்பிடுங்க. நான் நல்லாத்தானே இருக்கிறேன்."

"சரி கல்யாணி, நாங்க வர்ரோம்" என்று கூறிக் கிளம்பி வந்துவிட்டார்.

மறுநாள் குழந்தையோடு கல்யாணி வந்து இறங்கினாள். கண்ணன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. மாதவன், கல்யாணி — இருவரும் அவனின் ஆனந்தத்தைக் கண்டு சுவரில் தொங்கிக் கொண்டிருந்த அவனின் தாயாரின் படத்தை நோக்கினர். அவர்களை அறியாமலேயே கண்களில் கண்ணீர் துளிர்த்தது.

சினிமாவில் வந்த பாட்டுகளைப் பல பாகங்களாகப் பிரித்துப் பாடி, குழந்தையிடம் விளையாடுவான் கண்ணன். தூங்கும் நேரம் தவிர மற்ற நேரங்களில் குழந்தையிடம்தான் இருப்பான்.

கல்யாணி கண்ணனின் சகோதர பாசத்தைக் கண்டு ஒருவித மகிழ்ச்சி அடைந்தாலும் ஏனோ அவளின் குழந்தை வேறு, அக்காளின் குழந்தை வேறு எனப் பிரித்துப் பார்க்க

லானுள். ஆனுலும் முன்பு அவனிடம், வைத்திருந்த அன்பி லும் பாசத்திலும் மாற்றமில்லே. கண்ணனும், சித்தி இரு வரையும் ஒரேமாதிரியாகப் பார்ப்பதினுல் எந்தக் கவலேயு மின்றி இருந்தான். ஆனுல், இது நீடித்ததா?

"அம்மா, தம்பி அழுருன்; பாலு கொடும்மா" என்று தாய்க்கு ஒவ்வொரு தடவை அழும்போதும் வந்து உத் தரவு இடுவான்.

"உன் தம்பி கொஞ்சங்கூட அழக்கூடாதா கண்ணு?" என பொய்க் கோபம் கொள்வாள்.

"தம்பி அழுகிறதைப் பார்த்திட்டு இருக்கச் சொல் றியாம்மா?"—இது கண்ணனின் கேள்வியாகும்.

"தொட்டிலே ஆட்டிவிடு. சும்மா அவன் தூங்குவான்" என்று பதில் சொல்லியனுப்புவாள், கல்யாணி. சொன்ன படியே ஆட்டுவான்; குழந்தை அழுகை நிறுத்தும்வரை ஆட்டுவான்.

ஒரு நாள் —

கல்யாணி சமையல் செய்துகொண்டிருந்தாள். தொட் டிலில் கிடந்த குழந்தை மெல்ல ஆழ ஆரம்பித்தது. பாட்டுக்கள் பல கண்ணனின் வாயில் அவதிப்பட்டது. தொட்டிலே ஆட்டினுல் அழுகை நின்றுவிடும் எனக்கருதி தொட்டிலே ஆட்டினுன். ஆனுல், குழந்தையோ அழு கையை நிறுத்தவில்லே.

"அம்மா, தம்பி அழுதுகிட்டே இருக்கிருன். பாலேக் கொடும்மா!"— அழாத குறையாகச் சொன்னுன்.

"மிளகாய் அறைக்கிறேன்டா. இப்போ குழந்தையைத் தூக்கமுடியாது. போ, ஆட்டு!" என்ருள்.

மீண்டும் குழந்தையிடம் ஓடினுன்; ஆட்டினுன். குழந்தை ஏனே அழுகையை நிறுத்தவில்லே.

"இதென்ன பெரிய இதாக இருக்கிறதே!" என முணு முணுத்தவாறு குழந்தையிடம் வருகிற சமயம் மாதவனும்

வந்துவிட்டார். வீறிட்டு அழும் குழந்தையை கையில் எடுத்து, " ஏன் கல்யாணி, இப்படி விக்கி விக்கி அழு கிறது ?" எனக் கேட்டார்.

" என்னை என்ன செய்யச் சொல்றீங்க. இவனை ஆட் டச் சொன்னல், ஆட்டாமல் விளையாடுகிருன் " என்று பொய் ஒன்றைச் சொல்லிவிட்டாள். மாதவனுக்குக் கண் ணனின்மேல் கோபம் வந்துவிட்டது.

" என்னடா ! உன் தம்பியை நீ ஆட்ட முடியாதா ? " என்று கோபத்தோடு கேட்டார்.

" வந்து, அப்பா ... நான் ஆட்டினேன். தம்பிதான் அழுகிறதை நிறுத்தவில்லை. அம்மாகிட்டே பால் கொடுக்கச் சொன்னேன் ; கேட்கவில்லை, அப்பா! " — உள்ளதைச் சொன்ஞன் கண்ணன்.

" பொய் வேறே சொல்றியாடா ? "

" இல்லையப்பா நான் பொய் சொல்லவில்லை."

" அப்போ, அம்மா பொய் சொல்ருங்களா?" என்று கன் னத்தில் ' பளார் ' என்று அறைந்துவிட்டார். கல்யாணி இதை எதிர்பார்க்கவில்லை. குழந்தை விக்கி அழும்வரை தூக்காமல் இருந்ததற்குக் கணவர் ஏசுவார் என்று நினைத்து கண்ணனின்மேல் பழியைப் போட்டாள். அது விபரமறியாத குழந்தையை அடிக்க வைத்துவிட்டதே என வருந்திஞள்.

" என்னங்க, கண்ணனை அடிக்காதீங்க " என்று மறுபடி யும் கையை ஓங்குவதற்குள் கண்ணனை மார்போடு அணைத் துக் கொண்டாள். மாதவன் அப்பொழுதுதான் தன் தவறை உணர்ந்தார். சுவரில் தொங்கிக் கொண்டிருந்த கண்ணனின் அன்னையார் படம் காற்றில் மெல்ல ஆடியது. ' என் அன்பு மகனை அடித்து விட்டீர்களா ? என் இதயம் ஆடுகிறதைப் பாருங்கள்' என்று சொல்வதுபோல இருந்தது மாதவனுக்கு. 'என்னை மன்னித்துவிடு' என மனத்துக்குள் கேட்டுக் கொண்டார்.

என்றுமில்லாமல் இன்று அப்பா அடித்துவிட்டது கண்ணனுக்கு பெரிய அதிர்ச்சி தந்தது. தம்பியை ஆட்ட வில்லை என்று ஏன் சித்தி பொய்சொன்னார்கள் என எண்ணலானான். அவனுக்கு எங்கே விளங்கப் போகிறது கல்யாணி செய்த காரியம். கண்ணன் கல்யாணியின் முகத்தை வெறுப்புடன் நோக்கினான். அவளோ உண்மையைச் சொல்ல முடியாமல் தவியாய்த் தவித்தாள்.

குற்றம் ஒன்றும் செய்யவில்லை. எத்தனையோ தடவை குற்றம் செய்தபோது அடிக்காமல் கண்டிப்பதோடு நின்றவர்கள் ஏன் இன்று அடித்தார்கள்? விடை காணாத வினவாக அவனுக்குத் தோன்றியது. அதுசமயம் வீட்டின் முன்னுள்ள மரத்தின்மேலிருந்து குருவியின் கிறீச்சிடும் குரல் கேட்டதும் அவனுக்கு பழைய நினைவு வந்தது.

கண்ணன் மெல்ல எழுந்தான். மரத்தினடியில் போய் நின்றான். எங்கிருந்தோ குருவி ஒன்று வாயில் காய்ந்த சருகை வைத்தவாறு பறந்து வந்து, மரத்தின் கிளையில் உட்கார்ந்தது.

குருவி மறுபடியும் கூட்டை கட்டுகிறது என்று எண்ணிக்கொண்டான். முதலில் பொறித்த குருவிக் குஞ்சுகளைப் பறக்கவிட்டு மீண்டும் குஞ்சு பொறிக்கப் போகிறது. நான் ஏன் இந்தக் குருவிக் குஞ்சுகளைப்போல இல்லை என நினைத்துக் கொண்டான். உள்ளே தம்பியின் அழும் குரல் கேட்கவே வீட்டினுள் சென்றான்.

"தம்பி அழாதேடா! அம்மா உன்னை அடிக்கமாட்டாங்க, என்னை அடிப்பாங்க." இப்படி ஆறுமாதம் நிறைவு பெறாத குழந்தையிடம் கூறினான். அவன் மீண்டும் அழுதான். இந்தத் தடவை 'அம்மா' என்று சித்தியை அழைக்கவில்லை; அவளே வந்துவிட்டாள்.

"கண்ணா, தம்பி அழுகிறானா? நீ மெல்ல தொட்டிலை ஆட்டு. இதோ பாலைக் கலக்கிக் கொண்டு வருகிறேன்" என்று போய்விட்டாள். கண்ணன் தொட்டிலை ஆட்டினான்.

ஆனால், அவன் மனம் ஏனோ ஆட்டவேண்டாம் என்று சொன்னது. மறுவினாடி விடுவிடுவென வீட்டைவிட்டு வெளியேறினான்.

குழந்தை திடீரென வீறிட்டு அழுதது. "ஏண்டா இப்படி அழுகிறான்?" என்று கேட்டவாறு வந்த கல்யாணி கண்ணனைக் காணாது, "கண்ணா, கண்ணா!" என அழைத்தாள்.

"என்ன கல்யாணி, கண்ணனைக் காணவில்லையா ?"— என்று மாதவன் வந்தார்.

"ஆமாங்க, தொட்டிலை ஆட்டச் சொல்லிவிட்டு பால் கலக்கி எடுத்துவருவதற்குள் காணவில்லை. எங்கே போயிருப்பான்? ""கண்ணா" என்று மீண்டும் அழைத்தாள்.

"நல்லா தேடி பாத்தியா? நான் கூப்பிட்டுப் பார்க்கிறேன்" என்று மாதவன் அழைத்தார். அவன் எங்கே இங்கே இருக்கிறான்? அவன் போனது தெரியாமல் அழைத்து என்ன பயன்?

"என்னங்க போய்த் தேடிப்பாருங்க. கடவுளே, எங்கே போயிட்டான்! கண்ணா, எங்கேடா போயிட்டே?" என்று அழுது புலம்பினாள். இதற்குமேல் தாமதித்தால் நல்லதல்ல என எண்ணிய மாதவன் அவனைத் தேட வெளியே கிளம்பிவிட்டார். கல்யாணி குருவிக் கூட்டிலிருந்து குருவிகளின் கிறீச்சிடும் குரல் கேட்டு மரத்தை உற்று நோக்கினாள். மறுவினாடி மின்னல்போல அன்று கண்ணன் கேட்ட அக்கேள்வி தோன்றியது. 'கண்ணா, நான் உன்னை மறக்கமாட்டேன்; மறக்கவும் முடியாது. எனக்கு எத்தனை குழந்தை பிறந்தாலும், நீதாண்டா எனக்கு மூத்தபிள்ளை' என்று அழுது புலம்பினாள்.

வீட்டைவிட்டு வெளியேறிய கண்ணனைத் தேடி தனக்குத் தெரிந்த வீட்டிற்கெல்லாம் போய் பார்த்துவிட்டு வந்தார் மாதவன். எங்கேயும் காணோம். களைப்பு மேலிட மரம் ஒன்றின் அடியில் அமர்ந்தார்.

"அம்மா, தம்பி அழுகிறுன், பாலேக் கொடும்மா" என்று கிணற்றிலிருந்து வரும் குரல் ஒலியைப் போல கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தார். தூக்கத்திலும் தம்பியின் நினைவில் வாய் உளறிய வார்த்தைகள் தாம் அவை. யாருமில்லாத அனுதைபோல கண்ணன் மரத்தடியில் தூங்கிக்கொண்டிருக்கும் காட்சியைக் கண்டு, துக்கம் நெஞ்சை அடைக்க, கண்களில் கண்ணீர் துளிக்க, "கண்ணு, நீ இங்கேயா இருக்கிருய்!" என வாரி எடுத்தார். மார்போடு அணைத்துக் கொண்டார்.

"அப்பா, என்னே அடிக்காதீங்க. நான் தம்பியை ஆட்டினேன். அம்மா ... !"

"கண்ணு, நீ தொட்டிலே ஆட்டவே வேண்டாம். வீட்டிற்கு வா. உன் தம்பி, அம்மா, உன்னேக் காணுமல் அழுது கொண்டிருக்கிருர்கள் !"

"அம்மா அழுகுதாப்பா, வாப்பா போகலாம்" என்று விடுவிடுவென நடந்தான்.

"அம்மா... !" கட்டுக்குள் அடங்காத கண்ணீர் பொல பொலவெனக் கொட்டியது அவனின் கண்களில் !

"கண்ணு, நீ எங்களே விட்டுப் போகலாமாடா கண்ணே !" அவனே அணைத்தவாறு கேட்டாள். கண்ணீரோடு கண்ணீர் போட்டி இட்டது.

"இல்லேயம்மா, இனிமேல் போகமாட்டேன். என் தம்பி கூடவே இருப்பேன்."

"கண்ணு, உன்னே அப்பா அடிக்க மாட்டார். அன்னிக்கு அடிக்க காரணம் நான்தாண்டா. இனிமேல் அடிக்க மாட்டார்."

"நான் தப்பு செய்தால் இரண்டு பேரும் அடிக்கலாம் ; சரிதானே அப்பா ?"

"டேய் ! நீ படுசுட்டியாக இருக்கிருயே ! உன்னே நான் அடிக்க வேண்டியதில்லே. கல்யாணி, கோபித்துக்

கொண்டு போனவன் மரத்தின் அடியில் தூங்கியவாறே, தம்பிக்கு பாலை கொடுக்கச் சொல்ருன்! உனக்கும் எனக்கும் இல்லாத ஒருவிதத் தனியன்பு இவனுக்குக் குழந்தையிடம் உண்டு. கண்ணன் நம் குழந்தைமட்டுமல்ல; நம் தெய்வமும்கூட!"

"கண்ணு, நீ எங்கள் தெய்வம்தாண்டா; என் அன்பு அக்கா அளித்த, தேடக்கிடைக்காத தங்கமடா நீ!"

"அம்மா, அதோ அந்த மரத்தில் முன்னே ஒருநாள் கூடு கட்டியதுபோல இப்பவும் குருவி கூடு கட்டுதம்மா!"

"கட்டட்டும். ஆனல், நீ குருவிக் குஞ்சல்ல. என் அன்புத் தெய்வம் நீ. நான் இருக்கும்போது நீ எங்கேயும் போகக்கூடாது."

"அம்மா, மோகன் அழுகிருன். பாலைக் கொடும்மா."

"சரிடா கண்ணே, கண்ணு."

மாதவன் இக்காட்சியைக் கண்டு மூன்று சொட்டுக் கண்ணீர் விட்டார். ஒன்று இறந்தவளுக்கு; இரண்டாவது கல்யாணிக்கு; மூன்ருவது கண்ணனுக்கு!

சி. வடிவேல்

# தாயும் மகனும்

1944 ஜூன் மாதம், தேதி ஞாபகமில்லை; கோலாலம்பூரிலிருந்து அந்தக் கூட்ஸ் வண்டி மாலை ஐந்தேகால் மணிக்குப் புறப்பட்டது. இஞ்சினை அடுத்த மூன்று டிரக்குகளில் பெரிய பெரிய மரங்கள் ஒழுங்காக அடுக்கப்பட்டிருந்தன. அதற்குப் பின்னுல் ஆறு கூட்ஸுகளில் எண்பதுக்கு மேற்பட்ட மனிதர்களை ஏற்றியிருந்தனர். அவர்களோடு அவர்களது சாமான்களும் குவிக்கப்பட்டிருந்தன!

நான்கு மணிக்கு இரவில் புறப்படும் என்றுதான், மூன்றரை மணிக்கே கூட்ஸுகளில் ஏறி இடம் பிடித்துக்கொண்டனர், அந்தப் பார வண்டிப் பிரயாணிகள். மங்கம்மாவும் ஒரு சாக்கை விரித்துப்போட்டுத் தனக்கும் தன் மகனுக்கும் ஓர் ஓரத்தில் இடம் ஒதுக்கிக்கொண்டாள்.

மூச்சுக் காற்றினுல் ஏற்படும் வெக்கையில் அவிந்துகொண்டிருந்த அவர்களுக்கு, ஒரு நிமிடம் கழிவது ஒரு நாள் போன்றிருந்தது. நான்கு மணிக்குப் புறப்படுவதாக இருந்த வண்டி ஐந்தேகால் மணிக்குத்தான் புறப்பட்டது. வண்டி புறப்படு முன் ஒவ்வொருவருக்கும் கருப்பட்டி போட்ட தேநீரும், நான்கு துண்டு அவித்த மரவள்ளிக் கிழங்கும் கொடுக்கப்பட்டன. இரவு உணவு கிம்மாசில் ஏற்பாடு செய்திருப்பதாகக் கூறிவிட்டு, டிரைவருக்குப் பக்கத்தில் போய் நின்றுகொண்டான் கூட்ஸு பிரயாணிகளை அழைத்துச் செல்லும் ஜப்பான்காரன். நெடுமூச்சு விட்டுக்கொண்டே ஓடிக்கொண்டிருந்தது இரயில். தம்பின் செல்வதற்குள் இரவு மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது.

இரைப்பை சிறு குடலை இழுக்க, சிறு குடல் பெருங் குடலைப் போட்டு முறுக்கிக் கொண்டிருந்தது. ஜப்பான் காரன் காலத்தில்தான் எதைச் சாப்பிட்டாலும், எவ்வளவு சாப்பிட்டாலும், பசி அடங்கவில்லையே! அப்படியிருக்க அந்த நான்கு துண்டு மரவள்ளிக் கிழங்கு எந்த மூலைக்கு? உப்பில்லாமல் அவித்த அந்தக் கிழங்கு எவ்வளவு நேரந் தான் தாக்குப்பிடிக்கும்! இரயிலாகிலும் சிரம்பானில் நின்று தண்ணீரைப் பிடித்து வயிற்றை நிரப்பிக்கொண்டது; ஆனால், இவர்களுக்கோ அதுவுமில்லை! பசிக்கிறதென்று யார்போய் ஜப்பான்காரனிடம் சொல்லமுடியும்? பூனைக்கு மணிகட்டின எலிகள் கதைதான்!

"ஜிகு ஜிகு, ஜிகு ஜிகு..." என்ற ஒரே தாளகதியில் ஓடிக்கொண்டிருந்த வண்டி தாளத்தைக் கொஞ்சம் மாற்றி, "ஜிக் ஜிக்" என்று மூச்சைப் பிடித்துக்கொண்டு திணறிய படி சரிவான மேட்டில் ஏறிக்கொண்டிருந்தது.

முன்னேக்கிச் சென்றுகொண்டிருந்த வண்டி திடீ ரென்று பின்னல் ஓடுவதுபோல் புலப்பட்டது. பின்னேக்கி ஓடுவதன் காரணம் பாரவண்டிப் பிரயாணிகளுக்கு விளங்க வில்லை. "எதிரில் இரயில் வரும், அதனல்தான் திரும்பிப் போகிறது" என்ருள் மங்கம்மா. சிலர் அதை ஆமோ தித்தனர். சிலர் அதை நம்பாமல் எட்டி எட்டிப் பார்த் தார்கள்.

எதிரிலிருந்து இரயில் வரவில்லை. ஆனல், அவர்களை இழுத்துச் சென்ற எஞ்சின்தான் மூன்று மர டிரக்குகளையும் ஒரு கூட்ஸையும் மட்டும் இழுத்துக்கொண்டு முன்னல் சென்றுகொண்டிருந்தது! வரவர எஞ்சினுக்கும், எஞ்சினி லிருந்து பிய்த்துக்கொண்ட மற்ற கூட்ஸுகளுக்கும் உள்ள தூரம் அதிகரித்துக்கொண்டே போனது. அது நிலவொளி யில் தெளிவாகத் தெரிந்தது.

'கூட்ஸுகள் கழன்றுகொண்டதால்தான் சரிவில் பின் னேக்கி இறங்குகின்றன' என்பதை அறிந்ததும் எல்லாரும்

திடுக்கிட்டார்கள். பசி மயக்கத்தில் சோர்ந்துபோய் தூங்கிக் கொண்டிருந்தவர்களும் விழித்துக் கொண்டனர். திகிலினல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர். பல நாள் கடவுளைப்பற்றி நினைக்காதவர்களும், அப்போது அவரை வாய்விட்டுக் கூப்பிட ஆரம்பித்துவிட்டார்கள்! ‘வண்டி பத்திரமாய் நிற்கவேண்டும்; எதிரில் வேறு வண்டி வரக்கூடாது’ என்று எல்லாத் தெய்வங்களுக்கும் வேண்டுகோள் விட்டார்கள்.

கூட்ஸுகளின் வேகம் வரவர அதிகரித்துக்கொண்டே இருந்தது. ‘எந்த நிமிடத்தில் கவிழுமோ, வேறு வண்டி மோதுமோ’ என்ற கவலையால் ஏற்பட்ட பயம் யாவரையும் உலுக்கிக்கொண்டிருந்தது. சிலர் வண்டியிலிருந்து குதிக்கவும் பிரயத்தனம் செய்தனர். “செத்தால் எல்லாரும் ஒன்ருய்ச் சாகலாம்; குதித்து ஏன் கால்களை உடைத்துக் கொண்டு தனியாகச் சாகப்போகிறீர்கள்?” என்று ஒருவர் கூறிய ஆலோசனையைக் கேட்டுக் குதிக்கும் முயற்சியைக் கைவிட்டனர். ஆனலும், சிலர் கூட்ஸின் வாசலிலே நின்று கொண்டிருந்தனர் — சமயம் நேரும்போது குதிக்கலாம் என்று.

ஒன்றும் புலப்படாமல், பின்னல் ஓடும் பார வண்டியில் மலைத்துப்போய் உட்கார்ந்திருந்த மங்கம்மா, சாக்கின் மேல் தூங்கிக்கொண்டிருந்த மகனின் தலையைத் தூக்கித் தன் மடியின் மீது வைத்துக்கொண்டாள். அவள் உள்ளமும் உடலும் நடுங்கிக் கொண்டிருந்தன.

மங்கம்மாவுக்கு எண்ணமெல்லாம் எங்கெங்கோ ஓடின. “இரண்டு வருடங்கள் எப்படியோ காப்பாற்றிவிட்டேன். இப்போது வண்டி கவிழ்ந்துவிட்டால், அல்லது வேறு வண்டி மோதி நொறுங்கினல், என் மகனை எப்படிக் காப்பாற்றப் போகிறேன்? அவர் வந்து கேட்டால், என்ன பதில் சொல்வேன்? ‘மங்கம்மா! பிள்ளை பத்திரம், பிள்ளை

பத்திரம்; கவனமாய்ப் பார்த்துக்கொள்' என்று பன்னிப் பன்னிச் சொல்லிவிட்டுச் சயாமுக்குச் சென்றாரே" என்று பலவாறு எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள்.

அவள் தன்னை மறந்துவிட்டாள்; தனக்கு ஆபத்து என்பதையும் மறந்துவிட்டாள். மகனுக்கு ஆபத்து வந்தால் என்ன செய்வது என்ற கவலைதான் அவள் உள்ளத்தை அரித்துக் கொண்டிருந்தது. கூட்ஸ் பின்னால் ஓடுவது போன்றே மங்கம்மாவின் எண்ண அலைகளும் பின்னால் திரும்பி ஓடின.

ஆங்கிலேயர் மலாயாவை விட்டுப் போகும்போது கொடுத்துவிட்டுச் சென்ற புழுங்கல் அரிசி மூன்று மாதத்திற்குத்தான் வந்தது. அதற்குமேல் ஜப்பான்காரன் கொடுத்த சுண்ணும்பு அரிசியைக்கொண்டு மகனைக் காப்பாற்றினாள். இந்த நெருக்கடியான சமயத்தில்தான் அவள் கணவன் செல்லச்சாமியை சயாமுக்கு அனுப்பி விட்டார்கள். முப்பது வயதை எட்டிப்பிடிக்கும் மங்கம்மாவுக்கு ஐந்து வயது மகன் கண்ணனைத் தவிர வேறு கதியில்லை. தனித்துப் பாடுபட்டு மகனைக் காப்பாற்றினாள். சயாமுக்குச் சென்ற கணவனைப்பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை.

எஸ்டேட்டில் கிராணிமார்களின் கெடுபிடி வரவர அதிகமாகிக் கொண்டிருந்தது. ஜப்பான்காரன் பதினைந்து நாளைக்கு ஒரு முறை கொடுக்கும் உணவுப் பொருட்கள் தொழிலாளரிடம் சரியாக வந்து சேர்வதில்லை. ஆனால், கணக்குமட்டும் அதிகாரிகளுக்குச் சரியாகச் சென்றுகொண்டிருந்தது!

'மகனை எப்படிக் காப்பாற்றப் போகிறேன்?' என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள் மங்கம்மா. தோட்டப் புறங்களில் மரவள்ளிக் கிழங்கு கிடைப்பதுகூட அரிதாகும் நிலை ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அப்போதுதான் 'கோலாவில் ஏரோப்பிளேன் திடல் செய்வதற்கு ஆள் எடுக்

கிருர்கள் ; நிறைய அரிசி கொடுக்கிருர்கள்' என்ற செய்தி எட்டியது. கோலக் கிள்ளானுக்குப் புறப்பட்ட நாலாவது வீட்டுக் குடும்பத்தோடு மங்கம்மாவும், ஏழு வயது மகன் கண்ணனைக் கையில் பிடித்துக்கொண்டு புறப்பட்டாள்.

கோலா ஏரோப்பிளேன் திடலில் வேலை முடிந்தவுடன் மாலையில் எல்லாரையும் வரிசையாக நிற்கவைத்து, அன்றாட ரேஷனாக — அரிசி, உப்பு, மீன், காய்கறி யாவும் கொடுத்தனர். மிகவும் மகிழ்ச்சியடைந்தாள் மங்கம்மா. இந்த அரிசிக்காகத்தானே அவள் எழுபது எண்பது கல் தூரம் கடந்து வந்தாள். மகன் கண்ணனுக்கு மரவள்ளிக் கிழங்கைக் கொடுக்காமலே வளர்த்தாள். ஆறு மாதங்கள் கழிந்தன. திடீரென்று மங்கம்மாவைத் திகைப்பில் ஆழ்த்தும் செய்தி வந்தது.

'பதின்மூன்ரும் பதிநான்காம் நம்பர் கங்காணி ஆட்களைச் சிரம்பானிலிருந்து இருபத்தைந்து கல் தூரத்திலுள்ள கோலப்பிலாவில் புதிதாகத் திறக்கப்படும் ஏரோப்பிளேன் திடலுக்கு மாற்றப்போகிருர்கள்' என்பதுதான் அச் செய்தி. செய்தி வந்த அடுத்த நாளே 'மூட்டையைக் கட்டுங்கள்' என்ற உத்தரவோடு வந்துவிட்டான் ஜப்பான்காரன். கோலாவிலிருந்து அப்படிக் கோலப்பிலாவுக்கு அனுப்பப் பட்ட குழுவில் ஒருத்திதான் மங்கம்மாவும், அவள் மகனும்.

இத்தனை நாள் படாத பாடுபட்டு மகனை வளர்த்தாள். இப்போது இடம் மாறிச் செல்லும்போதுதான் எதிர்பாராத விதமாக ஆபத்து நெருங்கிக் கொண்டிருந்தது, கொஞ்சம் பலமுள்ள ஆண்களே திகைத்து நிற்கும்போது, அவளால் என்ன செய்யமுடியும்? குமுறிக்கொண்டிருந்தாள்.

ஐந்து கல் தூரம் பின்னோக்கி ஓடியபின், கூட்ஸுகளின் வேகம் தணிய ஆரம்பித்தது. கூட்ஸுகள் மெதுவாக நின்றன. நின்றபின்னர்தான் எல்லாருக்கும் உயிரின்மீது நம்பிக்கை வந்தது. இரயில் பாதையின் இரு பக்கங்களிலும் காடு அடர்ந்திருந்தது. சில சாமான்களை மட்டும்

எடுத்துக்கொண்டு கீழே இறங்கினர். மங்கம்மாவும் மகனை எழுப்பித் தூக்கிக்கொண்டு கீழே இறங்கினாள். என்ன செய்வதென்றே தோன்றவில்லை ஒருவருக்கும், அந்த நடுக் காட்டில்.

இரவு மணி பன்னிரண்டுக்கு மேல் ஆகிவிட்டது. இவ் வளவு நேரம் சும்மா இருந்த பசி மறுபடியும் வயிற்றைப் பிடித்துக் கௌவியது. கண்ணனுக்கு ஒன்றும் புரியவில்லை; மிரள மிரள விழித்தான்; இருக்கும் நிலவரம் தெரியாமல் "அம்மா பசிக்குது" என்றான்.

கோலாலம்பூரில் கொடுத்த மரவள்ளிக் கிழங்கில் தன் பங்கிற்குரிய இரண்டு துண்டை எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்திருந்தாள். அதை எடுத்துக்கொடுத்து மகன் பசியை ஆற்றி, அவள் வயிறு குளிர்ந்தாள். 'இரண்டு துண்டுக் கிழங்கை எடுத்து வைத்தது எவ்வளவு நல்லதாகிவிட்டது' என்று நினைத்துக்கொண்டாள். அந்த இக்கட்டான நிலை யிலும் தாயுள்ளம் மகிழ்ச்சியால் பூரித்தது.

வயிற்றில் விழுந்த கிழங்குத் துண்டு பசியைக் கொஞ்சம் தணித்ததால், கண்ணனுக்கு மறுபடியும் தூக்கம் கண்ணைச் சுற்றியது.

எதிரிலிருந்து வேறு இரயில் வருவதுபோல் தோன்றியது. சிறிது நேரத்தில் வண்டி நெருங்கிவிட்டது. எல்லாரும் பாதையினின்று விலகி நின்றார்கள். மங்கம்மாவும் மகன் கண்ணனை அணைத்துப் பிடித்துக்கொண்டு ஒதுங்கி நின்றாள். எல்லாருடைய உள்ளமும் 'திக்திக்'கென்று அடித்துக்கொண்டது. அந்த வண்டி கூட்ஸ் மேல் மோதப் போகிறது; எடுக்க முடியாமல் கூட்ஸில் விட்ட பொருட்கள் என்னவாகப் போகிறதோ என்றஞ்சினர். சிலர் துணிகளை ஆட்டி இரயிலை நிறுத்த முயன்றனர்.

வந்தது — ஓர் எஞ்சின்; அது கூட்ஸுகளை மெதுவாகத் தொட்டு நின்றது. எஞ்சினிலிருந்து குதித்து ஓடிவந்தான்

ஒரு ஜப்பான்காரன்; "ஏறுங்கள், ஏறுங்கள்!" என்று கத்தினன்.

கூட்ஸ் பிய்த்துக்கொண்டு ஓடியது டிரைவருக்குத் தெரியவில்லை. கிம்மாஸ் சென்ற பின்னர்தான் ஜப்பான் காரனும் கவனித்திருக்கின்ருன். ஆனலும், டிரைவருக்கு என்ன சன்மானம் கொடுத்தானே? கண்டிப்பாக ஜப்பான் காரனின் முரட்டுக் கை டிரைவரின் கன்னங்களைப் பதம் பார்த்திருக்கும்!

மறுபடியும் வண்டி கிம்மாஸ் போய்ச் சேர்வதற்குள் இரவு மணி மூன்றுக்கு மேல் ஆகிவிட்டது. நெல்லும் கல்லும் கலந்த சோற்றையும், வெள்ளரிக்காய் குழம்பையும் கொடுத்தார்கள். அதுவும் அவரவர் பங்கை அவரவர் வாங்கிக்கொள்ள வேண்டும். பல முறை தட்டி எழுப்பியும் கண்ணன் தூக்கத்திலிருந்து விழிக்க மறுத்துவிட்டான். மங்கம்மா தனது பங்குச் சோற்றைமட்டும் வாங்கிவந்தாள். பிறகு, மகனை எழுப்பிச் சாப்பிடச் செய்தாள். மீதியிருந் ததை வாயில் போட்டுக்கொண்டு கூட்ஸிலேயே முடங்கிக் கொண்டாள்.

பொழுது விடிந்தது. இரயில் சிங்கப்பூர் செல்லும் மார்க் கத்தைவிட்டுக் கிழக்குக் கரைப் பகுதிக்குத் திரும்பியது. காலை எட்டு மணிக்குப் புறப்பட்ட வண்டி பதினெரு மணி யளவில் பகோ என்னும் சிறிய பட்டணத்தை அடைந்தது. அங்கிருந்து லோரிகள் பார வண்டிப் பிரயாணிகளை அள்ளிப் போட்டுக்கொண்டு புறப்பட்டன.

பகோவுக்கும் கோலப்பிலாவுக்கும் இடையில் உள்ள ஒரு ரப்பர்த் தோட்டத்தை அழித்து, ஏரோப்பிளேன் திட லுக்கு வேலைகள் நடந்து கொண்டிருந்தன. ஆங்கிலேயர் குழந்தைகளைப்போல் பாதுகாத்து வளர்த்த ரப்பர் மரங் களைக் கொஞ்சமும் கவலையில்லாமல் வேரோடு பிடுங்கி எறியும்படி கட்டளையிட்டனர் ஜப்பானியர்! மனிதர்கள்

மட்டுமல்லாது, இரண்டு யானைகள் கூட ஜப்பானியரின் கொடிய ஆணைக்கு அடங்கி, சாய்த்த மரங்களைத் தூக்கி ஓர் ஓரமாக அடுக்கிக் கொண்டிருந்தன.

கூட்ஸ் பிரயாணிகளை ஏற்றிச்சென்ற லோரிகள் ரப்பர்த் தோட்டத்தின் ஓரமாக நின்றன. தூரத்திலிருந்து பார்க்கும்போது மரங்கள் மட்டும் நிற்பதுபோல் தோன்றின. நெருங்கிப் பார்த்தபோதுதான், ரப்பர் மரங்களுக்கு ஊடே ரப்பர் மரங்களையே தூண்களாகப் பாவித்து, சுமார் ஐம்பது கெஜ நீள அளவில், பத்துப் பன்னிரண்டு கொட்டகைகள் அமைக்கப்பட்டிருந்தது தெரிந்தது. பலர் அங்குப் பழைய குடிகளாக இருந்தனர். புதிதாகச் சென்ற கூட்டத்தினர் இடம் பிடித்தனர். மங்கம்மாவும் அந்த நீண்ட கொட்டகை ஒன்றில் பாயை விரித்துப்போட்டுத் தாய்க்கும் மகனுக்குமாகச் சிறு இடத்தை ஒதுக்கிக்கொண்டாள். கோலக்கிள்ளானில் இருந்த வசதிகள் கோலப்பிலாவில் இல்லை.

மறுநாள் வேலைக்குச் சென்றனர். கோலக்கிள்ளான் ஏரோப்பிளேன் திடலில் இல்லாத ஒரு புதுமை கோலப்பிலா திடலில் இருந்தது. அதுதான், ஐந்து வயதிற்கு மேற்பட்ட பிள்ளைகளும் வேலை செய்ய வேண்டும் என்பது. அவர்களுக்குக் கால் சம்பளம்; அரை ரேஷன். எல்லாப் பிள்ளைகளோடும் சேர்ந்து கண்ணனும் உழைத்துப் பிழைக்கப் புறப்பட்டான்.

'எல்லாரும் சமமாக உழைக்க வேண்டும்; உழைக்காமல் உண்ணக்கூடாது' என்ற தத்துவம் கோலப்பிலா ஏரோப்பிளேன் திடலில் அமுலாகியது. அந்தத் தத்துவம் ஐந்து வயதுப் பாலகர் தலையிலும் சுமத்தப்பட்டது. பெரிய பெரிய ஆபீசர்களைக்கூட இரயில் ரோட்டில் புல் பிடுங்க வைத்துவிட்டானே ஜப்பான்காரன்!

மங்கம்மாவுக்குத் தன் மகன் கண்ணனை வேலைக்கு அனுப்ப மனம் இல்லை; தன் வயிற்றைக் கட்டியும் மகனை

வளர்க்கத் தயாராயிருந்தாள். ஆனால், அவன் வேலைக்குச் செல்லாமல் வீட்டுப் பக்கம் சுற்றிக்கொண்டிருந்தால் ஜப்பான்காரன் அடித்துவிடுவானே என்று அஞ்சி வேலைக்கு அனுப்பினாள்.

வேலைத் தளத்தில் மங்கம்மாவின் கண்கள் கண்ணனைத் தான் கவனித்துக்கொண்டிருக்கும். பிள்ளைகளோடு சேர்ந்து ரப்பர் மரத்துச் சிறு வேர்களையும் குச்சிகளையும் பொறுக்கிக் குவிப்பது அவன் வேலை. பத்து வயதுள்ள ஒரு சிறுவன் அவர்களுக்கு மண்டோர்.

மாலை மணி ஐந்தானவுடன், கண்ணன் தன்னுடைய பங்கு அரிசி, காய்கறிகளை வாங்கி வந்து அம்மாவிடம் கொடுப்பான். அதைக் கொண்டுவந்து கொடுக்கும்போது ஒரே ஆனந்தம். தானும் சம்பாதிப்பதில் ஒரு பெருமை, பகலெல்லாம் சுற்றி அலைந்த களைப்பையும் மறந்துவிட்டு விளையாடச் சென்றுவிடுவான்.

இரண்டு மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் மண் வெட்டிக் கொண்டிருக்கும்போது வேர் தடுக்கியதால் மண் வெட்டி மங்கம்மாவின் கணுக்காலில் பட்டுவிட்டது. சேலைத் துணியைக் கிழித்துச் சுற்றிக்கொண்டிருந்தாள். அவள் வேலை செய்யாமல் உட்கார்ந்திருக்கிறாள் என்று நினைத்துக் கொண்டு, கைத் தடியுடன் நெருங்கினான் ஜப்பான்காரன், அடிப்பதற்காக; கங்காணி வந்து விஷயத்தைச் சொல்ல, அடிக்காமல் திரும்பினான். கங்காணியிடம் சொல்லிவிட்டு, ஜப்பான்காரனுக்குத் தெரியாமல் பதுங்கிப் பதுங்கி இருப்பிடத்திற்கு வந்தாள். வருமுன் பக்கத்துப் பெண்களிடம் மகன் கண்ணனைக் கவனித்து அழைத்து வரும்படி சொல்லிவிட்டுச் சென்றாள்.

அன்றன்று வேலைக்குச் சென்றால்தானே அன்றாட வயிற்றுப்பாட்டுக்குக் கிடைக்கும். கால் வலியையும் பொருட்படுத்தாமல் மறுநாள் வேலைக்குச் சென்றாள் மங்கம்மா. கால் புண்ணில் நிறைய மண் செறுமிக்

கொண்டது. தண்ணீர் குடிக்கப் போவதாகப் பாசாங்கு செய்துகொண்டு மர நிழலில் வந்து நின்று, வலிக்கு ஆறுதல் செய்து கொண்டாள்.

அன்று இரவு அவளால் தூங்கவே முடியவில்லை. கால் வீங்கிவிட்டது; காலை அசைக்கவே முடியவில்லை. பக்கத்தில் உள்ளவர்கள் சொன்ன பச்சிலைகளை அரைத்துப் போட்டாள். பத்துக் காசு அகலத்தில் இருந்த புண் இரண்டொரு நாட்களில் இருபது காசு அகலமாகிவிட்டது. ஜப்பான்காரனிடம் காட்டியபோது, ஏதோ ஒரு நீலக் கல்லைப் புண்ணில் தேய்த்துவிட்டு, மஞ்சள் நிறமான தண்ணீரைப் போட்டு அனுப்பினான். ஒரு வாரத்திற்குள் புண் ஐம்பது காசு அகலத்திற்குமேல் பெரிதாகிவிட்டது. பிறகு யாரோ சொன்னார்கள் என்று செப்புத் தகட்டில் துவாரமிட்டு புண்ணில் கட்டினாள். புண் பெரிதானதே யன்றிச் சிறிதும் ஆறவில்லை. மங்கம்மாவால் எழுந்திருக்கவே முடியவில்லை; எப்படி வேலைக்குச் செல்ல முடியும்? வேலைக்குச் செல்லாததால் அவளுக்கு அரை ரேஷன் மட்டும் கொடுக்கப்பட்டது.

மங்கம்மா தனது முடியாத நிலைக்குக் கண்ணீர் வடித்தாள். வீட்டிலிருந்தால் ஜப்பான்காரன் அடித்துவிடுவான் என்று அஞ்சியே முன்னர் மகனை வேலைக்கு அனுப்பினாள். ஆனால், இப்போது தாய்க்கும் சேர்த்துச் சம்பாதிக்கும் பெரும் பொறுப்பு ஏழு வயது நிரம்பிய கண்ணனுக்கு ஏற்பட்டுவிட்டது.

அம்மாவின் கண்காணிப்பு இல்லாததால், வேலை செய்யுமிடத்தில் கண்ணன் கண்டபடி அலைவதாகவும், சில பெரிய பையன்கள் அவனை அடிப்பதாகவும் கேள்விப் பட்டாள். அவள் தாய் உள்ளம் நைந்து உருகியது. அவள் என்ன செய்ய முடியும்? அவனும் வேலைக்குச் செல்லாவிட்டால் எதைச் சாப்பிடுவது? உப்பு, மிளகாய் வாங்கக் காசுக்கு எங்கே போவது?

மாலையானவுடன் தன்னுடைய பங்கையும் தாயின் அரைப்பங்கு ரேஷனையும் வாங்கிவருவான் கண்ணன். அம்மாவை அடுப்பண்டை இருக்க வைத்துவிட்டுக் கேட்கும் ஒவ்வொரு சமையல் சாமானுகக் கொண்டுவந்து கொடுப்பான். அடுப்பண்டை காலை நீட்டி உட்கார்ந்து சமைப்பாள் மங்கம்மா. சிறிய தகர டின்னில் தண்ணீர் பிடித்துக் கொண்டுவந்து பானையில் ஊற்றுவான். அந்த ஏழு வயதில் பொறுப்பு நிறைந்த மகனுக நடந்துகொண்டான் கண்ணன். முன்போல் மாலையில் விளையாடச் செல்வதுமில்லை. இதைப் பார்க்கப் பார்க்க, 'கோழி, குருவிகூட குஞ்சு தேடித்தர தாய் உண்பதில்லையே' என்று எண்ணியெண்ணி மங்கம்மாவின் தாய் உள்ளம் வருந்தியது.

அன்று வழக்கப்படி மகனின் வரவை எதிர்நோக்கிப் படுக்கையிலிருந்து கொண்டே தலையைத் தூக்கிப் பார்த்துக் கொண்டிருந்தாள் மங்கம்மா. எல்லாரும் வந்துவிட்டார்கள்; கண்ணன் மட்டும் இன்னும் வரவில்லை. அவளால் இருக்கவே முடியவில்லை. கால் வலியையும் பொருட்படுத்தாமல் தடியை ஊன்றிக்கொண்டே அடுத்திருப்பவர்களிடம் சென்று விசாரித்தாள். சிலர், "பார்க்கவில்லையே" என்றனர்; "இந்த நொண்டிக்காலோடு ஏன் இப்படித் தடுமாறிக்கொண்டிருக்கிருய்? இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்துவிடுவான்; போய்ப் படுத்திரு" என்று கூறினர் சிலர். அவள் தாய் உள்ளம் அவற்றைக் கேட்கவில்லை. ஒவ்வொரு விநாடியும் ஒரு நாள் கழிவது போலிருந்தது. வலியையும் பொருட்படுத்தாமல், மகனுடன் வேலை செய்யும் சிறுவர்கள் இருக்குமிடத்தைத் தேடிச் சென்ருள். அப்போது ஆறு வயதுள்ள ஒரு சிறுவன் இரைக்க இரைக்க ஓடி வந்தான்.

"கண்ணனை சப்பாங்காரன் கட்டி வைச்சுட்டான். கண்ணனுக்கு இன்னிக்கி கத்தி சாகா பார்க்கிற வேலை.

அவன் தூங்கிட்டான், ரெண்டு கத்தி காணுமே போச்சி!" என்று மூச்சுத்திணறக் கூறினான் அந்தச் சிறுவன்.

"ஐயோ, என் மகனைக் கட்டிவைச்சிருக்கா? அட, பாவிங்களா! என் பிள்ளையை ஜப்பான்காரன் கையிலே பிடிச்சுக் கொடுத்திட்டா வந்திட்டீங்க? அவன் இந்நேரம் என் மகனைக் கொண்ணுட்டு இருப்பானே!" என்று அலறிக் கொண்டே ஓடினாள். அப்படி ஓட மங்கம்மாவுக்கு எங்கிருந்துதான் பலம் வந்ததோ! கால் வலிதான் எப்படிப் போனதோ! இரண்டே எட்டில் ஆபீஸ் இருக்குமிடத்தை அடைந்தாள். அங்கு அவள் கண்ட காட்சி சீறி எழச் செய்தது அவளை.

வாசல் தூணில் கண்ணனைக் கட்டிவைத்திருந்தார்கள். கையில் ஒரு ரூல் தடியை வைத்துக்கொண்டு, அவன் பக்கத்தில் ஒரு ஜப்பான்காரன் நின்றுகொண்டிருந்தான். கண்ணன் தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருந்தான்.

மங்கம்மா ஆவேசம் வந்தவள்போல் ஓடினாள். கூரிய நகமும் பலமும் வாய்ந்த காட்டுப் பூனையிடம் போரிடச் சக்தியில்லாவிட்டாலும், துணிந்து எதிர்த்துப் போராடும் தாய்க் கோழி போலானாள்; தன்னை மறந்தாள்; பிறகு என்ன ஏற்படும் என்பதை அறவே மறந்துவிட்டாள்.

"அட, பாவி! எம் பிள்ளையைக் கொல்றியா?" என்று ஆவேசத்துடன் கூறிக்கொண்டே கையிலிருந்த தடியை வீசி எறிந்தாள். அது அந்த ஜப்பான்காரன் முதுகின் மேல் விழுந்தது!

ஜப்பான்காரன் கோபித்துப் பேசும்போது நிமிர்ந்து பார்த்தால்கூட இரண்டு அறை கொடுப்பான். மங்கம்மாவின் பிள்ளைப் பாசத்தால் ஏற்பட்ட நிலைதடுமாறிய ஆவேசச் செயல், அவனை எவ்வளவு தூரம் ஆத்திரமடையச் செய்திருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

கண்ணனின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை கொடுத்தான். "அம்மா!" என்ற ஒரே அலறல். "கண்ணு!" என்று நெருங்கி வந்துகொண்டிருந்த மங்கம்மாவை எட்டி ஓர் உதை விட்டான். அவள் தூரப்போய் விழுந்தாள். மறுபடியும் உதைக்க, புலிபோல் உறுமிக்கொண்டு ஓடினான். அதற்குள் காரியாலயத்திலிருந்து வெளியில் வந்த மற்ற ஜப்பான்காரன் அவனைத் தடுத்துவிட்டான். இல்லாவிட்டால் மங்கம்மாவின் கதி அப்போதே முடிந்திருக்கும்.

மூர்ச்சையாகியிருந்த மங்கம்மா கண் விழித்தாள். அவளைச் சுற்றிலும் மக்கள் கூட்டமாக நின்றுகொண்டிருந்தார்கள். கண் விழித்தவுடன், "என் மகன் எங்கே? என் கண்ணன் எங்கே!" என்று அலறிக் கொண்டுதான் எழுந்தாள்.

அவள் மகன் கண்ணனை ஒரு துணியால் மூடிவைத்திருந்தார்கள்! "ஐயோ மகனே, கண்ணு! என்னை விட்டு விட்டுப் போயிட்டியா?" என்று விழுந்து புரண்டு அழுதாள். அன்றிரவே அவனை அடக்கம் செய்துவிட்டனர்.

"மங்கம்மா, நீ இனி இங்கிருந்தால் அந்த ஜப்பான்காரன் கண்டிப்பாய் உன்னைக் கொன்றுவிடுவான். அது அடிபட்ட பாம்பு; பார்த்துக்கொண்டே இருக்கும். நீ இப்போதே புறப்படு" என்று எல்லாரும் வற்புறுத்தினார்கள். அவள் பிடிவாதமாய் மறுத்தாள்.

"ஐயோ, என் பிள்ளையை நான்தான் கொன்றேன். நான் முரட்டுத்தனமாய்க் கம்பை வீசாட்டி, என் மகனை அந்த ஜப்பான்காரன் அப்படி ஓங்கி அடிச்சிருக்கமாட்டான்! என் மகனுக்கு நான்தான் எமன். அம்மாவை வளர்த்த பிள்ளையாச்சே அது. அதைச் சாகக்கொடுத்திட்டு என் உயிரைக் காப்பாத்திக்கவா சொல்றீங்க. அது என்னால் முடியவே முடியாது. நான் இந்த இடத்தைவிட்டுப் போகவே மாட்டேன். நானும் அந்த ஜப்பான்காரன் கிட்ட

அடிபட்டே செத்துப்போறேன்!" என்று சொல்லுக்குச் சொல் அழுதுகொண்டே கூறினாள் மங்கம்மா.

நாளைக்கு நடக்கவிருப்பது என்னவென்று எல்லாருக்கும் தெரியும். தெரிந்தும், பேசாதிருக்க முடியுமா? எல்லாரும் சேர்ந்து மங்கம்மாவை வலுக்கட்டாயமாக ஒரு வண்டியில் ஏற்றிச் சிரம்பானுக்கு அனுப்பினார்கள். ஒருவர் அவள் கூடவே சென்று, தமக்குப் பழக்கமான கிராணியார் வீட்டில் விட்டார். கிராணியாரிடம் விவரங்கள் யாவற்றையும் கூறிவிட்டு, அன்றிரவே திரும்பிவிட்டார்.

ஆண்டுகள் கழிந்தன. அக்கிரம ஜப்பானியர் ஆட்சியும் ஒழிந்தது. இன்னும் மங்கம்மா கருணாகரன் கிராணியார் வீட்டில்தான் இருக்கிறாள். சயாமுக்குச் சென்ற அவள் கணவன் செல்லச்சாமி திரும்பி வரவேயில்லை.

"மங்கம்மா, நீ இன்னும் விழித்துக்கொண்டா இருக்கிறாய்? பிள்ளைகள் எல்லாம் தூங்கிவிட்டார்களா? சாப்பிட்டுவிட்டுப் படுக்காமல், ஏன் இன்னும் உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கேள்விகளை எழுப்பிக்கொண்டே கருணாகரன் கிராணியாரும் அவர் மனைவியும் படம் பார்த்துவிட்டு வீட்டில் நுழைந்தார்கள்.

வாசலில் உட்கார்ந்திருந்த மங்கம்மா கண்ணிலிருந்து வழியும் நீரை அவர்களுக்குத் தெரியாமல் துடைத்துக்கொண்டு, "உங்களுக்குச் சாப்பாடு கொடுத்துட்டுத் தூங்கலாம் என்று நினைத்தேன்" என்று கூறிக்கொண்டே சமையல் அறைக்குச் சென்றாள். மகனை இழந்த துக்கம் இன்னும் ஈயக் குண்டைக் கட்டிப்போட்டதுபோல் அழுத்திக்கொண்டிருந்தது, அவள் மனதை.

"ராஜம், அங்கே பார்! பதினெட்டு வருஷங்களாகியும் மங்கம்மாவுக்கு இன்னும் மகனை இழந்த துக்கம் போகவில்லை. நமக்குத் தெரியாமல் கண்ணைத் துடைத்துக்கொண்டு போவுது!" என்று மெதுவாகத் தன் மனைவியிடம் கூறினார், இரயில்வே ஓவர்சியர் கருணாகரன்.

உலகநாதன்

# ஞாயிறு

இருளொழித்துப் பெரும்புவியோர் இன்புறுதற் கென்
றெண்ணி
இயற்கையெனும் எழிலணங்காள் எடுத்தெறிந்த சக்கரமோ?
உருள்கின்ற புவியிதனை ஒரேதிசையில் இயக்கிவர
ஒரேதலைவன் நீயென்றே உருவமைத்து விட்டனளோ?

மாற்றுயர்ந்த பொன்னெடுத்து வெந்தணலில் உருக்கி
வைத்து
வட்டஉருத் தட்டெனவே வார்த்துவைத்த அதிசயமோ
ஆற்றுகின்ற கடமைகளை அன்றாடம் மானிடர்க்கே
அறிவுறுத்த காலைவந்து அந்திபடும் சேவகனோ?

உயிரினத்தின் துயிலெழுப்பி உலகியக்கம் நடத்துதற்கே
ஒளிமுகத்தைக் காட்டிடும்நீ உறங்குவது மலையடியோ?
அயர்வொழித்துச் சுடர்பாய்ச்சி அவனியெலாம் பவனிவரும்
ஆதவனே நின்செயலை யானளக்க வல்லவனோ?

கோமான்நின் வருகையினை கோழியினம் முன்னறிந்து
கொக்கரக்கோ இசையெழுப்பிக் கூறுகிற விந்தையென்னே?
ஆமாம்நீ கீழ்தோன்றி மேல்செல்லும் நோக்கமெல்லாம்
அகிலமக்கள் முன்னேற்றம் அறிவுறுத்த வேண்டியன்றோ?

உடையானி லாதானென் றெதுக்கானவ் வெளிவானில்
உயர்வானென் றுயர்வானில் உணர்த்து தற்கு வந்தனையோ?
கொடையாலே எப்பொருளும் குறையாதென் றுணர்த்
துதற்கு
குளிர்நிலவுக் கொளிநல்க குன்றேறி வந்தனையோ ?

அந்தியிலே வான்கண்டேன் அழகணங்கின் புன்னகையை
ஆனமட்டும் கண்ணிரண்டால் அள்ளியள்ளி நான்
உண்டேன்
இந்தவகை வண்ணமெல்லாம் எங்கிருந்து வந்ததையா !

கதிரென்னும் தூரிகையால் கடலுலகின் வண்ணமெலாம்
கலந்தெடுத்துத் தீட்டியதுன் கைவண்ணம் என்றறிந்தேன்
புதிர்விளக்கும் பேரறிவைப் புகட்டுகின்ற நல்லறிஞர்
போக்கினையுன் பொன்னொளியில் புலன்வைத்து நான்
கண்டேன் !

நின்முகத்தைக் கண்டவுடன் தன்முகத்தைக் காட்டுகின்ற
நெஞ்சினிக்கும் தாமரையைக் கொஞ்சுதற்கு வந்தனையோ ?
பொன்முகத்தைக் காட்டியந்த பூமுகத்தைக் காணவந்து
போனவுடன் என்னவிந்தை பூமுகமும் வாடுவதேன் ?

தாயிருக்கும் நினைவினையும் தன்னலத்தால் மறந்துவிட்டுத்
தான்தோன்றி யாயிருக்கும் தன்மைகெட்ட மனிதருக்கு
நீயிருக்கும் நினைவூட்ட நிலம்பிளக்க சிலவேளை
நின்றெரிவாய் ! நானறிவேன் நீதிபதி நீயென்றே !

காலையிலே பொன்னிறமும் கடும்பகலில் வெண்ணிறமும்
காட்சிதரும் நீலநிறம் கலந்திருக்கும் வான்திரையில்
மாலையிலே மட்டுமெங்கள் மாமறவர் செங்குருதி
வண்ணமது எங்கெங்கும் வடிந்திருக்கும் விந்தையென்னே!

சோலையிலே சிரித்துநின்ற தூயமணப் பூக்களிலே
சொக்கிநின்ற நின்னழகை துய்த்துணர்ந்து கொண்
டேன்நான்
பாலையிலே மணல்வெளியில் படுசூட்டுக் கனலிடையே
பகலவனே நின்னழகைப் பார்த்ததடா பாட்டுநெஞ்சம்!

கடற்பரப்பில் நீகுளிக்கும் காட்சியிலே மாட்சிகண்டேன்
கதவிடுக்கில் நீகாட்டும் கலைவண்ண ஆட்சிகண்டேன்
உடற்பரப்பின் வியர்வையிலே உன்கரத்தின் வன்மை
கண்டேன்
உன்னொளியைப் பெற்று வந்த தண்ணிலவில்
பெண்மைகண்டேன்!

கரு. திருவரசு

# வெள்ளித் துளிகள்!

சட்டச் சடவெனக்
கொட்டியதே! — மழை
குட்டை குளக்கரை
முட்டியதே!

கொட்டி முடித்திட
நினைத்ததுபோல் — மழை
கொட்டுக் கொட்டெனக்
கொட்டியதே!

குறையாக் கொள்கலன்
வானத்திலே! — அது
கொட்டி நனைக்குது
ஞாலத்தையே!

வரையா தளிக்கும்
வள்ளலைப் போல் — அது
வாரி இறைக்குது
மேகத்தினல்!

உண்டு கழிக்கும்
நீரையெல்லாம் — நாம்
ஊற்றிக் கெடுக்கும்
நீரையெல்லாம்

கொண்டு நிறைத்தது
மழையெனவே — பின்
கொட்டிப் புரக்குது
பாரையெல்லாம் !

வெள்ளித் துளிகள்
இறைத்ததுபோல் — அதை
அள்ளிச் சலித்தே
இறைப்பவரார் ?

கொள்ளை யடித்த
பொருளைப்போல் — அதைக்
கொட்டிக் கொட்டிச்
சிரிப்பவரார் ?

## ந. பழநிவேலு | செல்லாத நோட்டு

அமுக்கப்பட்ட நியாய உணர்ச்சியைக் கிளர்ந்தெழச் செய்யும் சம்பவமொன்றை அடிப்படையாக வைத்துக் கதையொன்றைப் பின்னவேண்டுமென்று முனைந்த சமயத்தில், ஞாபகமறதிக்கு பேர்பெற்ற என் நண்பர் நாடிமுத்து வந்து சேர்ந்தார்.

"ஓகோ! நாராயணசாமி வீட்டிற்குப் போவதற்குப் பதிலாக இங்கே வந்துவிட்டேனே?" என்று தமது ஞாபக மறதித் திறமையை வந்ததும் வராததுமாகப் புலப்படுத்தி விட்டு, "ஓய்! உம்மிடம் நான்கு மாதத்திற்கு முன்பு கைமாற்ருக வாங்கிய ஐந்து வெள்ளியைத் திருப்பித் தர மறந்தே போய்விட்டேன்; இந்தாரும் ..." என்று தமது சட்டைப்பைக்குள் கைவிட்டு, ஐந்து வெள்ளி நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்தார், நாடிமுத்து.

எப்பொழுது இவருக்கு ஐந்து வெள்ளி கொடுத்தோம் என்பது எனக்கு ஞாபகமில்லை. நாடிமுத்துவின் நண்பனல்லவா நான்? என்ருலும், வலிய வரும் 'லட்சுமி'யை வேண்டாமென்று சொல்லவும் மனம் வரவில்லை. வாங்கிக் கொள்ளவும் மனச்சாட்சி இடந்தரவில்லை; இந்தக் குழப்பத்தில் நண்பர் சொல்லாமற் கொள்ளாமல் போனதும் தெரியவில்லை. வேறு வழியின்றி வெள்ளியை என் மணிபர்சுக்குள் வைத்துக் கொண்டேன்.

பிறகு கதை எழுத முனைந்தேன். ஒன்றும் ஓடவில்லை. சிந்தித்துச் சிந்தித்துத் தலையும் வலிக்க ஆரம்பித்து

விட்டது. கடற்கரைவரை போய் வந்தால்தான் தேவலை போல் தோற்றியது. உடனே புறப்பட்டுவிட்டேன்.

பஸ்ஸில் ஏறி உட்கார்ந்ததும் வழக்கம்போல் கண்டக்டர், 'டிக்கெட் எங்கே வெட்ட வேண்டு'மென்று கேட்டு, காசு கேட்டார். என் துர்அதிர்ஷ்டம் என் மணிபர்சில் நண்பர் கொடுத்த ஐந்து வெள்ளி நோட்டைத் தவிர வேறு ஓர் ஐந்து காசுகூட இல்லை.

'அதற்கென்ன? நோட்டை மாற்றினால் போகிறது' என்று நோட்டைக் கொடுத்து, பத்துக்காசு டிக்கெட் வெட்டச் சொன்னேன். கண்டக்டர் நோட்டை வாங்கிப் பிரித்துப் பார்த்தார்; சடாரென்று அவர் முகம் மாறு பட்டது. "என்ன ஐயா இது? செல்லாத நோட்டைக் கொடுக்கிறீர்! இது செல்லாது. வேறு சில்லறை இருந்தால் கொடும்" என்று கடுமையாக கூறிவிட்டுத் திருப்பித் தந்தார் அந்த நோட்டை.

எனக்கு தூக்கி வாரிப்போட்டது; வாங்கிப் பார்த்தேன். நீர் எழுத்து இல்லாத செல்லாத நோட்டு! அத்துடன் பின் பக்கத்தில் சிவப்பு மையால் "இது எனது காதற் பரிசு" என்று யாரோ கோமளம் என்ற பெண் கையெழுத்தும் போட்டிருந்தாள்! விழித்தேன். இதை என் பக்கத்தி லிருந்த சில சக பிரயாணிகள் வேடிக்கையாக கவனித் தாரே யன்றி ஒருவராவது எனக்காக இரக்கப்பட்டு ஒரு பத்துக் காசு கொடுக்க முன்வந்தாரில்லை. என்னை ஒரு ஏமாற்றுக்காரனென்றோ கருமியென்றோ அவர்கள் தீர் மானித்திருக்கலாம். தலை இறக்கத்துடன் பஸ்ஸிலிருந்து இறங்கிவிட்டேன். என் கூடவே ஒரு இளம் பெண்ணும் இறங்கினாள்.

கடற்கரைப் பயணம் இவ்வாறு தோல்வியுற்றதால் வீட்டுக்கே திரும்பிச் செல்ல எத்தனித்தேன். அப்போது தான் அந்தப் பெண் என் அருகில் வந்து, "மிஸ்டர்,

மன்னித்துக் கொள்ளுங்கள். உங்களிடம் ஒரு விஷயம் பேசவேண்டும்" என்ருள்.

ஓர் இளம் பெண் வலிய என்னுடன் பேசியது இது தான் என் ஆயுட்காலத்திலேயே முதல் தடவை. வாயெல்லாம் பல்லாக — விழித்த கண் விழித்தபடி — அவளேயே நோக்கிச் சிலையானேன்.

காலேஜில் உயர்தர கல்வி பயிலும் யுவதிபோல் காணப் பட்டாள். வயது இருபதுக்கு மேலிருக்காது. அழகியென்று கூறமுடியாவிட்டாலும் அறிவின் களே சொட்டிற்று. குறும்புக்காரி யென்பதை அவள் கண்கள் சொல்லின.

ஆனல், கருமமே கண்ணுக அப்பெண், "ஐயா, சற்று முன்பு நீங்கள் பஸ்ஸில் பத்துக்காசு இல்லாமல் அவமானப் பட்டது என் மனத்தை மிகவும் வருத்துகிறது. ஆனல், ஒரு இளம் பெண் முன்பின் அறியாத ஓர் ஆடவருக்குக் காசு கொடுத்து உதவினுல் ஐயத்தில் ஊறிய இப்பொல்லாத உலகம் நம்மிருவருள்ளும் விபரீத உறவைக் கற்பிக்கும். இதற்கு அஞ்சியே நான் வாளா விருந்..." என்று கூறுவதற் குள் நான் இடைமறித்து, "அதுபற்றி என்ன? நான் புறப் படும்போதே முன் ஜாக்கிரதையாக என் மணிபர்ஸைப் பார்த்திருக்கவேண்டும். அப்படிச் செய்யாதது என் தவறு" என்றேன்.

"உண்மையில், நீங்கள் அந்த ஐந்து வெள்ளி நோட்டைக்கூடச் சரியாகப் பார்க்கவில்லை யென்பதை அறிந்து கொண்டேன்..." என்று கூறியவள், சிறிது தயக் கத்துடன், "ஐயா, அந்தச் செல்லாத நோட்டு என் னுடையது. தயவு செய்து அதை என்னிடம் கொடுத்து விடுங்கள்" என்று கெஞ்சினுள்.

இப்போது நான் அவளேப்பற்றிய கற்பனை உலகி லிருந்து முற்ருக விழித்துக் கொண்டுவிட்டேன்.

"அந்த நோட்டு உங்களுடையது என்பதற்கு ஆதா ரம்?" என்று ஒரு வினவை வீசினேன்.

"நல்லது, நான் ஆதாரம் சொன்னல் கொடுத்துவிடு வீர்கள் அல்லவா ?" என்று பதிலுக்கு அவள் புதிரொன்றை வீசினுள்.

இவள் எங்கே சொல்லப்போகிருள் என்ற துணிவில் "சரி" என்று தலையசைத்தேன்.

"இந்த வார்த்தை உறுதியாக இருக்கட்டும்" என்று ஞாபகப்படுத்திவிட்டு, "இது தங்களுக்கு நாடிமுத்து என்பவரால் கொடுக்கப்பட்டது. இதில், 'இது எனது காதற் பரிசு' என்று எழுதி 'கோமளம்' என்று கையெழுத்திடப் பட்டிருக்கிறது, போதுமா ?" என்ருள் அக் கைகாரி !

எதிர்பாராத இந்தத் திடீர்த் தாக்குதல் என்னை ஊமை யாக்கிற்று. சுதாரித்துக்கொண்டு, "ஓகோ, நீங்கள்தான் அந்தக் கோமளமோ ? உங்கள் காதலர்தான் நாடி முத்துவோ ?" என்று கேட்டபோது, அம் மங்கையின் முகம் குங்குமம்போல் சிவந்ததைக் கண்டேன். அதை ரசித்துக் கொண்டே, "ஆமாம், என் நண்பர் நாடிமுத்து திரும்ப இந்த நோட்டைக் கேட்டால் நான் என்ன பதில் கூறுவது ?" என்று அவளையே யோசனை கேட்டேன்.

"ஐயா, சற்று முன்பு அந்த நோட்டை எனக்குத் தருவதாக வாக்களித்துவிட்டு, இப்போது தங்கள் வாக் குறுதியினின்றும் பிறழ்வது தங்களைப் போன்ற பெரியவர்க ளுக்கு அழகல்ல. நாடிமுத்து பெரிய ஞாபக மறதிக்காரர். இந்த நோட்டைச் சரியாக பார்க்காமலேயே கொடுத்திருக் கிருர். உங்களிடம் இதைக் கொடுத்ததைக்கூட இந்நேரம் மறந்திருப்பார். மேலும், என்னிடம் இந்த நோட்டு வருவதால் அவர் மகிழ்ச்சியடைவாரே தவிர உங்களை ஒருபோதும் கோபித்துக் கொள்ள மாட்டார். என்னை நம்புங்கள்" என்ருள் அவள்.

நான் எப்போதோ அவளை நம்பிவிட்டேன். மேலும் 'குடைவது' அநாகரிகம் என்ற தீர்மானத்துடன் மறு

பேச்சின்றி அந்த நோட்டை அவளிடம் கொடுத்துவிட்டு நகர்ந்தேன். "தாங்கள்", "தாங்கள்" என்று மரியாதையுடன் அழைத்தாலும், "பெரியவர்" என்று நாசுக்காகக் கூறி, என் வயோதிகத் தன்மையைச் சுட்டிக்காட்டியது எனக்கு என்னவோ போலத்தான் இருந்தது!

* * *

இந்தச் சம்பவம் நடந்த நான்கைந்து நாட்களுக்குப் பிறகு நாடிமுத்து என்னிடம் வந்தார். எப்போதும் உற்சாகமும் சுறுசுறுப்பும் கலகலவென்று உரையாடும் சுபாவமும் படைத்த அவர் இந்தத் தடவை எதையோ பறிகொடுத்தவர்போல் காணப்பட்டார்.

"ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? உடல் நலமில்லையா?" என்று விசாரித்தேன்.

அதற்கு அவர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு, "உடம்புக்கு என்ன வந்தது? அதற்கு ஒரு கேடும் இல்லை. ஆனால், மனவமைதிதான் போய்விட்டது" என்றார்.

"அப்படிப்பட்ட கவலை உங்களுக்கு என்ன ஏற்பட்டு விட்டது? நானாவது குடும்பத் தொல்லைகள் உள்ளவன். நீங்களோ இன்னும் கல்யாணமாகாத கட்டைப் பிரமச்சாரி. உங்களுக்கு நேரும் கவலைகளெல்லாம் பெரும்பாலும் ஆசாபங்கமாகவே இருக்கும்!" என்று ஹேஷ்யம் கூறினேன்.

"காதலும் கவலையும் இரட்டைப் பிறவிகள் போலும்; ம்... இதுவும் ஒரு காதல் சம்பந்தமான கவலைதான்" என்று மீண்டும் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஆரம்பித்துவிட்டார் நண்பர். இனி அவரை நிறுத்துவதென்பது எவராலும் இயலாத காரியம். எனவே, நான் மௌனமாகக் கேட்கலானேன். நண்பர் தொடர்ந்தார்:

"நான் இந்த ஊருக்கு வந்த புதிதில் எனக்கு முதன் முதலில் அறிமுகமானவர் நண்பர் சுப்பராயலுதான். அதே போல், பின்னர் எனக்கு கிடைத்த நண்பர்களில் முதல்

ஸ்தானம் வகிக்கக்கூடியவரும் அவர்தான். நீர் இதைக் கேட்டு ஆயாசப்பட வேண்டாம். ஒளிவு மறைவின்றிப் பேசுகிறேன். உடல் இரண்டாயினும் உயிரொன்றுகப் பழகினேம். அவருடைய தங்கை கோமளத்தை எனக்கு மணமுடித்துவைத்து தமது குடும்பத்தில் ஒருவனுக என்னையும் ஆக்கிவிட வேண்டுமென்று துடியாய்த் துடித்தார், சுப்பராயலு. கோமளமும் என்மீது உள்ளன்பு கொண்டிருப்பதைப் பல வகைகளில் புலப்படுத்தினுள்.

"ஒருநாள், ஐந்து வெள்ளி செல்லாத நோட்டொன்றைத் தன் கைப்பையினின்றும் எடுத்து, அதில் 'இது எனது காதற் பரிசு' என்று எழுதிக் கையெழுத்துப் போட்டுக்கொடுத்தாள். இது எனக்கு ஏமாற்றமாகத்தான் தோன்றியது. கேலியாக, 'கோமளம், காதல் பரிசாக எனக்குக் கொடுக்க உனக்கு இந்தச் செல்லாத நோட்டுத் தானு கிடைத்தது?" என்று வருத்தத்துடன் கேட்டேன்.

"'உலகத்தாருக்கு இது செல்லாத நோட்டுத்தான். ஆனுல், எனக்கு இது விலை மதிப்பற்றது. அதனுல்தான் இதை உங்களுக்கு பரிசாக அளிக்கிறேன்' என்று பெருமையுடன் பதிலளித்தாள் என் காதலி.

"'அப்படி இதில் என்ன விசேஷம் அடங்கியிருக்கிறது?' என்று அவளை விசாரித்தேன் நான்.

"'சரி, அந்தக் கதையைச் சொல்லுகிறேன், கேளுங்கள்' என்று ஆரம்பித்தாள் கோமளம்:

"'இந்தச் செல்லாத நோட்டு எப்படியோ என் கைக்கு வந்து சேர்ந்தது. யார் கொடுத்தார்களென்பது தெரியவில்லை. ஆனுல், கெட்ட மனம் மட்டும், "உன்னை யாரோ ஏமாற்றிவிட்டார்கள். அதேபோல் நீயும் யாரையாவது ஏமாற்றினுல் என்ன?" என்று கேட்டுக்கொண்டிருந்தது. "ஐயோ, இது பாவம்! நீ ஏமாறியதற்காக ஒரு பாவமும் அறியாத மற்ருருவரை ஏமாற்றுவது நியாயமா? அப்படிச் செய்யாதே" என்று நல்ல மனம் இடித்துக் கூறிற்று.

"அதற்கென்று நீ வீணாக நஷ்டப்பட வேண்டுமா? ஏமாற்றுதல் இல்லாவிட்டால் இவ்வுலக வாழ்க்கையே இல்லை. எங்கும், எதிலும் இது நீக்கமற நிறைந்திருக்கிறது. யோசிக்காதே, துணிந்து செய்!" என்று முடுக்கிவிட்டது கெட்ட மனம். முடிவில் நான் அந்தப் பேய்மனத்திற்கே இரையானேன்.

"'இரு கண்ணும் சரியாகத் தெரியாத ஒரு சீனக் கடைக்காரரிடம் இந்த நோட்டைக் கொடுத்து, சாக்லேட் 25 காசுக்கு வாங்கிக்கொண்டு, பாக்கி நாலு வெள்ளி 75 காசு பெற்றுக் கொண்டேன். அது செல்லாத நோட்டு என்பதை அவர் எங்கே கண்டுபிடித்து விடுவாரோ என்ற அச்சத்துடன், கடைக்காரர் கொடுத்த பாக்கித் தொகையை என் கைப்பைக்குள் போட்டுக் கொண்டு விரைந்தேன். பிறகு, சில கடைகளில் ஏறி இறங்கினேன். ஒன்றிரண்டு தோழிகளைச் சந்தித்தேன். வீட்டிற்குத் திரும்பும்போதுதான் கைப்பையை எங்கேயோ விட்டுவிட்டது தெரிந்தது. பதறிப்போய் பல இடங்களில் தேடினேன். பை அகப்படவே இல்லை. அந்தப் பையில் பத்து வெள்ளி நோட்டுகள் இரண்டும், சில்லறையும் இருந்தன. அதிர்ஷ்டமாக வந்த நான்கு வெள்ளி எழுபத்தைந்து காசு, இருந்த வெள்ளியையும் அடித்துக்கொண்டு போய்விட்டது!

"'இப்போதுதான் எனக்கு அறிவு வந்தது. அநியாயமாக ஒருவரை ஏமாற்றியதால்தான் நமக்கு இந்தப் பெரும் நஷ்டம் வந்தது என்று தீர்மானித்தேன். அதற்குப் பிராயச்சித்தமாக, அந்த செல்லாத நோட்டைத் திரும்பப் பெற்றுக் கொண்டு, அந்தக் கடைக்காரர் நஷ்டப்பட்ட ஐந்து வெள்ளியையும் அவரிடமே கொடுத்துவிட வேண்டும் என்று என் உள் மனம் இடித்துக் கூறியது.

"'உடனே வீட்டிற்குச் சென்று பத்து வெள்ளியுடன் அந்தக் சீனக் கடைக்காரரிடமே சென்று, மீண்டும் 25 காசுக்கு சாக்லெட் வாங்கிக் கொண்டு பத்து வெள்ளி

யைக் கொடுத்தேன். என் அதிர்ஷ்டம், அந்தச் சீனர் நான் கொடுத்த அதே ஐந்து வெள்ளி செல்லாத நோட்டை யும் பாக்கி சில்லறையையும் கொடுத்தார்! அவரிடம் மேலும் ஒரு 25 காசு கொடுத்துவிட்டு, ஞாபக மறதியுடன் வருவது போல் வந்துவிட்டேன். இப்போது அவருக்கும் எனக்கும் இருந்த பற்றுவரவு தீர்ந்து கணக்கு நேராகிவிட்டது!

"'அதிலிருந்து இந்த செல்லாத நோட்டை விலைமதிப் பற்ற பொருளாக மதிக்கிறேன். ஏனெனில், இது என் மனத்தை மாற்றிய அமுத சஞ்சீவியல்லவா?' என்று கூறி என்னிடம் கொடுத்தாள் கோமளம். அந்த நோட்டை நான் எங்கேயோ தொலைத்துவிட்டேன், ஐயா" என்று அழாத குறையாகச் சொன்னார், நண்பர் நாடிமுத்து.

"ஐயா, உம்முடைய நோட்டு எங்கும் போகவில்லை. அதை உமக்கு யார் கொடுத்தார்களோ அவர்களிடமே அது மீண்டும் போய்ச் சேர்ந்திருக்கிறது. கவலைப்பட வேண்டாம்" என்று, நடந்த சம்பவங்களை விவரமாகக் கூறினேன்.

மறுநாள் அவரிடம் ஐந்து வெள்ளி கடன் கேட்டேன். உடனே ஒரு நோட்டை எடுத்துக் கொடுத்தார், நண்பர். அந்த நோட்டு என்னைத் திகைக்க வைத்தது. ஏன்? அதே செல்லாத நோட்டுத்தான்! என் நண்பரின் ஞாபக மறதியை என்னவென்று சொல்ல?

சி. கமலநாதன்

# மலேசியாவில் மீனவர்களின் கடல் விழா

மலைநாட்டின் கிழக்குக்கரை, வரலாற்றுச் சிறப்புடையது. இந்திரபுர நாட்டின் செழிப்பான ஆட்சிக்காலத்தில் அதன் கலாச்சாரப் பரிவர்த்தனைகளும், இன்னும் பல்வேறு சமய விழாக்களும், கிழக்குக் கடற்கரை மக்களிடையே, சிற்சில திரிபுகளுடன், ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டு வருவதை நாம் காணலாம். அவைகளில் ஒன்றான "மெரூஜா பந்தாய்" * எனப்படும் 'கடல் விழா'வும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது.

மீன் பிடிப்பிற்குப் பிரசித்தி பெற்றுள்ள கடற்கரைக் கிராமங்களான, கோலரொம்பின், பெக்கான், நெஞூசி, தஞ்சோங் லும்பூர், பெஸ்ரா, சுங்கைஉலார், செராட்டிங், பீசுட், கெமமான், கோலதிரங்கானு போன்ற இடங்களில், சின்னஞ்சிறு குடிசைகளில் அமைதியாக வாழும், பரம ஏழைகளான மீனவர்கள் தங்களுக்கு வாழ்வைத் தரும் கடல் தேவியை வழிபடுகின்றனர். குறிப்பிட்ட தினத்தில் ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாக கடற்கரையில் ஒன்று கூடுகின்றனர். கூட்டுப் பொங்கலுடன், எருமையைப் பலியிட்டு, அவற்றைச் சமைத்து (கடல்) தேவியை

---

* பந்தாய்=கடற்கரை
மெரூஜா பந்தாய்=கடல் விழா

வழிபட்டபின்னர், ஒன்ருக அமர்ந்து உண்கின்றனர். இந்த விழாவில் செம்படவ நடனங்களும் நீர் விளையாட்டுகளும் கூட சிறப்பான இடத்தைப் பெறுகின்றன.

வண்ண வண்ண உடைகளில் ஆண்களும் பெண்களுமாகக் கூடியிருந்து நடத்தும் கேளிக்கைகளுக்குக் குறைவிருக்காது. இனக்கலப்புக்குப் பிரசித்தி பெற்ற கிழக்குக் கரையில் வாழும் பெண்களின் அழகும் கவர்ச்சியும் நம்மைப் பிரமிப்பில் ஆழ்த்தும்!

அன்றைய தினம் தங்களுடைய படகுகளையும் வலைகளையும் புதுப்பிப்பார்கள். பழைய படகுகளுக்கு வண்ணம் பூசப்பட்டு, அழகுடன் காட்சியளிக்கும்! படகுகளுக்கு தங்களின் மரபுப்படி பெயரிடுவார்கள். இந்தியப் பாணியில் அமைந்த பறவைகளின் பெயர்கள் அவைகளில் நிச்சயம் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். இவ்விழாவின் முக்கிய குறிக்கோளைப் பார்க்கும்போது நமக்கு தமிழகத்தின் ஞாபகம்தான் சட்டென்று ஓடிவரும். மலையாளக் கடற்கரையில் ஆண்டுதோறும் அந்நாட்டின் மீனவ மக்கள் கொண்டாடும் கடல் விழாவுக்கும் கிழக்குக் கரை மக்கள் வழிபட்டுவரும் விழாவுக்கும் நெருங்கிய ஒற்றுமையுண்டு என்பதை அதைக் காணும் தமிழ் மக்கள் உணரலாம்.

குடும்பங்களைக் கடற்கரையில் விட்டு, வயிற்றுப் பிழைப்புக்காக கடலை நாடிச் செல்லும் மீனவர்கள், தங்களுக்கு எவ்விதமான, விக்கினமுமின்றி திரும்பி வரவும், புயற்காலங்களில் உயிருக்கு எவ்வித ஆபத்துமின்றி வாழ வழிவகை செய்யவும், நடுக்கடலில் குடிகொண்டிருக்கும் காற்றுச் சேஷ்டைகள் தங்களை அணுகாதவாறு காப்பாற்றிக் கரைசேர்க்கும் பொருட்டும், கடல் தேவியை அவர்கள் வழிபடுகிருர்கள். மலாய் முதியவர்கள் கூறும் பழைய

கதைகளும் பந்துான்* பாடல்களும், கன்னபரம்பரைக் கதைகளும் நமக்கு இந்தியக் கலாச்சாரத்தை நினைவூட்டுகின்றன. அவர்கள், தங்களுடைய மூதாதையர்களின் வாய்வழியாகக் கேட்டு வைத்த நாடோடி இலக்கியமான இப்பாடல்களை எல்லாம், இன்று தேடிப்பிடித்து, நூல்வடிவில் கொண்டுவர மலாய் எழுத்தாளர்கள் முயன்றுவருகின்றனர். கடற்கரைக் கிராமங்கள்தான், அன்று பிறநாட்டவரின் வருகைக்கும், குடியேற்றத்திற்கும், கலை கலாச்சாரங்கள் பரவுவதற்கும் தக்க இடங்களாக இருந்திருக்கின்றன. கிழக்குக் கரைப் பகுதியில், குறிப்பாக குவாந்தான் மாவட்டப் பகுதியில் இடைக்காலமான பதினேழாம் நூற்றுண்டில், சுமத்ராவி லிருந்து ஏராளமான மக்கள் குடியேறினர் என்பதும், அப்படிக் குடியேறிய சுமத்ரா வம்சாவளியினர், தங்களுக்கு இந்திய மக்களின் வழியாகக் கிடைக்கப்பெற்ற கலப்புக் களின் மூலம் பெற்ற அறிவுடன், இலக்கியங்களையும், இஸ்லாமிய மத வழிபாட்டோடு கிழக்குக் கரைக்குக் கொண்டுவந்த பண்டைய நிகழ்ச்சிகளையும் கேட்கும் பொழுது, நமக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கின்றது. நம்மவர்கள் இராமாயணத்தை மறந்தாலும், அவர்கள் இராம காதையுடன் பஞ்ச பாண்டவர்களின் சரித்திரமான மகா பாரதத்தை நமக்கு அழகாக எடுத்துச் சொல்லும்போதும், மந்திரங்கள் ஓதும்போதும், மேற்படி இலக்கியங்களில் கூறப்படும் சுலோகங்களை அழுத்தமுடன் கூறக் கேட்கும் போதும், நமக்கு 'நாணத்தை' உண்டுபண்ணுகிறது. பாரம்பரியத்திலும் அவர்கள் அதிகமான கவனத்தைச் செலுத்தி வருகின்றனர்.

இந்திய, அராபிய, சயாமிய, சீன கலாச்சாரக் கலப்பு களைக் கிழக்குக்கரை மக்களிடம் விரிவாகக் காணலாம். மலையாள நாட்டிலிருந்து, இந்நாட்டுக்கு வந்த வியாபாரி

*பந்துான் = பிரபந்தம்

களான, 'காக்காமார்'* கிழக்குக் கரையில் உள்ள மலாய் வனிதையர்களை மணமுடித்துக்கொண்டு, குழந்தை குட்டிகளுடன் வாழ்வதும், சமயங்களில் தமிழ்நாட்டுக்குச் சென்று வருவதும், அன்னூர்களுக்கு கலப்பில் பிறந்த அழகான பெண்மக்கள் மூலம், மலாய் சந்ததியினர் புதிய இனக்கவர்ச்சியைப் பெற்று வாழ்வதையும் கிழக்குக் கரையில் அதிகமாகக் காணலாம்.

மிக நீளமான அழகுநிறைந்த கடற்கரைக்குப் பாது காவலர்கள்போல, கரை நெடுகிலும் நெடிதுயர்ந்த தென்னை மரங்களும் நமக்குக் கண்கொள்ளாக் காட்சியாகும். இதனுல் கிழக்குக் கரைக்கு என்றுமே ஒரு பெருமையுண்டு. சுற்றுப் பயணிகளை கவரும் இராட்சசக் கடல் ஆமைகள், ஆண்டுதோறும் ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில், பசிபிக் மகா சமுத்திரத்திலிருந்து கூட்டம் கூட்டமாக, டுங்குன், செராத்திங் போன்ற கிராமங்களை அடுத்துள்ள கடற்கரைகளுக்கு வந்து, மணலில் குழிபறித்து முட்டைகளை இட்டுவிட்டுச் செல்கின்றன. அந்த முட்டைகளை மீனவர்கள் சேகரித்து, விற்பனை செய்கின்றனர். எவரையும் எந்தவித இன்னலுக்கும் கட்டுப்படுத்த விரும்பாத ஆமைகளை வைத்தே கிழக்குக்கரை இன்று பிரசித்தி பெற்றுவருவதற்குப் பிறிதோர் காரணமாகும். கிட்டத்தட்ட ஒரு டன் எடையுள்ள இராட்சச ஆமைகள் முட்டையிடும்போது வடிக்கும் கண்ணீர், நம்மவரின் கண்களில் நீரைச் சுரக்க வைக்கும்!

கடல் விழாவில் இளம் கன்னியர்களும், இளவட்டங்களும் முக்கிய இடத்தைப் பெறுவார்கள். பலதரப்பட்ட பழங்கால வாத்திய இசைகளுக்கொப்ப, சொந்தமாகவோ அல்லது நாடோடிப் பாடல்களையோ அந்தச் சமயத்தில் பாடுவதற்குத் தயாராய் வந்திருப்பர். கன்னியர்கள்,

* காக்காமார்=கேரள முஸ்லீம்கள் — மாப்பிள்ளைமார்.

காளையர்களைக் கிண்டல் செய்யும் பாடல்களையும், அதற்கு மறுமொழியாகவும் மறைபொருளாகவும் கொண்ட பாடல்களைக் காளையர்களும் பாடுவதற்குத் தயாராயிருப்பார்கள். காதல் முகிழ்ப்பதற்கு இந்தக் கடல் விழா முக்கிய சாட்சியாக, உற்பத்தி ஸ்தானமாக, விளங்குகிறது. நெல் அறுவடைக் காலத்தில் உள்நாட்டில், எப்படி (காதல்) திருமண நிகழ்ச்சிகள் நடைபெறக் காரணமாக இருக்கிறதோ, அது போல, கிழக்குக் கடற்கரைக் கிராம மீனவர்களுக்கு இந்த கடல் விழா, வாழ்வின் ஜீவனாக விளங்குகிறது.

எஸ். வி.
சுப்பிரமணியன்

# தெய்வத்திற்குமேல்

பொங்கல் நெருங்க நெருங்க என் கவலைகள் அதிகமாகிக் கொண்டே வந்தன. இந்த வருடம் எங்கள் எஸ்டேட்டில் நான் மதுவிலக்குபற்றி வெகு தீவிரமாகப் பிரசாரம் செய்து வந்தேன். அதில் ஓரளவு வெற்றி பெற்றிருந்தேன் என்று தைரியமாக, பெருமையுடன், கூறிக்கொள்ளலாம். தீபாவளியன்றுகூட — சென்ற சில வருடங்களைப் போல — தொழிலாளிகள் குடித்துவிட்டு, ஒழுங்கீனமாக நடந்துகொள்ளவில்லை. ஒன்று இரண்டு சம்பவங்கள் ...... அவற்றைப் பெரிதாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை.

எஸ்டேட் மானேஜர் தொழிலாளிகளின் நன்னடத்தையைக் கண்டு, என்னைப் பாராட்டியதைக்கூட நான் சென்ற மாதம் நடந்த தொழிலாளிகளின் மாதாந்திரக் கூட்டத்தில் குறிப்பிட்டேன்.

"நான் விரும்பியோ, விரும்பாமலோ, நமக்கு நல்ல பெயர் கிடைத்திருக்கிறது. இனிமேல் அந்தப் பெயரைக் காப்பாற்றிக் கொள்வதுதான் பெரும் பாரமாக இருக்கப் போகிறது. நம்மில் யாராவது ஒருவர் தவறு செய்தால், இந்த எஸ்டேட்டில் உள்ள அத்தனை பேரையும் அது பாதிக்கும். இதை மனதில் வைத்துக் கொள்ளுங்கள்" என்றேன்.

நான் இந்த எஸ்டேட்டிற்கு வந்து, கிட்டத்தட்ட ஒரு வருடம்தான் ஆகிறது. தொழிலாளிகள் அத்தனைபேரும் என்னிடம் பெரிதும் மதிப்பு வைத்திருந்தார்கள். இதை

பெருமைக்காக நான் சொல்லிக் கொள்ளவில்லை. ஒரு வேளை, அதிகக் கல்வியறிவு இல்லாத அந்தப் பாட்டாளி மக்களை என் பேச்சுத்திறமையால் நான் கவர்ந்திருக்கலாம். எஸ்டேட்டில் பொறுப்பான பதவி வகித்து, தொழிலாளிகள் நலனுக்காக, அவர்களின் நியாயமான உரிமைகளுக்காக, ஆங்கில மானேஜரிடம் நான் வாங்கிக்கொடுத்த வசதிக் காக என்பேரில் உண்டான நன்றி உணர்ச்சியாக இருக்க லாம். ஆங்கில மானேஜரும் என்னிடம் பெரிதும் அன்பும் பரிவும் காட்டினர். வேற்று இடத்திலே, புதிதான சூழ் நிலையில், பழக்கமற்ற மனிதர்களிடம் வசிப்பது போன்ற எண்ணமே எனக்குத் தோன்றியதில்லை.

இந்த வருடம் பொங்கலன்று மாலை ஒரு பெரிய விழா விற்கு நான் ஏற்பாடு செய்திருந்தேன். அதற்குத் தலைமை தாங்க எங்கள் மானேஜரையும் அழைத்திருந்தேன். யாரும் குடித்துவிட்டு, ஒழுங்கீனமாக நடந்து கொள்ளக்கூடாது என்று கண்டிப்பாகக் கூறியிருந்தேன். ஒரு வாரத்திற்கு முன்புகூட, வெள்ளிக்கிழமையன்று, அத்தனை தொழிலாளி களும் மாரியம்மன் கோவிலில் சத்தியம் செய்திருந்தார்கள். ஆனாலும், பொங்கல் நெருங்க நெருங்க ... !

ஒருநாள் இரவு எட்டு மணி இருக்கும்; தொழிலாளிகள் இருவர் கந்தப்பனைத் தாங்கிப் பிடித்தபடியே என் இல்லத் திற்கு வந்தார்கள். அவனைப் பார்த்தவுடனேயே எனக்குத் தெரிந்துவிட்டது. அந்த எஸ்டேட்டிலேயே என் சொல் படி கேளாதவன் ஒருவன் உண்டென்றால், அவன் கந்தப் பன்தான். பெருங்குடியனாக இருந்த அவனை ஓரளவு மட்டுப்படுத்தத்தான் என்னால் முடிந்ததே தவிர, திருத்த முடியவில்லை. அவனை நம்பி ஒரு காரியம் செய்யமுடியாது. கற்பூரத்தை அணைத்து சத்தியம் செய்வான்; சமயம் வரும் பொழுது கூசாமல் பொய் சொல்லுவான். நான் எஸ்டேட் டிற்கு வந்த புதிதில், தன் மனைவியையும் குழந்தைகளையும்

குடிபோதையில் அடிக்காத நாள் கிடையாது. இப்பொழுது அது நின்றுவிட்டது. இதை வேண்டுமானால் அபிவிருத்தி என்று சொல்லலாம்.

தீபாவளியன்றுகூட அவனால்தான் மாரியப்பன் வீட்டில் சண்டை நடந்தது. தீபாவளிக்கு முதல்நாள் 'கோலாலம்பூர் போகிறேன்' என்று கிளம்பிய கந்தப்பன் தீபாவளியன்றே திரும்பிவிட்டான். கூடவே சீமைச் சரக்குகளைக் கொண்டுவந்து, சில நண்பர்களைச் சேர்த்துக்கொண்டு 'விருந்து' வைத்தான். இரவு குடிபோதையில் அவனும் அவன் நண்பர்களும் மாரியப்பன் வீட்டுவழியாக வந்திருக்கிறார்கள். மாரியப்பன் சமீபத்தில்தான் இந்தியாவுக்குப் போய்த் திருமணம் செய்துகொண்டு, மனைவியையும் அழைத்து வந்திருந்தான். அவன் மனைவி செல்லம்மா நல்ல அழகி. வீட்டிற்கு வெளியே அவளைப் பார்த்ததும் கந்தப்பனும் அவன் நண்பர்களும் அவளிடம் வம்பு செய்திருக்கிறார்கள். அவ்வளவுதான், மாரியப்பன் உள்ளேயிருந்து அரிவாளைத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டான். பிறகு ... !

கொலை நடக்காமல் அந்தத் தீபாவளி எப்படித்தான் கழிந்ததோ என்று எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. அந்தச் சம்பவத்திற்குக் காரணமாக இருந்த கந்தப்பனை மறுபடியும் இன்று கண்டதும் ... !

"என்ன நடந்தது?" என்று பரபரப்புடன் நான் கேட்டேன்.

"பழைய கதைதான். காலையிலே கிள்ளானுக்குப் போனார், ஐயா! மாப்பிள்ளை மாதிரி ஜோருலே இப்பொ வராரு! நேரே இங்கே கொணந்துட்டோம், இல்லேன்னு ..."

"சரி, இங்கேயே படுக்கவச்சிட்டு நீங்க போங்க, காலையிலே நான் அவனுடன் பேசிக்கிறேன்" என்றேன் நான்.

மனிதர்களில்தான் எத்தனை வகை? சிறிதுகூட மான, அவமான உணர்ச்சி இல்லாத மனிதர்களும் இருக்கத்தானே செய்கிறார்கள்? வாழ்க்கையில் எந்தவிதமான லட்சியமுமின்றி, இப்படியே வாழ்நாளை முடித்துக்கொண்டு, இந்தமாதிரியே மறைந்து போவதில் என்ன உபயோகம்? அவன் இறந்த பிறகு, அவன் மனைவி குழந்தைகள்கூட அவனுக்காகக் கண்ணீர் வடிக்க மாட்டார்களே!

மறுநாள்; கந்தப்பனுக்கு ஒரு மணி நேரம் நான் புத்தி கூறினேன். எல்லாவற்றிற்கும் தலையை அசைத்தான் அவன். கடைசியில், நான் சொன்னேன்:

"இனிமேல் குடிப்பதில்லை என்று சத்தியம் செய்து கொடு, கந்தா."

"என் சத்தியம் உனக்குத் தெரியாதா, தம்பி! பழக்கத்தை எப்படி மாத்தறது? ஏதோ பார்க்கிறேன்."

## 2

பொங்கலுக்கு முதல்தினம், எஸ்டேட் மானேஜரிடமிருந்து, அன்றிரவு அவர் வீட்டில் நான் விருந்துண்ண வேண்டும் என்ற அழைப்பு வந்தது. அவர் நண்பர் ஒருவர் இங்கிலாந்திலிருந்து மலாயாவைச் சுற்றிப்பார்க்க வந்திருக்கிறாராம். எங்கள் எஸ்டேட்டைப் பார்வையிடவும் வருகிறார்.

அழைப்பை நான் ஏற்றுக் கொண்டேன்.

மாலை கந்தப்பனைக் கூப்பிட்டு, நான் விருந்து முடிந்து வீடு திரும்பும்வரை என் வீட்டிற்குக் காவலாக இருக்கும்படி கூறினேன். ஆனால், உண்மையான காரணம் வேறு. பொங்கலுக்கு முன்பாக அவனைத் தனியே வெளியேவிட எனக்கு விருப்பமில்லை. மறுபடியும் தன்னையறியாமல் குடித்துவிட்டு, அந்த வேகத்தில் ... !

விருந்து பலமாகவே இருந்தது. என் மானேஜரும் அவர் நண்பரும் என்னிடம் வெகு தாராளமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று விருந்தாளி கூறினுர் :

" உன்னைப்பற்றி உயர்வாக உன் மானேஜர் என்னிடம் கூறியிருக்கிருர்கள். சீக்கிரத்தில் நான் மலேயாவில் புதிதாக ஒரு காரியாலயம் திறக்க எண்ணியிருக்கிறேன். அதற்கு இந்நாட்டில் உள்ளவர்களையே தலைமைப் பதவிக்கு எடுக்கவும் திட்டமிட்டிருக்கிறேன். ஒரு வருடத்திற்கு இங்கிலாந்தில் உள்ள என் தலைமை ஆபீசில் பயிற்சி பெற்று, இங்கு வேலை தொடங்க வேண்டும். இந்த வேலைக்கு உன்னைச் சிபாரிசு செய்திருக்கிருர் உன் மானேஜர். நீ என்ன சொல்லுகிருய் ?"

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. நான் கனவு காண்கிறேனே ?

என் தயக்கத்தையும் குழப்பத்தையும் புரிந்துகொண்டவர்போல் அந்த ஆங்கிலேயர் பேசினுர் :

" உன் மனநிலை எனக்குப் புரிகிறது. இன்று முடிவு சொல்ல வேண்டாம். இரண்டு நாட்கள் கழிந்து உன் மானேஜரிடம் கூறிவிடு. மேலே செய்யவேண்டிய ஏற்பாடுகளை அவர் பார்த்துக் கொள்வார்."

அதற்குப் பிறகு சிறிது நேரம் நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். ஆனுல், நானே ஏதோ ஒரு புதிய உலகில் இருந்தேன். உடல்தான் அங்கு இருந்ததே தவிர நினைவு ?

" சரி, நேரமாகிறது " என்றுர் என் மானேஜர். விடை பெற்றுக் கொள்ளுமுன்பு மீண்டும் ஒருமுறை பானம் அருந்தினேம்.

" இன்பமான நம்முடைய எதிர்காலத்திற்கு."

" எதிர்காலத்திற்கு."

உத்தரவு வாங்கிக்கொண்டு நான் வெளியே வந்தேன். 'சில்' என்ற குளிர் காற்று முகத்தில் வந்து அடித்தது. அப்பா, என்ன குளிர்! என் உடல் நடுங்கியது. தொண்டை வெந்தது. நாவெல்லாம் வரட்சி என்னமோ செய்து கொண்டு வந்தது.

ஆனல், உடல் வேதனை அவ்வளவு அதிகமாக அப்பொழுது என்னைப் பாதிக்கவில்லை. என் எதிர்காலம் எதிரே நிழலாடிக் கொண்டிருந்தது. இந்த மாதிரியான ஒரு வாய்ப்பு யாருக்குக் கிடைக்கும்? அதிர்ஷ்டம் என்ருல் இது அல்லவா அதிர்ஷ்டம்! இங்கிலாந்து, தலைமைப் பதவி! 'லட்சியம், லட்சியம்' என்று இத்தனை நாட்கள் நான் அலைந்து கொண்டிருந்தேனே, அதுதானே இது?

மனித மனம் எவ்வளவு விசித்திரமானது? இதுவரை நான் ஒன்றிப் பழகி வாழ்ந்துவந்த வாழ்க்கை அந்த விஞடி யிலே எனக்குக் கசந்தது. இன்றுமுதல் நான் புது மனிதன், புது வாழ்வு, புது உலகம், புது மனிதர்கள், புது......

"சாமி!"

சிந்தனையில் ஆழ்ந்திருந்த நான் நிமிர்ந்தேன்.

"யாரது?"

"நான் தானுங்க, செல்லம்மா."

"செல்லம்மாவா?"

மாரியப்பனுடைய மனைவி இங்கு எதற்காக வந்தாள்?

"நாளை, பொங்கலுக்கு நம்ப வீட்டு விருந்தாளியாக நீங்கள் வரணும். கல்யாணம் முடிஞ்சு இது எங்களுக்கு முதல் பொங்கலுங்க. உங்க வீட்டுக்குப் போயிருந்தேன். 'துரை' வீட்டிலே இருக்காங்கன்னு கந்தப்ப அண்ணுச்சி சொல்லிச்சு. அதான் வந்துட்டேன்."

துரை வீட்டிற்கு இன்று விருந்தாளியாகப் போன எனக்கு நாளைக்கு தொழிலாளி வீட்டில் விருந்துண்ண

அழைப்பு! இன்று, இங்கே எனக்குப் பதவி கிடைத்தது. நாளை, அங்கே ... !

சம்பந்தமில்லாத புதுப்புது எண்ணங்கள் என் உள்ளத்திலே தோன்றின. ஏதோ ஒன்று — எனக்குத் தெரியாத ஒன்று — நான் இதுவரை அடைந்திராத — என்னால் கட்டுப்படுத்த முடியாத ஒன்று — அசுர பலத்துடன், பயங்கரமான வேகத்துடன், நிமிடத்திற்கு நிமிடம் என்னை அதிகமாக அழுத்திக் கொண்டே வந்தது.

அந்த மயக்கத்திலே, நான் எதிரில் நின்ற செல்லம்மாவைப் பார்த்த பார்வையில், இதுவரை என்னிடமிருந்த பவித்திரம் இல்லை. நான், நான்......

"செல்லம்மா !"

அவளை நான் நெருங்கினேன். பயத்துடன் என்னிடமிருந்து அவள் விலகினாள். அந்தச் சமயத்தில் அவள் நினைத்திருப்பாள் :

'கல்லில் தெய்வம் இருப்பதைப் போல இவரிடம் உள்ள தெய்வத் தன்மையில் நான் இத்தனை நாட்கள் பயமற்று இருந்தேன். இன்று அந்தத் தெய்வம் கல்லாகி விட்டது.'

அவள் கத்த வாய் திறந்தாள்.

தம்பி ! தம்பி !

என் நினைவு தப்பிக்கொண்டே வந்தது. புலன்கள் சக்தியற்றுப் பாறையாகக் கனக்க ஆரம்பித்தன. கந்தப்பன் என்பக்கம் குனிந்து, என்னைத் தாங்கிக்கொள்வது தெரிந்தது. பிறகு, இருள் ; எங்கும் இருள் ! நான் நினைவிழந்தேன்.

## 3

நான் கண் விழித்துப் பார்க்கையில், என்னைச்சுற்றி ஒரே கூட்டம். கந்தப்பன், அவர்களிடம் ஏதோ விளக்கிக் கொண்டிருந்தான். முந்திய இரவு நடந்த நிகழ்ச்சிகள் என் மனக்கண்முன் கனவுபோலத் தோன்றின.

மானேஜர் விருந்து, என்னிடம் அவர் நண்பர் கூறியது, நான் வெளியேவந்தது, செல்லம்மா என்னைப் பொங்கலுக்கு அழைத்தது, அவளிடம் நான் செய்த — அல்லது செய்ய விருந்த — வெட்கக்கேடான செய்கை, கந்தப்பன் வரவு — திரைப்படம் போல இவை ஓடின.

இன்று பொங்கல் அல்லவா ?

கந்தப்பன் சொன்னான் : "சாமி ! இருட்டிலே இந்த மாதிரி தனியாக வருவாங்களா ? செல்லம்மாகூட பதறிப் போச்சு. எங்களிடம் சொல்லியிருந்தா துணைக்கு யாராவது வந்திருப்போம் ! சிறு பிள்ளையில்லே, இருட்டிலே எதையோ கண்டு பயந்திட்டிங்க, நம்ம கந்தப்பன் இல்லாட்டி !"

நான் கந்தப்பனைப் பார்த்தேன், அவன் விழிகள் எதிரே இருள் கூட்டத்தைப் பார்த்தன.

"சாயங்காலம் விழா வேண்டாமுனு சொல்லிவிட்டீங்களா ?" என்ருன் மாரியப்பன்.

"விழாவை ஏன் நிறுத்தணும் ? தம்பியை நான் கூட்டியாரேன்" என்று அவர்களை அனுப்பிவைத்தான் கந்தப்பன்.

அவர்கள் போனபிறகு, நான் அவனிடம் கேட்டேன் :

"கந்தா, நேற்று இரவு என்ன நடந்தது ?"

"துரை வீட்டுக்கு நீ போனப்பவே நெனச்சேன், தம்பி; 'தண்ணி'யை ஊத்திக் கொடுத்துட்டாங்க !"

"தண்ணியா ! நீ என்ன சொல்கிருய், கந்தா ?"

"எனக்கு தெரியாதா, தம்பி ? உனக்கு சீமை 'பிராந்தி' கொடுத்துட்டாங்க நேத்து ... புரியுதா ?"

சீமைப் பிராந்தியா ? ஒரு விஞடி என்ஞல் அதை நம்ப முடியவில்லை. பிறகு, எல்லாம் விளங்கிவிட்டது. கடைசியாக நாங்கள் பானம் அருந்தியது நினைவிற்கு வந்தது. அவர்கள் பேரில் குற்றமில்லை. நான்தான் தவறுதலாக,

எங்கேயோ உள்ள கவனத்தில், எனக்காக ஊற்றிவைக்கப் பட்டிருந்த 'ஆரஞ்சு' பானத்திற்குப் பதிலாக மதுவை அருந்திவிட்டிருக்கிறேன்! வாழ்விலேயே முதன்முறையாக மது அருந்தியதால்தான் என் உடலும் உள்ளமும் என் வசத்தில் இல்லை. அந்தப் போதையிலே, மயக்கத்திலே...!

"கந்தா! செல்லம்மா முகத்தில் இனி நான் எப்படி விழிப்பேன்? என்னை நம்புவாளா அவள்?" என்றேன் துக்கத்தோடு.

கந்தப்பன் சிரித்தான்.

"என்ன தம்பி சிறுபுள்ளே மாதிரிப் பேசறே! அப்படி யெல்லாம் ஒன்னே தப்பா நினைக்கல்லே அந்தப் பொண்ணு! எங்களுக்கு இதெல்லாம் பழக்கமான விஷயம். நீ இன்னும் பழைய மாதிரிதான், எங்களுக்கு. போனதை மறந்துப் பொங்கலுக்கு செல்லம்மா காத்திட்டிருப்பா; அங்கு போயிட்டு, சாயங்காலமா விழாவுக்குப் போகணும்!"

அவன் குரலில் சிறிதளவுகூடக் கோப உணர்ச்சியே இல்லை.

"கந்தா, நீ வெறும் மனிதனல்ல; தெய்வம்! இத்தனை நாளாக நான் உன்னைப் புரிந்துகொள்ளவில்லை" என்று உணர்ச்சியுடன் அவனுடைய இரு கைகளையும் நான் பற்றிக்கொண்டேன்.

"இந்தக் குடிகாரனை அப்படியெல்லாம் சொல்லாதே தம்பி; தவறுவது மனிதனுக்கு சகஜம்தான். இல்லாட்டி, கடவுளுக்கும் மனிதனுக்கும் என்ன வித்தியாசம்?" என்றான்.

நான் பதில் சொல்லவில்லை.

ஈ. ச. விசுவநாதன்

# மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் தமிழ் வளர்ச்சி

தமிழர் வாழ்கின்ற வெளிநாடுகளுள் மலேசியாவும், சிங்கப்பூரும் குறிப்பிடத் தக்கவையாகும். இந்த நாடுகளில் வாழ்கின்ற தமிழர், பிறநாடுகளில் வாழ்கின்ற தமிழரைவிடச் சிறப்பாக வாழ்கின்றனர். இந் நாடுகளின் அரசியலாரும் தமிழர் நலனில் நாட்டம் கொண்டிருப்பதோடு, அவர் தம் மொழி வளர்ச்சிக்கு வேண்டிய வழி வகைகளையும் வகுத்துத் தந்திருக்கின்றனர். சிங்கப்பூரின் நாட்டு மொழிகள் நான்கினுள் தமிழும் ஒன்ருக விளங்குகின்றது. மலேசியப் பல்கலைக் கழக இந்தியத்துறையில் தமிழ் இடம் பெற்றுள்ளது. மேலும், இவ்விரு நாடுகளிலும் உள்ள நாளேடுகளும், தமிழர் சங்கங்களும், வானெலி, தொலைக்காட்சி நிலையங்களும் தமிழ்மொழி வளர்ச்சியில் கவனம் செலுத்தி வருகின்றன. தமிழ் இந் நாடுகளில் கால்கொண்ட முறையினையும், வளர வகை செய்த சங்கங்களின் பணிகளையும், தமிழகத் தொடர்பினுல் ஏற்பட்ட புத்துணர்வினையும், தமிழின் ஆக்கத்திற்கு ஆற்ற வேண்டிய செயல்களையும் விளக்குவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

இந்தியா மலேசியாவுடனும், சிங்கப்பூருடனும் பல நூற்ருண்டுகளாக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த போதிலும், அத் தொடர்பு பத்தொன்பதாம் நூற்ருண்டிலேயே மிகவும் வலுப்பெற்றது. அந் நூற்ருண்டின் தொடக்கத்திலிருந்தே பல இந்தியர்கள், குறிப்பாகத் தமிழர்கள், வியாபாரத்தின் பொருட்டும் வேலை வாய்ப்புகளைத் தேடியும்

இந் நாடுகளுக்கு வர ஆரம்பித்தனர். 1875-ஆம் ஆண்டு முதல் மலாயாவில் ரப்பர் பயிரிடத் தொடங்கியதால், இந்த ரப்பர்த் தோட்டங்களில் பணியாற்றவும், காடுகளை அழித்துப் புதுத் தோட்டங்களை உருவாக்கவும், போக்கு வரவிற்காகப் புதிய நெடுஞ்சாலைகள் அமைக்கவும், இரயில் பாதைகள் போடவும் பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் மலாயாவில் குடியேறினர்.[1] இவ்வாறு வந்தவர்கள் நாட்டின் வளர்ச்சிக்கும், பொருளாதாரத்திற்கும் உதவியதோடல்லாமல், தங்கள் தாய் மொழியினையும் வந்த மண்ணில் வளர்க்கவும் தொடங்கினர்.

எந்த ரப்பர்த் தோட்டங்களிலே பெரும்பான்மையான தென்னிந்தியத் தமிழர்கள் தங்கள் வாழ்வைத் தொடங்கினார்களோ, அந்தத் தோட்டப் புறங்களிலேதான் தமிழ் மொழியும் முதன் முதலிலே கால்கொள்ளலாயிற்று. ரப்பர்த் தோட்டங்களில் பெருவாரியாகத் தோன்றுவதற்கு முன்பு, அடிப்படைத் தமிழறிவை வளர்க்கத் தனிப்பட்ட கல்வி நிறுவனங்களின் ஆணையாளரும், பல்வேறு தமிழர் சங்கத்தினரும், கிறித்துவ சமயத்தினரும் முயன்றிருக்கிறார்கள்.

தமிழ்ப் பள்ளிகளைப் போலவே கோயில்களும் அடிப்படைத் தமிழறிவை மக்களிடம் வளர்க்கவும், தமிழுணர்வைப் பெருக்கவும் துணைபுரிந்து வருகின்றன.[2] கோலா

---

1. போர்ட் வெல்டிலிருந்து தைப்பிங்கிற்கு 1885-ஆம் ஆண்டிலும், கோலாலம்பூரிலிருந்து கிள்ளானிற்கு 1886-ஆம் ஆண்டிலும் முதன் முதலாக இரயில் பாதைகளை மலாயாவில் அமைத்தனர். "தமிழ் நேசன்." மெர்தேகா மலர், 1957, பக். 133.

2. கோலாலம்பூர் ஸ்ரீ மகா மாரியம்மன் கோவில் 1889-ஆம் ஆண்டிலும், தெண்டாயுதபாணி கோவில் 1890-ஆம் ஆண்டிலும், சிங்கப்பூர் மகா மாரியம்மன் கோவில் 1828-ஆம் ஆண்டிலும், பினாங்கு தண்ணீர்மலை சுப்பிரமணியர் கோவில் 1863-ஆம் ஆண்டிலும், மலாக்கா பொய்யாத விநாயகர் கோவில் 1781-ஆம் ஆண்டிலும் கட்டினார்கள். இவை மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் உள்ள சில முக்கியமான கோவில்களாகும்.

லம்பூர், சிங்கப்பூர், பினாங்கு, மலாக்கா போன்ற பெருநகரங்களில் உள்ள கோயில்கள் சமயப் பணியோடு, தமிழ்த் தொண்டையும் செய்து வருகின்றன. கோலாலம்பூரில் உள்ள ஸ்ரீ மகா மாரியம்மன் கோயிலின் அறக்காப்பாளர் தற்போது அப்பர் தமிழ்ப் பள்ளிக்கூடம் ஒன்றனையும் நடத்தி வருகின்றனர். கோயில்களின் சார்பில் இயங்கிவரும் சமயப் பிரசார சபைகள் இலக்கிய வகுப்புக்களையும், சமயச் சொற்பொழிவுகளையும் நடத்தி, அவைகளின் மூலமாகத் தமிழ் மக்களிடம் சமய அறிவையும், தமிழறிவையும் பேணி வருகின்றன.

சமயத்தோடு தொடர்புடைய பல்வேறு நிறுவனங்களும், தமிழ்த் தொண்டு செய்வதில் முன்னணியில் நிற்கின்றன. அவைகளுள் தலையாய இடத்தை வகிப்பது இராமகிருஷ்ண மடமாகும். இந்த நிறுவனத்தைச் சார்ந்தோர் சிங்கப்பூரிலும், பினாங்கிலும் பள்ளிகளைத் தொடங்கி, அவைகளின் மூலமாகத் தமிழ்க் கல்வியினைப் பரப்பினர். இம் மடத்தின் ஆதரவில் சிங்கப்பூரில் நடைபெற்ற 'சாரதா மணி பெண் பாடசாலை' தமிழ்ப் பெண்களின் கல்வி முன்னேற்றத்திற்கு அரும்பாடுபட்டது. அடுத்த நிலையில் வைத்து எண்ணத் தக்க மற்றொரு நிறுவனம் அப்பர் சேவா சங்கமாகும். இதனைச் சுவாமி ஆத்மாராம் என்பவர் 1936-ஆம் ஆண்டில் தொடங்கினர். இச் சங்கத்தைச் சார்ந்தோர் 'அப்பர் நாடக'த்தை நடத்தி, அதன் மூலமாகப் பெற்ற பணத்தைக் கொண்டும், நன்கொடை வசூலித்தும், 'அப்பர் தமிழ்ப் பள்ளிக்கூட'த்தை 1937-இல் நிறுவினர். இப் பள்ளிக்கூடம் கோலாலம்பூரில் உள்ள சிறந்த தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் ஒன்றாகத் திகழ்கின்றது. மலாயாவில் இயங்கிவரும் சமய நிறுவனங்களுள் குறிப்பிடத் தக்க மற்றொன்று தவத்திரு. குன்றக்குடி அடிகளாரால் தொடங்கி வைக்கப்பட்ட 'அருள் நெறித் திருக்கூட்ட'மாகும். இதன் கிளைகள் மலாயா முழுவதும்

உள்ளது. இந் நிறுவத்தினர் சமயக் கல்வியில் மிகுந்த கவனம் செலுத்தி வருகின்றனர். சமய இலக்கியங்களாகிய பன்னிரு திருமுறைகளை நாட்டு மக்களிடம் பரப்பவேண்டும் என்னும் நோக்கத்தோடு ஆண்டுதோறும் திருமுறை மாநாட்டினை நடத்தி வருகின்றனர். இதனால் நாட்டில் சமய இலக்கியங்களைப் படித்தறிய வேண்டும் என்னும் உணர்ச்சி தலையோங்கியுள்ளது. இச் சங்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த காலஞ்சென்ற கா. இராமநாதன் செட்டியாரும், சு. பழனிவேல் பிள்ளையும் சமய இலக்கியங்களைத் தமிழ் மக்களிடைப் பரப்பியதோடன்றிச் சைவ சித்தாந்த வகுப்புக்களையும், இலக்கிய வகுப்புக்களையும், தோட்டங்களில் தமிழ் வகுப்புக்களையும் நடத்தித் தமிழ் வளர்ச்சிக்கு உதவி புரிந்தனர்.[3] மேற் குறிப்பிட்ட சங்கங்களைத் தவிர விவேகானந்தா ஆசிரமம், ராமகிருஷ்ண சங்கம், சாரதா சங்கம், தெய்வீக வாழ்க்கைச் சங்கம், திருவருள் தவநெறி மன்றம், சுத்த சமாஜம் போன்ற பல்வேறு சமய நிறுவனங்களும் வெவ்வேறு வகையில் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகின்றன.

தமிழின் வளர்ச்சிக்குத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களும் கோயில்களும் சமய நிறுவனங்களும் அடித்தளம் அமைத்தன எனின், அதன்மேல் கட்டிடம் கட்டிய பெருமை தமிழ் நாளேடுகளுக்கு உரியதாகும். தற்போது சிங்கப்பூரிலிருந்து 'தமிழ் முரசு'ம், மலேசியாவிலிருந்து 'தமிழ் நேசனு'ம், 'தமிழ் மலரு'ம் நாளேடுகளாக வெளிவருகின்றன. இவை தவிர வார, திங்கள் இதழ்கள் சிலவும் வெளியாகின்றன. தமிழ்ப் பத்திரிகைகளின் இத்தகைய வளர்ச்சிக்கு முன்னோடியாக இருந்தவர் கி. நரசிம்ம ஐயங்கார் என்பவராவார். இவர் 1921-இல் மலாயாவில் 'தமிழகம்' என்னும் வார இதழை ஆரம்பித்தார். அதனை

3. காலஞ்சென்ற திரு. சு. பழனிவேல் பிள்ளை அவர்கள் கூறிய செய்திகள்.

மூன்ருண்டுகள் நடத்திய பிறகு, 1924-ஆம் ஆண்டில் 'தமிழ் நேசனை' வாரப் பத்திரிகையாகத் தொடங்கினர். இது 1937-ஆம் ஆண்டிலிருந்து நாளேடாக வெளிவந்து கொண்டிருக்கின்றது. இவரால் உருவாக்கப்பட்ட 'தமிழ் நேசன்' இன்று மலேசியாவின் முதல் தமிழ் நாளேடாகவும், தமிழ் நாட்டில் உள்ள 'சுதேச மித்திரனை'த் தவிர மற்றெல் லாத் தமிழ் நாளேடுகளுக்கும் முன்தோன்றியதாகவும் திகழ்கின்றது.[4] இந் நாளேட்டின் முன்னுள் ஆசிரியர்களுள் ஒருவராகிய கு. அழகிரிசாமி கோலாலம்பூரில் பல சிறுகதை வகுப்புக்களை நடத்தினரென்றும், அவ்வகுப்புக்கள் மலாயா வில் சிறுகதை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின என்றும் அறிகின்ருேம்.[5] அவர் நடத்திய வகுப்புக்களில் பங்கு பெற்ற சிலர் தற்போது மிக நல்ல சிறுகதைகளை எழுதி வருகின்றனர். சிங்கப்பூரிலிருந்து வெளிவரும் 'தமிழ் முரசு' (1934) மலாயாப் பத்திரிகை உலகில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது. இந் நாளேட்டின் தலைமை ஆசிரியராக உள்ள கோ. சாரங்கபாணி தம் பத்திரிகையின் மூலமாக நாட்டில் தமிழுணர்வு பெருகும்படி செய்வதோடன்றித் தூய தமிழ் மணம் பத்திரிகையில் கமழும்படியும் செய்து வருகின் ருர். நாட்டில் சமுதாயச் சீர்திருத்தக் கொள்கைகள் உருவாவதற்கும், மலாயாப் பல்கலைக் கழகத்தில் தமிழ் இடம் பெறுவதற்கும் இப் பத்திரிகை ஆற்றிய தொண்டு எல்லாத் தமிழர் உள்ளத்திலும் நிறைந்துள்ளது. 'தமிழ் முரசு'ம், 'தமிழ் நேசனு'ம், பொதுவாக நாட்டில் பெரும் பான்மையான தமிழ் வாசகர்களை உருவாக்கி வருகின்றன; மக்களின் தமிழறிவையும் வளர்த்து வருகின்றன. ஆங்கில நாளேடுகளுக்கு ஒப்ப எல்லா முக்கியச் செய்திகளையும் மக்களுக்கு எளிய, தூய தமிழில் வழங்குகின்றன. தமிழ்

4. "தமிழ் நேசன்" மெர்தேகா மலர், பக். 76.
5. இந்த வகுப்புக்களில் பல கோலாலம்பூரில் உள்ள திரு. கே. மூர்த்தி அவர்கள் இல்லத்தில் நடந்தவை. — திரு. எஸ். வி. சுப்பிரமணியம் அவர்கள் கூறிய செய்தி.

மக்களிடம் நிறைந்துள்ள ஆக்க உணர்வினுக்கும், படைக்கும் திறனுக்கும் தூண்டுகோல்களாக விளங்குகின்றன. 'தமிழ் நேசன்' 1950-ஆம் ஆண்டில் கதை வகுப்பு நடத்தி, அதன் மூலம் சிறுகதை எழுத்தாளர்களை உருவாக்கியதாகவும், 'முரசு' திறனாய்வு வகுப்புக்களை நடத்தி, எழுத்தாளர்களின் ஆராய்ச்சித் திறனை வளர்த்திருப்பதாகவும் அறிகின்றோம்.[6] இவ்விரு பத்திரிகைகளின் தொண்டினால் தான் இன்று மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் பல சிறுகதை எழுத்தாளர்களும், கவிஞர்களும், கட்டுரை எழுத்தாளர்களும் தோன்ற முடிகின்றது.

இந்த இரண்டு தமிழ்த் தாள்களைத் தவிர, அக்காலத்தில் தமிழ் வாசகர்களை உருவாக்குவதில் முன்னின்ற நாளேடுகளில் பினாங்கு 'தேச நேசனு'ம், ஈப்போ 'தமிழனு'ம் குறிப்பிடத் தக்கவை. இவை தவிர, ஈப்போ 'இந்திய மித்திரன்,' கோலாலம்பூர் 'பாரத மித்திரன்', சிங்கப்பூர்த் 'திராவிட முரசு', 'தமிழ்க் கொடி', 'மலை நாடு' போன்ற பத்திரிகைகள் தமிழ்ச் செய்தித் தாள்களைப் படிக்கும் வழக்கத்தை வளர்த்ததோடு, பல எழுத்தாளர்களையும் எழுதும்படி ஊக்கின.

மலாயாவிலும், சிங்கப்பூரிலும் பல சங்கங்களும், சீர்திருத்த இயக்கங்களும் தோன்றினும், தமிழுக்கென உழைத்த சங்கங்கள் ஒரு சிலவே. அவைகளுள் முன்னணியில் நின்றது 'மலாயாத் தமிழ்ப் பண்ணை'யாகும். இது 'மலாயன் இந்தியன் காங்கிரசி'ன் மலாக்காக் கிளைத் தலைவராகவும், 'தமிழ்க் கொடி' என்னும் திங்களிதழின் ஆசிரியராகவும் இருந்த உ. அரு. அருணாசலம் செட்டியா

6. இந்த வகுப்புக்களை நடத்தியவர் திரு. சுப. நாராயணன் ஆவார். இவர் தமிழகத்திலிருந்து வெளிவந்த "சக்தி" இதழின் ஆசிரியராக இருந்தவர்.—
மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்க வெளியீடு: மலேசியாவில் தமிழ் எழுத்தாளர்கள், கோலாலம்பூர், 1967, பக். 37.

ரால் 1946-ஆம் ஆண்டில் உருவாயிற்று. இப் பண்ணை தமிழிலக்கிய வகுப்புக்களை[7] முறையாக நடத்தியதோடன்றிச் சிறந்த இலக்கியச் சொற்பொழிவுகள் நாடு முழுவதும் நடைபெறவும் வழி வகுத்தது. 1949-இல் கலைவிழா ஒன்றனை நடத்தி,[8] முத்தமிழின் பெருமையினை நாடு முழுவதும் பரவும்படிச் செய்தது. தமிழகத்திலிருந்து இரு பேராசிரியர்களை வரவழைத்து, அவர்களின் மூலமாக நாட்டில் தமிழிலக்கியத்தில் ஆர்வம் ஏற்படும்படி செய்தது. பாரதி தமிழ் நாட்டில் முழங்கும்படி செய்தது. பல்கலைக் கழகத்தில் தமிழ் இடம்பெறப் பாடுபட்டது.

இந்தியாவிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் சிறந்த தமிழறிஞர்களை வரவழைத்து, நாட்டின் பல பாகங்களில் இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தும்படி செய்து, அதன் மூலமாகத் தமிழ்த் தொண்டு செய்துவரும் மற்றோர் இயக்கம் சிங்கப்பூர்த் தமிழர் பிரதிநிதித்துவ சபையாகும். 1952-ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட இச் சபையில், சிங்கப்பூரில் உள்ள பல சங்கங்களும் இணைந்திருக்கின்றன. தமிழர் நலனைப் பேணக்கூடிய முதற் சங்கமாக இது இயங்குவதோடு, சாதி சமய வேறுபாடுகளைக் கடந்த தமிழர் சபையாகவும் விளங்குகின்றது. இச்சபை தமிழ் மக்களிடம் ஒற்றுமையை உருவாக்க மொழி அடிப்படையில் பல நல்ல செயல்களைச் செய்கின்றது. இச்சபை 1958-ஆம் ஆண்டில் 'இந்திய மாணவர் உதவி நிதி' ஒன்றனையும் உருவாக்கி, இந்தியப் பகுதியில் தமிழை முதற் பாடமாக எடுத்துப் பயிலும் மாணவர்களுக்குப் பண உதவி அளித்துத் தமிழைப் பல்கலைக் கழகத்தில் தழைக்கும்படி செய்தது.

---

7. இத் தமிழ் வகுப்புக்களை நடத்தியவர்களில் திரு. கா. இராமநாதன் செட்டியார் அவர்களும், திரு. சுவாமி சத்தியானந்தா அவர்களும் குறிப்பிடத் தக்கவர்கள்.

8. காலஞ்சென்ற டாக்டர் சுவாமி சத்தியானந்தா அவர்கள் கூறிய செய்தி. "இந்தியன் டெய்லி மெயில்" (ஆங்கிலம்), 21 ஆகஸ்டு. 1949.

மலாயாவில் உள்ள முக்கியப் பெரு நகரங்களில் எல்லாம் மன்றங்கள் அமைத்துத் தமிழினத்திற்கும், தமிழ் மொழிக்கும் தொண்டு செய்துவரும் மற்ருேர் இயக்கம் 'தமிழ் இளைஞர் மணி மன்ற'மாகும். இம் மன்றத்தின் உறுப்பினர்களில் பெரும்பான்மையோர் 'தமிழ் முரசு' மாணவர் மணி மன்ற உறுப்பினர்களாக இருந்தவர்கள். இவர்களில் சிலர் சிறந்த தமிழ்ச் சொற்பொழிவாளர்களாக விளங்குவதால், மேடைதோறும் தமிழ் மணம் பரவும்படி செய்து வருகின்றனர். ஆண்டுதோறும் மாநாடுகள் நடத்தி, நாட்டில் தமிழ்மொழி புறக்கணிக்கப்படாமல் இருப்பதற்கு வேண்டிய ஆக்ககரமான பணியில் ஈடுபட்டு வருகின்றனர். இதன் உறுப்பினர்களில் சிலர் நல்ல சிறு கதை எழுத்தாளர்களாகவும் விளங்குகின்றனர்.

மலேசியாவில் ஆளும் கட்சியாக உள்ள கூட்டணியில் ஓர் அணியாக விளங்கும் 'மலாயன் இந்தியன் காங்கிரஸ்' இந்தியர்களின் பொதுநலத்தைக் காக்கும் தலையாய அரசியல் கட்சியாக விளங்குகின்றது. இதன் தலைவராக விளங்கும் மாண்புமிகு வீ. தி. சம்பந்தன் அவர்களும், துணைத் தலைவராக விளங்கும் மாண்புமிகு மாணிக்கவாசகம் அவர்களும், இந்திய இனம் வளமாக வாழ்வதற்கு வேண்டிய முயற்சிகளில் தம் வாழ்நாளைச் செலவிடுவதோடு, தமிழின் வளர்ச்சியிலும் மிகுந்த கவனம் செலுத்தி வருகின்றனர். இவ்விரு பெருமக்களின் ஆதரவினுல்தான் 'முதல் உலகத் தமிழ் மாநாடு' 1966-இல் கோலாலம்பூரில் நடைபெற முடிந்தது.

சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் தமிழுக்குத் தொண்டாற்றிய சங்கங்களில் சிங்கப்பூர் நகராண்மைக் கழகத் தொழிலாளர் சங்கமும், அகில மலாயாத் தமிழாசிரியர் சங்கமும், இந்திய வாலிபர் சங்கமும், தேசிய தோட்டத் தொழிலாளர் சங்கமும் குறிப்பிடத் தக்கவை. இச் சங்கங்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகவும், தம் உறுப்பினரின்

நலனைக் காப்பதற்காகவும் தொடங்கின ; எனினும், தமிழ்ச் சமுதாயத்தின் நன்மை கருதி, தமிழ்க் கல்வி வளர்ச்சியிலும் நிறைந்த ஆர்வம் காட்டின. குறிப்பாகச் சிங்கப்பூர் நகராண்மைக் கழகத் தொழிலாளர் சங்கம், 1947-ஆம் ஆண்டில் சிங்கப்பூரிலிருந்த ஒன்பது தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் மூன்றனை நடத்தி வந்தது.[9] மேலும், சிங்கப்பூரில் பல்கலைக் கழகம் நிறுவ இருந்த சமயத்தில், அதில் தமிழ்த் துறையும் இடம்பெற வேண்டுமெனக் கார்-சாண்டர்ஸ் பல்கலைக்கழகப் பொறுப்பாண்மைக் குழுவிடம் (Carr-Saunders University Commission) கேட்டுக் கொண்டது. கோலாலம்பூர் 'இந்திய வாலிபர் சங்கம்' (Y. M. I. A.) 'சரோஜினி தேவி தமிழ்ப் பள்ளிக்கூடம்' ஒன்றனை நடத்திவந்ததோடு,[10] பாரதி விழாக்கள் நடத்தி, நாட்டில் மகாகவி பாரதியின் பாடல்கள் பரவும்படியும் செய்தது.

மலாயாவில் இசைத் தமிழையும், நாடகத் தமிழையும் வளர்த்துவரும் சங்கங்களில் சங்கீத அபிவிருத்தி சபையும் ஒன்றாகும். 1923-ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட இச் சபையின் வாயிலாகக் கர்நாடக இசையை வளர்த்த பெருமை, மலாயாவின் முதல் கர்நாடக சங்கீத குருவாகிய கௌஸ்மியான் சாகிப்பையும், நாடகக் கலையை வளர்த்த பெருமை முடிகொண்டான் சி. குமாரசாமி பிள்ளையையும் சாரும். பிள்ளையவர்கள் 1927-ஆம் ஆண்டில் 'பாதுகா பட்டாபிஷேகம்' என்னும் நாடகத்தை நடத்தி, மக்களின் பாராட்டுதலைப் பெற்றார். அதற்குப் பிறகு அவர் பல நாடகங்களை நடத்தி, மலாயாவில் நாடகத்தமிழ் வளரும்படியாகச் செய்தார். இத் துறையில் ஈடுபட்டிருந்த மற்றொரு சபை, மலாயா சுகுண விலாச சமாஜமாகும். இந்தச் சமா

9. காலஞ்சென்ற டாக்டர் சுவாமி சத்தியானந்தா அவர்கள் கூறிய செய்தி. "இந்தியன் டெய்லி மெயில்" (ஆங்கிலம்), 9 ஜூலை, 1947.

10. "தமிழ் நேசன்", 19 ஜனவரி, 1946.

ஜத்தின் தலைசிறந்த நடிகராக விளங்கிய சி. எஸ். விசுவ நாத ஐயரும் மலாயாவில் இசைத் தமிழும் நாடகத் தமிழும் வளரத் துணைபுரிந்தார்.[11]

தமிழ்க் கல்வி வளர்ச்சியில் ஓர் எல்லைக் கோடாக விளங்குவது 1957-ஆம் ஆண்டாகும். இந்த ஆண்டில் மலாயாப் பல்கலைக் கழகத்தின் சிங்கப்பூர்ப் பிரிவில் இந்திய மொழித்துறை முதன் முதலாகத் தொடங்கியது. இதன் முதல் தலைவராகப் பேராசிரியர் மு. இராசாக் கண்ணனார் நியமிக்கப்பட்டார். இத்துறை இரண்டாண்டுகளுக்குள் கோலாலம்பூருக்கு மாறியது. இந்தியத்துறை உருவான காரணத்தினால் தமிழ் மக்கள், தமிழிலக்கியம், இலக்கிய வரலாறு போன்ற துறைகளைப் பல்கலைக் கழக நிலையில் கற்ற றியும் வாய்ப்பேற்பட்டது. இத் துறையில் தமிழ் விரிவுரை யாளர்களாக விளங்குபவர்கள், மாணவர்களும் மக்களும் தமிழ்ச் செல்வங்களை முறையாக நுகர்ந்து அனுபவிப்பதற் கான வகையில் தமிழ்ப்பணி செய்து வருகின்றனர். தமி ழைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் பயின்று வெளியேறிய மாணாக்கர்களில் சிலர் வானொலி, தொலைக்காட்சி நிலையங் களில் நல்ல தமிழ்ப்பணி செய்துவருகின்றனர்.

கடந்த பத்தாண்டுக்காலமாக மலேசியாவிலும், சிங்கப் பூரிலும் தமிழில் ஆர்வமும், சிறுகதை, கவிதை போன்ற துறைகளை வளர்க்கவேண்டும் என்னும் எண்ணமும் பெருகி வருகிறது. இதனை வளர்க்கும் வகையில் இந் நாடுகளில் உள்ள வானொலி, தொலைக்காட்சி, ரிடிஃபியூஷன் (Rediffu- sion) நிலையங்கள் பணிபுரிந்து வருகின்றன. இந்நிலையங்கள் மெல்லிசைக்கு முதலிடம் தருவதுடன், நாடகங்களையும், சிறுகதைகளையும், இலக்கியச் சொற்பொழிவுகளையும் நிறைய ஒலிபரப்புகின்றன. இதனால் சிறந்த எழுத்தாளர்கள் சிலர் வளர முடிகின்றது. மேலும், ஒலி பரப்பும் தமிழ்

11. "தமிழ் நேசன்", மெர்தேகா மலர், 1957, ப—ள் 109-111.

மொழியின் தரத்திலும் அதிக கவனம் செலுத்துவதால் நாட்டில் நல்ல தமிழ் பரவி வருகின்றது.

படைப்பிலக்கியத் துறையில் கவனம் செலுத்திவரும் மற்ருெரு சங்கம் 'மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்க'மாகும். 1958-ஆம் ஆண்டிலிருந்து செயற்பட்டுவரும் இச் சங்கம் மலாயாவில் உள்ள எழுத்தாளர்களின் ஒப்பற்ற ஒரே சங்கமாக இயங்கி வருகின்றது. இது, வளர்ந்துவரும் எழுத்தாளர்களை ஊக்குவிப்பதற்காகச் சிறுகதை, கவிதைப் போட்டிகளை ஆண்டுதோறும் நடத்தி வருகின்றது. எழுத்தாளர்களின் திறனாய்வுத்திறன் வளர அவ்வப்போது பல கருத்தரங்குகளையும் ஏற்பாடு செய்துவருகின்றது. 'ஏடு' என்னும் முத்திங்கள் இதழ் ஒன்றனையும் நடத்தி வருகின்றது. 1967-ல் மலேசியத் தமிழ் எழுத்தாளர்களின் வரலாற்றுக் குறிப்பு நூல் ஒன்றனையும் வெளியிட்டுள்ளது. சென்ற ஆண்டிலேயே 'தீபம்' இதழின் ஆசிரியர் நா. பார்த்தசாரதியை மலேசியாவிற்கு வரவழைத்து, நாட்டின் பல பகுதிகளில் அன்னாரின் இலக்கியச் சொற்பொழிவுகள் நடைபெறவும் உதவியது.

மலேசியாவும், சிங்கப்பூரும் தமிழகத்தோடு கொண்டுள்ள இடையருத் தொடர்பும் தமிழ் வளர்ச்சிக்கு உதவியாக இருந்து வருகின்றது. இத்தொடர்பினால் தமிழகத்தில் ஏற்பட்ட அரசியல், சமுதாய, இலக்கியப் புரட்சிகளும் இவ்விரு நாடுகளிலும் எதிரொலித்தன; இன்றும் எதிரொலித்து வருகின்றன. தமிழகத்தில் தேசிய விழிப்புணர்ச்சி ஏற்பட்டபோது, அந்த விழிப்புணர்ச்சி இந்த நாடுகளிலும் பொங்கி எழுந்தது. அதன் பயனாக நாடு முழுவதும் கதர் இயக்கங்களும், கட்குடி ஒழிப்பியக்கங்களும், சேவா சங்கங்களும், இந்தியர் சங்கங்களும் தோன்றின. இவைகள் இந்தியத் தலைவர்களின் பிறந்த நாள் விழாக்களைக் கொண்டாடியதோடு, பாரதியார், வ. உ. சிதம்பரம் பிள்ளை போன்ற தமிழர் தலைவர்களின் விழாக்களையும் கொண்டாடின.

தேசிய இயக்கக் கருத்துக்களைத் தாங்கி வந்த 'சுதேச மித்திரன்', திரு. வி. க.வின் 'தேசபக்தன்', 'நவசக்தி' போன்ற ஏடுகளும் மலாயாவில் செல்வாக் கோடிருந்ததாக அறியமுடிகின்றது.[12] இந்த ஏடுகளால் நாட்டில் விடுதலை வேட்கையும், தமிழ் உணர்வும் பெருகியது. இரண்டாவது உலகப் பெரும்போரின் போது நேதாஜியின் இந்திய நாட்டுப் படையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த எம். கே. சிதம்பரம், ஏ. எல்லப்பா, வழக்குரைஞர் சண்முகம், உ. அரு. அருணாசலம் செட்டியார், சு. பழனிவேல் பிள்ளை போன்ற தமிழர் தலைவர்கள் பல தமிழ் நாடகங்களைத் தோட்டங்கள் தோறும் நடத்தி, அதன் மூலமாக மக்களிடம் மொழிப்பற்றையும், நாட்டுப் பற்றையும், விடுதலை வேட்கையினையும் வளர்த்தனர்.[13]

தமிழகத்தில் சீர்திருத்த இயக்கம் வளரக் காரணமாயிருந்த ஈ. வெ. ராமசாமிப் பெரியாரே மலாயாவிலும் அச் சீர்திருத்த வித்தினை ஊன்றினார். இவர் 1929-ஆம் ஆண்டிலும், 1954-ஆம் ஆண்டிலும் மலாயாவிற்கு வருகை புரிந்தார். இவர் 1929-ஆம் ஆண்டில் மலாயாவிற்கு வந்தபோது, ஈப்போவில் முதல் அகில மலாயாத் தமிழ் மாநாடு நடந்தது. அதில் பங்குபெற்ற பெரியாரின் ஆலோசனைப்படி நாடுமுழுவதும் சீர்திருத்த இயக்கங்கள் தோன்றின. இதனால் ஈ. வெ. ரா.வின் 'திராவிடன்' இங்கு செல்வாக்குப் பெற்றதாகத் தெரிகிறது. 1946-ஆம் ஆண்டு தொடங்கி ஈ. வெ. ரா.வின் அறிவுரையின்படி திராவிடர் இயக்கத்தின் கிளைகள் சிங்கப்பூர், கோலாலம்பூர், ஈப்போ போன்ற பெருநகரங்களில் தோன்றின. கோலாலம்பூரில் இருந்த தமிழர் சீர்திருத்தச் சங்கம் 1947-ல் அகில மலாயாத் திராவிடர் கழகமாக மாறியது. இக் கழகமும், சிங்கப்பூரில் இயங்கிவந்த

12. காலஞ்சென்ற திரு. சு. பழனிவேல் பிள்ளையவர்கள் கூறிய செய்திகள்.

13. ௸. ௸.

திராவிடர் கழகமும் முறையே 'இனமணி' என்னும் வார ஏட்டினையும், 'திராவிட முரசு' என்னும் திங்கள் ஏட்டினையும் நடத்தி வந்தன. இந்த ஏடுகளினால் தமிழுணர்ச்சியும், தமிழின உணர்ச்சியும் மேலோங்கிய தோடன்றிப் பாரதி தாசனின் புரட்சிக் கவிதைகளும், கழக எழுத்தாளர்களின் நூல்களும் செல்வாக்குப் பெற்றன. தமிழகத்திலிருந்து வெளியான 'திராவிட நாட்'டினால் நாடு முழுவதும் தமிழ்ப் பத்திரிகை படிக்கும் வழக்கம் மிகுந்ததென்றும், தமிழில் ஆர்வம் பெருகியதென்றும் கூறுகின்றனர்.

திராவிட முன்னேற்றக் கழகம் தமிழகத்தில் வளரத் தொடங்கிய காலத்தில் இவ் வியக்கத்தின் கருத்துக்களும் மலாயாவிலும், சிங்கப்பூரிலும் பரவலாயிற்று. தி. மு. கழகத்தினர் நடத்திவந்த 'முரசொலி' 'மன்றம்' போன்ற ஏடுகளும், கழக முன்னணித் தலைவர்களின் நூல்களும், அவர்கள் வசனம் எழுதிய திரைப்படங்களும் நாட்டில் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந் தூண்டுகோல்களாக இருந்தன.[14]

இத்தகு அரசியல் இயக்கங்களைத்தவிர தமிழக அறிஞர்களும், தமிழ் நாட்டு ஏடுகளும், தமிழகச் சிறுகதை எழுத்தாளர்களும், நாவலாசிரியர்களும், மலாயாவிலும் சிங்கப்பூரிலும் அமைதியான முறையில் தமிழ் வளரத் தொண்டு புரிந்துள்ளனர்; இன்றும் புரிந்து வருகின்றனர். தென்னகத்திலிருந்து வந்த அ. ச. ஞானசம்பந்தன், அ. மு. பரமசிவானந்தம் போன்ற தமிழறிஞர்களின் சொற்பொழிவுகளும், குன்றக்குடி அடிகளார், கிருபானந்த வாரியார் போன்றோரின் சமயச் சொற்பொழிவுகளும், இந் நாடுகளில் பெரும் தமிழ் விழிப்புணர்ச்சியினை ஏற்படுத்தியதாகப் பலர் கூறுகின்றனர்.[15] அதேபோலத் தமிழ் நாட்டில் செல்வாக் கோடுள்ள 'குமுதம்' 'ஆனந்த விகடன்' 'கல்கி' 'கலைமகள்'

14. திரு. கே. மூர்த்தி அவர்கள் கூறிய கருத்துக்கள்.

15. திரு. இரா. சு. வேங்கடாசலம் அவர்கள் கூறிய கருத்துக்கள்.

போன்ற வார, திங்கள் இதழ்களும் தமிழில் வாசகர்களைப் பெருக்கி வருகின்றன. தமிழ் எழுத்தாளர்களுள் மு. வரதராசன், அகிலன், கல்கி போன்றோரின் நாவல்களும்,[16] கு. அழகிரிசாமி, ஜெயகாந்தன் போன்றோரின் கதைகளும் தமிழ்ப் படைப்பிலக்கியத்தில் மக்களின் ஆர்வத்தைத் தூண்டி வளர்த்துவருகின்றன.

மலேசியாவிலும், சிங்கப்பூரிலும் இடம் பெற்றுள்ள தமிழைப் போற்றி வளர்ப்பது இங்குள்ள தமிழர்களின் கையில் உள்ளது. இந் நாடுகளில் வாழும் தமிழர்களிடம் தமிழ்ப் பற்றும், தமிழின உணர்ச்சியும் நிறைந்துள்ளன. மொழியின் பெயரால் பல சங்கங்கள் ஆங்காங்கே இயங்கிவருகின்றன. மொழியிடம் உண்மைப் பற்றுள்ள அறிஞர்களும் நாட்டின் பல பகுதிகளில் அமைதியாகத் தங்கள் தொண்டினைச் செய்து வருகின்றனர். இவ்வாறு தமிழ் வளர்ச்சியில் பங்குகொண்டுள்ள யாவரும் மூட்டை அவிழ்ந்த நெல்லிக் காய்களைப் போலத் தனித்தனியாக நிற்காமல், ஒன்ருக இணைந்து, 'தமிழ் வளர்ச்சிக் கழகம்' போன்ற ஓர் அமைப்பினை உருவாக்கி, அமைதியான, ஆக்ககரமான பணிபுரிய வேண்டும். இத்தகைய நிறுவனம் முதன் முதலாக, தமிழின் உயிர் நாடியென விளங்கும் தோட்டப் பள்ளிக்கூடத் தமிழாசிரியர்களின் நிலையினை உயர்த்தத் திட்டம் ஒன்றனை உருவாக்க வேண்டும். ஆண்டுதோறும் தமிழ்ப்பள்ளி ஆசிரியர்களுக்கென தமிழிலக்கிய வகுப்புக்களை நடத்த வேண்டும். ஏனெனில், தமிழ் வளர்ச்சி என்பதே தமிழ்ப் பள்ளிகளின் கல்வியின் தரத்தை ஒட்டியே அமைந்துள்ளது. இரண்டாவதாக, பள்ளி இறுதியாண்டிலும் (School Certificate) பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்விலும் (Higher School Certificate) தமிழ்த் தேர்வு எழுத விழையும் மாணவர்களுக்குத் தமிழ்ப் பாடங்களை நடத்த தற்போது போதிய

16. திரு. கே. மூர்த்தி அவர்கள் கூறிய கருத்துக்கள்.

வசதியில்லை. இக் குறையினைக் கடந்த ஐந்தாண்டுக் காலமாகக் கோலாலம்பூரில் இயங்கிவரும் தமிழர் கல்வி முன்னேற்றக் கழகம் ஓரளவிற்கு நிறைவு செய்து வருகின்றது. அவர்கள் முயற்சி கோலாலம்பூர் அளவிலேயே நின்றுவிடுவதால், நாடுமுழுவதும் இவ்வசதியினைச் செய்து தர ஓர் இயக்கம் முன்வரவேண்டும். இல்லையெனில், தமிழ் நாளேடுகள் இத்தேர்வுக்கான பாடங்களுக்கு விளக்கவுரை எழுதி வெளியிட்டால், அது மிகப்பெரும் தமிழ்த் தொண்டாக அமையும். மூன்ருவதாக, நாட்டுப் பத்திரிகைகளில் வெளியாகும் சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள் — இவைகளில் சிறந்தவைகளை ஒவ்வோர் ஆண்டும் தேர்ந்தெடுத்துத் தொகுப்பு நூல்களை வெளியிடவேண்டும். இத் தொகுப்பு நூல்களை மலாய், சீன மொழிகளில் மொழி பெயர்க்கத் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும். இறுதியாக மலாய், சீன மொழிகளில் வெளியாகும் சிறந்த படைப்புக்களைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டும். இத்தகைய ஆக்ககரமான முயற்சிகளில் ஒரு நிறுவனம் ஈடுபடுமேயாஞல், அதஞல் தமிழ் இந் நாடுகளில் நிலைத்து நிற்க வாய்ப்புண்டு.

முற்றும்

# நன்றியுரை

“அக்கரை இலக்கியம்” என்னும் நூலினை வெளியிடத் தங்கள் சிறுகதைகளையும், கவிதைகளையும், கட்டுரைகளையும் எனக்கு அனுப்பிவைத்த மலேசிய, சிங்கப்பூர் எழுத்தாளர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். நான் “அக்கரை இலக்கியம்” பற்றி அனுப்பிய அறிக்கையினைத் **தமிழ் நேசனில்** வெளியிட்டுதவிய அதன் ஆசிரியர் திரு. முருகு சுப்பிரமணியம் அவர்கட்குக் கடமைப்பட்டுள்ளேன். **தமிழ் நேசன்** இதுவரை வெளியிட்டுள்ள சிறப்பு மலர்களையெல்லாம் எனக்குத் தந்துதவிய **தமிழ் நேசன்** உரிமையாளர் திரு. எம். என். நாகப்பன் அவர்கட்கும், பொறுப்பாளர் திரு. மு. சேதுராமன் அவர்கட்கும் என் நன்றி உரியது.

கான்பரா
3—9—'68

ஈ. ச. விசுவநாதன்.

# வாசகர் வட்டம்

ஆண்டுதோறும் நல்ல புத்தகங்களை வெளியிடும் தமிழ்ப் புத்தகச் சங்கம் இது. ரூ. 26 அனுப்பி இச் சங்கத்தில் அங்கத்தினராய்ச் சேருபவர்களுக்கு ஆறு நூல்கள் வீடு தேடித் தபாலில் வந்து சேரும். தபால் செலவு இலவசம்.

இந்தப் புத்தகமும், 1968-ஆம் ஆண்டு அறிவிப்பும் உங்களுக்குத் திருப்தி அளித்தால், கீழுள்ள விண்ணப்பத் தாளை இன்றே பூர்த்தி செய்து, சந்தாத் தொகையுடன் எமக்கு அனுப்பி, "வாசகர் வட்ட"த்தில் அங்கத்தினராய்ச் சேருங்கள். மாற்றுப் புத்தகங்களும் வேண்டுவோர் புத்தகம் ஒன்றுக்கு ரூ. 4-35 வீதம் சேர்த்து அனுப்பவும். வெளிநாட்டுச் சந்தா: (தபால் செலவு உள்பட) ரூ. 31.

## விண்ணப்பத் தாள்

புக்வென்சர் (bookventure)
['வாசகர் வட்டம்' பதிப்பாளர்]
14, தணிகாசலம் செட்டி ரோடு,
**தி. நகர், சென்னை-17.**

என்னை உங்கள் வாசகர் வட்டம் சங்கத்தில் ஓராண்டிற்கு அங்கத்தினராய்ச் சேர்த்துக்கொள்ள வேண்டுகிறேன். நீங்கள் தொடர்ந்து வெளியிடும் 6 புத்தகங்களை நான் ஏற்றுக் கொள்ளவும், பிறகு, விலகிக்கொள்ள விரும்பினால், இரண்டு மாதங்களுக்கு முன்னதாகவே உங்களுக்குத் தெரிவிக்கவும் ஒப்புகிறேன்.

இத்துடன் மணியார்டர் மூலம் / போஸ்டல் ஆர்டர் மூலம் / பாங்க் டிராஃப்ட் மூலம் / செக் மூலம் ஆண்டுச் சந்தா ரூ 26 (ஆறு மாதச் சந்தா ரூ. 13) அனுப்பியிருக்கிறேன்.

.........................

கையெழுத்து.

தேதி :

பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

..............................

# 1968-ஆம் ஆண்டு பிரசுரத் திட்டம்

## வழக்க வெளியீடுகள்

19. **இதோ, 'தேவன்':**
திறமைமிக்க எழுத்தாளர் "தேவன்" படைப்புக்களிலிருந்து ஒரு தொகுப்பு — முதல் தடவையாக புத்தக உருவில் வந்துள்ளது.

20. **புன்னகை பூத்த நாடு:**
பேராசிரியர் எம். ஆர். பாலகிருஷ்ணன்
தாய்லாந்து நாட்டைப்பற்றிய ரஸமான தகவல்கள் நிறைந்த நூல்—அந்த நாட்டில் பலகாலம் வாழ்ந்த அறிஞர் கூறும் கதை.

21. **குறுநாவல்கள்:**
புதிய எழுத்தாளர்களின் இலக்கியத்தரமான சிருஷ்டிகளை, இந்தத் தொகுப்பில் அளிக்கிறோம்.

22. **அக்கரை இலக்கியம்:**
கடல் கடந்து, மலாய், இலங்கை போன்ற அக்கரைச் சீமையில் வாழும் தமிழ் எழுத்தாளர்களின் கதை, கவிதை, கட்டுரைகள் அடங்கிய தொகுப்பு.

23. **ஆத்மாவின் ராகங்கள்:** நா. பார்த்தசாரதி
காந்தீய யுகத்தையும், சுதந்திரப் போராட்டத்தையும் தெளிவாகச் சித்திரிக்கும் புதிய சமுதாய நாவல்.

24. **ஒப்பில்லாத சமுதாயம்:** பேராசிரியர் ஆர். பாஸ்கரன்
நமது அரசியல் காட்சியின் உண்மை வடிவ விளக்கம்.

## மாற்றுப் புத்தகங்கள், சிறப்பு நூல்கள்:

**புத்ர – II:** லா. ச. ரா. வின் இந்நூல் உருவாகிக் கொண்டிருக்கிறது.

**நடந்தாய்; வாழி, காவேரி!** — தி. ஜானகிராமன், சிட்டி எழுதிய நூல்.

கலாஸாகரம் ராஜகோபாலின் ஓவிய அழகுடன் உன்னத முறையில் அச்சாகி வருகிறது.

**வீணையே தனம்!**
வீணை இசை மேதையான தம்முடைய பாட்டியின் வாழ்க்கைபற்றி நாட்டிய மேதை பாலசரஸ்வதி கூறும் கதை—ஆர். கணபதி எழுதுவது—முக்கியத் தன்மை வாய்ந்த சிறப்பு நூல்.

---

பதிப்பாளர்: BOOKVENTURE, MADRAS-17